أَصْحَابِي كَالنُّجُومِ فَبِأَيِّهِمُ اقْتَدَيْتُمُ اهْتَدَيْتُمْ

# நபிகளின் நாயகத் தோழர்கள்

(ஸஹாபாக்கள்)



எம். எஸ். முஹம்மது தம்பி

பொருளடக்கம்

حضرة عبد الله ابن مسعود

# ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி)

இஸ்லாம் ஒரிருவரிடையில் வெறும் கருத்துப் பரிமாற்றமாகவே இருந்த ஆரம்ப நாட்களில் ஒரு நாள்,

அண்ணல் எம் பெருமான் (ஸல்) அவர்கள் தம் தோழர் அபூபக்கர் (ரலி) அவர்களுடன் உரையாடிய வண்ணம் வனாந்திரப்பாலையின் பக்கல் நடந்து சென்று கொண்டிருந்தார்கள். எதிரே ஓர் இளம் வயதுச் சிறுவர் தம் ஆட்டுமந்தைகளை மேய்த்த வண்ணம் வந்து கொண்டிருந்தார். அவரை அண்மிய அபூபக்கர் (ரலி) அவர்கள், 'ஓ இளைஞரே! அருந்தச்சிறிதே பால் தந்து எங்களின் தாகத்தைத் தணிப்பீரா?' என வினவினார்கள். ஏறிட்டு அவ்விருவர் முகத்தையும் நோக்கினார் அச்சிறுவர். குரைஷியர்களின் பார்வையை விட்டகன்று தனிமையில் உரையாட அல்லது இறை வணக்கம் புரிய மறைவான பள்ளத்தாக்கு நோக்கி நடந்து சென்ற அவ்விருவரின் முகங்களிலும் பிரதி பலித்த களைப்பின் அடையாளங்கள் சிறுவரின் பார்வைக்கு புலப்படவே செய்தன. அவர் வெளிப்படுத்திய பரிதாப உணர்வும் அவ்வுணர்வுடன் கூடி அவரின் வாய் வழி வெளிப்பட்ட குரலின் கனிவும் சிறுவரின் இதய அழகை வெளிச்சமிட்டுக் காட்டின. "ஐயன்மீர்! அது என்னால் முடியக் கூடியதல்லவே! இவை என் உடைமைகள் அல்லவே! என் எஜமானரின் அமானிதங்களல்லவோ இவ்வாடுகள் என்றார்" அச்சிறுவர்.

அமானிதம் பேணிய அச்சிறுவரின் பாங்கு அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் கவனத்தை ஈர்த்தது.

அ—1.

பொருளடக்கம்

அவ்விருவர்க்கிடையே குறுக்கிட்ட அண்ணலார் (ஸல்) அவர்கள் "இளைஞரே! ஆண் அண்டாத கன்னி ஆடுகள் இவைகளில் உள்ளனவா?" என வினவினார்கள். "ஆம்" என்ற அவ்விடையர் ஓர் ஆட்டை சுட்டிக் காட்டினார். "அதன் மடுவில் பால் கறக்க என்னை அனுமதிப்பீரா?" என அண்ணலார் (ஸல்) அவர்கள் வினவக் கேட்டு திகைத்தார் அவ்விடையர். தாய்மை அடையாத—ஆண் அண்டாத ஆட்டிலிருந்து பாலா! "ஆகட்டும்" எனத் தலையசைத்தாரவர். பெருமானார் (ஸல்) அவர்கள் அவ் வாட்டின் மடுவை தங்கள் கரத்தால் தடவி ஏதோ உச்சரித்தார்கள். மறு கணமே மடு சுரத்து கனத்தது. ஹலரத் அபூபக்கர் (ரலி) அவர்கள் அவ்வாட்டினை தனியே பிரித்து அதன் மடுவைக்கழுவி அதிலிருந்து பால் கறந்தார்கள். மூவரும் அருந்திப் பசி தீர்ந்தனர். பின்னர் பெருமானார் (ஸல்) அவர்கள் அவ்வாட்டின் மடுவைத் தொட்டு 'முன் போல் ஆகிவிடு' என்றார்கள். அது அவ்வாறே ஆகிவிட்டது. இளம் இடையரின் விழிகள் விரிந்தன! அண்ணலார் (ஸல்) அவர்களின் கரங் களைப் பற்றி, அவர் கனிவுடன் வினவினார், "ஐயன்மீர்! அம்மந்திர மொழிகளை நானும் கற்க முடியாதா?" என்று.

அவரின் சிரசை தம் கரத்தால் வருடிய அருளரசர் (ஸல்) பகர்ந்தார்கள், "நீர் கற்பதோடல்ல, உலகத்தார்க் கும் கற்பிப்பீர்" என்று. ஆம்! அன்றைய தினம் அமானி தம் பேணிய ஹலரத் அப்துல்லாஹ் இப்னுமஸ்வூத் (ரலி) அவர்களின் உலகம் அண்ணலார் (ஸல்) அவர்களின் உள்ளத்துள் அக்கணமே உருப்பெற்று விட்டது. பிந்திய வரலாற்றில் பெயர் சிறக்கப் போகும் அச்சிறுவர் ஏகத்துவத் திருமந்திரத்தை ஏற்க ஒரு கணமும் தாமதிக்க வில்லை. இஸ்லாத்தைத் தழுவியவர்களில் அவர்கள் ஆறாமவர் எனவும் கணிக்கப் பெறுகிறார்கள். இஸ்லாத்

பொருளடக்கம்

தின் ஆரம்ப கால வரலாற்றில் ஒளி வீசும்-அபாதிலே அர்ப-நான்கு அப்துல்லாஹ்களில் இவர்களே தலைமை யானவர்கள்.

பாரம்பரியமாக ஓர் அரபுக் கோத்திரத்தையே சார்ந்திருந்த அவர்களின் தந்தை மஸ்ஊத், அப்து இப்னு ஹாரிஸ் என்பவரின் ஆதரவில் வாழ்ந்து வந்தார். அப்துல்லாஹ் அவர்களின் சிறு பருவத்திலேயே மஸ்ஊத் இறந்து விட்டார். அவரது விதவை மனைவி பணி விடைகள் செய்து உழைத்தே அப்துல்லாஹ்வை வளர்த் தார். அதனாலேயே அவர்கள் 'இப்னு உம்மு அப்த்-அடிமைத்தாயின் புதல்வர்' என்றும் அழைக்கப்பட்டனர். சற்றே வளர்ந்த பின் அவர்கள் உக்பா பின் முஈத் என்ற செல்வந்தனின் ஆடுகளை மேய்க்க அமர்த்தப்பட்டனர்.

ஆடுமேய்க்கும் தொழில் அரபு நாட்டில் ஓர் ஈனமான தொழிலாகக் கருதப்பட்டதல்ல. இஸ்லாத்துக்கு முந்திய இருண்டகாலத்தில் செல்வர்களும், செல்வாக்கு பெற்றவர்களும் கூட தங்கள் மக்களை ஆரம்பத்தில் மேய்ச்சல் தொழிலிலேயே பழக்குவர். வாழ்க்கையின் எளிமையையும், கடும் உழைப்பையும், பழக்க வழக்கங் களையும், பண்பாட்டையும் கற்பிக்கும் பள்ளிக்கூடமாக மேய்ச்சல் தொழில் கருதப்பட்டது. அப்பள்ளிக்கூடத்தில் பயிலவாரம்பித்த காலத்தில்தான் உலகமகா போதகரே தம்மை எதிர்கொள்ளும் பேறு பெற்றனர் ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரலி).

மாநபி (ஸல்) அவர்களின் முகத்தோற்றம் தந்த துவக்கப் பொலிவிலேயே அவர்களின் மாண்பினைச் சுமந்த அத்தோழரின் மனம் அந்நபிகளின் பால் கட்டுக் கடங்காத நேசத்தையும் நெருக்கத்தையும் வளர்த்தது. அறிவைத் தேடி அருகிய அவர்களின் உள்ளம் அந்நபி

பொருளடக்கம்

களாருக்குத் தொண்டூழியம் புரிவதில் பேரமைதி கண்டது. அவர்கள் பகலுறக்கங் கொள்ள தலையணை காத்து, அவர்கள் பல்துலக்கிய - மிஸ்வாக்கு குச்சியை பாதுகாத்து, பயணங்களில் அவர்களின் கைத்தடியைச் சுமந்து, தலையணைக்காரர், பற்குச்சிக்காரர், கைத்தடிக் காரர் என்றெல்லாம் பட்டம் பெற்றனர் ஹலரத் அப் துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி). பெருமானார் (ஸல்) அவர்கள் ஓரிடத்தில் அமர்வார்களாயின் அவர்களின் பாதவணிகளைக் கழற்றி ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரலி) அவர்கள் தங்கள் போர்வைக்குள் பாது காப்பார்கள். மீண்டும் அவர்கள் அவ்விடமிருந்து புறப் படுவார்களானால் அவர்களின் பாதங்களில் அணிவிப் பார்கள். அதனாலேயே அவர்கள் பாத அணி பாதுகாவ லர் என்றும் போற்றப் பெற்றனர்.

பருவத்தின் இளமையும் பழக்கத்தின் ஒழுக்கமும் அண்ணலார் (ஸல்) அவர்களின் இல்லங்களிலும் உலவ அவர்களுக்குஅனுமதி பெற்றுத் தந்தன. அண்ணலார் (ஸல்) தம் நெருக்க மிக்கத் தோழர்களுடன் நடத்தும் அந்த ரங்க ஆலோசனைகளின் போதும், பகற்காலங்களில் தங் கள் மனைவியர்களோடு மாநபிகளார் (ஸல்) உணவுண்டு உரையாடும் தருணங்களிலும் கூட அவர்களை அண்மி ஐயங்கள் தெளிய ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரலி) அவர்களுக்கு தடையே இல்லாமல் இருந்தது.

யமன் நாட்டிலிருந்து வந்து இஸ்லாத்தை ஏற்ற ஹலரத் அபூ மூஸா அஷ்அரீ (ரலி) அவர்கள், 'மக்காவில் நாங்கள் தங்கியிருந்த காலத்தில் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரலி) அவர்களும் அவர்களின் அன்னை உம்மு அப்து (ரலி) அவர்களும் அண்ணலார் (ஸல்) அவர் களிடம் அடிக்கடி நெருங்கி உரையாடிப் பிரிவது கண்டு

அவர்களை அண்ணலார் (ஸல்) அவர்களின் குடும்பத்தைச் சார்ந்த உறவினர்கள் என்றே நீண்ட நாட்கள் நினைத் திருந்தோம் என்றறிவிக்கிறார்கள்.

அண்ணலார் (ஸல்) அவர்களை அருகிப் பழகக் கிடைத்த அப்பேற்றினை குறைவுபடாது பேணிச் சிறந் தனர் ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊது (ரலி). ஞானத்தைத் தேடுவதில் நாட்களை முழுமையாகவே கழித்த அம்மாணவர் அவசியத் தேவைக்காக அகல நேர்ந்த சமயங்களிலும் தம் அன்னையாரை அழைத் தமர்த்தி அண்ணலார் (ஸல்) அவர்களின் அருள் வாய்த் திருமொழிகளைக் கேட்டு தமக்கறிவிக்குமாறு பணித்தே செல்வார்கள். அறிவைத் தேடுவதில் அவர்கள் காட்டிய ஆர்வமும் தம் ஆசானிடத்தில் அவர்கள் வெளிப்படுத்திய பணிவும் பண்பாடுகளும் அண்ணலார் (ஸல்) அவர்களின் அன்பையும் அருளாசியையும் அவர்களுக்குப் பெற்றுத் தந்தன. ''எவரையும் கேட்காமலே இந்த சமூகத் துக்கு ஒரு தலைவரை நியமிக்க வேண்டுமாயின் நான் இப்னு மஸ்ஊதையே நியமித்து விடுவேன்'' என்றும் அண்ணலார் (ஸல்) அவர்கள் ஒரு சமயம் குறிப்பிட்டார் கள். அந்த அளவுக்கு ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊது (ரலி) அவர்கள் அறிவிலும் ஞானத்திலும் சிறந்து விளங்கினார்கள்.

மடுவில் பால் சுரக்க வைக்கும் மந்திரம் கற்க வந் திணைந்த இளைஞரின் நெஞ்சத்தில் வானமாமறையின் ஞானப்பால் பெருக்கெடுக்கலாயிற்று. தங்களின் தனிப் பார்வையில் அச்சீடரை உருவாக்கிய அண்ணலார் (ஸல்) அவர்களிடமிருந்து ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊது (ரலி) அவர்கள் மிகத் துரிதமாக-தெளிவாக திருமறையை கற்றுணர்ந்தார்கள்.

பொருளடக்கம்

''ஏறத்தாழ எழுபதுக்கும் அதிகமான அத்தியாயங்களை என் ஏந்தலார் (ஸல்) அவர்கள் ஓதக்கேட்டே நான் மனனமிட்டுக் கொண்டிருந்த சமயம் ''ஜைது * இப்னு ஸாபித் சிறுவர்களோடு சிறுவராக விளையாடிக் கொண்டிருந்தார்'' என ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரலி) அவர்களே பிற்காலத்தில் கூஃபாவின் பள்ளியில் ஆற்றிய ஓர் உரையில் குறிப்பிட்டார்கள். வெகு குறுகிய காலத்துக்குள் திருமறையின் எழுபது அத்தியாயங்களை மனனமிட்டுக் கொண்ட அவர்களின் நினைவுத் திறனுக்கு இயல்பாகவே அவர்களுக்கமைந்திருந்த இனிய தொனியும் மெருகூட்டலாயிற்று.

''ஓர் இரவு அண்ணலார் (ஸல்) அவர்களோடமர்ந்து அபூபக்கர் (ரலி) அவர்கள் உரையாடிக் கொண்டிருந்தனர். அவ்விருவரோடு நானும் அமர்ந்தேன். முஸ்லிம்களின் விவகாரங்களைப் பற்றிய எங்கள் உரையாடலை முடித்து நாங்கள் மூவரும் எழுந்து புறப்பட்டோம். பள்ளியின் உட்புறம் ஒருவர் நின்று தொழுவது தெரிந்தது. மங்கிய வெளிச்சத்தில் அவரை எவரெனப் புரிந்து கொள்ள எங்களால் முடியவில்லை. அண்ணலார் (ஸல்) அவர்கள் செவிகொடுத்து மெல்லிய அவரின் ராகத்தைக் கேட்டார்கள். பின்னர் எங்களின் புறம் திரும்பிய அண்ணலார் (ஸல்) அவர்கள் 'திருக்குர்ஆனை அது இறங்கிய தோரணையிலேயேகேட்டு அதன் இனிமையைச் சுவைக்க விரும்புபவர்கள் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது ஓதக் கேளுங்கள்' எனக் கூறி மகிழ்ந்தார்கள்'' என்று ஹலரத் உமர் (ரலி) அவர்கள் அறிவித்துள்ளர்கள். பிந்திய காலத்தில்

---

*ஹலரத் ஜைது இபுனு ஸாபித் (ரலி) திருமறை வசனங்களை திரட்டிச் சேர்க்க கலீஃபா அபூபக்கர் (ரலி) அவர்களால் பொறுப்பளிக்கப்பட்ட பெருந்தோழர்.

பொருளடக்கம்

குர்ஆனை ஓத கற்பிக்க அங்கீகரிக்கப்பட்ட நாற்பெருந் தோழர்களில் ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊது (ரலி) அவர்களும் ஒருவராகத் திகழ்ந்தார்கள்.

"அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊது" அபூ ஹுதைபா வினால் வளர்க்கப்பட்ட ஸாலிம், உபை இப்னு கஅபு, முஆது இப்னு ஜபல் ஆகிய நால்வரிடத்தில் குர்ஆனை ஓத கற்றுக் கொள்ளுங்கள்" என அண்ணலார் (ஸல்) அவர்கள் அருளக்கேட்டு ஹலரத் அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவித்துள்ளார்கள்.

மக்காவின் வீதிகளில் நடமாடவே வகையற்று முஸ்லிம்கள் 'தாருல் அர்க்க' மில் தங்கி அண்ணலார் (ஸல்) அவர்கள் அளித்த ஞானத்தை அந்தரங்கமாகவே கற்று வந்த காலமது. அண்ணலார் (ஸல்) அவர்களையும் ஹலரத் அபூ பக்கர் (ரலி) அவர்களையும் தவிர்த்து மற்றெ வரும் திருமறையின் வசனங்களை வெளிப்படையாக ஓதிக்காட்ட அனுமதிக்கப் படவே இல்லை. திருத்தூதர் (ஸல்) அவர்களின் சொல்வழி வெளிப்பட்ட 'ரஹ்மான்-அருளாளன், ரஹீம் -அன்புடையோன்' எனப்படும்-இறை வனின் திரு நாமங்கள் பற்றியெல்லாம் குரைஷியர். விதண்டா வாதங்களை வளர்த்துக் கொண்டிருந்தனர் அக்கால கட்டத்தில் தான் அண்ணலார் (ஸல்) அவர்கள் மீது 'ரஹ்மான் - அருளாளன்' என்ற திருக்குர்ஆனின் 55ஆவது அத்தியாயம் இறங்கிற்று. தாருல் அர்க்கமில் தங்களைச் சூழ அமர்ந்திருந்த தோழர்களிடையே 'இதனைச் சென்று அக் குரைஷிகளுக்கு ஓதிக்காட்ட வேண்டுமே—அதற்குரிய துணிவுடையவர் யார்?' என அண்ணலார் (ஸல்) வினவினார்கள். அச்சமயம் ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி) அவர்களே அனை வருக்கும் முன்னர் அப்பணியேற்கத் துணிந்தனர். அவர்

பொருளடக்கம்

களின் இளமையைக் கண்டு மற்ற தோழர்கள் தயக்கமுற்ற னர். குரைஷியர்கள் கூடித்தாக்கினால் தடுத்துச் சமாளிக்க ஆட்பலம் மிக்க குடும்பத்தைச் சார்ந்தவரே அப்பணிக்குத் தக்கவர் என அவர்கள் ஆயலுற்றபோதும், அவர்களின் தயக்கத்தை விலக்கி, 'என் இறைவனே என்னைப் பாதுகாக்கப் போதுமானவன்' எனத்துணிந் தனர் ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரலி)

மறு நாள் காலை பகலவன் தன் பயணத்தைத் துவக்கி உயர்ந்து கொண்டிருந்தான். குரைஷியர் தாம் கூடுமிடத்தில் ஒருவர் பின் ஒருவராய் வந்தமர்ந்த வண்ணமிருந்தனர். திடீரென,

بِسْمِ اللّٰهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ

"அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடை யோனுமாகிய அல்லாஹ்வின் திருப்பெயரால் துவக்கு கிறேன்" என்ற தொனி கேட்டு அவர்களின் பார்வை கள் அனைத்தும் திரும்பின. ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரலி) அவர்கள் தொடர்ந்து தம் குரல் நயம்தொடுத்து ஓதலாயினர்.

اَلرَّحْمٰنُ ۙ عَلَّمَ الْقُرْاٰنَ ۙ خَلَقَ الْاِنْسَانَ ۙ عَلَّمَهُ الْبَيَانَ

"(நபியே!) அளவற்ற அருளாளன் தான் இந்தக் குர்ஆனை (உமக்கு)க் கற்றுக் கொடுத்தான். அவனே மனிதனைச் சிருஷ்டித்தான். அவனே மனிதனுக்கு (விளக்கமாகப்) பேசவும் கற்பித்தான்"

என அவர்கள் ஓதிக் கொண்டிருக்கும் போதே ஒருவன் கத்தினான், "அடிமைத் தாயின் மைந்தனே! என்ன கூறுகிறாய்?" என்று.

பொருளடக்கம்

''முஹம்மதின் பால் இறங்கியுள்ள செய்திகளை ஓதிக்காட்டுகிறார்'' என ஒருவன் விளக்கியதுமே வெறி கொண்டுவிட்டது கூட்டம். அடிமைத்தாய் பெற்ற சிறு வனுக்கு இவ்வளவு ஆணவமா? என விரைந்த அவர்கள் ஒருவர் மாறியொருவர் தாக்கி அவர்களின் முகத்தை வீங்கவைத்தனர். பற்றியெரியும் தீயில் பன்னீர் தெளித்த கதையாக முடிந்தது அவர்களின் செயல். அடிமேல் அடி விழ ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊது (ரலி) அவர் களின் குரல் வலுத்தது. அவ்வத்தியாயத்தின் முடிவு வரையிலும் அவர்கள் ஓதியே முடித்தார்கள். அபூ ஜஹ்லின் அடியினால் அவர்களின் காதில் பட்ட காயத்தி லிருந்து இரத்தம் வடியலாயிற்று. காதைப் பிடித்த வண்ணமே அண்ணலார் (ஸல்) அவர்களின் இருப்பிடம் நோக்கி வந்த அவர்களின் கண்களும் வேதனை மிகுதியால் நீரை வடித்தன. அவர்களின் நிலை கண்டு மற்ற தோழர் கள், 'இதனாலேயேயன்றோ இந்தப் பணிக்கு நீர் துணிய வேண்டாம் என நாங்கள் தடுத்தோம்' என அவர்கள் பால் அனுதாபங் கொண்டனர். ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊது (ரலி) அவர்களோ, 'இல்லை. நீங்கள் நினைப்பது போலில்லை. நாளையும் நான் அவ்வீணர் களுக்கு முன் இவ்வாறே ஓதிக்காட்டுவேன்' என ஆர்த்து நின்றனர்.

அதே சமயம் ஹலரத் ஜிப்ரயீல் (அலை) அவர்களும் ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊது (ரலி) அவர் களைப் பார்த்துச் சிரித்த வண்ணமே அங்கு வந்தனர். அவர்களின் வருகையைக் கண்டு அண்ணலார் (ஸல்) அவர்கள் ''ஜிப்ரயீலே! அவர் தம் வேதனை தாளாது அழுதுக் கொண்டிருக்கையில் நீர் அவரைப் பார்த்துச் சிரிப்பதும் சரிதாமோ?'' என வினவினார்கள். ''என் சிரிப்புக்கான காரணத்தை அவர் வெகு விரைவில் விளங்கிக் கொள்வார்'' என பதிலுரைத்தனர் விண்ணவர் கோன்.

பொருளடக்கம்

ஆம்! ஜிப்ரயீல் (அலை) அவர்களின் சிரிப்பின் காரணத்தை புரியவைக்கும் காலம் விரைந்தே வந்தது.

ஹிஜ்ரத்துக்குப் பின் இரண்டாம் ஆண்டில் முஸ்லிம்களோடு போராட 'பத்ரு' களத்துக்கு படை நடத்தி வந்த மக்கத்துக் குரைஷிகளுக்கு முன்னோடியாக இருந்தவன் அபூ ஜஹலே. போர் முடிந்த பின்னரோ புறங்காட்டி ஓடியவர்களிலும் அபூ ஜஹலின் குரல் கேட்கப்படவில்லை. முஸ்லிம்களிடம் கைதாகி நின்றவர்களிலும் அவன் காணப்படவில்லை. என்னவானான் அவன் எனச் சிந்திக்கலான தம் தோழர்களிடம் அண்ணலார் (ஸல்) அவர்கள், 'களம்நடுவே கொல்லப்பட்டும் கிடக்கலாம்-பாருங்கள்' எனப் பணித்தார்கள். ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரலி) அவர்களே விரைந்தனர். பல பிணங்களுக்கிடையே குற்றுயிராய் கிடந்தான் அபூ ஜஹல். தலைமைத்தன மமதையோடு கஅபாவின் முன்னே தம் கன்னத்தில் அறைந்தவனின் கழுத்தின் மீதே காலை வைத்தேறி அவன் மார்பில் அமர்ந்தனர் அடிமைத்தாய் பெற்ற அவ்வேழை. தன் மீது வந்தமர்பவர் யார் என்பதை புரிந்து கொள்வதற்கே போலும், இறைவன் இன்னும் உணர்வை தங்கவைத்திருந்தான் அவனிடம். "இடையப் பயலே! இன்று மிக உச்சமான இடத்திலேயே ஏறத் துணிந்து விட்டனை நீ" என அங்கலாய்த்த அபூ ஜஹல் போர் ஓய்ந்திருக்கிறதென எண்ணியவனைப் போல "இன்றைய போரில் எவர் மிகைத்துள்ளார்" என வினவினான்.

"அல்லாஹ்வும் அவன் தூதரும் வெற்றி பெற்றனர்' என்றுரைத்தனர் ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரலி). அவ்விடையிலிருந்தே போர் ஓயவில்லை, முடிந்தே விட்டதென்பதை அபூ ஜஹல் உணர்ந்திருக்கவேண்டும்.

பொருளடக்கம்

சாகும் நேரத்திலும் அவனின் ஆணவம் சரியவில்லை. அவன் மார்பில் அமர்ந்திருந்த ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரலி) தம் வாளை உருவினார்கள். குற்றுயிராய்க் கிடக்கும் அவனின் உடலைவிட்டும் தலையைப் பிரித்து கணக்கை முடிக்கவே அவர்கள் முனைகிறார்கள் என்பதைப் புரிந்து கொண்ட அபூ ஜஹல் "அடிமைச் சிறுவனே! என் கழுத்தின் அடிப்பாகத்தில் வெட்டு. முஹம்மதின் முன்னிலையில் மற்றவர்களுடையவைகளை விட என் தலை சற்று உயரமாகவே தெரியட்டும்" என்றான். அவ்வாறே வெட்டியெடுத்த ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரலி) அவர்கள் கனமான அதனை சுமக்க இயலாதவர்களாய் அதன் ஒரு காதில் துளையிட்டு கயிற்றினால் கட்டி இழுத்து வந்தார்கள். அண்ணலார் (ஸல்) அவர்களை அவர்கள் வந்தடைந்த சமயம் அங்கு வந்துற்ற ஹலரத் ஜிப்ரயீல் (அலை) அவர்கள், "பெருமானே! முன்னர் அவர் தம் காதைப் பிடித்து அழுகையில் நான் சிரித்த காரணத்தை இப்போதவர் புரிந்து கொண்டிருப்பாரே!" எனக் கேட்டுச் சிரித்தனர்.

அபூ ஜஹலோடு நடைபெற்ற உரையாடல்களனைத்தையும் ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரலி) அவர்கள் கூறக்கேட்ட அண்ணலார் (ஸல்) அவர்கள் அவனை தம் காலத்தின் ஃபிர்அவ்ன் என வர்ணித்தார்கள்.

இஸ்லாத்தை ஏற்ற ஆரம்பகாலமுஸ்லிம்கள் அனைவர்க்கும் மக்க நகர வாழ்க்கை ஒரு நரக வாழ்வாகவே கழிந்ததன்றோ. மறைந்து மறைந்தே மாநபி (ஸல்) அவர்களின் தோழமையை வளர்த்த ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரலி) அவர்களை கஅபாவின் முன் அவர்

பொருளடக்கம்

கள் குர்ஆனை குரலெடுத்து ஓதிய சம்பவமே குரைஷி களுக்கு அடையாளங் காட்டி விட்டது. அதனைத் தொடர்ந்து விளைந்த கொடுமைகளைத் தாங்கமுடியாது அவர்கள் அபிஸீனியாவுக்கும் ஹிஜ்ரத்துச் செய்து செல்ல நேர்ந்தது. அவ்வாறே இருமுறை சென்று மீண்டார்களா யினும் தீராத தொல்லைகளுக்கு ஒரு தீர்வாகவே மதீனா வின் புறம் ஹிஜ்ரத்து செய்து செல்லுமாறு கட்டளை பிறந்தபோது அவர்களும் மற்றவர்களைப் போல் நிரந்தர மாகவே தாங்கள் பிறந்த பூமியைத்துறந்து மதீனாவுக்கு வந்து விட்டார்கள். அண்ணலார் (ஸல்) அவர்களுக்கு முன்னதாகவே ஹிஜ்ரத்துச் செய்த அவர்கள் மதீனாவில் ஹலரத் முஆது இப்னு ஜபல் (ரலி) அவர்களின் விருந் தினராக தங்கியிருந்தார்கள். பின்னர் ஹிஜ்ரத்துசெய்து வந்த அண்ணலார் (ஸல்) அவர்களும் அவ்விருவரையே உடன் பிறந்தவர்களாகப் பிணைத்து விட்டார்கள். மதீனாவின் பள்ளியின் அருகிலேயே ஒரு நிலம் அளிக்கப் பெற்ற ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊது (ரலி) அவர்கள் அதிலேயே குடிலமைத்து வாழலா னார்கள்.

மதீனாவில் மலர்ந்த அமைதியான வாழ்க்கைச் சூழலிலேயே ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊது (ரலி) அவர்களின் மேதை வளர்ந்தது. மாநபி (ஸல்) அவர்களின் தோழமையில் அமர்ந்து அவர்கள் மாமறையை மனனம் செய்துக் கொண்டதோடுமல்ல, அக்காலத்தில் எழுத்தறிவும் வரப்பெற்றிருந்த அவர்கள் அவ்வப்போது அண்ணலார் (ஸல்) அவர்கள் பால் இறங்கிய மறை வசனங்களை முறையாக எழுதிச் சேர்த்து அதனையே தங்கள் வாழ் நாள் முழுதும் மிகவும் கண்ணியத்தோடு பேணி ஓதியும் வந்தனர். கலீஃபா அபூபக்கர் (ரலி) அவர் களின் காலத்தில் திருமறை வசனங்கள் திரட்டிச் சேர்க்கப்

பொருளடக்கம்

பட்ட சமயத்திலும் ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரலி) அவர்கள் தங்கள் கைப்பட எழுதிப்பாது காக்கப்பட்ட முழுமையான குர்ஆன் பிரதியையே வைத் திருந்தார்கள்.

ஞான முதிர்வையே காரணமாகக் கொண்டு மதிக்கப் பெறும் முதுபெருந்தோழர்களின் வரிசையில் இடம் பெற்றவர்களே ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரலி). ஆடுகளை வழி நடத்திச் சென்ற அவர்களை ஆண்டவனின் அருளே மனிதர்களை வழி நடத்திட திசை மாற்றி அழைத்து வந்தது. அமானிதம் பேணிய அவர் களின் குண அழகும் அறிவினை ஈட்டிட அவர்கள் கொண்ட தாகமுமே அண்ணலார் (ஸல்) அவர்களின் ஆசியையும் அவர்களுக்கு ஈட்டித் தந்தன. அண்ணலார் (ஸல்) அவர்களையும் ஹலரத் அபூபக்கர் (ரலி) அவர்களையும் அடுத்து திருக்குர்ஆனை முதன் முதலாக, பகிரங்கமாக, கஅபாவின் முன் நின்று உலத்தாருக்கு ஓதிக்காட்ட அவர்கள் பெற்ற பேறும் அவர்கள் பெற்ற இறையரு ருளுக்குச் சான்றாக விளங்குகின்றது.

ஞானங்கற்க நாடியே அவர்கள் நாயக மாமணி (ஸல்) அவர்களின் கரம் பற்றித் தொடர்ந்தார்கள். ஞானங்களில் தலையானது அல்லாஹ்வின் அருள்மறை ஞானமே என் பதை உணர்த்துமாப்போன்றே விளங்கியது அவர்கள் முதன் முதலாக கஅபாவின் முன் ஓதிக் காட்டிய திரு வசனமும். அம்மறை ஞானத்தை அவர்களுக்கு முழுமை யாகவே கற்பித்ததோடு மட்டுமல்ல, அதனைக் கற்க நாடும் மற்றெவரும் தேடிச் சந்திக்க வேண்டிய ஆசான் களாக தங்களின் தோழர்கள் நால்வரை அடையாளங் காட்டிய அண்ணலார் (ஸல்) அவர்கள் ஹலரத் அப்துல் லாஹ் இப்னு மஸ்வூது (ரலி) அவர்களையே அந்நால்

பொருளடக்கம்

வருள் முதல்வராய் முற்படுத்திக் கூறியிருப்பதும் அவரின் மேதையை விளக்கப் போதுமன்றோ!

'நிஸா-பெண்கள்' என்ற-திருமறையின் நான்காம் அத்தியாயத்தை தமக்கு ஓதிக்காட்டுமாறு அண்ணலார் (ஸல்) அவர்கள் ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரலி) அவர்களைப் பணித்தார்கள். ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரலி) அவர்களோ! "அண்ணலே! தங்களின் மூலமாகவேயல்லவோ அது எங்களுக்கருளப் பட்டது" என்றனர். எனினும் உமது தொனியில் அதனை ஓதக்கேட்க நான் ஆவலுறுகிறேன் என்றார்கள் அண்ணலார் (ஸல்). நான் ஓதலானேன்.

فَكَيْفَ إِذَا جِئْنَا مِن كُلِّ أُمَّةٍ بِشَهِيدٍ وَجِئْنَا بِكَ عَلَىٰ هَٰؤُلَاءِ شَهِيدًا ۝

"(நபியே!) ஒவ்வொரு சமுதாயத்திலிருந்தும் (அவர்களுடைய நபியாகிய) சாட்சியை நாம் கொண்டு வரும்போது (உம்மை நிராகரித்த) இவர்கள் யாவருக்கும் (விரோதமான) சாட்சியாக உம்மை நாம் கொண்டுவந்தால் (உம்மை நிராகரித்த) இவர்களுடைய நிலை எவ்வாறிருக்கும்" என்ற (4:41) திரு வசனத்தை நான் ஓதிய போது கருணை நபி (ஸல்) அவர்களின் கண்கள் கலங்கி வடிந்தன, என ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரலி) அவர்கள் குறிப்பிடுகின்றார்கள்.

திருமறையை ஓதும் அவர்களின் திருத்தத்திறனோடு, அம்மறையின் வசனங்களுக்கு அவர்கள் அளித்த விளக்கங்களும் விரிவுரைகளும் முதிர்ந்த நபிமணித் தோழர்களாலும் ஏற்கப்பட்டன. "அதன் ஒவ்வொரு வசனமும் எங்கே எக்காரணம் பற்றி இறங்கிய தென்பதையும் நான் அறிவேன். மற்றவர்களைவிட நானே அதிகம் அறிவேன் என்பதை நபி மணித் தோழர்களும் அறிந்தேயுள்ளனர்,

பொருளடக்கம்

எனினும் அவர்களைவிட நான் உயர்ந்தவனல்லன். என்னைவிட அதிகம் எவரும் அறிந்திருப்பது தெரிந்தால் அவரைச் சந்திக்கப் புறப்பட நான் தாமதிக்கவே மாட்டேன்'' என ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரலி) அவர்கள் பிந்திய காலத்தில் உரையாற்றக் கேட்ட ஹலரத் 'ஷகீக் பின் ஸலமா' என்ற தாபயீப் பெரியார் 'அவர்கள் அவ்வாறு உரையாற்றிய அக்கூட்டத்திலும் சரி, அதற்குப்பின் நான் பங்கேற்ற பல்வேறு அறபோதக் கூட்டங்களிலும் சரியே அதனை எவரும் மறுத்துரைக்க நான் கேட்கவே இல்லை' என்றெழுதுகின்றார்

''எவ்வாறு மறுக்க இயலும்! அண்ணலார் (ஸல்) அவர்களை நாங்கள் பிரிந்திருக்க நேர்ந்த சந்தர்ப்பங்களிலும் அகலாது அருகிலேயே இருந்தவரல்லவோ அவர். அவர்களைச் சந்திக்க எங்களுக்கு தங்கடப்பட்ட தருணங்களிலும் அண்ணலார் (ஸல்) அவர்களை அண்ம அனுமதிக்கப் பெற்றவரல்லவோ அவர்'' என மாநபித்தோழர் ஹலரத் அபூ மூஸா அஷ்அரீ (ரலி) அவர்கள் வாயார்க்கின்றனர்.

உஹது, அகழ்ப்போர்களிலும், ஹுதைபியாவிலும் கைபர்-மக்கா வெற்றிகளிலும் ஹலரத் 'அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரலி) அவர்கள் பங்கேற்றுள்ளார்கள். அண்ணலார் (ஸல்) அவர்களின் வாழ் நாள் கண்ட எந்தப் போர்க்களங்களிலும் அவர்கள் பின்னடைந்திருந்ததில்லை என்பதற்கடையாளமாக ஹுனைன் போர் நிகழ்ச்சியை அவர்களே விவரிக்கிறார்கள். ஹுனைன் போரில் எதிரிகளின் கிடுக்கித் தாக்குதலால் முஸ்லிம் படையினர் முழுமையாகவே சிதறிப் பிரிய நேர்ந்தது. ஹலரத் அப்பாஸ் (ரலி) அவர்களின் குரல் கேட்டு அவர்

பொருளடக்கம்

களெல்லாம் மீண்டும் திரும்பலாயினர். எனினும் அவர்களில் எழுபதே பேர்களுக்குமேல் எவரும் அண்ணலார் (ஸல்) அவர்களை அணுக முடியாத வண்ணம் எதிரிகள் மூர்க்கமாய்த் தாக்கிக் கொண்டிருந்தனர். "எண்பதடி தூரம் விலகியோடிய நாங்கள் மீண்டும் திரும்பி அண்ணலார் (ஸல்) அவர்களோடு இணைந்து நின்றோம். அண்ணலார் (ஸல்) அவர்கள் தங்கள் புரவியை விரட்டிய வண்ணமிருந்தார்கள். அது முன்னேற முரண்டு பிடித்த வண்ணமிருந்தது. அத்துணை மூர்த்தண்யமாக இருந்தது எதிரிகளின் நடவடிக்கைகள். ஒரு சமயத்தில் அண்ணலார் (ஸல்) அவர்கள் புரவிமீதிருந்து தங்கள் இருப்பிடத்துக்கும் கீழாகக் குனியலானார்கள். இறைவனின் தூதரே! அல்லாஹ் உயர்த்தியுள்ள தங்கள் தலையை தாழ்த்த வேண்டாம் என நான் கூவினேன். 'ஒரு பிடி மண் எடுத்து எவரும் என்னிடம் தாருங்கள்' என அண்ணலார் (ஸல்) அவர்கள் கேட்டார்கள். நான் மண் எடுத்துத் தந்தேன், அண்ணலார் (ஸல்) அவர்கள் அதன் மீது ஓதி ஊதி எதிரிகளின் புறம் எறிந்தார்கள். அது அவர்களனைவரின் கண்களிலும் போய் விழுந்தது. "முஹாஜிர்களும் அன்ஸார்களும் எங்கே? அவர்களை உரத்து அழையும்" என அண்ணலார் (ஸல்) அவர்கள் பணித்தார்கள். நான் உரத்துக் கூவினேன். திரும்பி வந்த முஸ்லிம் வீரர்களின் வாட்கள் சுவாலைகளாய் மின்னின. எதிரிகள் புறங்காட்டி ஓடினர்" என ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊது (ரலி) அவர்கள் தாம் முந்திச் சேர்ந்த எழுபதின்மரில் ஒருவராய் இருந்ததை சுட்டிக்காட்டுகிறார்கள்.

அண்ணலார் (ஸல்) அவர்களின் மறைவினால் ஏற்பட்ட விரக்தி ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊது (ரலி) அவர்களைச் சில காலம் ஓய்ந்திருக்கச் செய்து விட்டது. எனினும் கலீஃபா உமர் (ரலி) அவர்களின்

பொருளடக்கம்

காலத்தில் முஸ்லிம் படையினர் முழக்கிய முரசொலி அவர்களின் செவிப்பறை பட்டு, நரம்புகளைப் புடைத்தெழச் செய்தது. 'யர்மூக்'கில் போர் நடந்து கொண்டிருந்த காலமது. போர்க்களங்களை என்றுமே எட்டிப் பார்க்காத கிருஸ்துவப் பாதிரிகளும் துறவிகளும் கூட இஸ்லாத்திற்கு எதிராக சிலுவைகளைச் சுமந்து வந்து 'யர்மூக்'கில் உலவினர். அச்செய்தி மதீனாவில் கிடைக்கப்பெற்ற ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரலி) அவர்கள் யர்மூக் போரில் கலந்து அவ்விடைக்கால முழுதும் இறைமார்க்கத்துக்கு தங்களால் விடுபட்ட கடனை நிறைவு படுத்தினார்கள்.

யர்மூக் போர்க்களத்திலிருந்து நாடு திரும்பிய ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரலி) அவர்களை மீண்டும் விலகி வாழ்ந்து ஓய்வு கொள்ள கலீஃபா உமர் (ரலி) அவர்கள் விடவில்லை. நிர்வாகத்தில் தமக்கு உதவ இல்லம் நிரம்பவே நல்லோர்கள்தேவை என அவலுற்ற கலீஃபா அவர்கள் வீரமும் துணிவும் மேதையும் திறனும் ஒருங்கமையப் பெற்ற நாயகத் தோழரின் துணையை இழக்க எவ்விதம் துணிவார்கள்.

மதீனாவின் வீதியில் ஒரு மனிதர் தம் கீழாடையை கணுக்காலுக்கும் இறக்கமாகக் கட்டி நடந்து செல்லக் கண்ட ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரலி) அவர்கள் அதனைச் சற்றே உயர்த்திக் கட்டுமாறு அவருக்கு அறிவுரை கூறினார்கள். அவரோ "பெரியீர்! தாங்களும் தங்களின் கீழாடையை உயர்த்திக் கட்டுங்கள்" என அவர்களுக்கே போதிக்கலானார். "நான் ஊனமுற்றுள்ள என் பாதங்களை பிறர் பார்வையிலிருந்து மறைப்பதற்கே என் கீழாடையை இறக்கமாகக் கட்டியுள்ளேன். உம் நிலை

அ—2.

பொருளடக்கம்

என் போலன்று'' என அவர்கள் தங்கள் நிலையை அவருக்கு விளக்கினார்கள். இச் சம்பவம் பற்றி செவி யுற்ற கலீஃபா உமர் (ரலி) அவர்கள் மாநபியின் திருத் தோழரோடு எதிர்வாதம் புரிந்தமைக்காக அம்மனிதரைச் சவுக்காலடித்தார்களெனில் ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரலி) அவர்களின் பால் கலீஃபா அவர்கள் கொண்டிருந்த மரியாதையை உணர முடிகிறது.

''திருக்குர்ஆனை அவரைவிட விளக்கமாகப் புரிந் தவர் இல்லை'' என கலீஃபா உமர் (ரலி) அவர்கள் அத் தோழரைப் பற்றி புகழ்ந்தார்கள்.

அருள்மறை வசனங்களையடுத்து அண்ணலார் (ஸல்) அவர்களின் அறபோதங்களையும் ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரலி) அவர்கள் அதிகம் அறிந்திருந்தார் கள். ஏறத்தாழ 848 அறபோதங்களை எடுத்துரைத்து அவர்கள் 'ஹதீஸ்' அறிவிப்பாளர்களின் வரிசையில் எட்டாமவர்களாக விளங்குகிறார்கள். எனினும் ஓராயி ரத்துக்குப்பட்ட 'ஹதீஸ்'களை உலகறியச் செய்தவர் களில்* அவர்களே முதலிடம் பெற்றுத் திகழ்கிறார்கள்.

'ஃபிக்ஹ்' எனப்படும் மார்க்க வரம்புகள் பற்றிய ஞானத்திலும் ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரலி) அவர்கள் மிகத் தேர்ச்சி பெற்றவர்களாக விளங் கினார்கள். அவர்கள் பெற்றிருந்த அனைத்து ஞானங்களின் காரணமாகவே அவர்கள் அண்ணலார் (ஸல்) அவர்களுக் குப் பின் பொறுப்பேற்ற கலீஃபாக்களாலும் முதுபெரும் தோழர்களாலும் பெரிதும் மதிக்கப் பெற்றனர்.

---

* ஓராயிரத்துக்கும் மேற்பட்ட ஹதீஸ்களை அறிவித்த அறுபெரும் தோழர்கள் பற்றி 'அருள் ஞானக் கருவூலம் ஹலரத் அபூஹுரைரா (ரலி)' 'அருள் ஞானக் கருவூலம் ஹலரத் அப்துல்லாஹ் இப்னுஉமர் (ரலி) என்ற நூற்கள் வெளிவந்துள்ளன.

பொருளடக்கம்

அண்ணலார் (ஸல்) அவர்கள் மண்ணில் நடமாடிய காலம் வரையிலும் சட்டப் பிரச்சினைகளில் சிக்கலுக்கோ மனிதர்களின் சுய ஆய்வுகளுக்கோ தேவையற்றிருந்தது. ஏனெனில் காலத்தின் தேவைக்கேற்ப வேத வசனங்கள் அவ்வப்போது இறங்கிய வண்ணமிருந்தன. தூதர் நாயகம் (ஸல்) அவர்களும் தம் திருவாய் திறந்து வழிமுறைகளை மக்களுக்கு விளக்கிக் கொண்டிருந்தார்கள். வஹீ இறங்குவதும் நிரப்பமடைந்து அண்ணலார் (ஸல்) அவர்களும் உலகைப் பிரிந்த பின்னர் அவர்கள் வகுத்தளித்த மார்க்கம் பரவத்துவங்கி பல தரப்பட்ட மக்களும் அதில் இணையப் பெருக்கெடுத்தபோது புதிய புதிய பிரச்சினைகள் எதிர்பட்டன. அவைகளுக்குத் தீர்வுகாண வேத வசனங்களுக்கும் தூதர் நாயகம் (ஸல்) அவர்களின் வாக்குகளுக்கும் புறம்பாகாத வகையில் வழிமுறைகள் ஆயப்பட்டன. 'இஜ்திஹாத்' எனப்படும் அவ்வாய்வுகள் நடத்தத் தகுதிபெற்ற அறுபெரும் முஜ்தஹிதுகளில் ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரலி) அவர்களும் ஒருவராக விளங்கினர். ஹலரத் அலீ (ரலி) அபூமூஸா அஷ்அரீ (ரலி) கஅபு (ரலி) ஆகிய மூவர் ஒரு குழுவினராகவும், ஹலரத் உமர் (ரலி) அப்துல்லாஹ்இப்னு மஸ்வூது (ரலி) ஜைதுஇப்னு ஸாபித் (ரலி) ஆகிய மூவரும் மறு குழுவினராகவும் அமர்ந்து ஆய்வுகளை மேற்கொள்வர்- என இமாம் முஹம்மது (ரஹ்) அவர்கள் 'கிதாபுல்ஆஸார்' எனப்படும் தம் நூலில் குறிப்பிடுகின்றனர்.

ஹலரத் உமர், அப்துல்லாஹ் இப்னுமஸ்வூது, ஜைது இப்னுஸாபித் (ரலி) ஆகிய மூவரின் ஆய்வுகள் ஒன்றுபட்டிருப்பன. எனவேதான் அம்மூவரும் வெவ்வேறு தருணங்களில் வெளியிட்ட தீர்ப்புகளும் பொருந்திக் காணப்படுகின்றன என்று இமாம் ஷஅபீ (ரஹ்) அவர்கள் எழுதுகின்றார்கள்.

பொருளடக்கம்

'ஞானத்தின் கருவூலம்' என்றே ஹலரத் அப்துல்லாஹ் மஸ்ஊது (ரலி) அவர்களைப் போற்றிய கலீஃபா உமர்(ரலி) அவர்கள் ஹிஜ்ரி 20ம் ஆண்டில் கூஃபாவின் நீதிபதியாகப் பொறுப்பளித்து அவர்களை அனுப்பி வைத்தார்கள். அத்துடன் கூஃபாவின் கருவூலப் பாதுகாப்பும் அவர்களிடமே ஒப்படைக்கப்பட்டது. கூஃபாவின் ஆளுநருக்கு உதவும் அமைச்சராகவும், மக்களுக்கு மார்க்கத்தை விளக்கும் போதகராகவும் அவர்களை கலீஃபா உமர் (ரலி) அவர்கள் நியமனம் செய்தார்கள்.

ஆளுநர்களையும் அதிகாரிகளையும் தேர்ந்தெடுப்பதிலும், பொறுப்புகளளித்து அவர்களை அனுப்பிய பின்னரும் அவர்களின் நடைமுறைகளைக் கண்காணிப்பதிலும் கலீஃபா உமர் (ரலி) அவர்கள் மேற்கொண்ட கவனமும் கண்டிப்பும் வரலாற்றுப் புகழ் படைத்தவைகளாகும். அத்தகைய ஒரு கலீஃபா கூஃபாவில் நீதி வழங்கவும், நிதி நிலை காக்கவும், மதி மந்திரியாக நின்றுதவவும், மார்க்கத்தை விளக்கவுமான அத்தனைப் பொறுப்புகளையும் ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊது (ரலி) ஒருவரிடமே ஒப்படைத்து அனுப்பியதோடன்றி, தாம் வாழ்ந்த காலம் முழுவதும் அப்பொறுப்புகளை மேற்கொண்ட அவர்களிடம் எவ்விதக் குறையும் காணவில்லையெனில் ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊது (ரலி) அவர்களில் அமையப் பெற்றிருந்த சீலமையையும் தகுதிச் சிறப்பையும் கணித்துணரலாம். கூஃபா வாழ் மக்களுக்கு அக்காலை எழுதிய தம் அறிமுகக் கடிதத்தில் கலீஃபா உமர் (ரலி) அவர்கள், "பொறுப்புகளேற்று உங்களிடையே வரும் இப் பெரியார் பத்ரு போரில் அண்ணலார் (ஸல்) அவர்களோடு இணைந்து நின்ற மேலான தகுதியைப் பெற்ற தோழர்களைச் சார்ந்தவராவார். எனவே அவர் கட்டளையை ஏற்று அவருக்கு வழிப்படுங்கள். உண்மை

பொருளடக்கம்

யில் நான் அவரை என்னிலும் மேலானவராகவே உங்களிடை முற்படுத்தி வைக்கிறேன்'' என்றே குறிப்பிட்டிருந்தார்கள்.

பொறுப்புகளேற்று கூஃபா வந்த ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊது (ரலி) அவர்கள் தாங்கள் ஏற்ற ஒவ்வொரு பணியையும் சிறக்கச் செய்தார்கள். ஏறத்தாழ பத்தாண்டு காலம் அவர்கள் கூஃபாவில் தங்கி தம் பொறுப்புகளனைத்தையும் திறன்பட நிறைவேற்றினார்கள். அந் நீண்ட இடைக்காலத்தில் இஸ்லாமிய அரசியல் பல தரப்பட்ட மாறுதல்களைக் காண நேர்ந்தது. கலீஃபா உமர் (ரலி) அவர்கள் மரணித்து ஹலரத் உதுமான் (ரலி) அவர்கள் கிலாஃபத்தை ஏற்றார்கள். கூஃபாவின் நிர்வாகம் அந்நகர மக்களின் அடுத்தடுத்த முறையீடுகளின் காரணமாக பல ஆளுநர்களின் கரங்களுக்கு மாறிக் கொண்டிருந்தது. எனினும் ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊது (ரலி) அவர்களின் நீதியிலும் நிர்வாகத்திலும் குறை கண்டுரைப்பார் இல்லாதிருந்தது. அவர்களின் குண நல மேம்பாடுகள் மக்களைக் கவர்ந்து நாடெங்கிலும் அவர்களின் புகழ் ஓங்கச் செய்தன. தம்மின் திறன்பட்ட நிர்வாகத்தாலும் நிதானமிக்க நேர்மையான நடவடிக்கைகளாலும் அவர்கள் எவ்விதக் குறைபாட்டுக்கும் ஆளாகாமல் அப்பொறுப்பில் நீடித்திருந்தார்கள்.

மார்க்க ஞானம் போதிப்பதற்காக அவர்கள் ஒரு கலைக்கூடத்தை தனியாகவே அமைத்திருந்தார்கள். நாடெங்கிலும் இஸ்லாமிய மார்க்கத்தை ஏற்றிருந்த மக்கள் அந்நபிமணித்தோழரின் சிறப்பினைச் செவியுற்று, மார்க்க வழிமுறைகளை கற்பதற்கும் ஆய்வதற்கும் அக் கலைக் கூடத்தில் திரளலானார்கள். அறிவுத்தாகம் கொண்டோர் ஆய்வு நடத்தவும், தீர்வுகாணவும் பொருத்தமான ஒரு மன்றமாக அது அமைந்து விளங்கியது.

பொருளடக்கம்

திருக்குர்ஆனை ஓதுவிக்கத் தெரிந்த மிகச் சிறந்த காரீகளாக அண்ணலார் (ஸல்) அவர்களால் அடையாளங் காட்டப்பெற்றிருந்த அவர்கள் தங்களின் பின்னே மிகச் சிறந்த பாரம்பரியத்தையும் வளர்க்கத் தவறவில்லை. ஒரு சமயம் கூஃபா வந்திருந்த ஹலரத் கப்பாப் (ரலி) அவர்கள், "அபா அப்தர் ரஹ்மான்! தங்களின் தோரணை யிலேயே திருமறையை ஓத தங்களின் மாணவர் எவரையும் பயிற்றுவித்துள்ளீர்களோ?" என வினவினார்கள். 'ஏன் இல்லை' என்ற பெருமிதத்தோடு ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊது (ரலி) அவர்கள் 'அல்க்கமா' என்ற தம் மாணவரை நோக்கினார்கள். தம் ஆசானின் சாடையைப் புரிந்து கொண்ட அல்க்கமா (ரஹ்) அவர்கள் இனிய குரலெடுத்து இறைமறை வசனங்களை ஓதலானபோது, ஐம்பதுக்கும் மேற்பட்ட வசனங்களை ஹலரத் கப்பாப் (ரலி) அவர்கள் லயித்துக் கேட்டு மகிழ்ந்தார்கள்.

திருக்குர்ஆனின் வசனங்களுக்கு அவர்கள் போதித்த மிகச் சிறந்த விளக்க உரைகளைக் கேட்டு மாநபித் தோழர்களும் வியப்படைந்தனர். மாணவர்களிடையே மாமறையை விளக்குகையில் மாநபி பெருமான் (ஸல்) அவர்களின் திருவாய்மொழிகளையும் அவர்கள் விரிவாய் எடுத்தோதினார்கள். திருமறை வசனங்களுக்கு திரு நபி (ஸல்) அவர்களின் திருவாய்மொழிகளின் வாயி லாகவே அல்லாது தம்முத்திப்பாக விளக்கம் தருவதை அவர்கள் வன்மையாக வெறுத்தார்கள்; கண்டித்தார்கள்.

அதேபோன்று பெருமானார் (ஸல்) அவர்களின் திருவாய் மொழிகளுக்கு தக்க ஆதாரங்களாக திருமறை வசனங்களையே அவர்கள் ஓதிக்காட்டக் கேட்டு அறி வுடையோர் வியந்தனர்.

பொய்ச் சத்தியம் செய்து ஒரு முஸ்லிமின் உடைமைகளைப் பறிப்பவன் மீது மறுமையில் இறை

பொருளடக்கம்

வன் பெருஞ்சினமடைவான் என்ற நபி மொழியைப் பற்றி ஒருமுறை விவாதிக்கப்பட்டபோது,

إِنَّ الَّذِينَ يَشْتَرُونَ بِعَهْدِ اللَّهِ وَأَيْمَانِهِمْ ثَمَنًا قَلِيلًا أُولَٰئِكَ لَا خَلَاقَ لَهُمْ فِي الْآخِرَةِ وَلَا يُكَلِّمُهُمُ اللَّهُ وَلَا يَنْظُرُ إِلَيْهِمْ يَوْمَ الْقِيَامَةِ وَلَا يُزَكِّيهِمْ وَلَهُمْ عَذَابٌ أَلِيمٌ

"எவர்கள் அல்லாஹ்விடத்தில் செய்த வாக்குறுதியையும் தங்களுடைய சத்தியங்களையும் சொற்ப கிரயத்துக்கு விற்று விடுகின்றார்களோ அவர்களுக்கு மறுமையில் யாதொரு (நற்) பாக்கியமுமில்லை. அன்றி, அல்லாஹ் (மறுமை நாளில்) அவர்களுடன் (விரும்பிப்) பேசவுமாட்டான்; (அன்புடன்) அவர்களை மறுமை நாளில் (திரும்பிப்) பார்க்கவுமாட்டான்; அவர்களைப் புனிதப்படுத்தவுமாட்டான். அவர்களுக்குத் துன்புறுத்தும் வேதனையுமுண்டு" என்ற திருமறையின் (3:77வது) வசனத்தை அதற்கு ஆதாரமாக ஓதியும் காட்டினார்கள்.

ஒரு நாள் தங்கள் மாணவர்களிடையே 'அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களிடம் பாவங்களில் பெரும் பாவம் எதுவென்று ஒரு சமயம் கேட்கப்பட்டபோது முதலாவதாக, இணைவைத்தல் அடுத்து, மக்களை கொலை செய்தல் அடுத்து, அண்டை வீட்டான் மனைவியிடம் சோரம் போதல் என அண்ணலார் (ஸல்) அவர்கள் கூறினார்கள்' என்றறிவித்த அவர்கள்,

وَالَّذِينَ لَا يَدْعُونَ مَعَ اللَّهِ إِلَٰهًا آخَرَ وَلَا يَقْتُلُونَ النَّفْسَ الَّتِي حَرَّمَ اللَّهُ إِلَّا بِالْحَقِّ وَلَا يَزْنُونَ وَمَنْ يَفْعَلْ ذَٰلِكَ يَلْقَ أَثَامًا

"அவர்கள் அல்லாஹ்வுடன் வேறெவரையும் ஆண்டவன் என்று அழைக்கமாட்டார்கள்; அல்லாஹ் (கொலை

பொருளடக்கம்

செய்யக் கூடாதென்று) தடுத்திருக்கும் எம் மனிதனையும் அவர்கள் நியாயமின்றி கொலை செய்துவிடமாட்டார்கள்; விபச்சாரமும் செய்ய மாட்டார்கள், ஆகவே, எவனேனும் இவைகளைச் செய்ய முற்பட்டால், அவன் (அந்தப் பாபத்துக்குரிய) தண்டனையை அடைய நேரிடும்'' என்ற (25 : 68 ஆவது) இறை வசனத்தை தம் மாநபி (ஸல்) அவர்களின் மணிமொழிக்கு ஆதாரமாக ஓதிக்காட்டினார்கள்.

ஒரு சமயம் ஹஜ்ஜுடைய பயணம் மேற்கொண்ட கலீஃபா உமர் (ரலி) அவர்கள் வழியில் இராத் தங்கினார்கள். அவர்களின் எதிரே வேறு திக்கிலிருந்து பயணம் செய்து வந்த ஒரு கூட்டமும் முகாமிட்டது. அவர்கள் யார் என இருட்டில் விளங்கிக் கொள்ள முடியாதிருந்தது. விசாரித்து அறிய எவரையேனும் குரலிட்டு அழைக்கும்படி கலீஃபா அவர்கள் ஏவினார்கள். அவ்வாறே அழைக்கப் பட்டது. செவியுற்று எதிர்முகாமிலிருந்து ஒருவர் கலீஃபாவைச் சந்திக்கவந்தார். அவர்கள் எங்கிருந்து வருபவர்கள் என கலீஃபா அவர்கள் வினவினார்கள்.

'வெகு தொலைவிலிருந்து' என்றாரவர்.

எங்கே செல்கின்றார்கள் என வினவிய கலீஃபா அவர்களுக்கு 'புனித வீட்டைத்தரிசிக்க' என விடையிறுத்தாரவர்.

உரையாடல் தொடர்ந்தது. அவரின் கல்வியறிவை சோதிக்க எண்ணிய கலீஃபா அவர்கள் வினாக்களைத் தொடுக்கலானார்கள்.

திருமறையின் மகத்துவமிக்க வசனம் எது? என கலீஃபா அவர்கள் வினவினார்கள்.

பொருளடக்கம்

ٱللَّهُ لَآ إِلَٰهَ إِلَّا هُوَ ٱلْحَىُّ ٱلْقَيُّومُ ۚ لَا تَأْخُذُهُۥ سِنَةٌ وَلَا نَوْمٌ

"அல்லாஹ் (எவ்வித மகத்துவமுடையவனென்றால்)-- அவனைத் தவிர வேறு நாயன் (இல்லவே) இல்லை (அவன்) நித்திய ஜீவன்; (என்றும்) நிலையானவன். அவனை உறக்கமும் நித்திரையும் பீடிக்கா" என்ற (2 : 255 ஆவது) திருவசனத்தை ஓதிக்காட்டினாரவர்.

மனிதனுக்கு அவ்வான் மறை ஏவும் தலையாய கட்டளை எது? என வினவினார்கள் கலீஃபா.

إِنَّ ٱللَّهَ يَأْمُرُ بِٱلْعَدْلِ وَٱلْإِحْسَٰنِ وَإِيتَآئِ ذِى ٱلْقُرْبَىٰ

"(விசுவாசிகளே!) நீங்கள் நீதி செலுத்தும்படியாகவும், பந்துக்களுக்கு(ப் பொருள் கொடுத்து) உதவி செய்யும் படியாகவும் நிச்சயமாக அல்லாஹ் (உங்களை) ஏவுகிறான்" என்ற (16 : 90 ஆவது) வசனத்தை ஓதினாரவர்.

அதன் சாராம்சமான பகுதி எது? என் வினவினார்கள் கலீஃபா.

فَمَن يَعْمَلْ مِثْقَالَ ذَرَّةٍ خَيْرًا يَرَهُۥ ۝ وَمَن يَعْمَلْ مِثْقَالَ ذَرَّةٍ شَرًّا يَرَهُۥ ۝

"எவர் ஓர் அணுவளவு நன்மை செய்திருந்தாரோ அவர் (அங்கு) அதனையும் கண்டுகொள்வார். (அவ்வாறே) எவன் ஓர் அணுவளவு தீமை செய்திருந்தானோ அதனையும் அவன் (அங்கு) கண்டு கொள்வான்." என்ற (99 : 7, 8 ஆம்) வசனங்களை அவர் ஓதிக்காட்டினார்.

அதன்-மிக அச்சமூட்டக் கூடிய வசனத்தைக் கூறும் என கலீஃபா அவர்கள் வினவ,

பொருளடக்கம்

لَيْسَ بِأَمَانِيِّكُمْ وَلَآ أَمَانِيِّ أَهْلِ الْكِتٰبِ مَنْ يَّعْمَلْ سُوْٓءًا يُّجْزَ بِهٖ وَلَا يَجِدْ لَهٗ
مِنْ دُوْنِ اللّٰهِ وَلِيًّا وَّلَا نَصِيْرًا

"(விசுவாசிகளே! மறுமையில்) உங்கள் விருப்பப்படியோ, வேதத்தை யுடையோர் விருப்பப்படியோ, (காரியம் நடப்பது) இல்லை. எவன் தீமை செய்கின்றானோ அவன் அதற்குரிய தண்டனையைக் கொடுக்கப் பெறுவான். அவன் அல்லாஹ்வையன்றி தனக்கு உதவி செய்வோ ரையோ அல்லது துணை புரிவோரையோ (அங்கு) காண மாட்டான்" என்ற (4 : 123 ஆவது) வசனத்தை அவர் ஓதிக்காட்டினார்.

அதன்-மிகச் சிறந்த - நம்பிக்கையூட்டும் வசனத்தைக் கூறும் என கலீஃபா அவர்கள் கேட்க,

قُلْ يٰعِبَادِيَ الَّذِيْنَ اَسْرَفُوْا عَلٰٓى اَنْفُسِهِمْ لَا تَقْنَطُوْا مِنْ رَّحْمَةِ اللّٰهِ
اِنَّ اللّٰهَ يَغْفِرُ الذُّنُوْبَ جَمِيْعًا اِنَّهٗ هُوَ الْغَفُوْرُ الرَّحِيْمُ

"என் அடியார்களே! (உங்களில்) எவரும் வரம்பு மீறி தமக்குத்தாமே தீங்கிழைத்துக் கொண்டபோதிலும், அல்லாஹ்வின் அருளைப்பற்றி நீங்கள் நம்பிக்கையிழந்து விட வேண்டாம். (நீங்கள் பாபத்திலிருந்து விலகி, மனம் வருந்தி மன்னிப்பைக் கோரினால்) நிச்சயமாக அல்லாஹ் (உங்களுடைய) பாபங்கள் யாவையும் மன்னித்து விடு வான். ஏனென்றால், நிச்சயமாக அவன் மிக்க மன்னிப் போனும் கிருபையுடையோனுமாக இருக்கிறான்" என்ற (39 : 53 ஆவது) வசனத்தை ஓதிக்காட்டினார் அவர்.

இவையனைத்தையும் செவியேற்று கலீஃபா அவர்கள் "என்ன! உங்களிடையே அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது

பொருளடக்கம்

இருக்கின்றனரா!'' என வினவினார்கள். அவர்களின் கணிப்பு மிகச் சரியே. ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது(ரலி) அவர்களின் தோழமை கண்ட மாணவரே அவர் கூஃபாவிலிருந்து அவர்களோடிணைந்து ஹஜ்ஜுக்குப் புறப்பட்டு வந்த கூட்டமே எதிரே முகாமிட்டிருந்தது.

'ஹதீஸ்'களைக் கற்பிக்கும் போதும், மார்க்கத்தீர்ப்புகள் வழங்கும்போதும் அவர்கள் மேற்கொண்ட இறையச்சமும் பேணுதலும் மகத்தானவை. ஒழுங்கையும், தூய்மையையும், அமைதியையும் தங்களின் போதனைக் கூடத்திலும் பேணச் செய்தார்கள். பாடங்களைப் போதிக்கையில் அவர்கள் பேணிய பாங்கு அண்ணல் எம் பெருமான் (ஸல்) அவர்களின் திருமுன்பே அமர்ந்து கற்பதைப் போன்ற உணர்வை அவர்களின் மாணவர்களிடையே வளர்த்தது. மறுமை வாழ்வைப் பற்றியும், சுவனத்தைப் பற்றியும், நம்பிக்கையாளர்களின் நிலை பற்றியும் நீண்டதோர் ஹதீஸுக்கு ஒரு நாள் விளக்கமளித்த அவர்கள் முடிவாக ஒரு புன்முறுவலையும் சிந்தி, ''நான் முறுவலிக்கக் காரணத்தை நீங்கள் அறிவீர்களா?'' என வினவினார்கள். ''அறிய விரும்புகிறோம் கூறுங்கள்'' என அம்மாணவர்கள் வினவவே, ''என் ஏந்தலர் (ஸல்) அவர்கள் இவ்வறபோதத்தை எங்களுக்கு வழங்கி முடித்த போதும் இவ்வாறே முறுவலித்தார்கள்'' எனக் கூறி விடைபெற்றார்கள் அத்தோழர்.

தங்களைப் போலவே 'ஹதீஸ்'களைப் போதிக்கையில் பேணுதலை மேற்கொள்ள அவர்கள் தங்கள் மாணவர்களையும் பழக்கினார்கள். 'அண்ணலார் (ஸல்) அவர்களின் புனிதமும், அவர்களின் பேணுதலும், அவர்களின் நேர்வழியும் உங்கள் அனைவோர்களுடையவைகளை விடவும் உயர்வானவை என்பதை மறந்து விடாதீர்கள்' என அவர்களை எச்சரித்தார்கள்,

பொருளடக்கம்

அவர்களிடம் கற்றுச் சிறந்து வெளியேறிய மாணவர்கள் தாங்கள் கற்றவைகளை மக்களிடையே போதித்து ஈராக்கிய மாநிலம் முழுவதுமே அவர்களின் வழிமுறையைப் பேணிடச் செய்து விட்டனர். அல்க்கமா, மஸ்ரூக், உபைதா, ஹார்ரிஸ், ஷுரீஹ், அபூவாயில் போன்ற புகழ் பெற்ற தாபஈன்கள் ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரலி) அவர்களின் மாணவர்களே. எனினும் அவர்களில் தம் ஆசானின் வழிமுறையை அனுப்பிசகாது பேணிச் சிறந்தவர்களாக 'அல்க்கமா' (ரஹ்) அவர்களே விளங்கினர். தம் ஞான குருவினிடத்தில் அவர்கள் காட்டிய ஒழுக்கமும், அவர்களின் ஏவலுக்கு வழிப்பட்ட பேணுதலும் 'அல்க்கமாவைக் கண்டவர் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரலி) அவர்களையே கண்டார்' என்ற சிறப்பை அவருக்குத் தேடித் தந்தன.

ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரலி) அவர்களின் பயண காலங்களிலும் மாணவர்களின் ஒரு குழாம் அவர்களோடிணைந்தே செல்லும். அப்பயணங்களனைத்திலும் 'அல்க்கமா' (ரஹ்) அவர்கள் தவறாதிருப்பர். தவிர்க்க முடியாத காரணத்தால் புறப்பட முடியாதாகி விடும் தருணங்களிலும் அல்க்கமா (ரஹ்) தமக்குப் பகரமாக ஒருவரை உடன் நியமித்து தம் ஆசானின் அருகினை விட்டகலாது அவர்களுக்கு ஊழியம் புரியவும் அவர்களின் வாயுதிர் வளமொழிகள் ஒவ்வொன்றையும் செவியுற்று மறவாது தமக்கறிவிக்கவும் ஏவி அனுப்புவர்.

எனினும், பிந்திய காலத்தில் அவர்களிடம் பாடங் கற்ற இப்ராஹீம் நக்கஈ (ரஹ்) அவர்களே கூஃபாவிலேயே தங்கி ஞானம் வளர்த்து 'கூஃபாவின் ஃபக்கீஹ் சட்ட நிபுணர்' எனப் புகழடைந்தனர். அவரிடம் கற்ற ஹலரத் ஹம்மாது (ரஹ்) அவர்களின் மூலம் அவ்வறிவு

பொருளடக்கம்

ஞானம் இமாம் அபூ ஹனீஃபா (ரஹ்) அவர்களுக்குக்கிட்டி இன்றைய இஸ்லாமிய உலகின் பெரும் பகுதிக்குப் பயன் தருகிறது. ஹனஃபீ வழிமுறையின் வரம்புகள் அனைத்தும் ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரலி) அவர்களின் வழிமுறையை அடிப்படையாகக் கொண்டவைகளே.

சீடர்களாக அமர்ந்து பாடங்கற்ற மாணவர்களே மட்டுமின்றி அம் மாநபித் தோழரின் தோழமையையே பேறாக எண்ணிச் சூழ்ந்திருந்தவர்களும் பலபேர். அறிவுத் தாகம் கொண்டவர்கள் இவர்களின் வருகையை நாடிப் பள்ளியில் காத்திருந்ததோடன்றி அத்தகையோர்களின் இல்லங்களைத் தேடிச் சென்றும் இவர்கள் அறபோதங்கள் வழங்கிய பாங்கையும் கூஃபா நகரம் கண்டுள்ளது.

ஞானம் வளர்க்க ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரலி) அவர்கள் ஏற்ற சிரத்தை மிக மேலானது. எனினும் 'ஹதீஸ்'களை அறிவிப்பதில் அவர்கள் மேற்கொண்ட எச்சரிக்கைகளும் மகத்தானவை. ''அவர்களின் தோழமையில் ஓராண்டு காலத்தைக் கழித்தோம். எனினும் 'அண்ணலார் (ஸல்), அவர்கள் இவ்வாறே கூறக் கேட்டேன்' என அவர்கள் குறிப்பிட நாங்கள் செவியுறவே இல்லை. ஒரேயொரு முறை அவ்வாறு-கால ரஸூலுல் லாஹி (ஸல்)-அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறினார்கள், என்ற சொல்லை உதிர்த்து விட்ட அவர்கள் மறுகணமே திடுக்கத்தால் வியர்த்தே போனார்கள். சற்று நிதானமடைந்து தெளிந்த அவர்கள் அண்ணலார் (ஸல்) அவர்கள் அதற்கொப்பாகவோ அல்லது சற்று முன் பின்னாகவோ தான் கூறியிருப்பார்கள் எனக் கூறி தங்கள் உரையை நிறைவு படுத்தினார்கள்—என்று அபூ உமர்ஷைபான் (ரஹ்), அம்ரு பின் மைமூன் (ரஹ்) ஆகிய இருபெரியார்களும் தனித்தனியாக அறிவித்துள்ளார்கள்.

பொருளடக்கம்

'மார்க்கத்தை மக்களுக்கு எளிதாக்கி வையுங்கள்' என அண்ணலார் (ஸல்) அவர்கள் கூறிச் சென்றதற்கேற்ப சிக்கலான பிரச்சினைகள் எதிர்ப்பட்ட தருணங்களில் அவற்றை விடுவிக்க அவர்கள் வகுத்த எளியவழி முறைகளும், தீர்ப்புகளும், அவற்றிற்காதரவாக அவர்கள் எடுத்து வைத்த ஆதாரங்களும் மூதுபெரும் நபி மணித் தோழர்களையும் அவர்கள் பால் வியப்பும் உவப்பும் கொள்ள வைத்தன. தம் மனைவியின் பாலை விழுங்கி விட்ட ஒருவர் அதற்கான பரிகாரம் தேடி வந்த போது ஹலரத் அபூ மூஸா அஷ்அரீ (ரலி) அவர்கள், 'அவள் உமக்கு ஹராமாகிவிட்டாள்' எனக் கூறக் கேட்டுத் திகைத்துப் போனார் அம்மனிதர். அருகிலிருந்த ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரலி) அவர்கள் அவ்வாறு இல்லை என மறுத்தார்கள். ஆதாரம் கேட்கப்படவே,

وَالْوَالِدٰتُ يُرْضِعْنَ اَوْلَادَهُنَّ حَوْلَيْنِ كَامِلَيْنِ لِمَنْ اَرَادَ اَنْ يُّتِمَّ الرَّضَاعَةَ

"எவரேனும் தலாக் கூறப்பட்ட மனைவிகளிடம் தங்களுக்குப் பிறந்த குழந்தைகளுக்கு தலாக் கூறப் பட்ட அம்மனைவிகளைக் கொண்டே பாலூட்டு வதைப் பூர்த்தியாக்க விரும்பினால், அத்தாய்மார்கள் தங்களுடைய குழந்தைகளுக்கு (அவை) பிறந்ததி லிருந்து இரண்டாண்டுகள் பூரணமாகும் வரை பாலூட்டவும்"

என்ற (2 : 233) ஆவது திருமறை வசனத்தை ஓதிக் காட்டிய ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரலி) அவர்கள், பால் குடித் தாய்மையின் காலம் இரண்டு வயதுகளுக்கிடைப் பட்டதே எனச் சுட்டிக் காட்டினார்கள். அதனைச் செவியுற்று ஹலரத் அபூ மூஸா (ரலி) அவர்கள், 'இந்த மேதை நமக்கிடையே வாழும்வரை

பொருளடக்கம்

எவரும் அவரைவிட்டு என்னிடம் சட்ட விளக்கங்கள் கேட்க வேண்டாம்' என்றே அறிவித்து விட்டார்கள்.

சிறந்த அறிவு ஞானமும் ஆற்றலும் மிகைக்கப் பெற்றிருந்தும் ஆதாரமெட்டாத விவகாரங்களில் ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊது (ரலி) அவர்கள் தங்கள் நாவைப் பேணிக் கொண்டார்கள். மனப் போக்கான தீர்ப்புகளை தவிர்த்து, மவுனத்தையே தேர்ந்தெடுத்தார்கள். ''விரைவில் ஒரு காலம் வரும் அப்போது இறையச்சங் கொண்ட அறிஞர்களுக்குப் பஞ்சமேற்பட்டு விடும். மக்களால் தலைமையளிக்கப்பட்டு விடும் மதியீனர்கள் தங்கள் மனப்போக்கில் செயல்படத் துவங்கி விடுவார்கள்'' என அவர்களே முன்னறிவித்தார்கள்.

மஹர் குறிக்கப்படாமலே மணமுடிக்கப்பட்ட ஒரு பெண்ணின் கணவர் இறந்து விட்டார். அப்பெண்ணுக்கு மஹரும் கணவனின் உடைமைகளில் உரிமையும் உண்டாவென வினவப்பட்டதற்கு ஒரு மாத காலம்வரை அவர்கள் பதிலே அளிக்கவில்லை. அதற்கான ஆதாரம் அவர்களுக்குக் கிட்டாததே காரணம். பின்னர் மக்கள் அதிகமாக நிர்ப்பந்தித்துக் கேட்கவே 'அவள் தன் மஹரைக் கைவிட்டு கணவனின் உடைமைகளில் மட்டும் உரிமை கொள்வாள். இந்த என் தீர்ப்பு சரியானதாக இருக்குமானால் அது அல்லாஹ்வின் புறமிருந்து உண்டானதாகும். தவறாக இருக்குமானால் ஷைத்தானின் தூண்டுதலால் என் வாயிலிருந்து வெளிப்பட்டு விட்டதாகும். அதற்கு அல்லாஹ்வும், அவன் தூதரும் பொறுப்பாக மாட்டார்கள்' என விடையிறுத்தார்கள். அவ்வவையில் அமர்ந்திருந்த ஹலரத் ஜராஹ், அபூ ஸினான் (ரலி) ஆகிய இரு நபிமணித் தோழர்களும், 'இது மிகச் சரியானவிடை என நாங்கள் சாட்சி கூறுகிறோம். அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்கள் பரூஉ பின்த்து வாஷிக் என்ற

பொருளடக்கம்

பெண்மணிக்கு இவ்விதமே தீர்ப்பளிக்க நாங்கள் கண்டோம்' எனக்கூறிய பின்னரே அவர்கள் நிம்மதியடைந்தார்கள்.

தாங்கள் அளித்த தீர்ப்பு தவறு என பின்னர் தெரிந்தாலும் உடனடியாக அதனை மாற்றிக் கொள்ளவும் அவர்கள் பின்னடைந்ததில்லை. தான் மணந்த ஒருவளை தீண்டாதவன் அவளை மணவிடுதலை செய்து பின்னர் அவளின் தாயை மணக்கலாமா? எனக் கேட்ட ஒருவருக்கு முதலில் அவர்கள் சாதகமாகவே பதில் கூறி விட்டார்கள். பின்னர் மதீனா வந்தபோது முன்னர் மணமுடிக்கப்பட்டவள் பருவமடையாத சிறுமியாக இருந்தாலே அவ்வாறு அனுமதிக்கலாம் என அவர்களுக்குத் தெரிய வந்தது. உடனடியாகவே கூஃபா திரும்பி தாம் தீர்ப்பளித்தவரை அழைத்து அவரது முடிவை மாற்றச் செய்தார்கள்.

இரக்க குணமும், மென்மைப் பழக்கமும், மன்னிக்கும் மனப்பாங்கும் மக்களின் மனநிறைவை ஒரு புறம் அவர்களுக்கு ஈட்டித் தந்தன. அதே சமயம் குற்றங்களை ஆய்ந்து நீதியை நிலைநிறுத்துவதிலும் அவர்கள் சற்றும் நெறிபிறழாதிருந்தார்கள். குற்றம் நிரூபிக்கப் பட்டவனிடம் காட்டப்படும் இரக்கமும் மன்னிக்கும் மனப்பான்மையும் நீதியைப் புரளச் செய்து, வாழ்க்கையின் ஒழுங்கையே குலையச் செய்துவிடும் என்பதையும் அவர்கள் அறிந்திருந்தார்கள். எனவே குற்றம் நிரூபிக்கப் பட்டபின் சட்டம் வழங்கும் தண்டனை நிறைவேற்றப் பட்டேயாக வேண்டும் என்ற கண்டிப்பைத் தளர்த்த அவர்கள் மறுத்தார்கள்.

ஒருவர் தம் உடன்பிறந்தாள் மகனையே அவர்களிடம் இழுத்து வந்து அவன் மது வருந்தியதாகக்

பொருளடக்கம்

குற்றம் சாட்டினார். குற்றம் நிரூபணமாகவே அவர்கள் குற்றவாளிக்கு சவுக்கடிகள் தரக் கட்டளையிட்டார்கள். அடிகள் விழவே தம் உடன் பிறந்தார் மகன் துடிக்கக் கண்டு வருந்திய மாமன் குற்றவாளியை மன்னித்துவிட வேண்டினார். ''இம்மையின் தண்டனையிலிருந்து உம் உடன் பிறந்தாள் மகனைக் காத்து இறைவனின் தண்டனையில் அவனைச் சிக்க வைக்கப் பார்க்கும் நீர் ஓர் அநீதிக்காரர்'' என அவரைக் கண்டித்த அவர்கள், திருடிய குற்றத்துக்காக கரம் துண்டிக்கப்பட வேண்டும் எனத் தீர்ப்பளிக்கப்பட்ட ஒரு பெண்மணிக்காகப் பரிந்துரைக்கப்பட்டபோது அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்கள் மறுமையின் மன்னிப்பையே மேலாக உணர்த்தி தண்டனையை நிறைவேற்றியே முடித்த முன்னுதாரணத்தை அவருக்கு எடுத்துரைத்தார்கள்.

குற்றம் ஒன்றேயாயினும் அது புரியப்பட்ட சூழ்நிலை, குற்றவாளியின் மன நிலை போன்றவற்றை யொட்டி அவர்களின் தீர்ப்பும் மாறுபட்டிருந்தது. யமாமாவில் எப்போதோ கொல்லப்பட்டுப்போன பொய்யன் முஸைலமாவை நபியென இன்னும் நம்புபவர்கள் கூஃபாவில் வாழ்கிறார்கள் என்பதறிந்து அவர்களனைவரையும் இழுத்து வரச் செய்தார்கள். இழுத்து வரப்பட்ட அப்பாவிகள் அனைவரும் பிழை பொறுக்கத் தேடிய பின் அவர்களனைவரையும் மன்னித்தார்களாயினும் அவர்களின் தலைவனான 'இப்னு ரவைஹா'வை மட்டும் சிரச்சேதம் செய்யக் கட்டளையிட்டார்கள். மக்கள் அதனைப் பற்றி தர்க்கித்த போது அதற்கான காரணத்தையும் விளக்கினார்கள்.

அ—3.

பொருளடக்கம்

"அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களிடம், முஸைலமா தன்னையும் ஒரு நபியாகக் கூட்டு சேர்த்துக் கொள்ளுமாறு விடுத்த கோரிக்கையை இப்னு அஸால் என்பவனோடு சேர்ந்து இதே இப்னு ரவைஹாவே கொண்டு வந்தான். அண்ணலார் (ஸல்) அவர்கள் அவ்விருவரிடமும் நீங்கள் முஸைலமாவை நபியாக ஏற்றுள்ளீர்களா? என வினவினார்கள். அவ்விருவரும் 'ஆம்' என்றனர். 'நீங்கள் தூதர்களாக வந்திராவிடில் உங்களிருவரையும் கொன்றிடச் செய்திருப்பேன்' என அண்ணலார் (ஸல்) அவர்கள் எச்சரித்து இருவரையும் அனுப்பி விட்டார்கள். அதன்பின் முஸைலமா கொல்லப்பட்டும் போனான். அண்ணலார் (ஸல்) அவர்களை நேரடியாகச் சந்தித்துத் திரும்பியும் இன்னமும் தன் பொய்யான நம்பிக்கையை விடாதிருந்த இவன் அண்ணலார் (ஸல்) அவர்கள் எண்ணியபடி கொல்லப்படலே வேண்டும் என்பதே ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரலி) அவர்கள் தந்த விளக்கம்.

அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களின் வாக்கையும் வழி முறையையும் தம் சொற்களிலும் செயல்களிலும் அணுத்தவறாது பேணியதன் மூலம் ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரலி) அவர்கள் புறக்கண்களின் பார்வைக்கு மறைந்து போன தம் மாநபியின் தோற்றத்துக்குப் பொலிவூட்டிக் கொண்டிருந்தார்கள். பிந்திய காலத்தில் கூஃபாவுக்கு வந்த ஹலரத் அலீ (ரலி) அவர்கள் ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரலி) அவர்களைவிடச் சிறந்த இறையச்சமும், ஒழுக்கப் பேணுதலும், இரக்கமனமும் படைத்த தோழமையை நாங்கள் பெற்றதில்லை என மக்கள் புகழக்கேட்டு, 'அதில் ஐயமேயில்லை. எனினும் அவரைப்பற்றி நீங்கள் அறிந்துள்ளவை மிகக் குறைவே. மார்க்க சட்டவல்லுனர் அவர், பெருமா

பொருளடக்கம்

னார் (ஸல்) அவர்களின் வழிமுறையை முழுக்கவும் அறிந்த ஞானி' எனப் புகழ்ந்தார்கள்.

''அநேக நபித் தோழர்களின் அருகினை நான் பெற்றுள்ளேன். எனினும் அவர்களில் இம்மையின் தேவையற்றவராக - மறுமையின் தேட்டம் மிக்கவராக நான் ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரலி) அவர்களைத் தவிர்த்து வேறு எவரையும் காணவில்லை என்றனர் தமீம் பின் ஹராம் என்ற தாபயீப் பெரியார்.

நீண்ட பேச்சுக்கள் செயல் திறனை விரையமாக்குவன என உணர்ந்திருந்த ஹலரத் இப்னு மஸ்வூது (ரலி) அவர்கள், தங்கள் பேச்சுக்களை மிகச் சுருக்கமாக அமைத்துக் கொண்டார்கள். அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களின் திருமுன்பே அவர்கள் பெற்ற பயிற்சி அவ்வாறே இருந்தது. ஒரு சமயம் தம் தோழர்களிடையே சுருக்கமாக உரையாற்றிய நபிபெருமான் (ஸல்)அவர்கள் பின்னர் ஹலரத் அபூ பக்கர் (ரலி) உமர் (ரலி) ஆகியோரையும் உரையாற்றப் பணித்தார்கள். அவ்விருவரும் அண்ணலார் (ஸல்) அவர்களைவிடச் சுருக்கமாகவும் முன்னவரைவிடப் பின்னவர் சுருக்கமாகவும் உரையாற்றி முடித்தனர். அடுத்து அண்ணலார் (ஸல்) அவர்கள் வேறொரு தோழரை உரையாற்றப் பணித்த போது அவர் நீண்ட விளக்கங்களைக் கோர்த்த வண்ணமிருந்தார். பொருத்தமற்ற ஷைத்தானின் புறமிருந்து வெளிப்படுபவை என இடைமறித்து அவரை அமர்த்தி விட்ட அண்ணலார் (ஸல்) அவர்கள் அடுத்து ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரலி) அவர்களைப் பேசப் பணித்தார்கள். அல்லாஹ்வைப் புகழ்ந்து, அண்ணலார் (ஸல்) அவர்களை வாழ்த்தி பின்னர் தம் பேச்சைத் துவக்கிய ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரலி) அவர்கள், ''மக்களே! ஐயமின்றி அல்லாஹ் ஒருவனே

பொருளடக்கம்

நம்மைப் படைத்துப் பரிபாலிப்பவன், இஸ்லாம் நம்முடைய மார்க்கம், குர்ஆன் நமக்கு வழிகாட்டி, கஅபா நாம் வணங்க முன்னோக்கும் தலம், (அண்ணலார் (ஸல்) அவர்களைச் சுட்டிக் காட்டி) இதோ இவர்கள் நம் பால் அனுப்பப்பட்ட இறைதூதர் என்பதில் நாம் உறுதி கொண்டிருக்கிறோம். இறைவனும் அவனின் தூதரும் பொருந்திக் கொண்டதைக் கொண்டே நாம் பொருத்தங் கொள்வோம். அவர்கள் வெறுப்பவற்றில் நாமும் வெறுப்பு கொள்வோம்'' எனக் கூறி தம் உரையை நிறைவுபடுத்திக் கொண்டார்கள். 'உம்மு அப்தின் மகனார் சரியாகவே சொன்னார். உண்மையே சொன்னார்' என பொருத்தங் கொண்ட நபி பெருமான் (ஸல்) அவர்கள் 'அல்லாஹ் எனக்காகவும் இந்த சமூகத்துக்காகவும், உம்மு அப்தின் மகனுக்காகவும் எவற்றைப் பொருந்திக்கொண்டானோ அவற்றை நானும் பொருந்திக் கொண்டேன்' என வாழ்த்தினார்கள்.

அவர்களின் சுருக்கமான உரைகளிலேயே நம்பிக்கையாளர்களுக்கான நெறிமுறைகள் நெருக்கம் பெற்று ஒலித்தன. அவற்றில் ஏக இறைவணக்கம், கூட்டுத் தொழுகை இறையச்சம் பற்றிய போதனைகள் மிளிர்ந்தன. மன ஓர்மைக்கான உவமானங்களும் கலந்து ஒலித்தன.

ஒரே இறைவன் மீது கொண்ட உறுதியான நம்பிக்கையைத் தவிர்த்து மற்றெந்த நற்செயல்களையும் ஆற்றாத ஒருவர் தாம் இறந்த பின்னர் தம் உடலை எரித்து கடலில் கரைத்துவிடப் பணித்து இறந்தார். அவரது மக்களும் அவ்வாறே செய்து முடித்தனர். இறைவன் அவரது ஆன்மாவை இழுத்துவரச் செய்து 'நீ ஏன் அப்படி கட்டளையிட்டாய்' என வினவினான். 'இறைவா! உன் வேதனைக்கஞ்சியே நான் அவ்வாறு செய்யக் கட்டளையிட்டேன்' என்றார் அவர். தன்பால் அவர் கொண்ட

பொருளடக்கம்

அச்சத்தைப் பற்றிக் கேட்டு கருணை மிகுந்த இறைவன் அவரை சுவனத்துள் புகச் செய்தான்-என்று உவமானங் கூறி இறையச்சமே நற்செயல்களின் உயிர்நாடி என்பதை உணர்த்தினார்கள். அவர்களின் நாவளத்தை நீண்ட நேரம் சுவைக்க நாடி மக்கள் நிர்ப்பந்தித்த சமயங்களிலும் 'அண்ணலார் (ஸல்) அவர்கள் எங்களின் சிரமத்தைப் பேணியதற்குப் புறம்பாக உங்களை நான் சிரமப்படுத்தமாட்டேன்' எனக் கூறி மறுத்து விட்டார்கள்.

நீதித்துறையோடு கூஃபாவின் நிதித்துறையும் அவர்களின் மேற்பார்வையிலேயே இருந்தது. வளமிக்க கூஃபாவின் வருவாய் பெருக்கத்தால் அதன் கருவூலம் பொங்கி வழிந்தது. வரவுகளும் செலவுகளும் பல இலட்சக்கணக்கில் பெருகின. மிகப் பெரும் படைத்தளமாக இருந்ததால் பல்லாயிரம் வீரர்களின் ஊதியங்களும் அதிலிருந்தே வழங்கப்பட்டன. குராஸான், துருக்கிஸ்தான், ஆர்மீனியாவின் புறம் அடிக்கடி நடைபெற்ற படையெடுப்புகளுக்கான செலவினங்களும் அதிலிருந்தே பிரிக்கப்பட்டன. எனவே, மற்ற பொறுப்புகளோடு கருவூல நிர்வாகப் பொறுப்பே ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊது (ரலி) அவர்களுக்குப் பெரும் பொறுப்பாயிருந்தது. அதில் ஒரு சல்லிக்காசும் பேதப்படாமல் பேணிக் காக்கப் பெற, அவர்கள் நீதித்துறையில் மேற்கொண்ட கண்டிப்பையே நிதித்துறையிலும் பேண வேண்டியிருந்தது. கருவூலக் கணக்கு வழக்குகளில் அவர்கள் மிகுந்த கண்காணிப்புடன் இருந்தார்கள். நிர்த்தாட்சண்யம் என்பது அவர்களின் உடலோடு ஒட்டிப் பிறந்த குணமாக இருந்தது. உலகத்தின் எந்த அந்தஸ்தையும் அவர்கள் ஏறெடுத்தும் பார்க்க மறுப்பவர்களாக இருந்தார்கள் உற்றார், உற

பொருளடக்கம்

வினர்கள், அதிகாரிகள், ஆளுநர்கள் போன்ற எவருக்கும் அவர்கள் சலுகை காட்டத் துணியவில்லை.

எத்தகைய நிர்ப்பந்தச் சூழ்நிலைகளையும் புற மொதுக்கி அவர்கள் மார்க்கத்தைப் பேணிய பாங்கும், மதீனாவில் வருவாய் கரைபுரண்டு வந்த நிலைமையிலும் அதனைத் தம் கடைக்கண்பட்ட தூசாகவே தட்டி ஒதுக்கி அவர்கள் கடைபிடித்த எளிமை வாழ்வுமே கலீஃபா உமர் (ரலி) அவர்களை தமது நிர்வாகத்துக்குத் துணையாக அவர்களைத் தேர்ந்தெடுக்கச் செய்தன. வளமும் காலச் சூழ்நிலையும் எங்கே நிலைமாறச் செய்திடுமோ என அஞ்சி முஹாஜிர்களையும் அன்ஸார்களையும் மதீனாவை விட்டே வெளிச் செல்லவிடாது தடுத்து வைத்திருந்த கலீஃபா உமர் (ரலி) அவர்களால் தொலைதூரத்துக்கே அனுப்பப்பட்டவர்கள் எத்தகைய நம்பிக்கைக்குரிய வர்களாயிருந்திருக்க வேண்டும் என்பதையும் யூகிக்க லாம். அன்பும், பழக்கப் பண்பும் தங்களுக்குள் சிறக்கப் பெற்றிருந்தும் இறைவனின் வரம்புகளின் குறுக்கே எந்த பந்தத்தையும் பாசத்தையும் பதவியையும் அதி காரத்தையும் தலையிட அனுமதியாதவர்களாகவே நபி மணித் தோழர்கள் வாழ்ந்தார்கள். ஹலரத் அப்துல் லாஹ் இப்னு மஸ்வூது (ரலி) அவர்களும் அத்தகையோர் களில் ஒருவரே. எனினும் கலீஃபா உமர் (ரலி) அவர் களின் மறைவுக்குப் பின் சோதனைகளின் சந்திப்பே காலத்தின் கட்டாயமாகி விட்ட போது அத்தகைய சோதனையொன்று ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரலி) அவர்களுக்கும் எதிர் படவே செய்தது.

ஹலரத் உதுமான் (ரலி) அவர்கள் கிலாஃபத்தை ஏற்ற ஆரம்ப காலத்தில் கூஃபாவின் ஆளுநராக ஹலரத் ஸஅது இப்னு அபீவக்காஸ் (ரலி) அவர்கள் பொறுப்

பொருளடக்கம்

பேற்று வந்தார்கள். சுவனப் பெருந்தோழர் ஹலரத் ஸஅது இப்னு அபீவக்காஸ் (ரலி) அவர்கள் கருணை யுள்ளம் மிக்கவர்களாகவும், எளியோர்க்கிரங்கி அள்ளி வழங்குபவர்களாகவும் இருந்தார்கள். பல தருணங்களில் ஏற்பட்ட தேவைகளுக்கென அவர்கள் பொதுக் கருவூலத் திலிருந்து கடனாகப் பெற்றிருந்த தொகை ஓரிலட்சத்தை எட்டியிருந்தது. அதனைத் தர வாக்களிக்கப்பட்ட நாள் வந்தபோது கருவூலப் பொறுப்பாளராக இருந்த ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது(ரலி) அவர்கள் அதுபற்றிக் கேட்டார்கள். ஆனால் ஹலரத் ஸஅது இப்னு அபீவக் காஸ் (ரலி) அவர்களின் அப்போதைய வருவாயிலும் செல வினங்கள் போக, கடனைத் திருப்பித்தரத் தேவையான தொகை அவர்களிடம் மிஞ்சவில்லை. ஹலரத் அப்துல் லாஹ் இப்னு மஸ்வூது (ரலி) அவர்களோ மக்களின் உடை மையில் கடன்பெற்றவர் ஆளுநர் என்பதற்காகவும் எவ் விதச் சலுகையும் காட்டினரில்லை. வாக்களிக்கப்பட்டபடி திருப்பித்தர வழியற்ற சூழ்நிலையில் மக்களின் உடைமை யிலிருந்து அவ்வளவு பெருந்தொகையை கடனாகவே பெற்றமையும் குறித்து ஆளுநரைக் கண்டித்தார்கள். இரு வருக்குமிடையே தர்க்கம் வளர்ந்தது. ஹலரத் அப்துல் லாஹ் இப்னு மஸ்வூது (ரலி) அவர்களின் நிர்த்தாட்சண்ய மான சொற்கணைகள் ஹலரத் ஸஅது இப்னு அபீவக் காஸ் (ரலி) அவர்களை தங்கள் கைத்தடியையும் தரையில் வீசியெறிந்து விண்ணின் பால் கையேந்துமளவு வீரியம் கொள்ளச் செய்து விட்டன.

அண்ணலார் (ஸல்) அவர்களின் அருளாசியின் பல னாக ஹலரத் ஸஅது இப்னு அபீவக்காஸ் (ரலி) அவர் களின் வேண்டுதல்கள் அங்கீகரிக்கப் பெறத் தவறுவ தில்லை என்பதை அறிந்திருந்த ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரலி) அவர்கள், ‘விண்ணையும் மண்ணை

பொருளடக்கம்

யும் படைத்தாள்பவனே!' என ஹலரத் ஸஅது (ரலி) அவர்கள் விளிக்கக் கேட்டு திடுக்கிட்டே போயினர். விரைந்து அவர்களின் கரங்களைப் பற்றிக் கொண்டு 'அபா இஸ்ஹாக்! என்னைச் சபித்து விடாதீர். மக்களின் உடைமைகளைக் காக்க எனக்குள்ள பொறுப்பினாலேயே யன்றோ நான் உம்மிடம் போராடுகின்றேன்' எனக்கேட்டு தர்க்கித்தார்கள்.

"இறையச்சம் இப்போது குறுக்கிட்டிராவிடில் நான் உம்மைச் சபித்தே இருப்பேன்" என்ற ஹலரத் ஸஅது (ரலி) அவர்களின் முகத்தோற்றம் கண்டு ஹலரத் அப்துல் லாஹ் இப்னு மஸ்வூது (ரலி) அவர்கள் அவ்விடத்தை விட்டும் வெளியேறியே விட்டார்கள். எனினும் விவ காரமோ அத்துடன் முற்றுப் பெற்றுவிடவில்லை விஷமி கள் இரு கூறாகப் பிரிந்து நபிமணித் தோழர்கள் இருவருக் கும் சாதகமாகவும் பாதகமாகவும் முறையீடுகளைச் சுமந்து கலீஃபா அவர்களிடமே சென்றார்கள். கலீஃபா அவர்கள் தம் விசாரணையை முடித்து ஹலரத்ஸஅது இப்னு அபீவக்காஸ் (ரலி) அவர்களை ஆளுநர் பொறுப்பிலிருந்து விடுவித்து மதீனாவுக்கு அழைத்துக் கொண்டார்கள். ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரலி) அவர்கள் கூஃபாவிலேயே தம் பொறுப்பில் நீடித்தார்களாயினும் கால மாறுதலும் மக்களிடையே வளரலான தறுதலைத் தனமும் வெகுநாட்கள் நீடிக்க அவர்களை விடவில்லை.

இஸ்லாமிய கிலாஃபத்துக்கு எதிராக அதன் வைரிகள் சூழ்ந்த பயங்கர சதி ஹிஜ்ரி 30ம் ஆண்டில் தன் பவனி யைத் துவக்கியது. ஹலரத் ஸஅது (ரலி) அவர்களுக்குப் பின் பொறுப்பேற்ற வலீத் இப்னு உக்பாவின் ஆளுமை யில் கூஃபா இருந்த பிற்காலமது. இளம் ஆளுநர் அதிகாரி களின் சுகபோக வாழ்க்கை மக்களிடையே பல தடுமாற்றங் களை விளைவித்துக் கொண்டிருந்தது. அதனைக் காண

பொருளடக்கம்

வும் சகியாதவர்களாக நபிமணித்தோழர்கள் விளங்கினர்.

ஆளுநர் வலீத் பின் உக்பா பொறுப்பேற்ற சில ஆண்டுகளில் கூஃபாவின் சூழலுக்கேற்ப அவரது நிர்வாக மன்றமும் மாறிக்கொண்டிருந்தது. பொழுதுபோக்கு நிகழ்ச்சிகளும் கேளிக்கைகளும் கண்டுகளிக்கப்படலாயின. ஒருநாள் மகுடிவித்தைக்காரன் ஒருவன் வலீதின் மன்றத்துக்கு வந்தான். மக்கள் திரளுக்கிடையே தன் பிழைப்புக்கான விளையாட்டுகளை நடத்தி வலீதுக்கு காட்டிக்கொண்டிருந்தான். மகுடிவித்தைகள் இணைவைத்தலில் முடிவதால் இஸ்லாம் அதனை அனுமதிக்கவில்லை. வலீத் பின் உக்பாவின் முன்னிலையில் நடைபெற்ற அவ்வித்தைகளை மாநபித் தோழர் ஹலரத் ஜன்தப் இப்னு கஅபு (ரலி) அவர்களும் கவனித்த வண்ணமிருந்தனர். மக்கா நகர வெற்றிக்கு முன்பே இஸ்லாத்தை ஏற்ற அப்பெரியார் அச்சமயம் கூஃபாவில் வாழ்ந்து கொண்டிருந்தனர்.

கூட்டத்துக்கு நடுவே ஒருவனைப் பிடித்திழுத்த மந்திரவாதி அவனைக் கொன்று விழச்செய்து மீண்டும் எழுப்பி காட்டினான். ‘ஆகா! இவன் மரித்தவனையே உயிர்ப்பித்து விட்டான்’ என்று மக்கள் வியந்து கூக்குரலிட்டார்கள். அடிப்படை ஆட்டங் காணுவதை சகிக்க மாட்டாது ஹலரத் ஜன்தப் இப்னு கஅபு (ரலி) எழுந்தார்கள். தம் வாளை உருவி ஒரே வீச்சில் மந்திரவாதியை வெட்டிச் சாய்த்த ஹலரத் ஜன்தப் இப்னு கஅபு (ரலி) முதலின் இவன் தன்னை உயிர்ப்பிக்கட்டும் பின்னர் மற்றவர்களை உயிர்ப்பிக்கலாம் என கர்ஜித்தார்கள்.

மக்கள் பரபரப் படைந்தனர். ‘‘நீங்கள் பார்த்துக் கொண்டே (அவனுடைய) சூனியத்தில் (சிக்க) வருகிறீர்களா? ’’ என் [illegible] களுக்கு

பொருளடக்கம்

ஓதிக்காட்டிய ஜன்தப் (ரலி) அவர்கள் 'மந்திரத்துக்கு மாற்று ஒரு வாளின் வீச்சு' என அண்ணல் எம்பெருமான் (ஸல்)அவர்கள் கூறக் கேட்டுள்ளேன் என்றறிவித்தார்கள். ஆனால் சட்டத்தை அவர் தம் கையில் ஏந்தியதே குற்றம் எனக்கூறி அவர்களை வலீத் சிறையிலடைத்து விட்டார். சிறை வாழ்விலும் அப்புனிதர் பேணிய மார்க்க ஒழுங்கு முறைகளைக்கண்டு அவர்களை கண்ணியப்படுத்திய சிறைக் காவலர் ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரலி) அவர் களிடம் முறையிட்டு கலீஃபாவுக்கும் செய்தியனுப்பினார். கலீஃபா அவர்கள் ஜன்தப் (ரலி) அவர்களை விடுதலை செய்து விடுமாறும் இனி நிர்வாகத்தில் அவசரக் குறுக்கீடு களைத் தவிர்த்துக் கொள்ளுமாறும் மக்களுக்கு பொது அறிவிப்பு செய்யுமாறும் ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரலி) அவர்களுக்கு எழுதினார்கள். *

அதே ஆண்டிலேயே ஆளுநர் வலீத் பின் உக்பாவே மது அருந்தியதாகப் புரளி கிளப்பப்பட்டது. விஷமிகளில் ஒரு கூட்டம் ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரலி) அவர்களிடமும் வந்து வலீத் மறைவில் மது அருந்துவ தாகக் குற்றம் சாட்டியது. அவர்கள் விஷமிகள் என் பதைப் புரிந்தே வைத்திருந்த ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரலி) அவர்கள் திரைமறைவில் நடை பெறும் எவருடைய அந்தரங்கத்தையும் ஆய்ந்து கொண் டிருப்பது தம் கடமையல்ல எனக்கூறி அவர்களை அனுப்பிவிட்டார்கள். அந்தச் செய்தி ஆளுநர் வலீதின் செவிகளை எட்டியது. இளம் வயதினரான அவர் விகற்ப மான எண்ணங்கொண்டு சினமடைந்தார். நபி மணித்

---

* அதன் பின் ஸிரியாவுக்குச் சென்று பல போர்க் களங் களில் பங்கேற்ற இத்தோழர் ஹலரத் முஆவியா (ரலி) அவர் களின் காலத்தில் மரணமடைந்தனர்.

பொருளடக்கம்

தோழரை அழைத்து 'குழப்பக்காரர்களுக்கு இப்படித் தானா தாங்கள் பதில் கூறுவது. அவர்களின் புரளியைத் தாங்கள் மறைமுகமாக அங்கீகரிப்பதே போன்றல்லவா உள்ளது தங்களின் பதில். நான் எந்த அந்தரங்கத்தை தங்களிடம் மறைத்தேன்' என்றெல்லாம் தர்க்கிக்கலா னார். அவ்விருவர்க்கிடையே ஏற்பட்ட கருத்துப் பிளவை குழப்பக்காரர்கள் வளர்த்து கலீஃபா அவர்களின் சமூகம் வரை இழுத்துச் சென்றனர். கலீஃபா உதுமான் (ரலி) அவர்களால் மேற்கொள்ளப்பட்ட விசாரணை முடிந்த பின் வலீத் பின் உக்பா பதவி நீக்கம் செய்யப்பட்டு சவுக் கடிகளும் பெற்றார்.

தறுதலைகளால் சூழப்பட்டு வளர்ந்த புதிய தலைமுறை யினரிடையே நபிமணித் தோழர்களின் வாழ்வு பெருந் தங் கடங்களைச் சந்திக்க வேண்டியதாயிருந்தது. குழப்பங் களை வளர்ப்பதையே குறிக்கோளாகக் கொண்ட சதிகாரர் களின் தொடர்ந்த தொல்லைகளால் அலைக்கழிக்கப்பட்ட கலீஃபா உதுமான் (ரலி) அவர்கள் பின்னர் ஹலரத் அப் துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரலி) அவர்களையும் அவர் கள் கூஃபாவில் வகித்துவந்த அனைத்துப் பொறுப்புகளி லிருந்தும் விடுபட்டு மதீனா வந்துவிடும்படி பணித்தார் கள். அக்கட்டளையைக் கேட்டு சஞ்சலமடையாதவர் களாக கூஃபாவின் நல்லோர் எவருமே இருக்கவில்லை. கலீஃபா அவர்களின் கட்டளையேற்று ஹலரத் அப்துல் லாஹ் இப்னுமஸ்வூது (ரலி) அவர்கள் கூஃபாவை விட்டுப் புறப்படச் சித்தமானபோது அவர்களின் மாணவர்கள், ஆதரவாளர்கள், அன்பாளர்களின் பெருங்கூட்டமே அவர் களின் இல்லத்தில் திரண்டுவிட்டது. எத்தகைய சோதனையையும் சுமந்து தங்களுக்காக எங்களை பலியும் தந்திடுவோம், தாங்கள் கூஃபாவை விட்டும் செல்லாதீர் கள் என அவர்கள் அப்பெரியாரை நிர்ப்பந்தப்படுத்தினார்

பொருளடக்கம்

கள். ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது(ரலி) அவர்களோ, 'அமீருல் மூஃமினீன் அவர்களின் கட்டளைக்குவழிப்படுவது அல்லாஹ் என் மீது விதித்துள்ள கடமையாகும். எந்த குழப்பத்துக்கும் நான் காரணமாக அமையமாட்டேன்' எனக் கூறியவர்களாக தங்களைச் சார்ந்த ஒரு குழுவினரோடு கூஃபாவை விட்டும் புறப்பட்டேவிட்டார்கள்.

ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது(ரலி)அவர்கள் உருவத்தால் சிறுத்தவர்களாயிருந்தார்கள். எனினும் உள்ள உரம் மிகுந்தவர்களாயிருந்தார்கள். நீண்டு வளர்ந்திருந்த தங்கள் முடியை ஒழுங்குறச் சீவி வாரி, வெள்ளாடை பூண்டு, சிவந்தமேனி சிறக்க தோற்றம் வழங்கினார்கள். நறுமணம் பூசுதல், இனிமையுடன் உரையாடுதல், கனிவுடன் பழகுதல் போன்ற நடை, உடை தோற்றப் பண்பாடுகளனைத்தாலும் அவர்கள் தங்கள் மாநபி (ஸல்) அவர்களின் பொலிவை எதிரொலித்தார்கள். அவர்களின் கால்கள் மட்டும் மிக மெலிந்திருந்தன. அவற்றைப் பிறர் கண்களுக்கு மறைப்பதற்கென்றே தங்களின் கீழாடையை அவர்கள் இறக்கமாகவே உடுத்துவர். இலை பறிக்க மரத்தில் அவர்கள் ஏறிய ஒரு சமயம் கீழாடை உயர்ந்து வெளித்தெரிந்த அவர்களின் பாதங்களைக் கண்டு மற்ற தோழர்களெல்லாம் சிரிப்பை அடக்கமாட்டாது நகைக்கலாயினர். அச்சமயம் மாநபி (ஸல்) அவர்கள் சித்துடல் பெற்றிருந்த அத்தோழரை, 'மறுமை நாளின் போது நீதித்துலாக்கோலில் அவர் உஹது மலையினும் கனத்தவராக இருப்பார்' எனக் கூறிச் சிறப்பித்தார்கள்.

இம்மைக்கான செல்வத்தைத் தேடவேண்டிய தேவையினும் அவர்கள் மறுமைக்கான செல்வத்தைத் தேடும் தம் தேட்டத்தை மிகைப்படுத்தினார்கள். உலகமே உறங்கிக் கிடக்கும் கும்மிருட்டு நேரத்தில் மெல்லிய

பொருளடக்கம்

குரலில் திருக்குர் ஆனை அவர்கள் மிக நிதானமாக ஓது வது கேட்டுக் கொண்டிருக்கும் என உபைதுல்லாஹ் அப் துல்லாஹ் (ரஹ்) குறிப்பிட்டுள்ளனர். ரமலான் மாதத்தின் பிந்திய பத்து இரவுகளில் ஒற்றைப்படையானவற்றிலோ அவர்கள் கண்ணமராதமர்ந்து விடியும் வரை தேடிக் கொண்டிருப்பர் - எதனை?

''ஒரு நாள் வைகறையில் அவர்களின் இல்லம் சென் றேன். முகட்டின் மேல் அமர்ந்திருந்த ஹலரத் அப்துல் லாஹ் இப்னு மஸ்வூது (ரலி), 'அல்லாஹ்வும் அவன் தூதரும் உண்மையே பகர்ந்தனர்' என்று கூறிய வண்ணம் இறங்கி வந்தனர். 'என்ன பகர்ந்தனர்' என நான் வின வினேன். ரமலான் மாதத்தின் பிந்திய ஒற்றைப் படை இரவுகளில், - 'லைலத்துல் கத்ர்' என இறைவன் கூறும் -கண்ணியமிக்க இரவைத் தேடும்படி கூறிய அண்ணலார் (ஸல்) அவர்கள், அதன் அடையாளம் அன்றைய பொழுது புலரும் போது பகலவனின் கதிர்வீச்சில் தெரியும் எனக் குறிப்பிட்டதை இன்று நான் கண்டு கொண்டேன்'' என்றார்கள் -என அபூ அக்ரப் என்ற பெரியார் அறிவிக் கின்றனர். ஆம்! அவர்கள் தேடிக் கொண்டிருந்தது 'லைலத்துல் கத்ர்' எனப்படும் கண்ணியமிக்க இரவையே!

தொழுகையை அவர்கள் மிக அதிகமாகப் பேணினார் கள். ரமலான் மாதத்தின் நோன்புகளையடுத்து ஆஷூரா வின் நோன்பை கவனத்துடன் பேணிய அவர்கள் மற்றைய நாட்களில் குறைவாகவே நோன்பிருந்தனர். திங்கள் வியாழக் கிழமைகளையே அவர்கள் நஃபிலான நோன்பு களுக்கெனத் தேர்ந்தெடுத்திருந்தார்கள். "மார்க்க விற் பன்னர்களில் குறைவாக நோன்பிருப்பவர்களாக ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரலி) அவர்களையே கண்டேன். அதற்கான காரணத்தை ஒருநாள் அவர்களிடம்

பொருளடக்கம்

நான் வினவியபோது 'நான் தொழுகையை நோன்பினும் முற்படுத்துகிறேன். நஃபிலான நோன்புகளின் மிகுதத்தினால் என் உடல் பலங்குன்றி நஃபிலான தொழுகைகளுக்கு தங்கடமேற்படுத்தி விடுமோ என அஞ்சுகிறேன் என அவர்கள் விளக்கினார்கள்-என்று அப்துர் ரஹ்மான் பின் யஸீத் (ரஹ்) எழுதியுள்ளனர்.

தொழுகையை குறித்த நேரத்தில் நிறைவேற்றுவதிலும் அவர்கள் கண்டிப்புடையவர்களாய் விளங்கினார்கள்.

''நற்செயல்களில் மேலானது எதுவென ஒரு சமயம் அண்ணலார் (ஸல்) அவர்களிடம் கேட்டேன். 'தொழுகையைக் காலந்தவறாது தொழுவது' என அண்ணலார் (ஸல்) அவர்கள் அருளினார்கள். அதனையடுத்தது எதுவெனக் கேட்டேன். பெற்றோர்களுக்கு நற்பணி புரிதல் என்றனர். அதனையடுத்தது எதுவெனக் கேட்டேன். இறைவனின் பாதையில் போர் புரிதல் என என் ஏந்தலர் (ஸல்) பகர்ந்தார்கள்'' என அறிவிக்கும் அவர்கள் ஒரு நாள் கூஃபாவின் பள்ளியில் அமர்ந்திருந்தார்கள். மக்களும் தொழுகைக்காகக் கூடியிருந்தனர். ஆளுநர் வலீத் பின் உக்பா வரத் தாமதமாகியது. தொழுகையின் நேரம் நெருங்கியவுடனே ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரலி) அவர்கள் ஆளுநரை எதிர்பார்த்துக் காத்திராமல் தொழுகையை நடத்தி முடித்தார்கள். பின்னர் வந்த வலீத் பின் உக்பா எரிச்சலடைந்தார். 'இது தன்னுத்திப்பான செயலா அல்லது அமீருல் முஃமினீன் அவர்களின் கட்டளையா?' எனச் சினந்தார். 'என் உத்திப்புமல்ல, மக்கள் தலைவரின் கட்டளையுமல்ல. உம் அலுவல்களில் நீர் மூழ்கிக்கிடக்கையில் தொழுகைக்காக மக்கள் உம்மை எதிர்பார்த்துக் காத்திருப்பது இறைவனுக்குப் பொருத்தமுடையதாகாது' என ஹலரத்

பொருளடக்கம்

அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது(ரலி) அவர்கள் தயங்காமல் பதிலளித்தார்கள்.

தம்மின் முதியோர்- கற்றோரின் தகைமையை அவர்கள் வெகுவாகப் பேணினார்கள். கலீஃபா உமர் (ரலி) அவர்களை, 'அரபுகள் அனைவரின் அறிவையும் துலாக் கோலின் ஒரு தட்டில் வைத்து உமர் (ரலி) அவர்களின் அறிவை மறுதட்டில் வைத்தால் அந்த மறுதட்டே கனத்திருக்கும். அவரோடு ஒரு கண மேனும் அமர்ந் திருப்பதை ஓராண்டு கால வணக்கத்தினும் மேலாய் நான் எண்ணுகிறேன்' எனக்கூறிச் சிறப்பித்தார்கள்.

ஹலரத் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களை 'திருமறையின் மிகச்சிறந்த விளக்க வல்லுனர்' எனப் புகழ்ந்த அவர்கள், 'அண்ணலார் (ஸல்) அவர்களின் காலத்தில் அவர் பருவமடைந்திருப்பாராகில் நாங்களெல்லாம் தலைதூக்கியே இருக்கமுடியாது' எனச் சிலாகித்தார்கள்.

'அல்க்கமா (ரஹ்) தம் மாணவராகவே இருந்தும் அவருக்கிருந்த நினைவாற்றலை வியந்த இவர்கள் அவர் அறிந்திருப்பவை நான் அறிந்திருப்பவைகளிலும் அதிகம்' எனப் புகழ்ந்து கண்ணியப்படுத்தினார்கள்.

கிலாஃபத்தின் கண்ணியத்தையும் கட்டுப்பாட்டுணர் வையும் அவர்கள் மிகப்பேணினார்கள். அண்ணலார் (ஸல்) அவர்களுக்குப் பின் தாம் கண்ட முப்பெருங் கலீஃபாக்களின் எந்தக் கட்டளையையும் அவர்கள் செவ்வனே கண்ணியப்படுத்தினார்கள். ஜகாத் செலுத்த மறுத்தவர்களை வழிப்படுத்த கலீஃபாஅபூபக்கர்(ரலி) அவர்கள் வெளிச் சென்ற காலை தலை நகர் மதீனாவைக் காத்து நின்ற நாற்பெருந் தோழர்களில் அவர்களும் ஒருவராவர்.

பொருளடக்கம்

கிலாஃபத்துக்காக ஹலரத் உதுமான் (ரலி) அவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்ட பின் கூஃபாவின் மக்களைச் சந்தித்த அவர்கள், ''மக்களே! அமீருல் முஃமினீன் உமர் இப்னுல் கத்தாப் (ரலி) மறைந்து போனார்கள். இதனை விட மிகச் சோகமான ஒரு நாளை நாங்கள் சந்தித்ததில்லை. நாங்கள் — அண்ணலார் (ஸல்) அவர்களின் தோழர்கள் - நன்மையான வழிகளில் ஒன்றுபட்டு நிற்க உறுதி பூண்டுள்ளோம். இப்போது நாங்கள் அமீருல் முஃமினீன் உதுமான் (ரலி) அவர்களிடம் பிரமாணம் செய்துள்ளோம். நீங்களும் அவர்களுக்காகப் பிரமாணம் செய்யுங்கள்'' என ஆதரவு கூட்டினார்கள்.

குழப்பம் அலைக்கழித்த பிந்திய காலத்தில் கலீஃபா உதுமான் (ரலி) அவர்களுக்கும் பெரிதும் ஒத்துழைத்தார்கள். கலீஃபா அபூபக்கர் (ரலி) அவர்களால் ஒன்றுபடுத்தப்பட்ட திருமறைத் தொகுப்பை பிரதிகளெடுக்கும் பொறுப்பை கலீஃபா உதுமான் (ரலி) அவர்கள் ஹலரத் ஜைது இப்னு ஸாபித் (ரலி) அவர்களிடம் ஒப்படைத்தது பற்றி அவர்கள் மனத்தங்கடம் அடைந்தாலும் கலீஃபா அவர்கள் உடனே அவர்களை தலைநகருக்கு அழைப்பித்து, அவர்கள் நெடுந்தொலைவில் வேறு பொறுப்பேற்றிருந்ததாலேயே தாம் அவ்வாறு செய்ய நேரிட்டதென விளக்கியபோது அதனைப் பொருந்தி ஏற்றார்கள்.

ஹஜ்ஜின் போது கலீஃபா உதுமான் (ரலி) அவர்கள் மதிய நேர லுஹருடைய தொழுகையை நிரப்பமாகத் தொழுவிக்கக் கேள்வியுற்று அண்ணலார் (ஸல்) பயண காலத் தொழுகையாக சுருக்கியல்லவோ தொழுவித்தார்கள். பின்னர் வந்த இரு கலீஃபாக்களும் அவ்வழியைப் புறக்கணிக்கவில்லையே!—என்று வியந்தார்களாயினும் கலீஃபா அவர்களையடுத்து தாங்கள் தொழுவிக்க நேர்ந்த

போது நிரப்பமாகவே தொழுவித்தார்கள். மக்கள் வியப்படைந்தபோது அவர்களை நோக்கி, 'மக்களே! கலீஃபாவைத் தொடருங்கள். தலைமையின் கண்ணியத்தைப் பேணுங்கள். கட்டுப்பாட்டைக் குலைத்து விடாதீர்கள்' என எச்சரித்தார்கள்.

விளையப் போகும் குழப்பங்களுக்கான அறிகுறிகளை முன்னதாகவே உணரத்துவங்கிய அவர்கள் கட்டுப்பாட்டுணர்வை தாங்களும் பேணியதோடு மற்றவர்களுக்கும் போதித்தார்கள். ஒரு சமயம் அவர்கள் தம் தோழர்களோடு அமர்ந்திருக்கையில் அவ்வழியே சென்ற ஒரு மனிதர் "அஸ்ஸலாமு அலைக்க யா அபா அப்தர் ரஹ்மான்!" என அவர்களையே குறிப்பாக விளித்து, ஸலாமுரைத்து விரைந்தார். அதற்கு விடையாக இவர்கள் 'அல்லாஹ்வும் அவன் தூதரும் உண்மையே கூறினார்கள்' என்றனர். என்ன கூறினார்கள்? என அருகிருந்தோர் வினவியபோது 'முக்கியஸ்தர்களுக்கு மட்டுமே ஸலாமுரைப்பது, வர்த்தகத்தை மட்டுமே பெருக்கிக் கொள்வது, சான்றோர்களை மதியாதது, பொய்சாட்சி சொல்வது, உண்மையை மறைப்பது—இவைகளெல்லாம் இறுதி நாளின் அடையாளங்கள் என்பது போல் அண்ணலார் (ஸல்) அவர்கள் கூறினார்கள்' என்றார்கள்.

குழப்பவாதிகளின் சதியினால் பொறுப்புகளைத் துறக்க நேர்ந்த அவர்கள் மதீனா வந்தடைந்த பின் எஞ்சிய தம் வாழ் நாட்களை மதீனாவிலேயே ஒதுங்கித் தங்கி வணக்க வழிபாடுகளில் கழிக்கலானார்கள். மனைவி மக்களிடத்தில் பேரன்பு கொண்டிருந்த அவர்கள் தம் மனைவி மக்களையும் பேணுதலோடேயே பழக்கினார்கள். "ஒரு நாள் அதிகாலையில் அவர்களைச் சந்திக்கச்

அ—4.

பொருளடக்கம்

சென்ற நாங்கள் அவர்களை தொழுகையை முடித்து இறை தியானத்தில் அமர்ந்திருக்கக் கண்டோம். நாங்கள் அவர் களுக்கு ஸலாமுரைத்தபோது அதற்கான பதிலுடன் உள்ளே வருவதற்கான அனுமதியும் எங்களுக்குக் கிடைத் தது. எனினும் நாங்கள் வெளியிலேயே காத்திருந்தோம். அவர்களின் பணிப்பெண் வெளியே வந்து 'அனுமதி கிடைத்திருந்தும் உள்ளே வராது நீங்கள் நிற்கக் காரணம் என்னவென்று வினவினார். 'பெண்டிர், மக்களின் உறக்கம் கெடலாகாதென்றே வெளியில் நிற்கின்றோம்' எனத் தெரி வித்தோம். மீண்டும் எங்களை உள்ளே அழைத்த ஹலரத் இப்னு மஸ்வூது (ரலி) அவர்கள், 'அப்துல்லாஹ் வின் குடும்பத்தினரை மறதியில் மூழ்கியவர்களாக எண்ணத் துணிந்தீர்களா?' என்று வினவினார்கள். ஆம்! உறக்கத்திலிருக்கலாம் என எங்களால் ஊகிக்கப் பட்ட அவர்களின் குடும்பமே இறைதியானத்திலிருந்தது —என அபூ வாயில் என்ற பெரியார் எழுதுகின்றார்கள்.

இறைவனுக்கு இணைவைத்தலை விட்டும் அவர்கள் தங்கள் மனைவி மக்களை மிகக் கடுமையாக எச்சரித்தார் கள். 'அச்சத்தை விலகச் செய். ஏ மனிதர்களின் இரட்சகா! எங்களுக்கு நலமருள். நீயே நலமருள்பவன். உன்னிடமிருந்தேயன்றி எங்களுக்கு வேறு நலமில்லை. நோயே பூண்டற்றுப் போகத்தக்கவாறு எங்களுக்கு நல மருள்'—என அண்ணலார் (ஸல்) அவர்கள் கற்பித்த இறைஞ்சுதலையே மரணத்தைத் தவிர்த்த மற்றெல்லா நோய்களுக்குமான மருந்தாக அவர்கள் போதித்தார்கள்.

பத்ருப்போரில் பங்கேற்ற தகுதியை வைத்து அவர் களுக்கு ஆண்டொன்றுக்கு ஐயாயிரம் திர்ஹங்கள் பொதுக் கருவூலத்திலிருந்து கிடைத்து வந்தது. குழப்பக் காரர்கள் செய்த சதியின் காரணமாக பிந்திய இரண் டாண்டு காலம் அது நிறுத்தப்பட்டிருந்தது. எனினும்

பொருளடக்கம்

அது பற்றி அவர்கள் கவலை கொள்ளவில்லை. உழைத்துச் சேர்த்த பணத்திலிருந்தே அவர்கள் தங்கள் வழி வாறுகளுக்காக தொண்ணூறாயிரம் திர்ஹங்களை விட்டுச் சென்றார்கள்.

கூஃபாவை விட்டு நீங்கி மதீனா வந்தடைந்த அவர்கள் அதற்குப் பின் மற்றெந்த பொறுப்புகளையும் ஏற்கவில்லை. மதீனா திரும்பிய இடைவழியிலேயே மாநபித் தோழர் ஹலரத் அபூதர் (ரலி) அவர்களின் இறுதிச் சந்திப்பும் அவர்களுக்குக் கிடைத்தது. 'ரப்ஸா' வென்னும் சிற்றூரை நெருங்குகையில் ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரலி) அவர்கள் ஒரு பெண்மணி அங்கு நின்றிருக் கண்டார்கள். வனாந்திரக் காட்டில் தனிமையில் நிற்கக் காரணமென்னவென அப்பெண்மணியை அணுகி வினவினார்கள். மாநபித் தோழர் ஹலரத் அபூதர் (ரலி) அவர்கள் இறைவனின் அழைப்பினை ஏற்கச் சித்தமாகக் காத்திருப்பதும், அநாதரவான நிலையில் துணையை எதிர்பார்த்து நிற்கும் அப்பெண்மணி ஹலரத் அபூதர் (ரலி) அவர்களின் மனைவியே என்பதும் தெரியவந்தன. ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரலி) அவர்கள் விரைந்து சென்று தம் தோழரைச் சந்தித்தார்கள். மரணத்தின் மடியில் கிடந்த ஹலரத் அபூதர் (ரலி) அவர்களும் தம் தோழரிடம் இறுதியான தம் மன வேட்கையை விண்டு உலகைப் பிரிந்தனர். அவர்கள் விளம்பியபடியே அவர்களின் நல்லுடலை நீராட்டித் தொழுவித்து நல்லடக்கம் செய்தபின் ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரலி) அவர்கள் மதீனா வந்தடைந்தார்கள்.

மதீனா வந்தபின் அவர்களின் உலக வாழ்வு நீண்ட நாட்கள் தொடரவில்லை. அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களால் முன்னறிவிக்கப்பட்ட குழப்ப காலம் பிறந்தே விட்டதை நன்குணர்ந்த அந்நாயகப் பெருந்தோழர் தங்

பொருளடக்கம்

களின் ஆசான் துயில் கொள்ளும் அத் திருப்பட்டணத்தில் அமைதி வாழ்வை மேற் கொண்டார்களாயினும் அதற்கான அவர்கள் பெற்ற வாய்ப்பும் மிகக் குறுகியதாகவே அமைந்தது.

ஹிஜ்ரி 32ம் ஆண்டில் ஒரு நாள் அவர்களைச் சந்திக்க வந்த ஒரு தோழர் "இறைவன் தங்களின் இறுதித் தரிசனத்தை விட்டும் என்னைத் துர்ப்பேறடையச் செய்யாதிருப்பாலாக" எனக் கூறக்கேட்டு அவர்கள் வியப்படைந்தார்கள். தொடர்ந்த அவர், "கடந்த இரவு அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களை ஓர் உயர்ந்த மேடையில் அமர்ந்திருக்க நான் கனவில் கண்டேன். அவர்கள் தம் எதிரேயிருந்த உங்களை நோக்கி 'இப்னு மஸ்வூத்! எனக்குப் பின் நீர் மிகவே சிரமப்பட்டு விட்டீர். இனி என்னிடமே வந்துவிடும்' என அழைத்தார்கள்" என்றார்.

"ஆண்டவன் மீதாணையாக நீர் அவ்வாறே கண்டீரோ?" என அவர்கள் கேட்டும் "ஆம்" என்றாரவர்.

"அப்படியாயின் நீர் என் மரணச் சடங்கில் கலந்து கொண்ட பின்பே மதீனாவை விட்டும் எங்கும் செல்வீராக" என அவரை அவர்கள் வேண்டிக்கொண்டார்கள்.

அக்கனவே நனவாக நாட்கள் அதிகம் செல்லவில்லை. ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரலி) நோயுற்றார்கள். இனி அவர்கள் பிழைத்தெழமாட்டார்கள் என மக்களுக்குத் தெரிந்துவிட்டது. கலீஃபா உதுமான் (ரலி) அவர்களும் அவர்களை வந்து கண்டார்கள்.

"அபா அப்தர் ரஹ்மான்! தங்கள் மனதைச் சூழ்ந்துள்ள கவலையைத் தெரிவியுங்கள்" என கலீஃபா. அவர்கள் வினவினார்கள்,

"என் பாவங்கள்" என்ற ஒரே சொல் பதிலாக வந்தது அவர்களிடமிருந்து "தங்களின் தேவையைத் தெரிவியுங்கள். ஆவன செய்கின்றேன்" என்றார்கள் கலீஃபா.

பொருளடக்கம்

''இறைவனின் அருளே'' என மீண்டும் ஒற்றைச் சொல்லினாலேயே விடையளித்தார்கள் அத்தோழர்.

''மருத்துவரை அழைத்து வரச் செய்யட்டுமா?'' என கலீஃபா அவர்கள் வினவிய போதும், ''வேண்டாம், அம் மருத்துவனே நோயை விட்டவன்'' எனக் கூறி அவர்கள் மறுத்துவிட்டார்கள்.

''தங்களுக்குச் சேரவேண்டிய ஊதியத்தை தங்கள் பெண் மக்களிடம் சேர்ப்பிக்கச் செய்கிறேன். அவர்களுக்கு அது உதவும்'' என்றார்கள் கலீஃபா.

''அமீருல் முஃமினீன்! வறுமை அவர்களை அண்மி விடும் எனத் தாங்கள் அஞ்சுகிறீர்களா? நான் அவர்களை நாள் தவறாது 'வாக்கிஆ' எனப்படும் திருமறை அத்தியாயத்தை ஓதிவரப் பணித்திருக்கிறேன். ஏனெனில் அண்ணலார் (ஸல்) அவர்கள் 'ஒருநாள் மாலையில் அவ்வத்தியாயத்தை ஓதியவரை மறு நாள் மாலை வரை பசியும் பிணியும் அணுகமாட்டா' எனக்கூற நான் கேட்டிருக்கிறேன்'' என அறிவித்தார்கள்.

இறுதியாக அவர்கள் மரண வேளை நெருங்கிய போது ஹலரத் ஸுபைர் இப்னு அவ்வாம் (ரலி) அவர்களையும் அவர்களின் மகனார் அப்துல்லாஹ் (ரலி) அவர்களையும் அழைப்பித்து, தம்மை அடக்கம் செய்யவேண்டிய முறைகளை விளக்கினார்கள். பின்னர் அவர்களின் ஆன்மா பிரிந்தது. ஏறத்தாழ அறுபது வயதுகளை எட்டியிருந்த அம் மூதறிஞர் பெருந்தகையின் புனித உடல் அவர்கள் கூறியபடியே நீராட்டிப் போர்த்தப் பெற்று கலீஃபா உதுமான் (ரலி) அவர்களால் தொழுவிக்கப்பட்டு 'ஜன்னத்துப் பகீஃ' இல் ஹலரத் உதுமான் இப்னு மள்வூன் (ரலி) அவர்களின் மண்ணறையின் பக்கமாக நல்லடக்கம் செய்யப்பட்டது.

—ஃ—

பொருளடக்கம்

أبو ذر الغفارى رضي الله عنه

துறவிப் பெருந் தோழர்

# ஹலரத் அபூதர் கிப்ஃபாரீ (ரலி)

கூஃபாவின் பள்ளியில் ஒரு குரல் கேட்டது: "ஹஜ்ஜாஜே! கலீஃபா உமர் (ரலி) அவர்களின் ஆட்சியைப் பற்றி நீ அறியமாட்டாயா? அவரின் நீதியை - மக்களை அவர் ஆண்ட பாங்கைப் பற்றியெல்லாம் நீ செவியுற்ற தில்லையா? அவரின் வழியைப்பேண நீ ஏன் மறுக் கிறாய்?" என்று.

மேடையில் அமர்ந்து வேறு புறம் திரும்பியிருந்த ஹஜ்ஜாஜ் இப்னு யூஸுஃப்-தம் வன்மையினால் கூஃபா வையே கதிகலங்கச் செய்த கொடுங்கோலர்-குரல் வந்த திக்கில் பார்வையைச் சுழற்றினார். அதுவே ஹஜ்ஜாஜின் ஆட்சி மன்றமாக இருந்திருக்குமானால், குரலுக்குடைய வர் தேடிப் பிடிக்கப்பட்டிருப்பார். அவரின் சிரசு நிச்சயம் துண்டிக்கப்பட்டிருக்கும். ஆனால் ஹஜ்ஜாஜ் அப்போது அமர்ந்திருந்தது இறையில்லம்—தொழுகைப் பள்ளி. எனவே அவர் ஆத்திரங்கொள்ளவில்லை—முற்றாகவே தம் நாவை அடக்கி மவுனம் சாதிக்கவும் இல்லை.

"தபாதரூ தஅம்மரு லக்கும்—" நீங்கள் அபூதர் ஆகிவிடுங்கள். நானும் உங்களுக்கோர் உமராகி விடுவேன் என்ற சொற்கள் விவேகத்தோடு வெளிவந்தன ஹஜ்ஜா ஜின் வாயிலிருந்து.

ஹலரத் அபூதர் (ரலி) அவர்களைப் போன்ற இறையச்சங் கொண்டவர்சளாக மக்கள் வாழ்ந்திருந்தார் களானால் அவர்களின் மீது அதிகாரம் பெற்றிருந்த தாமும் கலீஃபா உமர் (ரலி) அவர்களைப் போன்ற நீதி

பொருளடக்கம்

வானாகவே திகழ்ந்திருக்க தடையிருந்திருக்காது என்பதே ஹஜ்ஜாஜின் விடை தரும் விளக்கம். ஹஜ்ஜாஜ் இப்னு யூஸுஃப் போன்ற அடங்காப் பெருங் கொடுங்கோலர்களும் நினைத்துப் போற்றிய பெருமைக்குரிய மாபெரும் நபிமணித் தோழர் ஹலரத் அபூதர் கிப்ஃபாரீ (ரலி) அவர்கள்.

“நபிமார்களில் ஈஸா (அலை) அவர்களைப் போன்ற உதாரணத்தை எனது தோழர்களில் காண விரும்புபவர்கள் அபூதரிடம் கண்டு கொள்ளுங்கள். அவர் ஒரு துறவி” என்று அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களால் சுட்டிக் காட்டப் பெற்ற இந் நபிமணித் தோழரை இஸ்லாத்தில் இணைந்தவர்களில் ஐந்தாமவர் என்றும் சில வரலாற்றாசிரியர்கள் கூறியுள்ளனர். ஆனால் இம்மார்க்கத்தை ஏற்பதென்ன - இதன் தலைவரான அண்ணலார் (ஸல்) அவர்களைச் சந்திக்கவும் தலைமறைந்தே செல்ல வேண்டியிருந்த ஆபத்தான ஆரம்ப கட்டத்திலேயே இவர்கள் இஸ்லாத்தைத் தழுவிவிட்டனர்.

ஸிரியாவுக்குச் செல்லும் வழியிடையே ஒரு பள்ளத்தாக்கில் வாழ்ந்த கொள்ளைக் கூட்டத்தினர் ‘கிப்ஃபார்’கள். அவர்களின் கொள்ளைகளிலிருந்து தப்பிக்க, ஸிரியா செல்லும் மக்கத்துக் குரைஷிகள் தங்கள் வாணிபப் பொருள்களில் ஏதேனும் ‘மாமூ’லாக அவர்களுக்குத் தந்து விடுவார்கள். அதுவே கிப்ஃபாரீகளின் ஜீவனமாகிவிடும். அவர்களிடையே பிறந்த ‘ஜுன்தப் பின் ஜுனாதா’ என்ற பெயர் கொண்ட ஹலரத் அபூதர் (ரலி) அவர்களும் ஆரம்பகாலத்தில் மிகப்பெரும் வழிப்பறிக்காரராகவே விளங்கினர்.

பயணக் கூட்டங்களை தன்னந்தனியராகவே சென்று கொள்ளையிட்டுத் திரும்பும் திண்மை கொண்ட இவர்

பொருளடக்கம்

களது உள்ளம் திடீரென ஒரு மகத்தான மாற்றத்தைக் கண்டது. கொள்ளைத் தொழிலையே அடியோடு வெறுத்து ஒதுங்கியதோடு மட்டுமின்றி - அரபுகளை அந்தகாரம் அணைத்திருந்த அந்த நாளிலேயே இவர்கள் - சிலை வணக்கத்தை வெறுத்து, வணங்குவதற்குத் தகுதி படைத்த ஒரு வல்லமையைப் பற்றிச் சிந்திக்கவும் பேசவும் தலைப்பட்டனர். ஏதோ ஒரு முறையில் அந்த வல்லமையை வணங்கியும் வந்தனர் என்றே கூறல் வேண்டும். ஏனெனில்,

''அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களை - சந்திப்பதற்கு மூன்றாண்டுகளுக்கு முன்பிருந்தே நான் தொழுது வந்தேன்'' என்று அவர்கள் ஒரு முறை கூறினார்கள். ''எத்திசையில் திரும்பி நீங்கள் தொழுதீர்கள்?'' எனக் கேட்கப்பட்ட போது, ''இறைவன் எத்திசையில் என்னைத் திருப்புகிறானோ அத்திசையிலேயே நான் தொழுது கொள்வேன்'' என்றார்கள் ஹலரத் அபூதர் (ரலி).

மெய்ப் பொருளின் தேட்டத்தில் அவர்களின் இதயம் அலைக்கழிந்துக் கொண்டிருந்த காலத்திலேயே மக்காவில் அண்ணல் எம்பெருமான் (ஸல்) இஸ்லாத்தை எடுத்தோதும் செய்தி அவர்களுக்கு எட்டியது. உடனேயே தம் உடன் பிறந்தாரை மக்கா சென்று புதிய நபியைக் கண்டு உண்மையை ஆய்ந்து வரும்படி கூறி அனுப்பி வைத்தனர். அவ்வாறே சென்ற அவ்விளவல் திரும்பி வந்து, இறுதி நபியவர்களின் உண்மையையும் ஒழுக்கப் பண்பாடுகளையும் தாம் கண்டது பற்றியும், கவிஞர்களிடமும் மந்திரீகர்களிடமும் அது வரை தாம் கேட்டவை போன்றல்லாத அற்புத வேத வசனங்களை அந் நபியின் வாய் வழி தாம் கேட்டது பற்றியும் எடுத்துக் கூறக் கேட்டு அபூதர் அவர்களின் ஆவல் அலை பாய்ந்தது. தாங்களும் அத் திருநபி

பொருளடக்கம்

யைச் சந்திக்க மக்கமா நகரம் போந்தனர் ஹலரத் அபூதர் (ரலி).

உண்மையை நேரில் கண்டறிய வேண்டுமென்ற ஆவலில் மக்கா வந்த அவர்கள் அங்கு எவரிடமும் உரையாடாமல் 'ஜம்ஜ'மின் அமுத நீரையேஅருந்திப் பசி தீர்த்தவர்களாக கஅபாவின் வளாகத்தில் பொழுதைக் கழித்தனர். அவர்களின் நடமாட்டத்தை ஹலரத் அலீ (ரலி) அவர்களின் கண்கள் நோட்டமிட்டன. ஊருக்குப் புதியவராகத் தெரிந்த அவர்களை அன்று மாலை அலீ (ரலி) அவர்களே அழைத்துச் சென்று விருந்தளித்தார்கள். தம் முடனேயே இராத்தங்கவும் வைத்தார்கள். ஆனால் அவர்களிருவரும் எதுவும் உரையாடிக் கொள்ளவில்லை.

மறு நாள் காலை விடிந்ததும் ஹலரத் அபூதர் (ரலி) அவர்கள் கஅபாவுக்கே வந்து புதிய நபியைக் காணும் ஆவலுடன் காத்திருந்தனர். மாலையானதும் மீண்டும் அலீ (ரலி) அவர்களே அன்னவர்களை அழைத்துச் சென்று விருந்தளித்து ஓய்வு கொள்ள வைத்தனர். அவ்வாறாக மூன்று நாட்கள் கழிந்தன. அதற்குள் அவர்களிடையே பேச்சுப் பழக்கம் மலர்ந்தது. மூன்றாம் நாள் ஹலரத் அலீ (ரலி) அவர்கள் தம் விருந்தினரிடம் அவர் மக்கா வந்துள்ள காரணம் பற்றி வினவினார்கள்.

தயக்கத்தோடேயே தம் கிடக்கையை வெளியிட்ட ஹலரத் அபூதர் (ரலி) அவர்கள், அந்தப் புதிய நபியின் இருப்பிடம் அவர்களுக்குத் தெரிந்திருப்பின் தமக்குக் காட்டித் தருமாறு அலீ (ரலி) அவர்களை வேண்டினர்.

''கவலையுறாதீர், சரியான தோழமையையே நீர் பெற்றிருக்கிறீர்'' எனக் கூறி மகிழ்ந்த அலீ (ரலி) அவர்கள், அண்ணலார் (ஸல்) அவர்களைப் பற்றிய உண்மையையும் உயர்வையும் அவர்களுக்கு எடுத்துக் கூறி, மக்கா

பொருளடக்கம்

வின் குரைஷிகளிடையே அண்ணலார் (ஸல்) அவர்களுக் கிருந்த எதிர்ப்பையும் விளக்கிச் சொல்லி, மறுநாள் காலை தாம் அவர்களை நபி பெருமான் (ஸல்) அவர்களிடம் அழைத்துச் செல்வதாகவும், செல்லும்போது தம்மைப் பின் தொடர்ந்தே வரும்படியாகவும், மக்காவின் குரைஷி கள் எவரேனும் எதிர்ப்படின் தாம் தமது மிதியடியைச் சரி செய்வது போல் பாவனை செய்வர் என்றும், அபூதர் (ரலி) அவர்கள் தம்மிடம் தாமதியாது தம்மைத் தாண்டிச் சென்றிட வேண்டுமென்றும், அவ்வாறு சென்றாலே குரைஷிகளின் கண்ணோட்டத்துக்கு உள் ளாகாமல் அவர்கள் சென்று அண்ணலார் (ஸல்) அவர் களைக் காண முடியும் என்றும் எச்சரித்துக் கூறினார்கள்.

மறுநாள் காலை அவ்வாறே ஹலரத் அபூதர் (ரலி) அவர்கள் ஹலரத் அலீ (ரலி) அவர்களைத் தொடர்ந்து சென்றார்கள். இல்லத்தை எட்டிய சமயம் அண்ணலார் (ஸல்) அவர்கள் பகலுறக்கங் கொண்டிருந் தார்கள். அவர்களின் முகத்தைப் போர்வையின் முனை மறைத்திருந்தது. ஹலரத் அபூதர் (ரலி) அவர்களே அருகில் சென்று அதனை விலக்கினர். பெருமானார் (ஸல்) அவர்களும் விழித்தெழுந்தார்கள். அவர்கள் அல்லாஹ் வின் தூதரே என அக்கணமே அபூதர் (ரலி) அவர்களின் உள்ளம் உணர்ந்தது. "அஸ்ஸலாமு அலைக்க யா ரஸூ லல்லாஹ் - அல்லாஹ்வின் தூதரே! தங்கள் மீது சாந்தி யுண்டாகட்டும்" என்ற வாழ்த்தொலி அவர்களின் வாயி லிருந்து உதிர்ந்தது!

"வஅலைக்க ஸலாமுல்லாஹி வபரக்காத் துஹூ- உம்மீதும் அல்லாஹ்வின் சாந்தியும் கிருபையும் உண்டா கட்டும்" என வாழ்த்திய அண்ணலார் (ஸல்) அவர்கள் வியப்புக் கண் கொண்டு நோக்கி அவர்களை எவர் என வினவினார்கள். தம் பூர்வோத்திரத்தையும் அங்கு தாம்

பொருளடக்கம்

யந்துற்ற காரணத்தையும் ஹலரத் அபூதர் (ரலி) அவர்கள் விளக்கக் கேட்டு பெருமானார் (ஸல்) அவர்கள் இறைவனைப் புகழ்ந்தார்கள், கொள்ளையர் கூட்டத்திடையே ஒரு வெள்ளையுள்ளம் கொண்ட தலைவரைப் படைத்திருக்கும் அவன் வல்லமையைப் போற்றி.''

அண்ணலார் (ஸல்) அவர்களின் கரம்பற்றி ஹலரத் அபூதர் (ரலி) அவர்கள் இஸ்லாத்தை ஏற்றனர். இறை மார்க்கத்தை அவர்களுக்குப் போதித்த பெருமானார் (ஸல்) அவர்கள் ''அபாதர்! இஸ்லாத்தை நீர் ஏற்ற செய்தியை இப்போது இங்கு எவருக்கும் தெரிவிப்பது உசிதமல்ல. எனவே நீர் இப்போது உமது கோத்திரத்தாரிடம் சென்று வாழ்ந்து, இஸ்லாம் இங்கு காலூன்றி வலுப் பெற்ற செய்தியறியும்போது வந்து நம்முடன் சேர்ந்து வாழலாம்'' என்று நல்லுரை கூறினார்கள். ஆனால், அபூதர் (ரலி) அவர்கள், ''பெருமானே! நான் கற்ற இவ்விறை நாமத் திருமந்திரத்தை இணைவைப்போர்களிடம் கூறியே தீருவேன்'' என்று கூறியவர்களாக கஅபாவின் முன்னே சென்று நின்று ''வணக்கத்திற்குரியவன் அல்லாஹ் ஒருவனே என்றும், பெருமான் முஹம்மது (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் என்றும் நான் சாட்சி கூறுகிறேன்'' என்று உரக்கக் கூவினர். அடுத்த நிமிடமே கூக்குரலிட்டுப் பாய்ந்த குரைஷிகள் நாற்புறமும் சூழ்ந்து அவர்களை நையப்புடைக்கலாயினர். ஹலரத் அபூதர்

---

* மனித இன மூலப்பிதா ஹலரத் ஆதம் (அலை) அவர்களால் அறிமுகப்படுத்தப்பட்ட முறையில் அண்ணலார் (ஸல்) அவர்களுக்கு முதன் முதலாகச் சோபனங் கூறப் பேறு பெற்ற தோழர் ஹலரத் அபூதர் (ரலி) அவர்களாவர். அதற்கு முன் அரபுகள் ஒருவரையொருவர் சந்திக்கையில் 'ஸபாஹல்கைர்—நன்மையாகவே புலரட்டும்' என வாழ்த்திக் கொள்வதே வழக்கமாக இருந்தது.

பொருளடக்கம்

(ரலி) அவர்களின் புகலிடம் இனிச் சாவைத் தவிர்த்து வேறில்லை என்றாகி விட்டது. அதற்குள் அங்கு வந்து சேர்ந்த ஹலரத் அப்பாஸ் (ரலி) அவர்கள் ஹலரத் அபூதர் (ரலி) அவர்கள் மீதே வீழ்ந்து மறைத்துக் கொண்டவர்களாக, 'இவர் ஷிரியா செல்லும் வழியில் வாழும் 'கிப்ஃபார்' கோத்திரத்தைச் சார்ந்தவர். ஷிரியாவே நமக்கு முக்கிய வாணிபத் தலமாகும். இவரை நீங்கள் கொன்று விடுவீர்களாயின் கிப்ஃபாரீகள் ஷிரியா வின் பாதையையே உங்களுக்கு அடைத்து விடுவர்' என்று எச்சரித்து விடுவித்தனர்.

சில நாட்கள் தங்கள் விருந்தினராக அவர்களை வைத் திருந்த நபி பெருமான் (ஸல்) அவர்கள், வெகு விரைவில் தாம் யத்ரிபில் குடியேறப் போவதாகவும், அதுவரை அவர்கள் தங்கள் சமூகத்தாரோடு சென்று வாழ்வார்களா யின் அவர்களின் மூலம் அச்சமூகத்திலும் பலர் இஸ் லாத்தை ஏற்கக் கூடுமென்றும், அதன் நன்மைகளை இவர் களும் பெறுவர் என்றும் விளக்கினார்கள். அதனைச் செவியேற்று ஊர் திரும்பிய இவர்கள் வழியிலேயே சந்தித்த தங்கள் உடன் பிறந்தார் இருவரையும் முஸ்லிம் களாக்கினார்கள்; அவர்களோடேயே சென்று தங்கள் கிப்ஃபார் கோத்திரத்தாரிடையும் இஸ்லாத்தை எடுத் துரைத்தார்கள்.

அண்ணல் எம் பெருமான் (ஸல்) அவர்கள் மதீனா வந்தடைந்து, பத்ரு-உஹதுப் போர்கள் நடந்து அகழ்ப் போரும் முடியும் வரையிலும் ஹலரத் அபூதர் (ரலி) அவர் கள் தம் சமூகத்தாரோடேயே வாழ்ந்தனர். அன்னவர் களின் தொடர்ந்த முயற்சிகளால் கிப்ஃபாரீகளின் ஒரு பெருங் கூட்டம் இஸ்லாத்தை ஏற்றது. அகழ்ச் சண்டைக் குப் பிறகு நபிபெருமான் (ஸல்) அவர்களோடு வந்திணைந் துக் கொண்ட இவர்கள் தங்களின் இறையச்சத்தின் காரண

பொருளடக்கம்

மாகவும் மேலான வணக்க வழிபாடுகளின் காரணமாக வும் நபி மணித் தோழர்களில் தலைச் சிறப்புற்று விளங் கினர். அண்ணலார் (ஸல்) அவர்களின் நெருங்கிய தோழமையின் பலனாக இவர்கள் கல்வியில் பெருங்கட லாகவும் விளங்கினர். கலைஞானக் கடலின் கலங்கரை விளக்காகத் திகழ்ந்த அலீ (ரலி) அவர்களே, "அபூதர் மனித சக்திக்கு அப்பாற்பட்ட அறிவு ஞானத்தைப் பெற் றிருப்பதோடு அதனைப் பாதுகாத்தும் வைத்துள்ளார்" எனப் புகழ்ந்துரைத்துள்ளார்கள். தனிமையையும் மௌன த்தையுமே அதிகம் மேற்கொண்டிருந்த நிலையிலும் அண்ணலார் (ஸல்) அவர்களின் 281 அருள் மொழிகளை உலகுக்கு அறிவித்துள்ள இவர்களை கலீஃபா உமர் (ரலி) அவர்கள், ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரலி) போன்ற மேதைகளுக்குச் சமமாக மதித்தார்கள்.

ஆரம்பகாலத்திலேயே குறைஷியர்களிடம் பெற்ற அல்லல்களுக்குப் பகரமாக அரியதொரு பெற்றியை அண் ணலார் (ஸல்) அவர்கள் மக்கமா நகர வெற்றியன்று இவர்களுக்களித்தார்கள். தங்கள் பதினாயிரந் தோழர் களையும் கோத்திரங்கோத்திரங்களாகப் பிரித்து நகரினுள் புக அனுமதித்த நபிகளார் (ஸல்) அவர்கள் அனைவருக் கும் முன்னதாக 'கிப்ஃபார்' கோத்திரத்தவர்களையே செல்லப் பணித்தார்கள். அக்கோத்திரவர்களின் கொடி யைக் கரமேந்திச் சென்ற முதல்வராக ஹலரத் அபூதர் (ரலி) அவர்களே குறைஷியர்களின் கண்களின் முன்னே தெரிந்தார்கள்.

ஹலரத் அபூதர் (ரலி) அவர்களின் போர் வரலாறு நமக்கு விரிவாகக் கிடைக்கவில்லை. ஆயினும் போர்க் களங்களை விட்டும் அவர்கள் ஒதுங்கினவர்களல்லர் என் பது உறுதி. குறைஷிகளின் கொடுமைகளால் அச்சம் சூழ்ந்த ஆரம்ப நாட்களிலேயே தமது உணர்வுகளை அடக்க

பொருளடக்கம்

முடியாத அபூதர் (ரலி) அவர்கள், எத்திக்கும் முஸ்லிம்கள் முரசொலித்துக் கொண்டிருக்கையில் எங்ஙனம் ஒதுங்கியிருப்பர். பஞ்சமும் பற்றாக்குறையும் சூழ்ந்த காலத்தில் நிறுவப்பட்ட 'தபூக்' போர்க் களத்துக்கும் அவர்கள் தவறாது வந்து சேர்ந்த வரலாறும் உள்ளது.

பலஹீனப்பட்ட அவர்களின் ஒட்டகை நடக்கச் சக்தியற்று பின் தங்கியதால் அண்ணலார் (ஸல்) அவர்களின் பயணக் கூட்டம் முன் சென்று விட்டது. ஆயினும் ஹலரத் அபூதர் (ரலி) அவர்கள் பயணத்துக்கு இடையூறாக நின்ற தம் வாகனத்தை இடைவழியிலேயே விட்டு பொதிகளை தம் முதுகில் சுமந்தவண்ணமாக நடந்தே வந்து படைகளோடு சேர்ந்து கொண்டார்கள் என ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

பாலைவனப் பாதையில் தொலைவில் எவரோ வருவதைக் கவனித்த தபூக்போர் தோழர்கள் தங்கள் பெருமானிடத்தில் அச் செய்தியை அறிவிக்க, அண்ணலார் (ஸல்) அவர்கள் அவர் 'அபூதர்' ராகவே இருப்பார் எனக் கூறினார்கள்.

ஆம்! அபூதர் (ரலி) அவர்களே தாம். துறவிபோல் வந்து சேர்ந்த அத்தோழரைப் பற்றி அண்ணலார் (ஸல்) அவர்கள், "அல்லாஹ் அபூதர் மீது அருள்பாலிப்பானாக. பாவம், அவர் தனியராக வருகிறார். தனியராகவே வாழ்வார். தனியராகவே மரித்து தனியராகவே அடக்கப் பெறுவார். மறுமையிலும் தனியராகவே எழுப்பப்படுவார்" என அறிவித்தார்கள்.

"வாகனமற்று அவர் அல்லாஹ்வின் பாதையில் எடுத்து வைத்த ஒவ்வோர் அடிக்கும் பகரமாக இறைவன் அவரின் பிழைகள் ஒவ்வொன்றாய்ப் பொறுத்தருள்வான்"

எனவும் அண்ணலார் (ஸல்) அவர்கள் உறுதியளித்தார் கள்.

ஹலரத் அபூதர் (ரலி) அவர்களின் வாழ்க்கையில் காணப்பட்ட எளிமையின் காரணமாகவும் அவர்களின் சேவையில் காணப்பட்ட மேன்மையின் காரணமாகவும் அண்ணலார் (ஸல்) அவர்கள் அவர்களைப் பெரிதும் உவந்தார்கள். ஓர் அவையில் அண்ணலார் (ஸல்) அவர் கள் எழுந்தருளுவார்களாயின் அனைவருக்கும் முதலாக அபூதர் (ரலி) அவர்களையே தேடுவார்கள்; அவர்கள் அங்கில்லாவிடினும் அழைத்துவரச் செய்வார்கள்; அவர் களின் கரம்பற்றி உபசரிப்பார்கள். அந்த உறவு நெருக் கம் அண்ணலார் (ஸல்) அவர்கள் வாழ்ந்த இறுதிக்காலம் வரை தளரவே இல்லை இறப்பின் மடியிலும் அண்ண லார் (ஸல்) அவர்கள் அந்த தம் தோழரை அழைத்து வரச் செய்தார்கள். அவர்கள் வந்தபோது எழுந்திருக்க இயலாமல் அண்ணலார் (ஸல்) அவர்கள் படுத்தே இருந் தார்கள். ஹலரத் அபூதர் (ரலி) அவர்கள் குனிந்து பேசத் துவங்கிய போது புன்முறுவல் தவழ தங்கள் கரங்களால் இவர்களை அணைத்துக் கொண்ட பெருமானார் (ஸல்) அவர்கள், எளிய அத்தோழரை "எந்நாளும் அபூதர் இது போன்றே இருப்பார். என் மறைவுக்குப் பின்ன ரும் தம் வழிமுறையை மாற்றிக் கொள்ளமாட்டார்" எனப் போற்றினார்கள்.

அண்ணலார் (ஸல்) அவர்களின் மறைவுக்குப் பின்னர் ஹலரத் அபூதர் (ரலி) அவர்கள் மதீனாவிலேயே தங்கி வாழ்ந்தனராயினும் மாநபி (ஸல்) அவர்களின் பிரிவினால் விளைந்த மனவிரக்தி அவர்களைச் செயலிழக் கச் செய்திருந்தது. கலீஃபா அபூபக்கர் (ரலி) அவர்களின் காலத்தில் எந்தப் பொது நடவடிக்கைகளிலும் ஹலரத் அபூதர் (ரலி) அவர்கள் பங்கேற்கக் காணப்படவில்லை.

பொருளடக்கம்

இரண்டே காலாண்டுகள் ஓடி மறைந்தன. அருள் மனச் செம்மல் அபூ பக்கர் (ரலி) அவர்களும் பிரிந்தார்கள். அந்தப் பேரிடியும் அபூதர் (ரலி) அவர்களை நிலை குலையச் செய்தது. அதுவரை மலர்வனமாகத் தோன்றி மனதைக் குளிர்வித்து வந்த மதீனா மயான வெளியாகவே காட்சியளித்தது இப்போது அவர்களுக்கு.

கலீஃபா உமர் (ரலி) அவர்களின் ஆட்சியில் அடுக் கடுக்கடுக்காக ஈட்டப் பெற்ற அரசியல் வெற்றிகள், அதன் பலனாக அருவிபோல் வரத்துவங்கிய பன்னாட்டுக் கருவூ லங்கள் எவையுமே ஹலரத் அபூதர் (ரலி) அவர்களின் உள்ளத்தில் சிறு உசும்புதலையும் உண்டாக்கவே இல்லை. மதீனாவை விட்டும் வெளியேறி ஸிரியாவில் சென்று வாழலான அவர்களுக்கு ஆண்டொன்றுக்கு நான்காயிரம் தங்கக் காசுகள் பொதுக்கருவூலத்திலிருந்து தரப்பட்டு வந்தன. ஹலரத் அபூதர் (ரலி) அவர்கள் ஓராண்டு காலத்துக்குத் தமது குடும்பத்துக்குத் தேவையான உணவுப் பொருள்களைச் சேமித்துக் கொண்டு எஞ்சிய தொகையனைத்தையும் ஏழை எளியவர்களிடையே பங்கிட்டு வாழ்ந்து வந்தார்கள்.

இஸ்லாத்தின் இயற்கை எளிமை முந்திய இரு கலீஃபாக்களின் காலம் வரையிலும் எழில் மாறாதிலங் கியது. திரும்பிய திக்குகளிலெல்லாம் முஸ்லிம்கள் வெற்றிமேல் வெற்றி முரசங்கொட்டி, பொன்னும் மணி யும் அவர்களின் இல்லங்களில் பிரவாகமெடுத்த நிலையி லும் தடுமாறிவிடாமல் ‘தக்வா’ வென்னும் இறையச்சம் அவர்களைக் காத்து நின்றது. ஸித்தீக்கிய, ஃபாரூக்கிய சகாப்தங்களின் நிறைவுக்குப் பின்னர் காலம் பெரும் மாறு தலைக் கண்டது. முதுபெருங் கலீஃபா உதுமான் (ரலி) அவர்களின் மென்மைக் குணமும் இரக்கச் சிந்தனைகளும் அதுவரை சமூகத்தை அணைத்து நின்ற அச்சத்தை விலகச்

பொருளடக்கம்

செய்தன. ஆட்சி நிர்வாகத்திலிருந்த அதிகாரிகளிடையே ஆடம்பர வாழ்க்கை உருவாகலாயிற்று. அதன் பிரதி பலிப்பு பாமர மக்களிடையேயும் தோன்றாமலில்லை. அதிலும் ரோமர்களின் பழக்க உறவால் குறிப்பாக ஸிரியா வெங்கும் மக்களின் வாழ்க்கை பகட்டிலும் படாடோபத் திலுமே மிதந்தது. அந்தோ! அவர்களிடையிலா ஹலரத் அபூதர் (ரலி) அவர்களும் வாழச் சென்றமர வேண்டும்.

மக்களின் உடையிலும் நடையிலும் காணப்பட்ட மினுமினுப்பும் பளபளப்பும் அத்துறவிப் பெருந்தோழ ருக்குப் பெருஞ்சுமையாய் இருந்தன. அழியும் உலக மாயைகளை கழிவுப் பொருள்களாகவே ஒதுக்கி இதயத் தைக் காத்து வந்த அத்தோழர், அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களின் காலத்தில் தாம் கண்ட எளிமையையே என்றும் மக்கள் அனைவரிடமும் காண விரும்பினர். ஸிரிய மாகாணம் முழுமையாகவே ஹலரத் முஆவியா (ரலி) அவர்களின் ஆளுகையில் இருந்த காலம் அது. ஹலரத் முஆவியா (ரலி) அவர்களின் தாராளத் தன்மையும் கொடை வசீகரமும் அதிகாரிகளை மிதமிஞ்சிய சுகபோகத் தில் மிதக்க வைத்திருந்தன. உண்டு, உடுத்து, களித்த தற்கும் மேலாக அவர்கள் பொன்னையும் பொருளையும் அள்ளிச் சேர்க்கலாயினர்.

வாழ்க்கையின் அந்த மாறுதல் ஹலரத் அபூதர் (ரலி) அவர்களின் உள்ளத்தில் வேதனைத் தீயை வளர்த்தது. தனியொருவர் பசித்திருக்க தம்மிடம் மிஞ்சிக்கிடக்கிற தென்ற காரணத்தினாலேயே பொருளைச் சேமித்து வைக்க எந்த ஒரு முஸ்லிமுக்கும் எவ்வித உரிமையுமில்லை என அவர்கள் எண்ணினார்கள். அரசாங்கத்தில் ஏற்படுத் தப்பட்ட 'பைத்துல் மால்' எனப்பட்ட பொதுக் கருவூலத்



பொருளடக்கம்

தையும் அவர்கள் கெய்ஸருடையவும் கிஸ்ராவுடையவும் நாடுகளில் நிறுவப்பட்டிருந்தவைகளுக் கொப்பானதாக - பெரும் பாவச் செயலாகக் கருதினார்கள். அதன் காரண மாக - ஆரம்பத்தில் தனிப்பட்டவர்களிடையே துவங்கிய அவர்களின் தர்க்கம் ஆளுநரின் மன்றத்தையும் அதிரச் செய்தது. ஹலரத் முஆவியா (ரலி) அவர்களோடும் பெருந்தர்க்கம் செய்ய அவர்கள் பின்னடையவில்லை.

"அது ஆளுநரின் சொத்தல்லவே. அல்லாஹ்வின் உடைமையல்லவோ!" என ஹலரத் முஆவியா (ரலி) அவர்கள் வினவினார்கள்.

"அல்லாஹ்வின் உடைமையை மனிதர்கள் காவல் புரியத் தேவையென்ன! அடியார்களிடையேயன்றோ அது பங்கிடப்பட்டு விட வேண்டும்" என ஹலரத் அபூதர் (ரலி) தர்க்கித்தார்கள்.

அதிகார வர்ககத்தினரின் டாம்பீக வாழ்வையும் பொருட் பெருக்கத்தையும் ஹலரத் அபூதர் (ரலி) கடுமை யாகச் சாடினார்கள்.

وَالَّذِيْنَ يَكْنِزُوْنَ الذَّهَبَ وَالْفِضَّةَ وَلَا يُنْفِقُوْنَهَا فِيْ سَبِيْلِ اللّٰهِ ۙ فَبَشِّرْهُمْ
بِعَذَابٍ اَلِيْمٍۙ

"எவர்கள் பொன்னையும் பொருளையும் சேமித்து வைத்துக் கொண்டு அதனை அல்லாஹ்வுடைய பாதை யில் செலவு செய்யாதிருக்கின்றனரோ அவர்களுக்கு (நபியே)! நீர் துன்புறுத்தும் வேதனையைக் கொண்டு நன்மாராயம் கூறுவீராக" என்ற திருமறையின் (9 : 34) ஆவது வசனத்தை அவர்கள் தங்களின் தர்க்கத்துக்கு ஆதாரமாக எடுத்துக் காட்டினார்கள்.

ஹலரத் முஆவியா (ரலி) அவர்களும் அவ்வசனத்தின் முற்பகுதியான,

يَاأَيُّهَا الَّذِينَ آمَنُوا إِنَّ كَثِيرًا مِنَ الْأَحْبَارِ وَالرُّهْبَانِ لَيَأْكُلُونَ أَمْوَالَ النَّاسِ بِالْبَاطِلِ
وَيَصُدُّونَ عَنْ سَبِيلِ اللَّهِ

"விசுவாசிகளே! (நிச்சயமாக) அவர்களுடைய பாதிரிகளிலும் சந்நியாசிகளிலும் அநேகர் மக்களின் பொருள்களை தப்பான வழிகளில் விழுங்கி விடுவதுடன் மக்கள் அல்லாஹ்வுடைய பாதையில் செல்வதையும் தடை செய்கின்றனர்" என்ற தொடரை ஓதிக்காட்டி, அல்லாஹ்வின் அவ்வெச்சரிக்கை யூதர்களையும் கிருஸ்துவர்களையும் பற்றியது என சாதித்தார்கள்.

"இல்லை, அது முஸ்லிம்களுக்கும் உரியதே" என ஹலரத் அபூதர் (ரலி) வாதித்தார்கள்.

"அல்லாஹ்வின் பாதையில் செலவிடக் கடமைப்பட்டது ஜக்காத்தாக பிரிக்கப்பட்ட தொகை மட்டுமே என ஹலரத் முஆவியா (ரலி) அவர்கள் போன்றோர் வாதிட்டபோது ஹலரத் அபூதர் (ரலி) அவர்கள் மனிதனின் முழு உடைமையும் அல்லாஹ்வின் பாதையில் அர்ப்பணிக்கப்பட முன்னுரிமை கொண்டதே எனச் சாதித்தார்கள்.

"பொன்னையும் வெள்ளியையும் பொதிகளாகக் கட்டிவைத்துக் காப்பவருக்கு அல்லாஹ்வின் பாதையில் அதனை அவர் செலவழிக்கும் வரையிலும் அவை நெருப்புக் கங்குகளே" என என்தோழர் நாயகம் (ஸல்) உறுதி கூறியுள்ளார்கள் — என அவர்கள் மக்களிடையே எடுத்தோதினார்கள். ஹலரத் முஆவியா (ரலி) அவர்களால் தமக்கென கட்டிக் கொள்ளப்பட்ட 'அல்கிஸ்ரா' எனப்பட்ட பச்சை

பொருளடக்கம்

மாளிகையைப் பற்றி, மக்கள் பணத்திலிருந்து அவர் அதனைக் கட்டியிருப்பாராயின் அது மோசடியின் பால் பட்டதாகும். அவரின் சொந்த உடைமையிலிருந்தே அதனைக் கட்டியிருந்தாலும் கடப்பின் பால் பட்டதாகும் என விமர்சித்தார்கள். அவர்களின் சொற்கள் ஏழை எளியோர்களின் உணர்வுகளில் ஒரு கிளர்ச்சியை ஏற்படுத்தவே செய்தன.

அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் அருமைத் தோழர்கள் இருவகைப்பட்டவர்களாவார்கள். இம்மைப் பேற்றையும் மறுமைப் பேற்றையும் ஒரு சேரக் கண்டு திருவாழ்வு கொண்ட சீலர்களும் அவர்களில் உண்டு. இம்மையின் பேற்றை முற்றாகப் புறமொதுக்கி அழிவிலா மறுமைப்பேறே தங்களுக்குப் போதுமெனக் காத்திருந்த உத்தமர்களும் அவர்களில் உண்டு. பிந்திய சீலமிகு வாழ்க்கையை பெருமானார் (ஸல்) அவர்கள் வாழ்ந்த நாட்களிலேயே பேணி மாநபி (ஸல்) அவர்களின் திருவாயாலேயே 'மஸீஹுல் இஸ்லாம்' என மகிழ்ந்தேற்றப் பெற்றவர்களே ஹலரத் அபூதர் (ரலி). வாழ்க்கையை அவர்கள் தங்களுக்கு மிக எளிமைப் படுத்திக் கொண்டார்கள். தேவைகள் அவர்களுக்கு மிகக்குறைவாகவே இருந்தன. நாயகத் திருமேனி (ஸல்) அவர்களின் உரைகளையே செவிவழி உணவாய் மாந்தி, அவர்களின் செயல் முறைகளைக்கண்டு சுகிப்பதற்கே வாழ்க்கை—எனக்கொண்ட 'திண்ணைத் தோழர்'களான 'அஸ்ஹாபுஸ் ஸுஃப்ஃபா'க்களிடையேயும் ஹலரத் அபூதர் (ரலி) அவர்களின் வாழ்க்கை மிக எளிமையானது. பற்றறுத்த தமது துறவற வாழ்க்கையாலும், உலக வாழ்வைப் பழிக்கும் நபி மொழிகளாலும் ஸிரியா வாழ் மக்களிடையே ஒரு பரபரப்பையே ஏற்படுத்தி விட்ட அந்நபி மணித் தோழரைப் பற்றி,

பொருளடக்கம்

'அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களின் சிரமமும் கடுமையும் நிறைந்த எந்த ஒரு கட்டளையையும் அவர் கேட்பார்; அவற்றைத் தம் மக்களிடையே சென்று அறிவிப்பார்; தாமும் கடைபிடிப்பார். பின்னர் பெருமானார் (ஸல்) அவர்கள் அதிலிருந்த சிரமங்களைத் தளர்த்தி விடுவார்கள். அந்தச் செய்தி ஹலரத் அபூதர் (ரலி) அவர்களுக்கு எட்டியிருக்காது. அவர் தாம் முன்னர் கேட்டதன் பேரிலேயே உறுதியுடன் இருப்பார்.

—என்று ஷத்தாத் பின் அவ்ஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கின்றனர்.

மறு நாளின் தேவையைப் பற்றிய எண்ணத்தையே ஒழித்து இருப்பதை அள்ளித் தந்தே திருப்தி கொண்டு விடக் கூடிய மனப்பக்குவம் ஹலரத் அபூதர் (ரலி) அவர்களைப் போன்றார்க்குடையதேயன்றி மனிதர்களனைவர்க்கும் அவ்வாறே அமைந்திருக்க வேண்டுமென எங்கிருந்து எதிர்பார்க்க முடியும்?

காலமாறுதல்களுக்கேற்ப — இஸ்லாத்துக்கு முன்னர் தங்கள் மீது ஆதிக்கங் கொண்டிருந்த ரோமர்களின் உறவால் ஸிரிய மக்கள் கொண்டிருந்த கோலமாறுதல்களுக்கேற்ப — அவர்களின் மனப்போக்கோடிணைந்து அவர்களை மனப்பக்குவப் படுத்தவேண்டிய பெரும் பொறுப்பு ஹலரத் முஆவியா (ரலி) அவர்களுக்கிருந்தது. ஹலரத் அபூதர் (ரலி) அவர்களின் கோட்பாடுகள் மக்களிடையே பெரும் புரளியை உண்டாக்கி விடுமோ என ஹலரத் முஆவியா (ரலி) அவர்கள் அஞ்சினார்கள். பெருமான் நபி (ஸல்) அவர்களின் கரம் பற்ற தம்மை விட முந்திய தோழர்கள் பால் பெரும் மரியாதை கொண்ட ஹலரத் முஆவியா (ரலி) அவர்கள் ஹலரத் அபூதர் (ரலி) அவர்

பொருளடக்கம்

களோடு கருத்துமோதலைத் தவிர்க்க எண்ணி, நிலை மையை கலீஃபா அவர்களுக்கே எழுதி, அவர்களை மதீனா வுக்கே அழைத்துக் கொள்ளச் செய்தார்கள்.

ஒரு நாள் அண்ணலெம் பெருமான் (ஸல்), "அபாதர்! ஒரு காலம் வரும் அதிகாரத்திலிருப்போர் தமக்காக அதிகமாகப் பங்கு பிரிக்கத் துவங்குவர். அப் போது நீர் என்ன செய்வீர்?" என வினவினார்கள்.

"என் வாளைக்கொண்டு அவர்களைத்திருத்துவேன்" என்றனர் அப்புரட்சி மனச் செல்வர்.

கரம் பற்றி அவரைத் தம் கழுத்தோடணைத்த ஏந்தல் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள், "அதைவிடச் சிறந்த ஒன்றை நான் உமக்குக் கூறுவேன். நீர் பொறுமையை மேற்கொள்வீராக—என்னை வந்து சந்திக்கும் வரை" என்று.

அந்த முந்தைய நிகழ்ச்சி இப்போது ஹலரத் அபூதர் (ரலி) அவர்களின் நினைவில் நிழலாடியது. ஆகா! அண்ணலார் (ஸல்) அவர்கள் அறிவித்த அந்தக் காலமே யல்லவா வந்து விட்டது.

மதீனாவின் இன்றைய வாழ்க்கையில் தான் என்ன-எத்தனை வேறுபாடுகள் விளைந்து விட்டன! முந்திய இரு கலீஃபாக்களின் காலத்தில் மக்களிடையே காணப் பட்ட பேணுதல்கள் இப்போது காணப்படவில்லையே!! ஆளுநர்கள்-அதிகாரிகளிடையே காணப்பட்ட அச்சப்பாடு கள் -எங்கே ஓடி மறைந்தன அவை? என ஏங்கிப் புலம் பியது ஹலரத் அபூதர் (ரலி) அவர்களின் உள்ளம்.

பஹ்ரைனின் ஆளுநராகவிருந்து ஓய்வு பெற்று மதீனாவில் வாழ்ந்து கொண்டிருந்த மாநபித் தோழர் ஹலரத் அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் ஹலரத் அபூதர்

பொருளடக்கம்

(ரலி) அவர்களின் வருகை பற்றியறிந்து அவர்களைச் சந்திக்க வந்தார்கள்; எத்தனையோ ஆண்டுகளுக்குப் பின் காணக்கிடைக்கும் தோழரை அணைக்க விரைந்தார்கள். அவர்களின் முகமன் குரல் கேட்டதுமே முகம் சுளித்த ஹலரத் அபூதர் (ரலி) அவர்கள் 'விலகிடும் விலகிடும்' என விரண்டு ஒதுங்கினார்கள். மாநபி (ஸல்) அவர்களின் நெஞ்சார்ந்த தோழமையை ஒன்றிணைந்தே சுகித்த மாண்பாளர்களல்லவோ அவ்விருவருமே. அவ்வாறிக்க ஹலரத் அபூதர் (ரலி) அவர்கள் வெகுண்டு விலகக் காரணம் யாதோ! வியந்து நின்றனர், ஹலரத் அபூ ஹுரைரா (ரலி).

'மக்களின் மீது அதிகாரம் பெற்று வாழ்ந்தவரல்லவோ நீர்' என வினவினார்கள் ஹலரத் அபூதர் (ரலி).

"ஆம்" என ஏற்றார்கள் ஹலரத் அபூ ஹுரைரா (ரலி).

'எத்தனை உயர்ந்த கட்டிடங்களை நீர் உமக்காக அமைத்துக் கொண்டீர்? வேளாண்மைத் தோட்டங்கள் உமக்கெத்தனை உண்டு? தானியக் கருவூலங்கள் எத்தனை? என வினவினார்கள், ஹலரத் அபூதர் (ரலி).

'இல்லை சகோதரரே! இவற்றுள் எதையுமே நான் தேடிக் கொள்ளவில்லையே' என்றார்கள் ஹலரத் அபூ ஹுரைரா (ரலி).

'அப்படியானால் நீர் என் சகோதரரே' என அவர்களை அணைத்துக் கொண்டார்கள் ஹலரத் அபூதர் (ரலி).

'அபூதர்தா (ரலி) என்ற அன்ஸாரித் தோழர் வீடொன்றெழுப்பியவாறிருந்தனர். அவ்வழியாகச் சென்ற ஹலரத் அபூதர் (ரலி), "அபாதர்தா! மக்களின் கழுத்தின் மீது கற்களை அடக்கிக் கொண்டுள்ளீரா?" என வினவினார்கள்.

பொருளடக்கம்

'அல்ல, நான் வீடொன்றெழுப்பிக் கொண்டுள்ளேன். அது உமக்குப் பிடித்தமில்லையா?' என அபூதர் தா (ரலி) வினவினார்கள்.

'இதற்கு மாறாக நீர் உம்குடிலின் மருங்கே ஒரு கழிவறை கட்டுவதைக் காண நான் உவக்கின்றேன்' என்றார்கள் ஹலரத் அபூதர் (ரலி).

பொன்னும் மணியும் அலங்கரிக்க பளபளக்கும் பட்டாடைகளுக்குள் தங்களைப் பதுமைகளாக்கி உலவித் திரிந்த மக்கள் ஹலரத் அபூதர் (ரலி) அவர்களை ஒரு புதுமை மனிதராகவே நோக்கினார்கள். தங்களின் சுக போக வாழ்க்கைக்கு பெரும் இடையூறாகவே அவர்களைக் கண்டு அஞ்சிய அதிகார வர்க்கத்தினர், ஹலரத் அபூதர் (ரலி) அவர்கள் கலீஃபா உதுமான்(ரலி) அவர்களுக்கெதிராக சதிசூழ்ந்து மக்களிடையே கலகத்தைத் தோற்றுவிக்க முயற்சிப்பதாக கலீஃபா அவர்களிடமே சென்று குற்றம் சுமத்தலாயினர்.

அச்செய்தி ஹலரத் அபூதர் (ரலி) அவர்களின் செவிக்கே எட்டியபோது அவர்கள் தம் கையில் ஒரு சவுக்கையேந்தி கலீஃபா அவர்களின் முன்பே சென்று நின்று, சதி சூழ்வதாக தம்மீது பழி சாற்றியவனை சவுக்காலடிக்காமல் விடப்போவதில்லை எனத் துடித்தார்கள். 'அமீருல் முஃமினீன்! கிலாஃபத்துக்கு எதிராக சதி சூழவோ மக்களுக்கிடையே கலகம் விளைவிக்கவோ நான் ஒருபோதும் முனையமாட்டேன்; உடன்படமாட்டேன். என்னை குற்றவாளி என்று தாங்கள் கருதினால் அதற்கென தாங்கள் விதிக்கும் எந்தத் தண்டனையையும் ஏற்க இதோ நான் காத்திருக்கிறேன்' என அவர்கள் கூறக்கேட்டு கலீஃபா உதுமான் (ரலி) அவர்கள் தம் இருப்

பொருளடக்கம்

பிடம் விட்டெழுந்து அவர்களை அணைத்தமர்த்தி னார்கள்.

கலீஃபா உதுமான் (ரலி) அவர்களும் ஹலரத் அபூதர் (ரலி) அவர்களை அமைதிப்படுத்த பெரும் முயற்சி களெடுத்தார்கள். நெருங்கிய தோழர்களோடு அவர்களை அமரச்செய்து கருத்துக்களை பரிமாறச் செய்தார்கள். 'செல்வத்தை சேமிப்பதே தவறெனில் ஜக்காத் பற்றிய கட்டளையும் வாரிசுரிமைச் சட்டமும் இறங்கத் தேவை என்ன!' என ஒரு சமயம் வினவப்பட்டதற்கு ஹலரத் அபூதர் (ரலி) அவர்கள் நேரடியான பதிலுரைக்காமல் "உஹது மலைச்சாரலில் ஒருபோது உலவிக்கொண்டிருந்த நபிபெருமான் (ஸல்) அவர்கள் அம்மலையை எனக்கு சுட்டிக் காட்டி, 'என்னிடம் இம்மலையினளவு தங்கம் வந்தாலும் சரியே, அதனை மூன்று நாட்களுக்குள் நான் அல்லாஹ்வின் அடியார்களுக்கிடையே பங்கிட்டுத் தந்து விடுவேன், என்றார்கள்" என்று மட்டுமே கூறி மவுனித்துக் கொண்டார்கள்.

கலீஃபா உதுமான் (ரலி) அவர்கள் ஒருநாள் "பொருள்களைச் சேமித்துக் கொண்டும் ஜகாத்தை சரிவரக் கணக்கிட்டுக் கொடுத்துக் கொண்டும் இருப்பவரைப் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்' என வினா எழுப்பினார்கள். அவையில் அமர்ந்திருந்த ஹலரத் கஅபுல் அஹ்பார் (ரலி) அவர்கள் முந்திக் கொண்டு, "அத்தகையவருக்காக நான் ஈடேற்றத்தையே நம்பிக்கை வைக்கிறேன்" எனக் கூறி விட்டனர். மறு கணமே ஹலரத் அபூதர் (ரலி) அவர்களின் சினம் வரை கடந்தெழுந்தது. "யூதத் தாய்க்குப் பிறந்தவரே! மறுமை நாளன்று அவனின் இதயத்தையே தேள்கள் கடித்துக் குதறும் என நீர் அஞ்சவில்லையா!" எனக்

பொருளடக்கம்

கூறியவண்ணம் அவர்களைத் தம் கைத்தடியால் தாக்கப் பாய்ந்தார்கள். அவர்களை அடக்கி அமர்த்தவே கலீஃபா அவர்கள் மிகச்சிரமப்பட வேண்டியிருந்தது.

இனி அவர்களைச் சமாளிப்பதே முடியாதென்ற முடிவுக்கு வந்த கலீஃபா உதுமான் (ரலி) அவர்கள் மிகக் கைசேதப்பட்டவர்களாக அவர்களை அவர்களின் இல்லத்தினுள்ளேயே உறைந்திருக்குமாறும், அவர்களின் தேவைகள் அனைத்தையும் தாம் அவர்களின் வாசலிலேயே சேர்ப்பிக்கச் செய்வதாகவும் கூறினார்கள்.

"அமீருல் முஃமினீன்! தங்களின் எந்தத் தேவையும் எனக்கில்லை. அபூதர்ரின் ஒட்டகைகள் தரும் பால் அபூதர்ரின் தேவைகளுக்குப் போதுமானவை. நீங்கள் உங்கள் உலகத்தில் மூழ்கியிருங்கள். நம்மை நம்முடைய ரட்சகனின் மார்க்கத்தோடு விட்டு விடுங்கள்" என்று கூறி எழுந்து விட்டார்கள்.

மதீனாவின் பள்ளியொன்றில் ஹலரத் அபூதர் (ரலி) அவர்கள் படுத்திருந்த ஒரு சமயம் ஆங்கெழுந்தருளிய அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்கள், "அபாதர்! இங்கிருந்து ஒருநாள் நீர் வெளியேற்றப்பட்டீரானால் என்ன செய்வீர்?" என வினவினார்கள்.

"பெருமானே! மஸ்ஜிதுன் னபவீ'யில் போய்த் தங்கிக் கொள்வேன். அல்லது என் இல்லத்துக்கே சென்றுவிடுவேன்" என்றனர் ஹலரத் அபூதர் (ரலி).

"மக்கள் அங்கிருந்தும் உம்மை வெளியேற்றினால்?" என அண்ணலார் (ஸல்) அவர்கள் வினவினார்கள்.

"வாளைக் கையிலேந்திக் கொள்வேன்" என்றனர் ஹலரத் அபூதர் (ரலி).

பொருளடக்கம்

அவரின் தோள்களைத் தங்களின் கரங்களால் பற்றிய தாஹா ரஸூல் (ஸல்) அவர்கள் அன்பொழுகக் கூறினார்கள். "அபாதர்! இறைவன் உம் பிழைகளைப் பொறுத்தருள்வானாக. நீர் வாளை உருவவே வேண்டாம். அவர்கள் எங்கே விரும்புகிறார்களோ அங்கேயே நீர் சென்றிடுவீராக" என மும்முறை கூறினார்கள்.

பெருமானார் (ஸல்) அவர்கள் அருள்மொழிந்தது அபூதர் (ரலி) அவர்களின் செவிகளில் ஒலித்தவண்ணமே இருந்தது. "அபாதர்! அண்ணலெம் பெருமானார் (ஸல்) துயில் கொள்ளும் இப்பட்டணத்தை விட்டுமா நீர் வெளிச் செல்ல விழைகின்றீர்?" என வியந்த கலீஃபா உதுமான் (ரலி) அவர்களிடம் தங்களின் நினைவில் நிலைத்திருந்த அந்நிகழ்ச்சியை ஹலரத் அபூதர் (ரலி) அவர்கள் நினைவூட்டினார்கள். "அமீருல் முஃமினீன்! அந்த நிலை உருவாகுமுன் என்னை மதீனாவினின்றும் வெளிச் சென்றுவிட அனுமதியுங்கள்" என வேண்டி நின்றார்கள்.

அண்ணலாரின் முன்னறிவிப்பைச் செவியுற்ற துன்னூரைன் (ரலி) அவர்களின் கண்கள் கலங்கின. தம் இருப்பிடம் விட்டெழுந்த கலீஃபா தம் தோழரை அணைத்தார்கள்; அவரின் முன்னெற்றியை முகர்ந்தார்கள்; பிரியாவிடை கொடுத்தது அனுப்பி வைத்தார்கள்– அவரே விரும்பித்தேர்ந்த வேள்வியை நோக்கி.

மதீனாவினின்றும் வெளியேறிய ஹலரத் அபூதர் (ரலி) அவர்கள் மூன்று கல் தொலைவிலுள்ள 'ரப்ஸா' வென்னும் சிற்றுரை அடைந்தார்கள். அவர்களை 'ரப்ஸா' வாசிகள் இரு கரங்களேந்தி வரவேற்றார்கள்; அவர்கள் வாழ குடிலமைத்தளித்தார்கள். ஹிஜ்ரி 32ம் ஆண்டில் மரணம் தம்மை வந்தணைக்கும் வரையிலும்

பொருளடக்கம்

ரப்ஸாவிலேயே தங்கி வாழ்ந்தனர் அத்தனிப் பெருந் தோழர்.

பொதுவுடமை தத்துவம் பூத்த காவனமே ஹலரத் அபூதர் (ரலி) அவர்களின் பொன்மனம். ஆனால் கருத்துப்புரட்சி நடத்திய அவர்கள் கலகப் புரட்சி நடத்தவில்லை. கருத்துச் சிதறல்கள் எத்துணை கடுமை கொண்ட நிலையிலும் கட்டுப்பாடு குலைய அவர்கள் ஒரு போதும் ஒருப்பட்டதில்லை. ஹஜ்ஜுடைய காலத்தில் கலீஃபா உதுமான் (ரலி) அவர்கள் மதிய நேர 'லுஹருடைய தொழுகையை நான்கு 'ரக்அத்' துகளாகவே தொழுவிக்கக் கண்டு அது அண்ணலார் (ஸல்), அபூபக்கர், உமர் (ரலி) ஆகியோரின வழி முறைக்கு மாறானதெனக் கடுமையாகத் தர்க்கித்தவர்களில் ஹலரத் அபூதர் (ரலி) அவர்களும் ஒருவரே. எனினும் பின்னர் அவர்களே தொழுவிக்க நேர்ந்த போது நான்கு 'ரஅத்' துகளாகவே அவர்களும் தொழுவித்தார்கள். மக்கள் அது பற்றி வினவிய போது கட்டுப்பாட்டைப் பேணியே தாம் அவ்விதம் தொழுவித்ததாகக் கூறினார்கள்.

''எனக்குப் பின் தலைமை ஏற்பவர்களை நீங்கள் இழிவு படுத்திவிடாதீர்கள். அவர்களை இழிவு படுத்த எண்ணியவன் இஸ்லாமிய பந்தத்தை தன் கழுத்திலிருந்து விலக்கியவனைப் போன்றவனாவான். பச்சாதாபத்தின் வாசலையே தனக்கு அவன் அடைத்துக் கொண்டான்'' என அண்ணலார் (ஸல்) அவர்கள் கூறக்கேட்டேன்—என மக்களுக்கு அவர்கள் அறிவித்தார்கள்.

'ரப்ஸா'வில் அவர்கள் வாழ்ந்த காலை குழம்பிய சிந்தனை படைத்த ஈராக்கியர்கள் அவர்களை வந்து சந்தித்தார்கள்: மதீனாவை விட்டும் அவர்களின் வெளியேற்றத்துக்கு கலீஃபா உதுமான் (ரலி) அவர்களையே

பொருளடக்கம்

குற்றவாளியாக்கிப் பேசினார்கள்; அதையே காரணமாக்கி போர்க்கொடி தூக்க மக்களைத் தூண்டினார்கள். தங்களின் விவகாரத்தில் அவர்களின் தலையீட்டையே முற்றாகப் புறக்கணித்த ஹலரத் அபூதர் (ரலி) "தலைமையை நீங்கள் இழிவு படுத்த முனையாதீர்கள், அதன் காரணமாக உங்களின் இறைஞ்சுதல்கள் ஏற்கப்படாமலாகிவிடும்" என எச்சரித்தார்கள். "மக்களே! கலீஃபா உதுமான் (ரலி) அவர்கள் என்னை 'ரப்ஸா' வுக்கல்ல கிழக்கிலோ மேற்கிலோ பூமியின் கோடிக்கே அனுப்பி வைத்திருந்தாலும் நான் மனமொப்பிச் செல்வேன். மலையின் உச்சியில் கழுவிலேறச் சொன்னாலும் நான் பெரும் பேறாகவே எண்ணி களிப்புடன் அவரின் கட்டளையை ஏற்பேன். எனவே நீங்கள் என்னைக் காரணமாக்கிக் காட்டும் துரோகிகளுக்குத் துணை போக வேண்டாம். கலீஃபா அவர்களுக்கெதிராக நான் என் சுட்டு விரலையும் அசைக்கமாட்டேன்" என மக்களிடையேயும் உரையாற்றினார்கள்.

கடுமையான சோதனைகள் எதிர்ப்பட்ட நிலையிலும் காலம் அவர்களிடம் எந்த ஒரு சலனத்தையும் காண முடியவில்லை. வாழ்க்கையின் ஒவ்வொரு திருப்பத்திலும் என்தோழர் நாயகம் (ஸல்) இவ்விதமே எனக்கறிவித்துள்ளார்கள், இவ்விதமே என்னிடம் வாக்குறுதி பெற்றுள்ளார்கள் என தங்கள் மாநபி (ஸல்) அவர்களின் மணிமொழிகளை எடுத்துரைத்து அவர்களின் மாண்பைப் பேணிக் காத்தார்கள் அத்தோழர்.

அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களின் மறைவுக்குப்பின் அவர்களின் தோழர்களில் மேதைகளாய் மதிக்கப்பட்டவர்களில் ஒருவரே ஹலரத் அபூதர் (ரலி). மார்க்க வரம்புகளைப் பற்றியும் இறைவனுக்குப்

பொருளடக்கம்

பொருத்தமான நடைமுறைகளைப் பற்றியும் அணுவணு வாகத் துருவிக் கேட்டறிந்த கல்விமானாகவே அவர்கள் இருந்தனர். எனினும் தம் அண்ணலாரின் 281 திருவாய் மொழிகளையே அறிவித்துள்ள அவர்கள் 'ஹதீஸ்' அறி விப்பாளர்களில் பதினைந்தாவதிடத்தையே பெற்றிருக் கிறார்கள். ஃபத்வா வென்னும் மார்க்கத் தீர்ப்புகளை யும் அவர்கள் அதிகமாக வழங்கியதில்லை. ஹலரத் அபூ ஹுரைரா, அப்துல்லாஹ் இப்னு உமர், அனஸ் இப்னு மாலிக் (ரலி) போன்றோருடன் ஒப்பிட்டு நோக்கப்படுகை யில் இவர்களால் அறிவிக்கப்பட்ட 'ஹதீஸ்'களின் எண் ணிக்கை மிகக் குறைவே. அவர்களின் தனிமை வாழ்க்கை யும் மவுனச் சிந்தனையுமே அதற்கான காரணங் களாவன.

முந்திய இரு கலீஃபாக்களின் காலம் வரையிலும் மக்களிடையே அவர்கள் கலந்து வாழ்ந்தபோதிலும் தம் மாநபியைப் பிரிந்த மனவிரக்தி அவர்களை மவுனச் சிந்தனையில் லயிக்கச் செய்தது. பொருள்களின் பெருக் கத்தால் பின்னர் தோன்றிய—குழப்பங்களுக்கு அடிப் படையான-நவீன-நாசகார-நடைமுறைகள் அவர்களுக் குப் பெரும் வெறுப்பை யூட்டி மனிதர்களை விட்டும் ஒதுங்கி வாழச் செய்தன.

அண்ணலார் (ஸல்) அவர்களிடத்தில் ஒரு நாள் ஹலரத் அபூதர் (ரலி) அவர்கள் "பெருமானே! ஒரு கூட்டத்தாரை நேசிக்கும் மனிதன் அவர்களைப் போல் செயலாற்றத் திறன் பெற்றிராவிடின் என்ன பயன்?" என வினவினார்கள். அவ்வினாவின் உட்பொருளை உணர்ந்து அண்ணலார் (ஸல்) அவர்கள், "அபாதர்! நீர் எவரை நேசிக்கின்றீரோ அவரோடேயே இருப்பீர்" என்றார்கள்.

‘‘அண்ணலே! நான் அல்லாஹ்வையும் அவன் தூதரையுமே அதிகம் நேசிக்கிறேன்’’ என்றனர் ஹஸரத் அபூதர் (ரலி).

‘‘நிச்சயமாக நீர் அவர்களோடேயே இருப்பீர்’’ என அண்ணலார் (ஸல்) அருளினார்கள்.

தம் நேசர் பெருமான் வாழ்ந்த நாட்களிலேயே ஏதேனும் ஓர் அதிகாரத்தை ஹஸரத் அபூதர் (ரலி) அவர்கள் நாடிய ஒரு சமயம் ‘‘அபாதர்! நீர் பலஹீனப்பட்டு விடாதீர். நான் எனக்கென விரும்புவதையே உமக்கும் விரும்புவேன்’’ என அண்ணலார் (ஸல்) அவர்கள் உரைத்த ஒரு சொல் அந்நேசருக்கும் தம் வாழ்நாளின் முடிவு வரை போதுமானதாயிருந்தது. அவர்கள் தம் வாழ்க்கையில் இறுதி வரை எந்த ஓர் அதிகாரத்தையும் தலைமைத் தனத்தையும் திரும்பியும் பார்க்கவில்லை. மரணகாலம் வரையிலும் எளிமையையும் துறவு மனப் பான்மையையுமே போர்வைகளாகப் பூண்டிருந்த அத் தோழர் அற்பமான உலகின் ஆசாபாசங்களை நீசப் பொருளாகவே மதித்தார்கள்.

பொன்னையும் பொருளையும் வாழ்க்கையில் அவர்கள் திரட்டிச் சேர்க்கவில்லை. ‘மர்யமுடைய மகன் ஈஸாவுடையதையே போன்ற — அபூதர்ரின் துறவற வாழ்வு இறுதிவரை மாறா’ தென்ற அண்ணலார் (ஸல்) அவர்களின் முன்னறிவிப்பு அவர்களின் வாழ்க்கையில் ஒரு கணமும் பொய்க்கவில்லை.

ஸிரியாவின் அதிகாரியாக இருந்த ஹபீப் இப்னு மஸ்லமா ஒருமுறை இவர்களின் தேவைக்குப் பயன் படுத்திக் கொள்ளுமாறு முன்னூறு திர்ஹங்களை அன் பளிப்பாக அனுப்பி வைத்தபோது, ‘‘அல்லாஹ்வின் விஷயத்தில் வஞ்சிப்பதற்கு எம்மைத் தவிர எவருமே கிடைக்க

பொருளடக்கம்

வில்லையா அவருக்கு'' என்று கேட்ட வண்ணம் அவை களை ஏற்றுக் கொள்ளாமல் கொண்டு வந்தவரிடமே திருப்பி அனுப்பிய ஹலரத் அபூதர் (ரலி) அவர்கள், ''நமக்கென தங்கிக் கொள்ள ஒரு நிழல் இருக்கிறது. அன்றாடம் மாலையில் பால் கறந்து கொள்ள ஆட்டு மந்தை இருக்கிறது. ஊழியத்தில் தன்னை முற்றாக அர்ப்பணித்துக் கொண்ட ஒரு பணிப்பெண்ணும் இருக் கிறாள். இவற்றுக்கும் மேலதிகமாக எதையும் பெற்றுக் கொள்ள நான் அஞ்சுகின்றேன்.'' என்று கூறியதாக ஹலரத் அபூபக்கர் பின் முன்திர் (ரலி) அறிவிக்கின்றனர்.

வேறொரு மனிதர் அவர்களுக்குப் பொருளுதவ முன்வந்த போதும், 'என்னிடம் உள்ள ஆடுகள் என் பசி தீர்க்கப் பால்தரப் போதுமானவை. என் கழுதைகள் பொதி சுமந்து செல்கின்றன. (அதன் மூலம் வருவாய் உண்டு) ஊழியத்துக்கு ஒரு பெண் துணையும் எனக் குண்டு. என் தேவைக்கான உடைகளோடு ஒரு மேலங்கி யும் நான் வைத்திருக்கிறேன். மேலதிகமான அந்த ஒன் றுக்கே என்ன காரணம் கூறுவதென்று நான் தவித்திருக் கையில் இந்த உதவி எனக்கெதற்கு'' எனக்கூறி அவர் கள் புறக்கணித்துவிட்டதாக அபூஷஅபா (ரலி) கூறினர்.

மக்கள் அவர்களுக்கு ஊழியம் புரிய முந்தினபோதும் அதனை அவர்கள் ஏற்கவில்லை. ''மனிதர்கள் மரணிப்ப தற்காகவே பிறக்கிறார்கள்; நகரங்களை அவை நாச மடைவதற்கென்றே நிர்மாணிக்கின்றார்கள். அழியக் கூடியவைகளை அடைவதற்கே அவர்கள் ஆர்வம் கொள் கிறார்கள்; முயற்சிக்கிறார்கள். மற்ற பேணுதல்களை அவர்கள் புறக்கணித்து விடுகிறார்கள். ஆனால் அவர்கள் வெறுக்கும் மரணத்தையும் ஏழ்மையையுமே நான் பெரி தும் உவக்கின்றேன்'' என அவர்கள் உரைத்தார்கள்,

பொருளடக்கம்

அவர்களின் உடைமைகளனைத்தையுமே கூட்டிப் பார்த்தால் இரண்டு திர்ஹங்களுக்குமேல் மதிப்புடையதாகநான் நினைக்கவில்லை என மைமூன் பின் மெஹ்ரான் (ரலி) கூறினர். வாழ்க்கையின் ஒவ்வொரு கணமும் அவர்கள் மேற்கொண்டிருந்த இறையச்சமே அவர்களை அவ்வாறு ஒடுங்கச் செய்து விட்டது.

'ரப்ஸா'வில் அவர்கள் முடைப்பட்டு வாழ்ந்த காலத்திலும் 'இராக்கின் புறம் சென்றேனும் உழைத்து உண்ணலாம்' என அவர்களின் மனைவி அழைத்தபோது அவர்கள் ரப்ஸாவை விட்டும் வெளியேறவே மறுத்துவிட்டார்கள். 'இராக்கியர்களும் தங்கள் உலகத்தைக் கொணர்ந்து என் தலையில் சுமத்துவார்கள். 'ஸிராத்' என்னும் பாலம் மிக நுண்ணியதாகும். அதனைக் கடக்கும்போது நம் செயல்களுக்கேற்ற சுமைகள் நம் முதுகில் சுமத்தப்படும் என என் தோழர் நாயகம் (ஸல்) அவர்கள் எனக்குக் கூறியுள்ளார்கள். அந்தச் சுமைகள் குறைந்திருக்குமானால் அதனைக் கடப்பதும் நமக்கு எளிதாகும். ஒட்டகையைப் போல் பொதியைச் சுமந்தவன் எவ்விதம் அப்பாலத்தைக் கடப்பான்' என அவர்கள் வினவினார்கள்.

தனிமை வாழ்க்கையில் தம்மைச் சந்திக்க வந்த இம்ரான் பின் கத்தான் என்பவருக்கு தீமை பயக்கும் கூட்டுறவைவிட தனிமையே மேலானது என அவர்கள் போதித்தார்கள்.

''ரப்ஸாவில் ஒரு நிழலில் புழுவைப் போல் ஒடுங்கி அமர்ந்திருந்த அவர்களைக் கண்டேன். அவர்களின் மனைவி கன்னங்கரேலென்றிருந்தார். 'தங்களின் மக்களெவரும் இலையோ?' என ஒருவர் வினவினார். 'அழியும் இம்மையிலிருந்து அவர்களை என் மறுமைக்குப்



பொருளடக்கம்

பயன்படவென்றே அழைத்துக் கொண்ட என் இறைவனைத் துதிக்கின்றேன்'' என்றனரவர்கள். ''தாங்கள் வேறு அழகுள்ள ஒரு பெண்ணை மணந்து கொள்ளலாமே'' என ஒருவர் வினவினார். ''பெருமை கூட்டும் ஒரு பெண்ணைவிட பணிவு சேர்ப்பவரையே நான் உவக்கின்றேன்'' என அவர்கள் விடையளித்தார்கள்—என அப்துல்லாஹ் இப்னு கர்ராஷ் அறிவிக்கின்றனர்.

மா நபி (ஸல்) அவர்களின் மறைவுக்கு பின்னரும் தம் மரண காலம் வரையிலும் ஹலரத் அபூதர் (ரலி) அவர்கள் தம் உத்தமத் தலைவரின் பால் கொண்டிருந்த பாசமும் நேசமும் அளவிட்டுரைப்பதற்கரியதாகும். அவர்களின் புனிதத் திருப்பெயர் குறிப்பிடப்படுந்தோறெல்லாம் அருவிபோல் கண்ணீர் உகுப்பர்.

''பைத்துல் முகத்திஸில் ஒரு மனிதர் அதிகமாக மண்டியிட்டு (ஸஜ்தா) வணக்கம் புரியக்கண்டு என் மனம் அவர் பால் லயித்தது. தொழுகையை முடித்து மீண்ட நான் அவரை அணுகி உரையாடலானேன். தொழுகையின் சிறப்பையும் அதன் உள்ளச்ச நிலையையும் அப்பெரியார் எனக்கு விவரித்துரைத்தனர். தொடர்ந்து பேசமுனைந்த அப்பெரியார், 'என் தோழர் நாயகம் அபுல்காஸிம்' எனக்கூறி அழலானார். சற்றுநேரம் தாமதித்து 'என் தோழர் அபுல்காஸிம் (ஸல்) அவர்கள்' என்று மட்டுமே கூறிய அவரின் கண்களில் நீர் பொங்கிச் சிந்தியது. மீண்டும்சிறிது தாமதித்து 'என் தோழர் நாயகம் அபுல்காஸிம் (ஸல்) அவர்கள், எந்த ஓர் அடியார் இறைவனுக்காக மண்டியிட்டு (ஸஜ்தா) வணக்கம் செய்தாரோ அவரின்படித்தரத்தை இறைவன் உயர்த்திஅவரின் பதிவோலையில் ஒரு தீமையை அழித்து ஒரு நன்மையை

எழுதுகிறான் எனக் கூறக் கேட்டேன்’ எனப் பேசி முடித்தனர். அவரை ‘தாங்கள் யார்?’ என வினவினேன். முஹம்மதெம்கோமான் (ஸல்) அவர்களின் தோழர் அபூ தர், என தம்மைப்பற்றி அவர் கூறக்கேட்டு என் பிழையை எண்ணி வருந்தினேன் — என அஹ்னஃப்இப்னு கைஸ் அறிவிக்கின்றனர்.

“ஏழைகளை நேசித்தல், அவர்களோடு உறவாடுதல், தம்மிலும் தாழ்ந்தவர்களின் புறமேயன்றி தம்மிலும் உயர்ந்தவர்களை முன்னோக்காதிருத்தல், பிறரிடம் யாசியாதிருத்தல், சமாதானம் நிலவச் செய்தல், எத்தகைய துயரம் எதிர்ப்படினும் சத்தியம் காத்தல், இறைவனின் விவகாரத்தில் எவருடை குறுக்கீட்டுக்கும் அஞ்சாதிருத்தல், லாஹவ்லவலாகுவ்வத்த இல்லா பில்லாஹ் என அதிகமாகத் துதித்தல்—என ஏழு நற்செயல்களை என் தோழர் நாயகம்எனக்கு ஏவியுள்ளார்கள்” என அறிவித்த ஹலரத் அபூதர் (ரலி) அவர்கள் இறுதிவரை அவைகளைப் பேணினார்கள். ஏழைகளோடு ஏழையாகவே அவர்கள் வாழ்ந்தார்கள். பொன்னையும் பொருளையும் முற்றாகப் புறக்கணித்தார்கள். ஏற்றத் தாழ்வுகளை ஏற்க மறுத்தார்கள்.

‘ரப்ஸா’வில் அவர்கள் வாழ்ந்த சமயம் அங்கு பள்ளியின் இமாமாக ஓர் அபிஸீனிய அடிமை இருந்தார். தொழுகையின் நேரம் வந்தது, பள்ளியில் மாநபியின் தோழர் எழுந்தருளியுள்ள பேணுதலைக் கருதி அந்த அபிஸீனியர் பின்னடைந்து இவர்களை முன்னிற்க வேண்டினார். அதனை ஏற்க மறுத்த ஹலரத் அபூதர் (ரலி), தலைமை ஓர் அபிஸீனிய அடிமையிடமே தரப்பட்டாலும் அவருக்கு வழிப்படும்படியாக தமக்குக் கட்டளையிடப் பட்டுள்ளதாகக் கூறி அவரின் பின்னேயே நின்று தொழுதார்கள்.

பொருளடக்கம்

சரியென தம் உள்ளம் ஏற்ற ஒன்றை எடுத்துரைப்பதால் ஏற்படும் எந்த விளைவைப் பற்றியும் அவர்கள் அஞ்சுவதில்லை. ஆயினும் நீதியை நிலை நாட்டவே அவர்கள் நெஞ்சுரங் கொண்டிருந்தார்களேயன்றி அமைதிக்குப் பங்கம் விளைவிக்கத் துணியவில்லை. அதிகாரம் மக்களை அடக்கத் துணிந்தபோது அமைதியையும் பொறுமையையுமே அவர்கள் மக்களுக்குப் போதித்தார்கள். ஒரு தீமையிலிருந்து தப்பிக்க மற்றொரு தீமையை வழியாக மேற்கொள்ளாதிருக்க அவர்கள் மக்களுக்கு உபதேசித்தனர்.

கலீஃபா உதுமான் (ரலி) அவர்களின் காலத்தில் அதிகாரிகள் ஒரு சிலர் மக்களிடமிருந்து அபரிமிதமான தீர்வைகளைப் பறிக்கலாயினர். ஒரு மனிதர் ஹலரத் அபூதர் (ரலி) அவர்களிடம் வந்து 'அதிகாரிகள் அநீதியிழைக்கத் துணிந்து விட்டதால் நாங்கள் எங்களின் வருவாயில் ஒரு பகுதியை மறைத்துக் கொள்ளலாமா?' என வினவினார்.

''வேண்டாம், உரியதைப் பெற்றுக் கொண்டு அநீதியாகப் பறிக்கப்பட்டதைத் திரும்பத் தந்துவிடுமாறு அவர்களிடம் கேளுங்கள். அதற்குப் பின்னரும் அவர்கள் தங்கள் நிலையிலேயே நிற்பார்களாயின் அநீதமாகப் பறிக்கப்பட்ட உங்களின் உடைமைகள் மறுமை நாளில் உங்களுக்கு உதவும்'' என ஹலரத் அபூதர் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

அச்சமயம் அருகே நின்றிருந்த ஒரு குரைஷி இளைஞர், 'நீர் ஏன் தீர்ப்புகள் வழங்குகிறீர்? அமீருல் முஃமினீன் உம்மைத் தீர்ப்புகள் வழங்குவதை விட்டும் தடுக்கவில்லையா?'' என வினவினார். அவருக்கு விடையாக ஹலரத் அபூதர் (ரலி) அவர்கள், ''நீரென்ன என்னைக்

பொருளடக்கம்

கண்காணிப்பவரா? உம்முடைய வாள் என் கழுத்தைத் தொட்டு மரணத்தை எனக்கு நிச்சயப்படுத்தி நிற்கும் நிலையிலும் என் ஏந்தலரின் வழிமுறைகளை மக்களுக்கு எடுத்துரைப்பதை நான் ஒருபோதும் நிறுத்த மாட்டேன்'' என்றார்கள்.

'அவர் தனித்தே வாழ்வார்' என்ற அண்ணலரின் வாக்கு நிறைவடைந்ததே போல் 'அவர் தனித்தே மரணிப்பார்' என்ற பொன் வாக்கும் பூரணம் பெற்றது. ஹிஜ்ரி 32ம் ஆண்டில் ஹலரத் அபூதர் (ரலி) நோயுற்றனர். அது ஹஜ்ஜுடைய காலம். அச்சிற்றூர்வாசிகள் அனைவருமே ஹஜ்ஜுக்காக சென்று விட்டனர். மரணப் படுக்கையில் கிடந்த ஹலரத் அபூதர் (ரலி) அவர்களின் அருகே அவர்களின் மனைவியும் ஒரேயொரு மகனும் மட்டுமே நின்றிருந்தனர். நிர்க்கதியான அந்நிலையை எண்ணி ஹலரத் அபூதர் (ரலி) அவர்களின் மனைவி கண்ணீர் வடித்தார். கண் விழித்த ஹலரத் அபூதர் (ரலி) அவர்கள் என்ன காரணத்துக்காக நீ அழுகிறாய்? என அவரை வினவினார்கள்.

'தனிமைக் காட்டிலல்லவா நாம் கிடக்கின்றோம். நம்முடைய உடுத்தாடைகளைத் தவிர்த்து, தாங்கள் மரணித்து விட்டால் கஃபனாகப் போர்த்துவதற்கும் கூட ஒரு துணி நம்மிடம் இல்லையே' என்று கலங்கினார் அப்பெண்மணி.

''இதற்காக நீ அழவேண்டாம். ஒருநாள் என் தோழர் நாயகம் (ஸல்) அவர்கள் தங்கள் முன் அமர்ந்திருந்த எங்களை நோக்கி, 'உங்களில் ஒருவர் தனிமைக் காட்டில் மரணமடைவார். முஸ்லிம்களின் ஒரு கூட்டம் அப்போது அங்கு வந்தடைந்து அவரை அடக்கம் செய்யும்' என்றருளினார்கள். அப்போது அங்கிருந்த தோழர்

கள் அனைவருமே நகரங்களிலேயே மரணமடையப் பெற்று விட்டனர். எனவே தனிமைக் காட்டில் மரண மடையவேண்டியவன் நானே. என் உடலை அடக்கம் செய்ய முஸ்லிம்களின் ஒருகூட்டம் வந்துகொண்டிருக்கும். நீ சாலையோரம் நின்று அவர்களை வழி பார்த்திரு' எனப் பணித்தார்கள் ஹலரத் அபூதர் (ரலி).

"ஹஜ்ஜுக்கான காலமும் முடிந்துவிட்டதே இனி யார் வரப்போகிறார்கள்" என விரக்தி கொண்டார் அவர்களின் மனைவியார்.

"இல்லை, நானும் இப்போது உன்னிடம் பொய் உரைக்கவில்லை. என் நேசர் பெருமானும் பொய்யு ரைக்கவில்லை. நீ சாலையோரம் நின்று வழிபார்த்திரு. நிச்சயம் ஒரு கூட்டம் வரும்" என உறுதியுடன் உரைத் தனர் அம்மாநபித் தோழர்.

அவ்வாறே அவ்வம்மையார் சென்று சாலையோரம் நின்று காத்திருந்த போது, சற்றைய நேரத்தில் பயணக் கூட்டம் ஒன்று அவ்விடத்தை அடைந்தது. கூஃபாவி லிருந்து வந்து கொண்டிருந்த அவர்களிடையே பெருமான் நபி (ஸல்) அவர்களின் பிரிய தோழர் ஹலரத் அப்துல் லாஹ் இப்னு மஸ்வூது (ரலி) அவர்களும் இருந்தனர்.

நன்னபியின் தோழர்கள் இருவரும் சந்தித்துக் கொண்டனர். கண் விழித்து நோக்கிய ஹலரத் அபூதர் (ரலி) அவர்கள் தங்களை இறுதிப் பயணம் அனுப்ப தங்கள் பெருமானின் பிரியதோழர் ஒருவரே வந்து நிற்ப தறிந்து பெரிதும் மகிழ்ந்தார்கள். பெருமான் நபி (ஸல்) அவர்கள் தம்மைப் பற்றி கூறிச் சென்ற முன்னறிவிப்பை நினைவுபடுத்தி ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரலி) அவர்களிடம் மன நிறைவு கொண்ட அவர்கள், அவசியத்துக்கு தாங்கள் உடுத்தியுள்ள உடையையே

பொருளடக்கம்

தங்களுக்கு கஃபனாக்கி தங்களை அடக்கிவிடலாம் என வும் அல்லாது அண்ணலார் (ஸல்) அவர்களின் வழிமுறை தவறாதிருக்க மேலும் ஆடைகள் சேர்க்கப்படுவதானால் அவ்வாடைகள் ஆட்சியாளர்களோடு எந்தத் தொடர்பும் கொள்ளாதவர்களுடையதாக இருக்க வேண்டுமெனவும் வேண்டிக் கொண்டார்கள். பயணிகள் அனைவருமே ஏதா வதொருவிதத்தில் அதிகாரத் தொடர்புடையவர்களாகவே இருந்தார்கள். இறுதியாக ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊது (ரலி) அவர்கள் தம்முடைய அன்னையார் தம் சொந்த உழைப்பினாலேயே தயாரித்த மேலாடை ஒன்று தம்மிடம் இருப்பதாகவும் அதனை தாமும் பயன்படுத் தாமலே பேணுதலுடன் வைத்துக் காத்திருப்பதாகவும், அதையே அவர்களின் கஃபனாகப் பயன்படுத்திக் கொள்வ தாகவும் கூறக்கேட்டு ஹலரத் அபூதர் (ரலி) அவர்கள் பெரும் பொருத்தம் கொண்டார்கள். சற்று நேரத்தில் அவர்களின் புனித ஆன்மா பிரிந்தது. அவர்களின் பொன்னுடலை ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊது (ரலி) அவர்கள் தாங்களே நீராட்டி, கஃபனிட்டு, தொழு வித்து, நல்லடக்கம் செய்த பின்னர், அவர்களின் மனைவி யையும் மகளையும் அழைத்துக் கொண்டு மதீனா வந் தடைந்தார்கள்.

ஃ ஃ ஃ

பொருளடக்கம்

أبو موسى الأشعري

# ஹலரத் அபூ மூஸா அஷ்அரீ (ரலி)

**மா**நபி பெருமான் (ஸல்) அவர்களின் அழைப்பினை மக்கா வாழ் குரைஷிகள் தங்கள் காதுகளைப் பொத்திப் புறக்கணித்த அதே சமயம் அரபு மாநிலத்தின் தொலை தூரப் பகுதிகளிலிருந்து மனித விட்டில்கள் அப்பேரொளி யின் பால் பறந்தோடி வந்தன. அவ்வாறாக யமன் நாட்டிலிருந்து வந்து புனிதம் பெற்ற புண்ணிய சீலர்களில் ஒருவரே ஹலரத் அபூ மூஸா அஷ்அரீ (ரலி) அவர்கள். யமன் நாட்டில் பிரபலம்பெற்ற நிலக்கிழார்களில் 'அஷ்அர்' கோத்திரத்தில் கி. பி. 614ல் பிறந்த ஹலரத் அப்துல் லாஹ் இப்னு கைஸ் எனப்பட்ட அப்பெரியார் மாநிலத்தின் மார்பகத்தில் 'தவ்ஹீதி'ன் தனிக்குரல் ஒலிப்பதறிந்து, காலத்தையும் தூரத்தையும் கடந்து வந்து கருணை நபி களாரின் கரம் பற்றி இஸ்லாத்தை ஏற்றார்கள். பின்னர் யமன் நாடு மீண்டு திரு நபி (ஸல்) அவர்களின் அழைப்பை தங்கள் கோத்திரத்தாரிடையே எதிரொலிக்கத் துவங் கினார்கள். தம் மைந்தரின் கூற்றினை ஏற்று அவர்களின் அன்னை தைபா பின்த்து வஹபும் முஸ்லிமானார். நீண்ட காலம் வாழ்ந்த அவ்வம்மையார் மதீனா வந்த டைந்த பின்னரே மரணித்தார்.

ஹலரத் அபூ மூஸா (ரலி) அவர்களுக்கு அஷ்அர் கோத்திரத்தில் ஒரு தலைமைத் தனம் இருந்ததால் பிரச் சாரப் பணி அவர்களுக்கு மிக எளிதானதாகவே இருந்தது. வெகு விரைவிலேயே ஏறத்தாழ ஐம்பது குடும்பங்களை தம்முடன் அழைத்துக் கொண்டு கடல் மார்க்கமாக மக்கா நோக்கிப் புறப்பட்ட அவர்களை அப்போது வீசிய கடும் புயலும் கடல் கொந்தளிப்பும் ஒருங்கிணைந்து அபிஸீனி யாவின் கரையோரம் கொண்டு சேர்த்தன. மக்காவிலி ருந்து அபிஸீனியாவில் வாழ்ந்து வந்த ஹலரத் ஜஃபஅ

பொருளடக்கம்

ருத் தையார் (ரலி) அவர்களும் மற்ற முஹாஜிர்களும் மதீனா புறப்பட்டபோதே ஹலரத் அபூ மூஸா (ரலி) அவர்களும் தங்கள் கூட்டத்தாரோடு புறப்பட்டு வந்து அண்ணலெம்பெருமான் (ஸல்) அவர்களை கைபரில் சந்தித்தார்கள். கைபரின் வெற்றியன்றே அவர்களைச் சந்தித்த அண்ணலார் (ஸல்) அவர்கள் அல்லாஹ் அன்று தங்களுக்கருளிய வெற்றிப் பொருள்களில் அவர்களனை வர்க்கும் பங்களித்தார்கள்.

சிறந்த அறிவாக்கம் மிக்க இவர்கள் அண்ணல் எம் பெருமான் (ஸல்) அவர்களின் அவையில் தனியிடம் பெற்று விளங்கினர். மார்க்க வரம்புகளை துரிதமாகவே கற்றுத் தேர்ந்த இவர்கள் அண்ணலெம்பெருமான் (ஸல்) அவர்களாலேயே மார்க்கத் தீர்ப்பு வழங்க அனுமதிக்கப் பெற்றிருந்த அறுவருள் ஒருவராகத் திகழ்ந்தனர்.

திருமறையை ஓதுவதில் தனியின்பம் கண்ட அவர்கள் கிடைக்கும் ஓய்வு நேரங்களையெல்லாம் இறை மறையை ஓதுவதிலேயே கழித்தார்கள். அற்புதமான இராகத்தோடு அவர்கள் திருமறையை ஓதும் குரலினிமை கேட்டு அண்ண லெம்பெருமான் (ஸல்) அவர்கள், நபி தாவூது (அலை) அவர்களுக்கமைந்திருந்த இராகங்களில் ஒன்றை இறைவன் அவர்களுக்கு அருளியிருப்பதாகக் கூறி பரவசமுற்றார் களென ஹலரத் புரைதா (ரலி) அவர்கள் அறிவிக் கின்றனர்.

ஒரு சமயம் ஆயிஷா நாயகியாரோடு சென்று கொண்டிருந்த அண்ணலார் (ஸல்) அவர்கள் ஓரிடத்தில் ஹலரத் அபூ மூஸா (ரலி) அவர்கள் குர்ஆன் ஓதும் குரல் கேட்டு வெகுநேரம் நின்று லயித்திருந்தார்கள். மறு நாள் காலை அண்ணலார் (ஸல்) தாங்கள் கேட்ட சம்பவத்தை விவரிக்கக் கேட்ட ஹலரத் அபூ மூஸா (ரலி) அவர்கள்,

"அண்ணலே! தாங்கள் கேட்பது தெரிந்திருந்தால் என் குரலை நான் இன்னமும் அழகுபடுத்தியிருப்பேனே" என்றனர். மற்றொரு நாள் இவர்கள் உரத்த தொனியில் ஓதி 'இஷா' தொழுதபோது உம்முல் முஃமினீன்கள் அனைவரும் தங்கள் இல்லங்களை மறைத்துத் தொங்கிய திரையோரம் வந்து நின்று அவர்கள் ஓதுவதைக் கேட்டனர்.

கலீஃபா உமர் (ரலி) அவர்களோ இவர்களைச் சந்திக்குந்தோரெல்லாம், "அபா மூஸா! இறைவனை எங்களுக்கு நினைவூட்டும்" என்றே கட்டளையிடுவார்கள். உடனே ஹலரத் அபூ மூஸா (ரலி) குர்ஆனை ஓதத் துவங்குவார்கள். கலீஃபா அவர்கள் உலகையே மறந்து இறைவனின் சந்நிதானத்தில் நிற்பதே போன்ற உணர்வுடன் நிற்பார்கள்.

திருமறையின்பால் இவர்கள் கொண்டிருந்த ஈடுபாட்டைப் போலவே திரு நபியின் 'ஹதீஸ்' களின் பாலும் கொண்டிருந்தார்கள். அத்தகைய ஞானத்திறன் பெற்றிருந்தனாலேயே அண்ணலார் (ஸல்) அவர்கள் யமன் நாட்டு மக்களுக்கு மார்க்க நெறிகளை போதிக்க ஒரு பகுதிக்கு இவர்களையும் மறுபகுதிக்கு ஹலரத் முஆது இப்னு ஜபல் (ரலி) அவர்களையும் அனுப்பி வைத்தார்கள்.

கைபர் போர் முடிந்த பின்பே இவர்கள் மதீனா வந்தடைந்ததால் அண்ணலார் (ஸல்) அவர்களின் வாழ் நாளில் மக்கா வெற்றியிலும் ஹுனைன்-தபூக் போர்களிலு மட்டுமே இவர்கள் பங்கேற்க முடிந்தது. ஹுனைனில் முஸ்லிம்களிடம் தோல்வியுற்ற எதிரிகள் இரு கூட்டத்தினராகப் பிரிந்து ஒரு கூட்டத்தார் அவ்தாஸின் புறமும் மற்றொரு கூட்டத்தார் தாயிஃபின் புறமும் ஓடிவிட்டனர்

பொருளடக்கம்

அவ்த்தாஸின் புறம் சென்ற கூட்டத்தினரை முறியடிக்க அண்ணலார் (ஸல்) அவர்கள் அபூ ஆமிர் (ரலி) என்பவரின் தலைமையில் ஒரு படையை அனுப்பி வைத்தார்கள். ஹலரத் அபூ ஆமிர் (ரலி) ஹலரத் அபூ மூஸா அவர்களின் சிறிய தந்தையேயாவர். ஹலரத் அபூ மூஸா (ரலி) அவர்களும் அப்படையில் கலந்து சென்றார்கள். தளபதி அபூ ஆமிர் மட்டும், எதிரிகளில் ஒருவரையடுத்து ஒருவரையாக ஒன்பது பேரை போரிட்டுக் கொன்றார். பின்னர் அல் அலா, அல்ஃபா என்ற இருவர் ஹலரத் அபூ ஆமிர் (ரலி) அவர்களின் மீது அம்பெய்தனர். அதனைக் கண்ட ஹலரத் அபூ மூஸா (ரலி) தம் தளபதிக்கு உதவ வருவது கண்ட அவ்விருவரும் விரண்டோடினர். ஹலரத் அபூ மூஸா (ரலி) அவ்விருவரையும் விரட்டிச் சென்று அவர்களின் ஒருவரைக் கொன்று திரும்பினராயினும் ஹலரத் அபூ ஆமிர் (ரலி) அவர்கள் உயிர் பிழைக்கவில்லை. அவர்களின் மரணத்தையடுத்து ஹலரத் அபூ மூஸா (ரலி) அவர்களே படைத் தலைமை ஏற்று எதிரிகளைப் போரிட்டு முறியடித்து ஏராளமான வெற்றிப் பொருள்களுடன் மீண்டார்கள்.

அபூ ஆமிர் (ரலி) தம் மரணத்தருவாயில் அண்ணலார் (ஸல்) அவர்களுக்குத் தம் ஸலாமுரைத்து தம் பவம் பொறுக்கப்பட அவர்களை வழுத்தக் கோருமாறு ஹலரத் அபூ மூஸா (ரலி) அவர்களிடம் வேண்டிக் கொண்டனர். அவ்த்தாஸிலிருந்து மீண்ட ஹலரத் அபூ மூஸா (ரலி) அவர்கள் மூலம் அச்செய்திகள் அனைத்தையும் செவியுற்ற அண்ணலார் (ஸல்) அவர்கள் நீர் கொண்டு வரச்செய்து 'ஒழு' செய்து, "இறைவா! அபூ ஆமிரின் பிழைபொறுத்து மறுமையில் அவரை ஒரு பெருங் கூட்டத்தினருக்குத் தலைவராக்கியருள்வாயாக" என இறைஞ்சினார்கள். 'அவர்களின் கட்கங்களின் வெண்மை

எனக்குத் தெரியுமளவு அண்ணலார் (ஸல்) அவர்கள் தங்களின் கரங்களை உயர்த்தி இறைஞ்சக் கண்டு அவர்களை நானும் அருகி ''ஏந்தலே! எனக்காகவும் இறைஞ்சுங்கள்'' என வேண்டினேன். ''இறைவா! அப்துல்லாஹ் இப்னு கைஸின் (அபூமூஸா) பிழைகளைப் பொறுத்து மறுமையில் அவரை கண்ணியமான இல்லத்தினுள் சேர்ப்பித்தருள் வாயாக'' என அண்ணலார் (ஸல்) இறைஞ்சினார்கள்— என்ற செய்தியை ஹலரத் அபூ மூஸா (ரலி) அவர்களே அறிவிக்கிறார்கள்.

அண்ணலார் (ஸல்) அவர்களிடம் ஹலரத் அபூமூஸா (ரலி) அவர்கள் பெற்ற மற்றொரு பேற்றையும் அவர்களே அறிவித்திருப்பதை இமாம் முஸ்லிம் (ரஹ்) அவர்கள் குறிப்பிடுகிறார்கள்:- மக்காவுக்கும் மதீனாவுக்கும் இடையே 'ஜஅரானா'வில் அண்ணலார் (ஸல்) அவர்கள் பிலாலுடன் தங்கியிருக்கையில் அவர்களை நான் சந்தித்தேன். அதற்குள் ஒரு காட்டரபி வந்தார். அண்ணலார் (ஸல்) அவர்களை அணுகி, 'முஹம்மதே! (ஸல்) எனக்கு நீர் வாக்களித்ததைத் தாரும்' எனக் கேட்டார். அண்ணலார் (ஸல்) அவர்கள், 'உமக்கு நன்மாராயம் கிடைப்பது கொண்டு நீர் மகிழ்வீராக' என்றார்கள். 'நன்மாராயங்களை நீர் அதிகமாகவே பொழிகின்றீர்' என்றார் அக் காட்டரபி. அண்ணலார் (ஸல்) அவர்கள் எங்கள் புறம் திரும்பி 'அவர் புறக்கணிக்கும் என் நன்மாராயத்தை நீங்கள் ஏற்றுக் கொள்ளுங்கள்' என்றார்கள். 'ஏந்தலே! நாங்கள் ஏற்றோம்' என்றோம். ஏந்தலார் (ஸல்) ஒரு குவளையில் நீர் அள்ளிவரச் செய்தார்கள். அதில் தங்கள் கரங்களையும் முகத்தையும் கழுவினார்கள். தங்கள் உமிழ் நீரை அதனுள் சிந்தினார்கள். 'நீங்கள் இருவரும் இதனை அருந்துவதோடு உங்கள் முகங்களிலும் உடல் முழுதிலும்

தடவி நன்மாராயம் பெறுங்கள்' என எங்களைப் பணித்தார்கள்.

ஹலரத் அபூ மூஸா (ரலி) அவர்களும் பிலால் (ரலி) அவர்களும் அவ்வாறே செய்தபோது திரைமறைவிலிருந்த அன்னை உம்முஸலமா (ரலி) தமக்காகவும் அதில் மீத்துத் தரும்படி கேட்டுப் பெற்றுக் கொண்டனர். அதில் அவர்கள் பெற்ற இன்பம் என்ன? நன்மாராயம் என்ன? என்பனவெல்லாம் அறிவுடையோரிடமல்ல-அகத்தெளிவுடையோரிடமே வினவி விளங்கவேண்டியவைகளாகும்.

பின்னர் நடைபெற்ற தபூக் படையெடுப்பிலும் ஹலரத் அபூ மூஸா (ரலி) கலந்து கொண்டனர். தபூக் போரிலிருந்து திரும்பிய பின்னர் அண்ணலார் (ஸல்) அவர்கள் ஹலரத் அபூ மூஸா (ரலி) அவர்களை யமன் நாட்டின் ஒரு பகுதிக்குச் அனுப்பி வைத்தார்கள். அது முன்னமே அவர்கள் செல்வாக்கு பெற்றிருந்த பகுதியானதால் அதன் நிர்வாகத்தைத் திறம்பட மேற்கொள்வது அவர்களுக்கு எளிதாகவே இருந்தது.

ஹிஜ்ரி 10ம் ஆண்டில் அண்ணலார் (ஸல்) அவர்கள் ஹஜ்ஜு செய்யச் செல்வது பற்றியறிந்து ஹலரத் அபூ மூஸா (ரலி) அவர்களும் வந்து அண்ணலார் (ஸல்) அவர்களோடு கலந்து ஹஜ்ஜில் பங்கேற்றார்கள். ஹஜ்ஜிலிருந்து அவர்கள் மீண்டபோது யமனில் நபியெனத் தலையெடுத்த அஸ்வத் அன்ஸீ விளைவித்த குழப்பம் ஹலரத் அபூ மூஸா, முஆத் இப்னுஜபல் (ரலி) இருவரையுமே தங்களின் பொறுப்பிடங்களை விட்டும் வெளியேறி ஹளரமவ்த்தில் அடைக்கலந்தேட நிர்ப்பந்தித்தது. ஆயினும் வெகுவிரைவிலேயே இப்னு மக்தூஹ் முராதீ என்பவரின் வாள் அஸ்வதின் கணக்கை முடித்தது.

மதீனாவில் அண்ணலார் (ஸல்) அவர்களின் வாழ்வும் நிறைவு பெற்றது. கலீஃபா அபூபக்கர் (ரலி) அவர்களால் அனுப்பப்பட்ட படை யமன் நாட்டின் குழப்பங்களனைத்தையும் ஓயச் செய்தது. ஹலரத் அபூ மூஸா (ரலி) அவர்களும் மற்ற தளகர்த்தர்களும் அவர்களின் பொறுப்பிடங்களுக்கு மீண்டு தங்களின் நிர்வாகங்களைத் தொடர்ந்தனர்.

கலீஃபா உமர் (ரலி) அவர்களின் காலத்தில் வெற்றியை வேட்டையாட முஸ்லிம் படைகள் முனைந்துப் புறப்பட்டபோது போர் ஆர்வம் மிகப்பெற்றிருந்த ஹலரத் அபூமூஸா (ரலி) அவர்கள் நிர்வாகப் பொறுப்பிலிருந்து தம்மை விடுவித்துக் கொண்டு 'இராக்'கின் புறம் புறப்பட்ட ஹலரத் ஸஅது இப்னு அபீவக்காஸ் (ரலி) அவர்களின் படையொடு கலந்து சென்றார்கள். இராக்கின் பெரும் பகுதிகளை வெற்றியால் வளைத்துச் சேர்த்த மகாத்தளபதி ஹலரத் ஸஅது (ரலி) அவர்கள் ஹிஜ்ரி 17ல் புராத், தஜ்லா நதிகளுக்கிடைப்பட்ட ஜஸீரா வின் புறம் படைகளை அனுப்பிய போது நஸீபைன் என்ற நகரின் புறம் அனுப்பிய படைப் பகுதிக்கு ஹலரத் அபூமூஸா (ரலி) அவர்களையே தளபதியாக நியமித்தனுப்பினார்கள். அங்கிருந்து வெற்றி முரசங் கொட்டித் திரும்பிய ஹலரத் அபூ மூஸா (ரலி) அவர்களை பஸராவின் ஆளுநர் பொறுப்பை ஏற்கும்படியாக கலீஃபா உமர் (ரலி) அவர்களின் கட்டளை வரவேற்றது. அச்சமயம் பஸரா வாழ் மக்களுக்கு 'உங்களில் பலஹீனப் பட்டவர்கள் இழந்த உடைமைகளை வலியவர்களிடமிருந்து மீட்டுத் தருவதற்காகவும், உங்களின் வைரிகளை எதிர்த்துப் போரிடவும், திம்மிகளைப் பாதுகாக்கவும், உங்களின் விளைச்சல்களைச் சேர்த்து பங்கீடுகளை கவனிக்கவும், வாழ்க்கையின் பாதைகளை பயணத்திற்

பொருளடக்கம்

குரியதாய் பரிசுத்தப்படுத்தி வைக்கவும் அபூ மூஸாவை தலைமையளித்து அனுப்பியுள்ளேன்' என கலீஃபா உமர் (ரலி) அவர்கள் எழுதிய கடிதம் ஹலரத் அபூமூஸா (ரலி) அவர்களின் அனைத்துப் புலமைக்கும் வெளிச்சமிடுவதாய் இருந்தது.

பஸராவை ஒட்டியே பாரசீகத்தின் குஸிஸ்தான் மாநிலம் இருந்தது. அதன் முக்கிய நகரம் அஹ்வாஸ், காதிஸிய்யாப் போரில் முஸ்லிம்களிடம் தோற்றோடி வந்த ஹர்முஸான் என்ற பராசீகத் தளபதி அஹ்வாஸில் தங்கியே அடிக்கடி இஸ்லாமிய ஆட்சியின் எல்லையோரத்தில் தொல்லைகளை விளைவித்து வந்தான். ஹஜ்ரி 15ம் ஆண்டில் பஸராவின் ஆளுநராக இருந்த ஹலரத் உத்பான் இப்னு கஸ்வான் (ரலி) அவர்களாலும், ஹிஜ்ரி 16ம் ஆண்டில் ஹலரத் முகீரா இப்னு ஷுஅபா (ரலி) அவர்களாலும் அஹ்வாஸ் தாக்கப்பட்டது. இரு முறையும் ஹர்முஸான் தோற்றோட அஹ்வாஸின் மக்கள் ஹலரத் முகீரா (ரலி) அவர்களிடம் உடன்பாடு கண்டிருந்தனர். ஹிஜ்ரி 17ல் பஸராவில் ஆளுநர் மாற்றப்பட்டு ஹலரத் அபூமூஸா (ரலி) அவர்கள் வந்தபோது மீண்டும் அஹ்வாஸ் வாசிகள் ஹர்முஸானின் தூண்டுதலால் தங்கள் உடன்படிக்கைப்படி உண்டான தீர்வையைச் செலுத்தாது கலகம் விளைவித்தனர். இனி அஹ்வாஸை முற்றாக தங்கள் ஆட்சிக்குட்படுத்தி ஹர்முஸானையும் பிடிக்காதவரை அப்பகுதியில் நிம்மதி நிலைக்க முடியாதென முடிவு கொண்ட கலீஃபா உமர் (ரலி) அவர்கள் கூஃபாவிலிருந்தும் பஸராவிலிருந்தும் படையனுப்பி அஹ்வாஸைப் பிடிக்கும் படி ஆளுநர்கள் ஹலரத் ஸஅது இப்னு அபீவக்காஸ் (ரலி) அவர்களுக்கும் ஹலரத் அபூமூஸா (ரலி) அவர்களுக்கும் எழுதினார்கள். அவ்வாறே படையெடுப்புகள் நடைபெற்றன. ஹர்முஸான்

பொருளடக்கம்

ஷூஸ்தர் கோட்டைக்குள் தப்பியோடி பலத்த பாதுகாப்பு களைச் செய்துக் கொண்டு தங்கியிருந்தான். அக்கோட் டையையும் ஏறத்தாழ ஒரு மாத காலம் வரை முற்றுகை யிட்டு நின்ற ஹலரத் அபூ மூஸா (ரலி) இறுதியாக ஹர் முஸானைச் சிறை பிடித்து அவன் விரும்பியபடி விசாரணைக்காக கலீஃபாவிடமே அனுப்பி வைத்தார்கள்.

குஸிஸ்தானின் பெரும்பகுதியை முஸ்லிம்களிடம் இழந்த ஈரானியர்கள் அடுத்து நிஹாவந்தில் போர் ஆயத் தங்களைச் செய்தனர். ஹிஜ்ரி 21ம் ஆண்டில் கலீஃபா உமர் (ரலி) அவர்களின் கட்டளை கிடைத்து, கூஃபாவி லிருந்து ஹலரத் நுஃமான் பின் முக்ரின் (ரலி) அவர்களால் நடத்தப்பட்ட நிஹாவந்த் படையெடுப்புக்குத் துணை யாக ஹலரத் அபூ மூஸா (ரலி) அவர்கள் பஸராவிலிருந்து படைதிரட்டி வந்து பங்கேற்றார்கள்.

பஸராவின் குடியேற்றப் பெருக்கத்துக்குத் தக்கவாறு விளைச்சல்கள் போதாமல் இருந்தன. எனவே பஸரா வாழ் மக்கள் வெல்லப்பட்ட குஸிஸ்தானின் பகுதிகளி லிருந்து 'ராமஹ்ரமஸ்', 'அப்ஜஹ்' போன்ற சில நகரங் களை பஸராவோடு இணைக்க கலீஃபா அவர்களிடம் கோரிக்கை வைத்தனர். ஆனால் கூஃபா வாசிகளோ அப் பகுதிகளின் வெற்றிக்கு தாங்களே அதிகம் போராடிய தாகக் கூறி அவைகளை கூஃபாவோடு இணைக்கவேண்டு மெனத் தர்க்கித்தனர். கூஃபாவின் அப்போதைய ஆளு நராக இருந்த ஹலரத் அம்மார் இப்னு யாஸிர் (ரலி) அவர்களையும் அதற்காக கலீஃபா அவர்களிடம் வாதிட நிர்ப்பந்தித்தனர். ஹலரத் அம்மார் (ரலி) அவர்கள் அதில் தலையிடாததாலேயே கூஃபாவாசிகள் அந்நபித் தோழருக்கு எதிராகக் குற்றச்சாட்டுகளைப் புனைந்து கலீஃபா அவர்களிடம் முறையீடு செய்து ஆளுநர் பொறுப் பிலிருந்து அவர்களை மீட்கச் செய்தனர். 'அவருக்கு

பொருளடக்கம்

மாறலாக எவருடைய ஆளுமையை நீங்கள் விரும்புகிறீர்கள்' எனக் கலீஃபா அவர்கள் கேட்டபோது கூஃபா வாசிகள் பஸராவின் ஆளுநராக இருந்த ஹலரத் அபூ மூஸா (ரலி) அவர்களையே தங்களுக்கு ஆளுநராக அனுப்பவேண்டுமென விருப்பம் தெரித்தனர். ஹலரத் அபூ மூஸா (ரலி) அவர்கள் பஸரா வாழ் மக்களின் மனப் போக்கின்படியே இணைந்து மேற்கொண்ட நிர்வாகமும், அம்மக்கள் விரும்பியபடியே கலீஃபா அவர்களிடம் பரிந்து பேசி புதிய நகரங்களை தம் மாகாணத்தின் பக்கம் சேர்த்துக் கொண்ட திறனுமே கூஃபாவாசிகளால் அபூமூஸா (ரலி) அவர்கள் கவரப்பட்டதற்கான காரணங்கள்.

இவ்வாறாக அவர்கள் ஹிஜ்ரி 22ல் பஸராவிலிருந்து கூஃபாவின் ஆளுநராக மாற்றம் செய்யப்பட்டார்கள். எனினும் அம் மாற்றம் ஓராண்டுக்குமேல் நீடிக்கவில்லை. மீண்டும் அவர்கள் பஸராவின் ஆளுநராகவே மாற்றப் பட்டார்கள். அந்த இடைக் காலத்தில் அவர்கள் இஸ்பஹானின் மீது படை எடுத்துச் சென்று அதனையும் வென்று இஸலாமிய ஆட்சியில் இணைத்தார்கள். ஹிஜ்ரி 23ல் இரண்டாம் முறையாக அவர்கள் பஸராவின் ஆளுநர் பொறுப்பிலிருந்தபோதே கலீஃபா உமர் (ரலி) அவர்கள் மரணமடைந்தார்கள். கலீஃபா அவர்கள் நான்காண்டு காலங்களுக்கு ஹலரத் அபூ மூஸா (ரலி) அவர்களை அப் பொறுப்பில் நீடிக்கவிட தமக்குப் பின் கிலாஃபத்தை ஏற்பவருக்கான அறிவுரைகளில் குறிப்பிட்டுச் சென்றார்கள். ஆயினும் கலீஃபா உதுமான் (ரலி) அவர்களின் ஆட்சியில் ஹிஜ்ரி 29 வரை ஏறத்தாழ ஆறாண்டு காலம் ஹலரத் அபூ மூஸா (ரலி) அப் பொறுப்பில் நீடித்திருந்தார்கள். மக்களிடையே பரவ ஆரம்பித்த குழப்ப சிந்தனைகள் அதற்கு மேல் அவர்களை நீடிக்கவிடவில்லை.



பொருளடக்கம்

ஹிஜ்ரி 29-ல் குர்து இனத்தவர்களின் கலகத்தை அடக்க கலீஃபா உதுமான் (ரலி) அவர்களின் கட்டளைப் படி ஹலரத் அபூ மூஸா (ரலி) அவர்கள் போர் ஆயத்தங் களை மேற்கொண்டார்கள். அச்சமயம் மக்களில் பலர் தங்களிடம் வாகனமில்லாக் குறையைக் காட்டி போருக்குப் புறப்படத் தயக்கங் காட்டினர். ஆளுநர் அபூ மூஸா (ரலி) அவர்கள், வாகன மற்றவர்கள் அதன் காரணமாகவே பின்னடைந்து அமர்ந்துவிடக் கூடாதென்பதற்காக, கால் நடையாகவே போர் மேல் செல்வதனால் கிடைக்கப்பெறும் பலன்களைப்பற்றி மக்களுக்கு எடுத்துரைத்தார்கள். அவர் களின் வாக்கில் வளம் கண்டு மக்களும் பெருவாரியாகத் திரண்டெழுந்தனர். வாகனங்களை பெற்றிருந்தவர்களும் தங்களின் ஆளுநரின் அறிவுரையால் நன்மையை மிகுத மாகப் பெற நாடி வாகனங்களை விட்டு, நடந்தே புறப் பட்டனர். அது அவர்கள் தாங்களாகவே உணர்வு பூண்டு மேற்கொண்ட செயலேயன்றி ஹலரத் அபூமூஸா (ரலி) அவர்கள் அவ்வாறு ஏவவில்லை. மறுநாள் காலை படை கள் புறப்பட்டபோது ஹலரத் அபூமூஸா (ரலி) அவர்கள் வழமைபோல் தங்களின் புரவிமீதமர்ந்து புறப்பட்டனர். அதனையே எதிர்பார்த்துக் காத்திருந்த குழப்பக்காரர்கள் விரைந்து ஆளுநரின் புரவியைப் பிடித்துக் கொண்டனர். நேற்று நீர் மக்களுக்கு போதித்தது ஒன்று. இன்று உம் செயல் அதற்கு மாறாகவல்லவோ உள்ளது எனக் கேட்டுத் தர்க்கித்தனர். கலீஃபா அவர்களிடமே குற்றச்சாட்டுக் களை புனைந்தெடுத்துச் சென்றனர். அவர்களின் குழப்பச் சிந்தனைகளையும் மாநபித் தோழரின் மாண்பையும் புரிந்திருந்த கலீஃபா உதுமான் (ரலி) அவர்கள் அம்முது பெரும் தோழரை பஸராவின் ஆளுநர் பொறுப்பிலிருந்து மீட்டு அப்துல்லாஹ் இப்னு ஆமிர் (ரலி) என்ற இளம் ஆளுநரை பஸராவின் ஆளுநராக அனுப்பிவைத்தார்கள்.

பொருளடக்கம்

ஹிஜ்ரி 34ம் ஆண்டு—குழப்பம் தன் கோரச்சிறகு களால் கலீஃபா உதுமான் (ரலி) அவர்களின் ஆட்சியைப் போர்த்து அலைக்கழித்துக் கொண்டிருந்தது. அப்போது கூஃபாவின் ஆளுநர் பொறுப்பிலிருந்த ஹலரத் ஸஈத் இப்னுல் ஆஸ் (ரலி) அவர்கள் தலைநகர் வந்து கலீஃபா அவர்களின் ஆலோசனையில் பங்கேற்றுத் திரும்பிய போது அவரை குழப்பவாதிகள் கூஃபாவில் நுழையவே விடவில்லை. கலீஃபா அவர்களும் சச்சரவைத் தவிர்க்க எண்ணி ஹலரத் ஸஈது (ரலி) அவர்களை மீட்டுக் கொண்டு கூஃபாவாசிகள் விரும்பியபடி ஹலரத் அபூ மூஸா (ரலி) அவர்களை மீண்டும் கூஃபாவின் ஆளுநராக அனுப்பி வைத்தார்கள்.

கலீஃபா அவர்களின் கட்டளைக்குட்பட்டு ஹலரத் அபூ மூஸா (ரலி) அவர்கள் மூன்றாம் முறையாக பொறுப் பேற்று கூஃபா சென்றார்கள். அச்சமயம் நாட்டின் குழம் பிய சூழ்நிலை நாயகத்திருமேனி (ஸல்) அவர்களின் முன் னறிவிப்புகளையெல்லாம் அவர்களுக்கு நினைவூட்டியது. ஒரு பெருங்கலக வரலாறு வெகுவிரைவாகத் துவங்கப்பட விருக்கிறதென்பதை தெளிவாகவே உணர்ந்த அம்மாநபித் தோழர் அதனைவிட்டும் மக்களைக் காப்பதற்குண்டான பெரும் முயற்சிகளை மேற்கொள்ளத் தவறவில்லை. அவர்கள் அஞ்சியபடியே—ஆயினும் கற்பனைக்கே எட் டாத முறையில் கலகம் மதீனாவையே கலக்கியது. கலீஃபா உதுமான் (ரலி) அவர்களே கொல்லப்பட்டார் கள். அடுத்து கிலாஃபத்தை அலீ (ரலி) அவர்கள் ஏற்றார் கள். தல்ஹா ஸுபைர் (ரலி) போன்ற பெரும் நபித் தோழர்களெல்லாம் கலீஃபா உதுமான் (ரலி) அவர்களைக் கொன்றவர்களைப் பழிதீர்க்க ஆயிஷாநாயகியாரின் தலைமையில் திரண்டு பஸராவையும் தங்கள் வசப் படுத்திக் கொண்டார்கள். அதனை கிலாஃபத்துக்கு எதி

பொருளடக்கம்

ரான ஒரு நடவடிக்கையாகக் கருதி கலீஃபா அலீ (ரலி) அவர்கள் பஸராவை மீட்க படை நடத்திச் சென்றார்கள். கலீஃபாவுக்கு ஆதரவாக கூஃபாவாசிகளை அழைக்க அவர் களின் புதல்வர் ஹஸன் (ரலி) அவர்கள் ஹலரத் அம்மார் (ரலி) அவர்களோடு கூஃபா வந்தபோதும் கூஃபாவின் பள்ளியில் ஹலரத் அபூ மூஸா (ரலி) அவர்களின்—நடு நிலை மேற்கொள்ளத் தேவையான—நல்லுரைகளே ஒலித்துக் கொண்டிருந்தன. எனினும் ஹஸன் (ரலி) அவர்கள் ஹலரத் அபூ மூஸா (ரலி) அவர்களை அமர்த்தி தமது அற்புத அறிவாற்றலால் ஏறத்தாழ பதினாயிரம் கூஃபாவாசிகளை கலீஃபா அலீ (ரலி) அவர்களுக்கு ஆதர வாகத் திரட்டி அழைத்துச் சென்றார்கள்.

மக்களை எச்சரித்துத் தம் கடன் தீர்த்துவிட்ட மனப் பொருத்தத்தோடு ஹலரத் அபூமூஸா (ரலி) அவர்கள் பொறுப்பிலிருந்து தம்மை விடுவித்துக் கொண்டு ஸிரியா சென்று ஒரு குக்கிராமத்தில் தனிமை வாழ்வை மேற் கொண்டார்கள். கலீஃபா அலீ (ரலி) அவர்களுக்காதர வாக ஒட்டகைப் போரில் பங்கேற்க ஹலரத் அம்மார்(ரலி) அவர்கள் அழைத்தபோதும் ‘இஸ்லாத்தை ஏற்று இன்று வரையிலான இடைப்பட்ட நாட்களில் இதைவிட எந்தக் காரியமும் எனக்கு வெறுப்பளிக்கவில்லை’ எனக் கூறி ஒதுங்கி விட்டனர். ஹலரத் முஆவியா (ரலி)அவர்களின் தூதையும் அவ்வாறே புறக்கணித்தனர். ‘அம்ரிப்னுல் ஆஸை போன்றே நீரும் என்னோடிணைந்து விடும். உமக்கும் நான் ஆதரவாயிருப்பேன்; உம்முடைய மக்களில் ஒருவரை பஸராவின் ஆளுநராகவும் மற்றொரு மகனை கூஃபாவின் ஆளுநராகவும் நியமிப்பேன். உம் தேவைகளுக்காக என் வாசல் திறந்தேயிருக்கும்’ என முஆவியா (ரலி) அவர்கள் எழுதிய கடிதத்துக்கு, ‘இது சமூகத்தின் ஜீவநாடியான பிரச்னை. உம்

முடைய அருட்கொடைகளைப் பற்றி நான் தேவை யற்றிருக்கிறேன்' என பதில் எழுதிவிட்டார்கள். அவர்கள் அஞ்சிய படியே பெரும் (ஒட்டகைப்) போர் மூண்டது இஸ்லாமியர்களின் ஆயிரக்கணக்கான இல்லங்கள் ஒளி யிழந்தன. 'ஸிஃப்பீ'னிலும் முஸ்லிம்களின் இரத்தம் ஆறாகப் பிரவாகமெடுத்து ஓடியது. கலீஃபா அவர்களுக் கும் ஹலரத் முஆவியா (ரலி) அவர்களுக்குமிடையிலான பிணக்கு பேசித்தீர்க்கப்பட வேண்டும் என பின்னர் முடிவு செய்யப்பட்டது. அச் சமயம் ஹலரத் முஆவியா (ரலி) அவர்களின் பிரதிநிதியாக ஹலரத் அம்ர் இப்னுல் ஆஸ் (ரலி) அவர்களும், கலீஃபா அலீ (ரலி) அவர்களின் பிரதிநிதியாக ஹலரத் அபூ மூஸா (ரலி) அவர்களும் நியமிக்கப்பட்டனர்.

ஹலரத் அலீ-முஆவியா (ரலி) ஆகிய இருவருக்குமி டையே வளர்த்தப்பட்ட அப்பிணக்கில் பங்கேற்காத வேறெந்த நடு நிலையாளர் ஒருவரிடம் கிலாஃபத்தை ஒப்படைத்து விடுவதே பிரச்னையைத் தீர்க்க மேலான வழி என ஹலரத் அபூ மூஸா (ரலி) அவர்கள் எண்ணங் கொண்டார்கள். எனினும் அவர்களின் வெள்ளைத்தனமான பலஹீனத்தையே சாதகமாக்கி ஹலரத் அம்ர் இப்னுல் ஆஸ் (ரலி) அவர்கள் தம் சாகஸத்தால் ஹலரத் அபூ மூஸா (ரலி) அவர்களின் முடிவுக்கு மாறாக மக்களை திசை திருப்பிவிட்டனர். அதன் காரணமாக மனவேதனை யோடு வெளியேறிய ஹலரத் அபூமூஸா (ரலி) நேரே மக்கமா நகரம் வந்து விட்டார்கள். அதன் பின்னர் அவர்கள் எந்த பொது நடவடிக்கையிலும் ஈடுபடவில்லை. தனிமை வாழ்வை மேற்கொண்டு ஹலரத் முஆவியா (ரலி) அவர்களின் ஆட்சி காலத்தில் மரணமடைந்தார்கள்.

இறையச்சமும் மன ஓர்மையும் ஆன்மீக வாழ்வின் ஜீவன்களாவன. அவையிரண்டும் அபூ மூஸா (ரலி)

அவர்களின் இயல்பிலேயே அமைந்திருந்தன. அதனாலேயே அவர்கள் மிக இளமையிலேயே தேடிவந்து திருநபி (ஸல்) அவர்களின் கரம் பிடித்தனர்; ஞானம் படித்தனர். அலீ (ரலி) அவர்களையும் அபூ மூஸா (ரலி) அவர்களையும் விட மேலான ஞானவான்களை கூஃபா நகரில் தாம் காண வில்லை என அஸ்வத் என்ற தாபஈபெரியார்அறிவிக்கின்றனர். கற்ற ஞானத்தை அவர்கள் பிறர்க்குக் கற்பிப்பதிலும் குறை வைக்கவில்லை. இறைவன் அளித்த ஞானத்தை பிறர்க்கு எத்த வைப்பதை ஒரு கடமையாகவே கொண்ட அவர்கள் பஸராவிலும் கூஃபாவிலும் ஆட்சிப் பொறுப்பை ஏற்றிருந்த காலத்திலும் பாட கூடங்களை நிறுவி மக்களுக்குப் போதித்து வந்ததோடு பயண காலங்களிலும் தங்குமிடங்களிலெல்லாம் மக்களைக் கூட்டி 'ஹதீஸ்'களை எடுத்தோதி வந்தார்கள். அவர்களால் அறிவிக்கப்பட்ட 360 ஹதீஸ்களை உலகம் அடைந்துள்ளது.

ஆட்சி நிர்வாகத்திலும் இவர்கள் பெற்றிருந்த திறனாலும் அண்ணலார் (ஸல்) அவர்களிடம் கற்றுத் தெளிந்த வழிமுறைப் பேணுதலாலும் மக்கள் பெரும் பயன் பெற்றனர். பஸராவின் ஆளுநராக இருந்த நிலையிலும் தமது வருவாயையும் உடைமைகளையும் ஏழைகளுக்கு வாரி வழங்கி எளிமையில் இன்பங்கண்ட அவர்கள் உணவையும் உறக்கத்தையும் குறைத்து பகல் முழுவதையும் மக்களுக்குழைப்பதிலும் இரவின் பெரும்பகுதியை இறைவனை வணங்குவதிலும் கழித்து வந்தனர். பொதுக் கருவூலத்திலிருந்து ஊதியம் பெற நேரில் வரச் சக்தியற்றவர்களின் வீடுதேடி இவர்களே சென்று அவர்களின் பங்குகளைச் சேர்ப்பிப்பதோடு கடை வீதிகளுக்குச் சென்று அவர்களின் தேவைப் பொருள்களை வாங்கியும் சேர்ப்பிப்பார்கள். குடிநீர் தட்டுப்பாடால் பஸரா மக்கள் பட்ட துயரங்கண்டு கலீஃபாவின் உத்திரவைப் பெற்று

பொருளடக்கம்

‘தஜ்லா’ நதியிலிருந்து பஸரா நகரம் வரை ஒரு பெருங் கால்வாய் வெட்டி மக்களுக்குத் தண்ணீர் கிடைக்கச் செய்தனர்.

ஆன்மீகச் சிந்தனையால் அவர்கள் தாங்களும் தனிமையில் அழுதார்கள்; அறிவுடைப் போதனையால் பிறரையும் அழச் செய்தார்கள். “சிரித்தபடியே உலக வாழ்வைக் கழித்தவர்கள் நரகில் அழுது, அவர்களின் கண்ணீர் வற்றியபின் வடிக்கக் கூடிய செந்நீராற்றில் நாவாய்களும் எளிதாகமிதக்க முடியும். எனவே மக்களே! நீங்கள் உங்கள் பாவங்களை எண்ணி அதிகமாக அழுங்கள். அழுகையே உங்களுக்கு வரவில்லையானாலும் உங்கள் பச்சாதாபத்தை அழும் (முகத்) தோற்றத்தாலாவது புலப்படுத்துங்கள்” என அவர்கள் ஒரு நாள் போதித்தார்கள்

  

பொருளடக்கம்

سيدنا بلال رضي الله تعالى عنه

**சந்தக் குரலுடையார்**

# 'ஸையிதினா பிலால்' (ரலி)

அவனி வாழ் முஸ்லிம்கள் அனைவரின் நினைவிலும் அன்றாடம் நிழலிடும் பெருமை பெற்ற பெரியார் பெருமான் நபி (ஸல்) அவர்களின் தோழர் ஹலரத் பிலால் (ரலி) அவர்களாவர். 'அஷ்ஹது அன்ன முஹம்மதர் ரஸூலுல்லாஹ்' என்ற ஆன்மீகக் குரல் இன்று உலகில் ஒலிக்காத இடமும் இல்லை; நேரமும் இல்லை. அக்குரல் ஒலிக்குந்தோறெல்லாம் அதற்கு உறவுக்காரரான—உரிமைக்காரரான ஹலரத் பிலால் (ரலி) அவர்களை நினைவு கூராத நெஞ்சங்களுமில்லை.

இஸ்லாத்தின் முதல் முஅத்தினாக ஹலரத் பிலால் (ரலி) அவர்கள் நியமிக்கப்பட்டு மதீனாவில் தொழுகைக்கான அழைப்பொலி ஐங்காலமும் விடப்படலாரம்பமான காலம். ஹலரத் பிலால் (ரலி) அவர்கள் அபிஸீனிய நீக்ரோ இனத்தைச் சார்ந்தவராக இருந்த காரணத்தால் அவர்களின் உச்சரிப்புகளில் அரபிச் சொற்கள் சில பேதப் பட்டு ஒலிப்பதுண்டு. 'அஷ்ஹது' என தம் சாட்சியத்தை அவர்கள் உச்சரிக்கையில் 'ஷ்' என்ற ஒலி பேதப்பட்டு 'ஸ்—அஸ்ஹது' என்றே ஒலிக்கும் 'ஹய்ய அலஸ் ஸலாத்—தொழுகைக்காக விரைந்து வாருங்கள்' என அவர்கள் அழைப்பு விடுக்கும் போதெல்லாம் தொண்டைக் குழியை சற்று அழுத்தி மென்மையாக எழுப்பப்பட வேண்டிய 'ஹய்' என்ற ஒலி முரட்டுத் தொனியில் மாறுபட்டே ஒலிக்கும். அந்தக் குறைகளைச் சுட்டிக்காட்டி பாங் கொலிக்கும் பணியை வேறெவருக்கும் மாற்றிவிடுமாறு அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களை தோழர்கள் வேண்டிக் கொண்டதுண்டு. ஆனால் பெருமானார்

பொருளடக்கம்

(ஸல்) அவர்கள் அதனை ஏற்கவில்லை. சற்றே கொன்ன லாக ஒலித்த நிலையிலும் பிலாலின் கன்னலை நிகர்த்த குரலையே உவந்த அண்ணலார் (ஸல்) அவர்கள் 'பிலாலே பாங்கொலிக்கட்டும்' எனப் பணித்தார்கள்.

மதீனாவிலிருந்து 'குபா'வுக்கு அண்ணலார் (ஸல்) அவர்கள் வந்திருந்த ஒரு சமயம் அவர்களோடேயே வந்திருந்த ஹலரத் பிலால் (ரலி) அவர்கள் தம் காலைக் கடன் கழிக்கச் சென்று விட்டனர். அவர்கள் திரும்பத் தாமதமாகவே அண்ணலார் (ஸல்) அவர்களின் அனுமதி பெற்று ஹலரத் ஜியாது இப்னு ஹாரிஸ் (ரலி) அன்று வைகறைத் தொழுகைக்கு பாங்கொலித்தனர். சற்று நேரத்துக்குள் அண்ணலார் (ஸல்) அவர்களைச் சந்திக்க வந்த ஹலரத் ஜிப்ரயீல் (அலை) அவர்கள் அன்று ஏன் பாங்கொலி கேட்கவில்லை என வினவினார்கள். பாங் கொலிக்கப்பட்டு விட்ட விபரத்தை அண்ணலார் (ஸல்) அவர்கள் கூறக் கேட்ட விண்ணவர் கோன், 'பிலாலின் பாங்கொலி அர்ஷின் எல்லையிலும் கேட்குமே! அன்று அவ்வாறு கேட்கப்படாததாலேயே வினவினேன்' எனக் கூறி நின்றனர்.

விண்ணவரும் எண்ணி மகிழும் கன்னல் குரலுடை யார் ஹலரத் பிலால் (ரலி) அவர்களை அபிஸீனியர் களில் முதல் முஸ்லிம் என அண்ணலார் (ஸல்) அவர்கள் சிறப்பித்துக் காட்டியுள்ளார்கள். ஆயினும் ஹலரத் பிலால் (ரலி) அவர்களின் பிறப்பகம் அபிஸீனியாவல்ல. அபிஸீனியாவில் அவர்களின் தந்தை 'ரபாஹ்' அடிமை யாகப் பிடிக்கப்பட்டு மக்காவுக்குக் கொண்டுவரப்பட்டார் அவர்களின் தாய் ஹமாமா; காலித் என்ற ஒரு சகோதர ரைத் தவிர்த்து கஃபீரா என்ற ஒரு சகோதரியும் அவர் களுக்கிருந்தார். இவர்களனைவருமே 'ஜுமஹ்' கோத் திரத்து அரபுகளின் அடிமைகளாகி இருந்தனர்.

பொருளடக்கம்

அண்ணலார் (ஸல்) அவர்கள் நபித்துவம் பெறுவதற்கு முப்பதாண்டுகளுக்கு முன்னர் 'ரபாஹ்—ஹமாமா' தம்பதிகள் ஹலரத் பிலால் (ரலி) அவர்களை மக்கமா நகரிலேயே பெற்றெடுத்தனர். அடிமைப் பெற்றோர்களுக்குப் பிறந்த காரணத்தாலேயே ஹலரத் பிலால் (ரலி) அவர்களும் ஒரு பாரம்பரிய அடிமையாகவே விளங்கினர். ஆரம்பத்தில் ஜுமஹ் கோத்திரத்தின் ஒரு பெண் மணியின் அடிமையாக விளங்கிய அவர்கள் பின்னர் எப்படியோ உமையா இப்னு கலஃப் என்ற சீமானின் ஆதிக்கத்தை வந்தடைந்தனர்.

உமையா இப்னு கலஃப் ஜுமஹ் கூட்டத்தவர்களின் தலைவன். மக்க நகரின் மிகப்பெரும் வணிகன். செல்வப் பெருக்கினால் அவன் வீடு செழித்திருந்தது. ஏற்கனவே அநேக அடிமைகள் அவனுக்கிருந்த போதிலும் புதிதாகக் கிடைத்த அபிஸீனிய அடிமை பிலால் தம் அறிவுக் கூர்மையால், கடும் உழைப்பினால், சுறுசுறுப்பினால் உமையாவின் கவனத்தைக் கவர்ந்தனர். மிக இளம் வயதிலேயே உமையாவை வந்தடைந்த பிலால் வீட்டின் வேலைகளை கவனிப்பதற்கும் ஒட்டகைகளை மேய்ப்பதற்கும் நியமிக்கப்பட்டனர். அதுவே அவர்களுக்கு மக்காவின் மலைகளிலும் பாலை காடுளிலும் சுற்றித் திரிவதற்குப் பெரு வாய்ப்பாக அமைந்தது. பிந்திய காலத்தில் மந்தகாச லாகிரியை மக்களின் செவிகளுக்கு ஊட்டப்போகும் அந்தச் சிறுவருக்கு இயற்கையாகவே அமைந்திருந்த சந்தக் குரலை மக்க நகரத்தின் பாலைகளும் காடுகளும் அவ்வாரம்ப நாட்களிலேயே கேட்கப் பேறு பெற்றிருந்தன.

இஸ்லாத்தை அறிவதற்கு முன்னர் ஹலரத் பிலால் (ரலி) அவர்களின் இறை நம்பிக்கையும் கொள்கைகளும் எத்தகையனவாக இருந்தன வென்பதை வரையறுத்துக் கூறுவதற்கில்லை. பொதுவாகவே சிலை வணக்கங்களி

பொருளடக்கம்

லேயே முழு உலகமும் மூழ்கிக் கிடந்த மவுட்டீக காலத்தில் ஆப்பிரிக்க மண்ணும் அதற்குத் தப்பியிருக்கவில்லை. ஹஸரத் ஈஸா (அலை) அவர்களின் தோற்றத்தையடுத்து சன்னஞ் சன்னமாக அப்பகுதியில் நுழைந்த மேலைய நாட்டினர்கள் ஆப்பிரிக்கக் கரைகளில புதியதொரு மார்க்கத்தை அறிமுகப் படுத்துவதில் ஓரளவு வெற்றி கண்டிருந்தனர். ஒரு வழியாக அபிஸீனியாவின் அரசரே கிருஸ்துவ மார்க்கத்தை ஏற்று தம் நாட்டை ஒரு கிருஸ்துவ நாடாகவே பிரகடனப்படுத்தியிருந்தார். ஆனால் புதிய ஒரு மார்க்கத்தைப் பரப்ப நுழைந்தவர்கள் நாளடைவில் நாகரிகமற்ற அக்காட்டுப் பகுதிகளில் பேந்தப் பேந்த விழித்தபடி கிடைத்த ஏமாளிகளை இழுத்துச் சென்று தங்களின் ஆசிய ஐரோப்பிய பயண பூமிகளில் ஆடு மாடுகளை விற்பனை செய்வதேபோல் விற்பனை செய்யலாயினர். இவ்வாறாகத் துவங்கிய அடிமை வியாபாரம் அரபுகளையும் கவர்ந்து சூடு பிடிக்கலாயிற்று. அபிஸீனியர்கள் என்றாலே அடிமைகள் என்ற நிலையே உருவாகியது. அவ்வாறே மக்கா வந்தடைந்த 'ரபாஹ் —ஹமாமா குடும்பத்தினரும் கிருஸ்த்துவ மார்க்கக் கொள்கையுடையவர்களாகவே இருந்திருக்கவும் கூடும். அவர்களின் மகனாய்ப் பிறந்திருந்த பிலால் அவர்களின் வணக்க முறைகளைப் பற்றியெல்லாம் அறிய வேண்டிய அவசியமே உமையா இப்னு கலஃபுக்கு இருக்கவில்லை. ஏனெனில் அச்சமயம் அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்கள் இஸ்லாமியப் பிரச்சாரத்தை ஆரம்பித்தேயிருக்கவில்லை. ஏக இறை வணக்கம் பற்றிய மூச்சே எழுப்பப்படவில்லை. குரைஷியர்களிடையே எந்தச் சலசலப்புமே இருக்கவில்லை. தங்களின் எண்ணம் போல் சிலைகளை வடித்து நிர்வாணக் கலைகளை வளர்த்து மக்களைப் புலையர்களாக்கி அவர்களின் மீது ஓர் ஆதிக்கத்தையே நிலைகொள்ள

பொருளடக்கம்

வைத்திருந்தனர் அரபுச் சனாதனிகள். பண்டைய மார்க்கத்தை நிறுவிய ஹலரத் இப்ராஹீம் (அலை) அவர்களின் வழிவாறுகளென தங்களை அவர்கள் கூறிக்கொண்டார்களேயன்றி, அல்லாஹ்வின் கலீலாகிய அப்பெரியார் மனிதர்கள் ஆண்டவனையே தொழுவதற்காக எழுப்பி வைத்த புனிதத் திருவீட்டின் உள்ளும் புறமும் ஆஸரின் படைப்புகளையே நிரம்ப நிறுத்தி அவர்கள் வணங்கி வந்தனர். அத்துடன் மட்டுமேயல்ல, செல்வமும் செல்வாக்கும் பெற்ற அக்காலத்தைய நம்ரூதுகள் தங்களின் பெருமைக்கும் தகுதிக்கும் தக்கவாறு தனித்தனி கடவுள்களை தத்தமது வீடுகளில் வைத்தும் வணங்கி வந்தனர்.

உமையா இப்னு கலஃபும் பெரும் செல்வந்தனாயிருந்தான். தன் வீட்டின் வளாகத்தில் தனக்கென தனி மண்டபத்தையே கட்டியிருந்தான். பெருஞ்சிலை ஒன்றை அதில் நிறுவி 'ஹாதா ரப்பீ—ஹாதா அக்பர்—இதுவே என் கடவுள், மற்ற அனைத்திலும் வல்லமை படைத்தது' என பெருமை கொண்டிருந்தான். ஹலரத் பிலால் (ரலி) அவர்கள் வயதால் சற்று வளர்ந்தபோது ஒட்டகைகளை மேய்க்கும் பணிக்கு மாறாக உமையாவின் கடவுளைக் கவனிக்கும் பொறுப்பு அவர்களிடம் ஒப்படைக்கப்பட்டது. மண்டபத்தைப் பெருக்கி சுத்தம் செய்வது, கடவுளை கழுவிக் குளிப்பாட்டுவது போன்ற பணிகளை அவர்கள் கவனித்து வரலாயினர்.

நகரங்களின் தாயெனச் சிறந்த மக்காவின் மேட்டுக்குடிப் பிறப்புகளாக தங்களை எண்ணிக் கொண்டிருந்த மேதைகளெல்லாம் வெண்ணிறச் சதைப் பிண்டங்களுக்கிடைப்பட்ட அந்தகாரக் குகைகளாகவே தத்தம் இதயங்களைச் சுமந்தலைந்த நிலையில் ஒரு கருநிற ஹபஷீயின் உள்ளம் மட்டும் பரிதியின் வெளிச்சத்தை ஈர்க்கப் பரி

பக்குவம் பெற்றுக் காத்திருந்தது ஒரு புதுமையே அல்ல. ஏனெனில் படைப்பிலேயே 'ஸாபிக் கூனல் அவ்வலூன்' என்ற பரிவட்டத்தைத் தாங்க படைக்கப் பட்டிருந்தவர் களுள் ஒருவரான ஹலரத் பிலால் (ரலி) தன் எசமானன் உமையாவின் வணக்க வழிபாடுகளை வியப்போடேயே கண்டனர்; மன வெறுப்பும் கொண்டனர். தம் பெற் றோர் வாயிலாக அவர்கள் அறிந்திருந்த வணக்க முறைக்கு மாறாக கேவலம் பதுமைக்கு முன் உமையா மண்டி யிட்டுப் புரளும் காட்சி அவர்களுக்குப் புதுமையாகவே இருந்தது. இவனும் ஒரு தலைவனா என அவர்களின் இதயம் வெறுத்தாலும் அக்கால அடிமைகளின் நிலை சுய மாக உதடுகளை அசைக்கவும் அனுமதியற்றதாயிருந்தது.

ஏறத்தாழ முப்பது வயதுகளை அவர்கள் எட்டியி ருந்த சமயம் முதன் முதலாக அவர்களின் பார்வை அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களை வீதியில் சந்தித்தது.

> ''உமையா பின் கலஃபின் அடிமையாக நான் வாழ் நாட்களைக் கழித்துக் கொண்டிருந்த காலம். என் உடல் அவனுக்கு அடிமைப்பட்டிருந்த தேயன்றி ஒருநாளும் என் உள்ளம் அவனை ஒரு தலைவனாக ஏற்றதே இல்லை. அக்காலத்தில் தான் ஒரு நாள் வீதியில் சென்று கொண்டிருந்த அவ்வள்ள லரசரவர்களைக்காண நான் பேறு பெற்றேன். பூரண மதியையும் பழித்திடும் வெண்மை நிறம், வில்போல் வளைந்த மெல்லிய புருவங்கள், அலையலையாக நெளிந்து காதுகளின் சுனைகள் வரை வளர்ந்து விளை யாடிய முடிகள், கூர்ந்த கண்கள், ஆழ்ந்த பார்வை, புன்முறுவல் படர்ந்த முகம்—என் முதற்பார்வையே அவர்களை விட்டும் விலக மறுத்தது. தலைமைக்கு

பொருளடக்கம்

மிகத் தகுதியானவர்களேயன்றோ இவர்கள் என நான்
அன்றைக்கே முடிவு கொண்டேன்—

என பிற்காலத்தில் ஹலரத் பிலால் (ரலி) அவர்களே விவரித்தார்கள்.

ஜுமஹ் கூட்டத்தார்களுக்குச் சொந்தமான பகுதியிலேயே ஹலரத் அபூபக்கர் (ரலி) அவர்கள் தங்களுக்கென ஒரு வீட்டைக் கட்டி குடியிருந்து வந்தார்கள். அவர்களோடு தோழமை கொண்டிருந்த அண்ணலார் (ஸல்) அவர்கள் ஹலரத் அபூபக்கர் (ரலி) அவர்களைச் சந்திக்க அன்றாடம் வீடுதேடி வருவதுண்டு. அவ்வாறு வந்த ஒரு சந்தர்ப்பத்திலேயே அண்ணலார் (ஸல்) அவர்களைக் காண ஹலரத் பிலால் (ரலி) அவர்களுக்கு வாய்ப்பு கிடைத்தது. சிறந்த வணிகராகவும், பழக்கத்தில் சிறந்தவராகவும் விளங்கிய ஹலரத் அபூபக்கர் (ரலி) அவர்களை அறியாதவர்களாக அரபிகளில் எந்தக் கோத்திரத்தைச் சார்ந்தவர்களோ அவர்களின் அடிமைகளோ இருக்கவே இல்லை. அவ்வாறே அறிந்திருந்த பிலால் (ரலி) அவர்களும் தாம் கண்ட திருத் தோற்றத்திற்குரிய — எதிர்கால தம் அவ்வேந்தலார்— (ஸல்) அவர்கள் அபூபக்கர் (ரலி) அவர்களோடு உரையாடிப் பிரிவது கண்டு, அபூபக்கர் (ரலி) அவர்களிடமே அவர்களைப் பற்றிய சிறப்புகளனைத்தையும் வியப்புடன் கேட்டறிந்திருந்தார்கள்.

இஸ்லாம் பிறந்தது. வணக்கத்திற்குரியவன் அல்லாஹ் ஒருவனே என்ற வேதக்குரல் குரைஷிகளின் பொறிகளைத் தாக்கியது. அதனை ஒலித்தபெருமான் முஹம்மது (ஸல்) அவர்களைச் சந்தித்த குரைஷிகளின் விழிகள் சிவந்தன. பற்கள் நறநறத்தன. என்றாலும் ஹலரத் அபூபக்கர் (ரலி) அவர்களின் தகைமையும், அவர்களோடு அண்ணலார் (ஸல்) அவர்கள் கொண்டிருந்த தோழமையும்

பொருளடக்கம்

அனைவரையும் தடுத்தன. அச்சமயம் வணிக நிமித்தம் வெளியூர் சென்றிருந்த ஹலரத் அபூபக்கர் (ரலி) அவர்கள் வரட்டும் என அவர்கள் தாமதித்தனர். எனினும் அவர்களுக்கிடையே நடந்த அண்ணலார் (ஸல்) அவர்களைப் பற்றிய விமர்சனங்கள் உமையாஇப்னு கலஃபின் இல்லத்திலிருந்த ஹலரத் பிலால் (ரலி) அவர்களையும் எட்டத்தான் செய்தன.

அண்ணலார் (ஸல்) அவர்களறிவித்த புதிய மார்க்கத்தை ஆரம்பத்திலேயே கடுமையாக எதிர்த்தவன் உமையாவே. வீட்டில் தன்னோடு உரையாட வருபவர்களிடம் அவன் புரிந்த வாதங்களும் பெருமான் முஹம்மது (ஸல்) அவர்களைப் பற்றிய விமர்சனங்களும் பிலால் (ரலி) அவர்களை வியப்பிலாழ்த்தின. பெருமானார் (ஸல்) அவர்களின் மேதையை முன்னரே அபூபக்கர் (ரலி) அவர்கள் மூலம் விளங்கியிருந்த பிலால் (ரலி) அவர்கள் இப்போது அண்ணலார் (ஸல்) அவர்கள் விளக்கி வைக்கும் வணக்க முறைகளை உமையாஇப்னு கலஃபின் விமர்சனங்களிலிருந்து புரிந்து அதன் விவேகத்தை எண்ணி வியக்கலானார்கள். அண்ணலார் (ஸல்) அவர்களின் சீரிய கொள்கையை ஏற்கப் பின்னடைய ஒரே காரணம் உமையாஇப்னு கலஃப் கொண்ட மனப் புழுக்கமேயன்றி வேறல்ல என்பதை ஹலரத் பிலால் (ரலி) அவர்கள் விளங்கத் தாமதமாகவில்லை. வாணிபத்திலிருந்து ஊர் திரும்பிய ஹலரத் அபூபக்கர் (ரலி) அல்அமீன் (ஸல்) அவர்களின் கரம் பிடித்தேற்ற மார்க்கத்தைப் பற்றி அவர்கள் வாயிலாகவே கேட்டறிந்த ஹலரத் பிலால் (ரலி) அவர்கள் நொடிப்பொழுதும் தாமதியாது தாங்களும் அதனை ஏற்றதோடு மட்டுமல்ல, அதனை மறைக்கவுமல்லாது பகிரங்கப்படுத்தியும் விட்டார்கள்.

பொருளடக்கம்

ஓர் அடிமையின் துணிவு உமையாவின் உடலையே அதிரவைத்தது. ஆனால் தம் உடலின் மீதேயன்றி உள்ளத்தின் மீது எவருக்கும் அதிகாரம் இல்லை எனத் துணிந்தனர் பிலால் (ரலி). தன் எச்சரிக்கைகள், கண்டனங்கள் உதாசீனப்படுத்தப்படக் கண்டு உமையா வெகுண்டெழுந்தான். கொடுமைகளைக் கட்டவிழ்த்து விட்டான். சுடும் மணலில் வெறும் மேனியராய் அவர்களைக் கிடத்தி அவர்களின் நெஞ்சத்தின் மீது பாறாங்கற்களை சுமத்தி வைத்து, 'உன் கடவுள் லாத், உஸ்ஸா' எனச் சொல், சொல்' என அவன் வருத்திய நேரமெல்லாம் ஹலரத் பிலால் (ரலி) அவர்களின் வாய் 'அஹதுன், அஹதுன்-என் இறைவன் (அல்லாஹ்) ஒருவனே, ஒருவனே' என ஒலித்த வண்ணமாயிருந்தது. மாலையானதும் அவர்களின் கழுத்தில் ஒரு கயிற்றைக் கட்டி, சிறுவர்களிடம் விளையாட்டுப் பொருளாகவே அவர்களை ஒப்புவித்து வீதிகளெங்கும் இழுத்துவரச் செய்தான் உமையா. இரவானதும் அவர்களைச் சங்கிலிகளால் பிணைத்து சவுக்காலடிப்பான். விடிந்ததும் உருக்குச் சட்டையை அவர்களுக்கணிவித்து கொதிக்கும் வெய்யிலில் தகிக்கும் பாலையில் அவர்களை நிறுத்திவைப்பான். அன்றாட வாலாயமாக இவைகள் நடந்து வந்தபோது 'வரககாபின் நவ்ஃபல்' என்ற ஞானியும் அக்காட்சியைக் கண்டுள்ள விபரத்தை தம் தந்தையார் கூறக்கேட்டு ஹிஷாம் பின் உர்வா என்ற பெரியார் அறிவித்துள்ளனர். உமையாவின் பலவந்தத்துக்குப் பணிய மறுத்து 'அஹதுன் அஹதுன்' என பிலால் (ரலி) அவர்கள் குரலெழுப்பக்கண்ட வரக்கா பின் நவ்ஃபல், 'நீ அவரைக் கொன்றேவிட்டாலும் சரியே தம் 'ஒருவனை' அவர் மறக்கப்போவதில்லை. உமையா! உன் கொடுமை தாளாது அவர் மரணித்துவிடுவாராகில் அவரின் அடக்கவிடத்தில் நான் ஒரு தரிசனக் கூடத்தையே எழுப்பி விடுவேன்' என எச்சரித்துப் பிரிந்தார்.

பொருளடக்கம்

இவ்வாறாக நல்லோர் பொல்லோர் எத்தனையோ பேர்கள் அக்காட்சியைக் கண்டனர். எள்ளி நகையாடினோர், கெக்கலி கொட்டிச் சிரித்தோர் மட்டுமின்றி 'பிலாலே! ஏன் இந்தப் பிடிவாதம் உமக்கு. இதனால் என்ன பலன் கண்டீர், எனப் பரிந்து கொண்டவர்களுமுண்டு. எதற்குமே மசியவில்லை அம்மாவீரர். ''கேவலம் இரண்டே காசுகளுக்கு வாங்கும் பொருளை இருநூறு முறை தட்டிப் பரிசோதிக்கும் நீங்கள் வெகு எளிதாகவே என் இறைவனின் அருளை எதிர்பார்க்கின்றீர்களோ'' என அவர்களிடம் வினவி வியந்தார்களேயன்றி எவருடைய அனுதாபத்தையும் கூட அவர்கள் எதிர்பார்க்கவில்லை. ''அஹதுன்–அஹதுன்' என தம் தாரக மந்திரம் கொண்டு அவர்கள் தட்டிக் கொண்டிருந்த கதவு திறக்கப் படும் காலம் கனிந்தபோது ஒருநாள்......!

**கா**ரிருள் நகரைக் கவிந்திருந்தது. அண்ணலார் (ஸல்) அவர்களைச் சந்தித்துப் பிரிந்து தங்கள் இல்லம் திரும்பிக் கொண்டிருந்த ஹலரத் அபூபக்கர் (ரலி) அவர்கள் உமையாவின் இல்லத்தை கடக்கையில் கேட்ட ஒலி அவர்களைத் திடுக்கிட்டு நிற்கவைத்தது. 'சுளீர் —சுளீர்' எனக் கேட்ட பல சவுக்கடி ஓசைகளினூடேயும் மிகத் துல்லியமாக கேட்டது 'அஹதுன்–அஹதுன்' என்ற முனகல் குரல். அருகில் விசாரித்தபோது உமையா தன் அடிமையை வதைத்துக் கொண்டிருந்த கொடுமையே அது என அவர்கள் தெரிந்து கொண்டார்கள். ஆம்! அவர்களின் கரம் பிடித்து இஸ்லாத்தை ஏற்ற பிலால் (ரலி) அவர்களின் குரலேயல்லவா அது!

இல்லம் சேர்ந்த ஹலரத் அபூபக்கர் (ரலி) அவர்கள் இரவெல்லாம் உறக்கமின்றி உழன்றார்கள். கொடுமைச்



பொருளடக்கம்

சுவாலைகளினூடே கமழ்ந்து கொண்டிருந்த கஸ்தூரியின் மணம் ஒருபுறம் அவர்களின் மனதை மகிழச் செய்தாலும் அஹதுன்-அஹதுன் என ஒலித்த பிலாலின் இதயக்குரல் ஹலரத் அபூபக்கர் (ரலி) அவர்களின் நெஞ்சத்தை நெகிழச் செய்தது. விடிந்ததுமே அவர்கள் உமையாவை சந்தித்து உரையாடச் சென்றார்கள்.

"உமையா! உனக்கென்ன நேர்ந்தது. வணக்கத்திற்குரிய ஒருவனாக அல்லாஹ்வை ஏற்றுக் கொண்டதற்காகவேவா நீ பிலாலை வதைக்கிறாய்? மறுமை நாளன்று இதற்காக பதில் கூறவேண்டியது பற்றி நீ அஞ்சவில்லையா? - என ஹலரத் அபூபக்கர் (ரலி) அவர்கள் வினயமாகவே விடுத்த வினாக்களும் உமையாவின் சினத்தைச் சீண்டவே செய்தன. குரைஷிகளிடையே ஹலரத் அபூபக்கர் (ரலி) அவர்களின் மரியாதை அப்போது மாறிவிட்டிருந்தது. அவர்களின் அறிவுரையைப் புறக்கணித்து எகத்தாளத்தோடு உமையா கேட்டான், 'எங்கே இருக்கிறது அபாபக்கரே மறுமை? அது இருந்தாலும் எனககென்ன கவலை? அதனை எதிர்பார்த்திருக்க என்ன குறை இருக்கிறது என்னிடம்? உம் தோழர் கூறும் சுவனம் ரொக்கமாகவே என் கிடங்குகளில் கிடக்கிறது. அப்படியிருக்க, நீரேயல்லவா என் அடிமையைக் கெடுத்தீர்? இப்போது பரிந்து பேசி வருகின்றீரோ? உமக்கு அக்கறையிருந்தால் நீரே அவ்வடிமையை விலைகொடுத்து ஏற்றுக் கொள்ளுமே" எனச் சீறினானவன்.

'மிக்க சரியே. என்னிடத்தில் அவரைவிட திடகாத்திரமான—உன் வழியையே சார்ந்த ஓர் அடிமை இருக்கிறான். அவனை நீ ஏற்றுக்கொண்டு பிலாலை எனக்குத் தந்துவிடு'' என ஹலரத் அபூபக்கர் (ரலி) அவர்கள் கேட்டார்கள்.

பொருளடக்கம்

“அதுபோதாது. மேற்கொண்டும் நீர் இருநூறு பொற்காசுகள் தந்தாலே நான் ஏற்பேன்” என்றான் உமையா. ஹலரத் அபூபக்கர் (ரலி) அவர்கள் ஒருகணமும் தாமதிக்கவில்லை. தங்கள் இல்லம் சென்று இருநூறு பொற்காசுகளோடு தம்முடைய — முஸ்லிமாகாத — ஓர் அடிமையையும் அழைத்து வந்து உமையாவிடம் ஒப் படைத்தார்கள்.

‘கும் யா ஸையிதீ— எழுவீர் — புறப்படுவீர் —என் தலைவரே!’ என்ற குரல் கேட்டுத் திகைத்து நிமிர்ந்தனர் ஹலரத் பிலால் (ரலி). சோர்ந்து, கண்ணயர்ந்து, இருட்டறையில் சாய்ந்து கிடக்கும் தம்மைத் தொட்டுத் தூக்குவது யார்?

அபூ குஹாஃபாவின் திருமகனார் அபூபக்கர் (ரலி)!

குரைஷி குலத்தின் ஒரு செல்வாக்கு மிகுந்த குடும்பத் தோன்றலா தம்மை ‘யா ஸையிதீ என்றழைத்தது! தாயின் கோளறையிலிருந்து பூமியில் இறங்கிய நாள்முதல் அடிமை நிலையிலேயே உழன்று வந்த தம்மை விலை கொடுத்து வாங்கவும் திறன் படைத்த செல்வச் சீமானா ‘என் தலைவரே’ என விளித்தது!! ஹலரத் பிலால் (ரலி) அவர்களின் விழிகள் விரிந்தன. ஆம்! விலை கொடுத்து வாங்கியதோடு மட்டுமல்ல, பிறப்பிலேயே பிலால் (ரலி) பூட்டிக்கொண்டு வந்த அடிமைத் தளையை உடைத்து ஹலரத் அபூபக்கர் (ரலி) அவர்கள் செய்த சுதந்திரப் பிரகடனம் அது.

இனி ஹலரத் பிலால் (ரலி) எவருக்கும் அடிமை யல்லர்; ஸையிதினா அபூபக்கர் (ரலி) அவர்களின் தோழர்! தோழரை அணைத்தவண்ணம் வெளிவந்த ஹலரத் அபூபக்கர் (ரலி) அவர்களின் செயல்கண்டு உமையா இப்னு கலஃபின் விழிகளும் விரிந்தன. அடிமேல்

அடித்த அடிகளால், தன் வதைகளால் உழன்று போயிருந்த பிலாலில் உடல் இனி எதற்கோ உதவும் என உமையா நினைத்தான். புதை குழியின் பசி தீர்ப்பதற்கேயன்றி அது இனி எதற்கும் உதவாது என்றெண்ணிய உமையாவை பிரமிக்கச் செய்தன பிலாலுக்கு ஹலரத் அபூபக்கர் (ரலி) அவர்கள் செய்த உபசாரங்கள். அவர்களின் முந்தைய தகைமையை நினைவு கூர்ந்த உமையா பேசினான், ''என்னே அபாபக்கரே உம் பேதைமை! வெறும் வெள்ளிக் காசுகள் இருநூறே நீர் தந்திருந்தாலும் நான் ஏற்றிருக்கக் கூடிய அடிமையின் விஷயத்தில் நீர் பெரிதுமே ஏமாந்து போனீர்'' என்று. ஹலரத் அபூபக்கர் (ரலி) அவர் களுக்கோ எள்ளளவும் ஏமாற்ற உணர்வில்லை. ''உமையா! இருநூறு பொற்காசுகளல்ல,பிலாலுக்குப் பகர மாக நீ என்னையே கேட்டிருந்தாலும் நான் இணங்கியே இருப்பேன்'' என்ற அவர்களின் கூற்றைச் செவியுற்று பிலால் (ரலி) அவர்களின் கண்கள் ஊற்றுகளாயின.

மயங்கிய நிலையியேயே ஹலரத் அபூ பக்கர் (ரலி) அவர்களின் இல்லம் வந்தடைந்த பிலால் (ரலி) அவர்கள் ஐந்து நாட்கள் வரை அங்கேயே உணர்வற்ற நிலையில் தங்கிக் கிடந்தனர். வழமை போல் அபூபக்கர் (ரலி) அவர்களைச் சந்திக்க வந்த பெருமானார் (ஸல்) அவர் களும் பிலால் (ரலி) அவர்களைக் கண்டார்கள். அன்று வரை பிலால் (ரலி) அவர்கள் ஏற்று வந்த துன்பங்கள் அண்ணலார் (ஸல்) அவர்களுக்குத் தெரியாததல்ல. அதே போன்று மிக்தாத், அம்மார், கப்பாப் (ரலி)போன்ற தோழர்களும் வதைக்கப்பட்டு வந்தனர் குறைஷி எஜமா னர்களால். அவர்களில் ஒவ்வொருவரின் விடிவுகாலத்துக் கும் இறைவனின் நாட்டத்தையே எதிர் நோக்கிக் காத்தி ருக்க வேண்டியவர்களாயிருந்தனர் நபிகளார். அன்று பிலால் (ரலி) அவர்களைக் கண்ட அண்ணலார் (ஸல்)

பொருளடக்கம்

அவர்களின் கண்கள் அழுதன—அன்பின் மிகுதியால். ஹலரத் பிலால் (ரலி) அவர்களின் உடல் ஏற்றிருந்த கொடுமைகள், பஞ்சாய்ப் பறந்து அவ்வுடலைப் போர்த்துக் கிடந்த கிழிந்த ஆடைகள், பீறிட்டு அவ்வாடைகளை நனைத்துக் காய்ந்திருந்த இரத்த ஓடைகள் அனைத்தும் கூடி பெருமானார் (ஸல்) அவர்களின் உள்ளத்தை உலுக்கின. ஒவ்வொரு நாளும் அவ்வன்பரின் நலன் நாடி வழுத்தினார்கள் அண்ணலார் (ஸல்).

ஹலரத் அபூ பக்கர் (ரலி) அவர்களின் மருத்துவம், உபசாரம், உணவு அனைத்தும் கூடி பிலால் (ரலி) அவர்களுக்கு ஊட்டம் சேர்த்தன. ஆறாவது நாள் ஹலரத் அபூபக்கர் (ரலி) அவர்களோடேயே அண்ணலார் (ஸல்) அவர்களைச் சந்திக்க வந்தனர் பிலால் (ரலி). அண்ணலெம் பெருமானார் (ஸல்) அவர்கள் எழுந்து சென்று தம் நெஞ்சோடணைத்துக் கொண்டார்கள் அத்தோழரை. பிலால் (ரலி) அவர்களின் உடல் சிலிர்த்தது. வாழ்க்கையில் முதல் அனுபவம் அது அவர்களுக்கு!

ஒதுக்கி நிறுத்தப்பட்டு, இழிந்த பார்வைகளையே சந்தித்துப் பழக்கப்பட்டிருந்த ஓர் அடிமை......அன்று வரை எந்த ஒரு குரைஷியிடமும் ஏறிட்டு நோக்கிப் பேசவும் உரிமையற்றிருந்த நிலை மாறி, மனிதகுல மாண்பாளரின் மார்பின் அணைப்பைச் சுகிக்க நாணி நெளிந்தனர். ஆனால் அண்ணலார் (ஸல்) அவர்கள் விடவில்லை. அன்போடணைத்து அம்மாநபிகளார் தம் அருகிலேயே அவர்களை வருத்தி அமர்த்திக் கொண்டதை, ‘பெற்ற தாயின் அணைப்பைப் பிரிந்து முப்பதாண்டுகளுக்குப் பின் தாம் பெற்ற முதல் அனுபவம், என ஹலரத் பிலால் (ரலி) அவர்களே பிற்காலத்தில் நினைவு கூர்ந்தனர்.

“அபாபக்கரே! பிலாலுக்காக நீர் தந்த தொகையில் சரிபாதியை நான் உமக்குத் தந்து விடுகிறேன்” என பெருமானார் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

“என் தந்தையும் தாயும் தங்களுக்கு அர்ப்பணம். ஏந்தலே! அந்தச் சிரமம் தங்களுக்கு ஏற்படாதிருக்கவே நான் பிலாலுக்கு அக்கணமே உரிமை வழங்கிவிட்டேன்” என்றனர் ஹலரத் அபூபக்கர் (ரலி).

“அப்படியானால் மிக்க மகிழ்ச்சி. இனி பிலால் நம் ஊழியத்திலேயே இருக்கட்டும் என அண்ணலார் (ஸல்) அவர்கள் ஹலரத் பிலால் (ரலி) அவர்களை தம்மிடமே அமர்த்திக் கொண்டார்கள்.

இனி உதவாக்கரை என நினைத்து ஹலரத் பிலால் (ரலி) அவர்களை உமையா இப்னு கலஃப் செய்த உதாசீனத்தால் விளையப்போகும் விபரீதங்களைப் பற்றி குரைஷித் தலைவர்கள் பயங்கரமாகச் சிந்திக்கலாயினர். அதற்கு முன்னரும் அடிமையாகவே தம்மை அண்டியிருந்த ஜைதிப்னு ஹாரிஸைக் கரம்பிடித்து கஅபாவின் முன் உயர்த்தி தம் மகனாகவே பிரகடனித்த பெருஞ் சன்னிதானத்திலல்லவா பிலால் (ரலி) தஞ்சம் பெற்றுவிட்டது! மந்தைகளாய்த் தங்கள் பின்னே அலைந்தவர்களின் சிந்தைகளைத் தெளியச்செய்து, தங்களின் பாரம்பரிய செல்வாக்குகள் அனைத்தையும் நிச்சயம் செல்லாக்காசுகளாக ஆகிவிடுவார் அல்அமீன் முஹம்மத் (ஸல்) என வியர்த்த குரைஷிகள் அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களை எப்படியும் வசப்படுத்திவிட வேண்டும் என பல முயற்சிகளை மேற்கொண்டனர். பணத்தாலும், பதவித் தலைமையாலும் பெருமான் நபி (ஸல) அவர்களை விலைபேசிட அவர்கள் மேற்கொண்ட முயற்சிகள் பலனற்றுப்போன நிலையில் கொடுமைகளாலும் அவர்

பொருளடக்கம்

களை வதைக்கத் துவங்கிய குரைஷிகளின் முன்னே பிலால் (ரலி) அவர்கள் எம்மாத்திரம்? ஹலரத் பிலால் (ரலி) பெற்ற ஏற்றம் கண்டு சீற்றம் கொண்ட உமையா அதற்குக் காரணமான ஹலரத் அபூபக்கர் (ரலி) அவர் களுக்கிழைத்த சங்கடங்களும் அனந்தம். அவன் சார்ந் திருந்த ஜுமஹ் கோத்திரத்தவர்களின் குடியிருப்பு களிடையிலேயே ஹலரத் அபூபக்கர் (ரலி) அவர்களின் குடிலமைந்திருந்ததும் அவனுக்கோர் அனுகூலம். பொது வாக மக்க நகரவாழ்வு படுநரக வாழ்வாகச் சூழ்ந்த கோலத்திலும் ஹலரத் பிலால் (ரலி) அவர்களின் இதயத் தில் அண்ணலார் (ஸல்) அவர்கள் ஏற்றிவைத்த ஏகத் துவச் சுவாலை எவ்வித சலனமுமின்றி ஒளிபரப்பிய வண்ணமிருந்தது.

மக்காவிலிருந்த வரை ஹலரத் பிலால் ர(லி) அவர் களின் உணவு உறைவிடம் முதலான தேவைகளை ஹலரத் அபூபக்கர் (ரலி) அவர்களே கவனித்துக் கொண்டார்கள். பழக்க தோஷத்தால் ஹலரத் பிலால் (ரலி) அவர்களின் இயல்பிலேயே படிந்திருந்த தயக்கத்தையும் தடுமாற்றத் தையும் கூட ஹலரத் அபூ பக்கர் (ரலி)] அவர்கள் தம் கனிவாலும் கண்டிப்பாலும் விலகச் செய்தார்கள்.

விடிந்தெழுந்ததும் அண்ணலார் (ஸல்) அவர்களின் இல்லம் நாடி ஹலரத் பிலால் (ரலி) வந்திடுவார்கள். வீட்டின் வேலைகளைக் கவனிப்பார்கள். கடைத்தெரு சென்று தேவைகளைக் கொணர்ந்து சேர்ப்பார்கள்; மாவரைப்பார்கள்; நீர் நிரப்புவார்கள்; கதீஜா நாயகியா ருக்குதவியாக அவர்களின் மக்களை கவனித்துக் கொள் வார்கள். எஞ்சிய சமயங்களை பெருமானார் (ஸல்) அவர்களின் அருகிலேயே கழிப்பார்கள்; அவர்களின் போதங்களைக் கற்பார்கள். அன்னை கதீஜா—அபூதாலிப் ஆகிய இருவரின் இறப்புகளையடுத்து அண்ணலார் (ஸல்)

பொருளடக்கம்

அவர்கள் ஏற்க நேர்ந்த துன்பங்கள் துயரங்களனைத்திலும் ஹலரத் பிலால் (ரலி) அவர்களும் உடனிருந்தே பங்கேற்றார்கள். துன்பமும் துயரமும் நிறைந்த அச்சோதனை வாழ்வுக்கு விடைகூறி 'ஹிஜ்ரத்' நடைபெறத் துவங்கியது. ஹலரத் முஸ்அப் இப்னு உமைர், இப்னு உம்மு மக்தூம் (ரலி) ஆகியோரையடுத்து இரண்டாம் குழுவினராகப் புறப்பட்ட ஹலரத் ஸஅது இப்னு அபீ வக்காஸ், அம்மார் இப்னு யாஸிர் (ரலி) போன்றோருடன் இணைந்து ஹலரத் பிலால் (ரலி) அவர்களும் மக்காவைத் துறந்து சென்று யத்ரிபை அடைந்தனர். அங்கு ஹலரத் ஸஅது இப்னு கஸீமா (ரலி) என்ற அன்ஸாரியின் விருந்தினராகத் தங்கியிருந்த அவர்கள் அண்ணலார் (ஸல்) அவர்களும் யத்ரிப் வந்தடைந்த பின்னர் ஏற்பட்ட சகோதரப் பிணைப்பில் ஹலரத் அபீருவைஹா (ரலி) என்ற அன்ஸாரித் தோழரோடு பிணைக்கப் பெற்றார்கள்.

முஹாஜிரீன்களை மகிழச் செய்த அன்ஸார்களின் மனநிலை போன்றே மதீனாவின் வெப்பநிலையும் இருக்கவில்லை. வேனலின் கொடுமை மக்காவைத் துறந்து வந்திருந்த முஹாஜிர்களைப் பெரிதும் வருத்தியது. அதன் கடுமையால் அதிகம் பாதிக்கப்பட்ட மூவருள் ஹலரத் பிலால் (ரலி) அவர்களும் ஒருவரே. மற்ற இருவர் ஹலரத் அபூ பக்கர், ஆமிர் இப்னு புஹைறா (ரலி) ஆகியோராவர். அம்மூவரும் தங்களின் உணர்வுகள் மாறிப் புலம்பிய நிலை கண்டு அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களின் உள்ளமும் கலங்கியது. எனினும் அண்ணலார் (ஸல்) அவர்களின் அருள்வேட்டுதலின் பலனாக வெகு விரைவாகவே அம்மூவரும் நலம் பெற்றெழுந்தனர்.

அமைதியான வாழ்க்கைக்கு அரணமைத்தது மதீனா. புதிய நபியின் வரவைப் பற்றிய செய்தியறிந்தவர்கள்— அந்நபியின் வரவை எதிர்நோக்கியே பன்னெடுங்காலமாகச்

பொருளடக்கம்

சுற்றுச் சூழலில் காத்திருந்தவர்களெல்லாம் கூட்டங் கூட்டமாக வந்து பெருமான் நபி (ஸல்) அவர்களைச் சந்திக்கலாயினர். அவர்களின் ஆசி பெற்று அருள் வழியேற்றுத் திரும்பியவர்கள் சிலர். அவர்களின் தாளடி பற்றியே அற நெறி கற்கத் தங்கி விட்டவர்களும் பலர். அத்தகையோர்க்கெல்லாம் அண்ணலார் (ஸல்) அவர்கள் உறைவிடங்கள் அமைத்தளித்து உறவு கூட்டினார்கள். பெருமானார் (ஸல்) அவர்களுக்குப் பணிகள் பெருகின. ஹலரத் பிலால் (ரலி) அவர்களுக்கும் பொறுப்புகள் மிகுந்தன. குடும்பப் பணிகளை கவனிப்பதோடு, விருந்தினர்களை உபசரித்தல், அன்பளிப்புகளைப் பெற்றுப் பாதுகாத்தல், அவற்றை அண்ணலார் (ஸல்) அவர்கள் ஏவுகிறபடி அப்போதைக்கப்போது அவசியப்பட்டவர்களுக்குப் பங்கீடு செய்தல் போன்ற பொறுப்புகளெல்லாம் ஹலரத் பிலால் (ரலி) அவர்களுடையதாவே விளங்கின.

அநாதையாக வளர்ந்த ஒருவரால்—அண்ணல் முஹம்மது (ஸல்) அவர்களால்—அடிமைகளாய் வதைந்தவர்களெல்லாம் பெற்ற உரிமை வாழ்வை—பெருமைப் பேற்றைச் சகிக்கமுடியவில்லை குரைஷிகளால். குமைந்த உள்ளங்கள் கூடி குமுறி எழுந்தன மதீனாவை நோக்கி. படை நடத்தி பத்ரில் களம் அமைத்த குரைஷி முன்னணித் தலைவர்களில் ஒருவனாகவே உமையா இப்னு கலஃபும் வந்திருந்தான்—ஹலரத் பிலால் (ரலி) அவர்களின் பழைய எசமானன். வன்மந் தலைக்கேறி வந்த அவர்களில் எவருமே தங்களின் விதி எவ்விதம் முடியப்போகிறதென்பதை உணர்ந்திருக்கவே இல்லை. அதிலும் உமையா இப்னு கலஃபுக்கு நல்லதொரு பாதுகாப்பு நம்பிக்கை மதீனாவில் இருந்தது. ஆனால் ஹலரத் பிலால் (ரலி) அவர்களுக்கு அவன் இழைத்த கொடுமைக்கான பழி எந்த நம்பிக்கையும் அவனுக்கு உதவ முடியாமல் ஆக்கிவிட்டது.

பத்ருப் போரன்று அவன் பழி தீர்க்கப்பட்ட சம்பவத்தை ஹலரத் அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப் (ரலி) அவர்கள் விவரித்திருக்கிறார்கள்:

''அறியாமைக் காலத்தில் உமையா இப்னு கலஃப் என் நண்பனாக இருந்தான், நான் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்ட பின் அண்ணலார் (ஸல்) அவர்கள் எனக்கு அப்துர் ரஹ்மான் எனப் பெயரிட்டார்கள். உமையாவோ என்னை என் முந்தைய பெயரால் 'அப்து அம்ர்' என்றே அழைத்து வந்தான். அதனை ஒப்பாத நான் அவ்வாறு என்னை அழைக்க வேண்டாம் எனக் கூறினேன். பின்னர் அவன் அப்து இலாஹ் என்றழைக்கவே நான் சம்மதித்துக் கொண்டேன். எங்களிடையே அதுவே பழக்கமாக இருந்தது. (ஹலரத் அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப் (ரலி) ஹிஜ்ரத்து செய்த பின் அவர்கள் மதீனாவில் துவங்கிய வாணிபம் வளம்பெற்றோங்கியது. ஹலரத் உதுமான் (ரலி) அவர்களையடுத்த மிகப்பெருஞ் சீமானாக மதீனா வில் அவர்களே விளங்கினார்கள். அவர்கள் மக்கா செல்ல நேரும்போது அவர்களின் பாதுகாப்பை உமையா இப்னு கலஃப் ஏற்பதென்றும், உமையா மதீனா வரும்போது ஹலரத் அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப் (ரலி) அவர்கள் தம் பாதுகாப்பில் அவனை ஏற்பதென்றும் அவர்களிடையே உடன்பாடு இருந்து வந்தது) பத்ருப் போரன்று நான் எதிரிகளில் எத்தனை பேரைக் கொன்றேனோ அவர்களின் கவசங்களையெல்லாம் கழற்றிக் கொண்டிருந்தேன். ஒன்று சேர்ந்த அவைகளை ஓரிடத்தில் பாதுகாப்பதற்காகச் சுமந்து சென்று கொண்டிருந்தேன். வழியில் உமையாவைக் கண்டேன். அவன் தன் மகன் அலீயையும் கையில் பிடித்துக் கொணடிருந்தான். என்னைக் கண்ட அவன் 'அப்து இலாஹ்! உம்மிடம் உடன்பாடு கொண்டுள்ள என் உயிர் நீர் சுமந்து செல்லும்

பொருளடக்கம்

கவசங்களையும்விட மதிப்புடையதல்லவா!' என வின வினான். உடனே நான் அக்கவசங்களை எறிந்துவிட்டு ஒரு கையால் அவனையும் மறு கையால் அவன் மகனையும் பிடித்துக் கொண்டேன். உமையா உரையாடலானான். 'இத்தகைய ஒருநாளை என் வாழ்நாளில் நான் கண்ட தில்லை. அப்து இலாஹ்! இன்று குரைஷிகள் அழிந்தே போனார்கள். என் இதயமும் வரண்டே போனது. உம்மி டம் சிறிதாவது பால் இல்லையா?'' என அவன் தவிக்க நான் அத்தந்தைக்கும் தனயனுக்குமிடையே நடந்து கொண்டிருந்தேன். 'தீக்கோழியின் அடையாளத்தைத் தம் நெஞ்சத்தில் அணிந்திருந்த முஸ்லிம் வீரர் யார்?' என உமையா மீண்டும் வினவினான். 'ஹம்ஸா இப்னு அப்துல் முத்தலிப்' என்றேன் நான். 'அம்மம்ம! அவரே இன்று எங்களின் முதுகெலும்புகளை முறித்தவர். குரைஷி களின் கொட்டம் அழிந்தது' என அவன் புலம்பிக்கொண் டிருந்தபோதே பிலாலின் பார்வையில் அவன் பட்டுவிட் டான். ''அடே நிராகரிப்போர்களின் நிழற்குடையே! நான் அழிந்தபின் அல்லவோ நீ உயிர் தப்பமுடியும்' என அவனை இகழ்ந்த பிலால், 'ஓ முஸ்லிம்களே! இறை வனின் உதவியாளர்களே! இதோ இணைவைப்பவர்களின் தலைவன் உமையா. அவன் தப்புவதானால் நான் அழிந் திடவேண்டும்' எனக் கூச்சலிடலானார். அக்கூச்சல் கேட்டு அன்ஸார்களின் பெருங்கூட்டம் எங்களைச் சூழ்ந்து கொண்டது. எவருடைய தாக்குதலோ பட்டு உமையாவின் மகன் விழுந்தான். அதனைக் கண்டு உமையா அலறினான். அவ்வலறலாலேயே மற்றவர் களின் கவனம் அவன்புறம் திரும்பியது. உமையா பரும னான உடலுடையவன். முடிந்தால் ஓடிவிடும்படி அவனி டம் கூறினேன். பயத்தினால் வெளிறிப்போன அவன், 'அப்து இலாஹ்! நம் உடன்பாட்டை நிறைவுபடுத்து' என்றான். அவனை அமர்ந்து கொள்ளக்கூறி அவனுக்குப்

பொருளடக்கம்

பாதுகாப்பாக அவன்மீது நான் குனிந்து மறைத்துக் கொண்டேன். வீரர்களின் செவிகளிலோ என் கூச்சல் கேட்கவில்லை. எனக்குத் தாழாகவே அவர்களின் வாட்கள் பாய்ந்தன. உமையா கொலையுண்டது மட்டுமன்றி என் காலிலும் காயம் பட்டது' என அறிவிக்கும் ஹலரத் அப்துர் ரஹ்மான் (ரலி) தங்கள் காலின் பின்புறம்இருந்த வடுவைப் பார்க்கும் போதெல்லாம் "அல்லாஹ் பிலாலின் மீது அருள் புரியட்டும். எனக்குக் கிடைத்த போர்க் கவசங்களும் பறிபோயின. அவரோ என் கைதிகளையு மல்லவா பறித்துக் கொண்டார்" எனக் குறிப்பிடுவார்கள். ஹலரத் அபூபக்கர் (ரலி) அவர்களோ 'பிலாலே! உமக்குச் சோபனம், உம் கரத்தாலேயே உம் வைரியைப் பழிதீர்க்கப் பேறுபெற்ற நீர் இறைவனின் பேரருள் பெற்றவரே ஆவீர்' என வாழ்த்தினார்கள்.

பெருமான் நபி (ஸல்) அவர்களின் ஒரு நூறாயிரம் தோழர்களில் ஹலரத் பிலால் (ரலி) அவர்களுக்கு ஒரு தனிச்சிறப்பிருந்தது. பத்ருடையபோர்க்களத்தில் அவர் தம் அறை கூவல் அரசாணையைப் போல் நின்றியக்கியது அன்ஸார்களை. செல்வச் சீமானாக விளங்கிய ஹலரத் அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப் (ரலி) அவர்களின் அடைக்கலத்திலும் உமையா இப்னு கலஃப் தப்பிக்கமுடியவில்லை. ஒரு பஞ்சைக்கும் இஸ்லாம் அளித்த ஏற்றம்— பிலால் (ரலி) அவர்களின் குரலுக்கு எந்நாளும் செவி திருப்பக் கட்டுண்டிருந்தனர் மதீனா வாழ் மாந்தர்.

மதீனாவில் ஓர் அமைதி நிறைந்த வாழ்க்கை பிறந்த ஆரம்பத்திலேயே அண்ணலார் (ஸல்) அவர்கள் தங்கள் தோழர்களுக்குப் புதிய வாழ்க்கையின் நடைமுறைகளைப் பழக்கலானார்கள். தொழுகை நடத்த பள்ளியொன்று அமைக்கப்பட்டது. மதீனாவில் சுற்றுச் சூழலில் வாழ்ந்தவர்களும் அவ்வப்போது வந்து தொழுது செல்பவர்களாக

பொருளடக்கம்

இருந்தார்கள் அப்பள்ளியில். ஐங்காலமும் முறையாகத் தொழுகை நடத்த மக்களை ஒன்று சேர்ப்பதற்கு ஒரு வழி முறையை அண்ணலார் (ஸல்) ஆயலானார்கள். மாற்றார் களைப் போன்று மணியடித்தோ, தீ மூட்டியோ பறை முழக்கியோ அழைப்புவிடுக்க பெருமானார் (ஸல்) அவர் கள் விரும்பவில்லை. ஒரு மனிதரை தெருத் தெருவாகச் சென்று நின்று கூவி மக்களை அழைக்கச் செய்யலாம் என்று ஹலரத் உமர் (ரலி) அவர்கள் கூறிய யோசனை அண்ணலார் (ஸல்) அவர்களுக்கும் உவந்ததாயிருந்தது. துல்லாஹ் இப்னு ஜைது என்ற அன்ஸாரித் தோழரிடம் அப்பொறுப்பு ஒப்படைக்கப்பட்டது. ஒவ்வொரு தொழு கையின் நேரத்திலும் அவர் தெருத் தெருவாகச் சென்று

حَانَتِ الصَّلٰوةُ

ஹானத்திஸ் ஸலாத்—தொழுகைக்கு நேரம் நெருங்கி விட்டது என உரத்து கூறி விரைந்து திரும்புவார். அத னைத் தொடர்ந்து மக்களும் ஒவ்வொருவராய் வந்து பள்ளி யில் கூடவாரம்பிப்பர். பெருமானார் (ஸல்) அவர்கள் ஹலரத் பிலால் (ரலி) அவர்களை பள்ளியின் வளாகத்தி லேயே நின்று ஒரு முறை உரத்துக் குரலெழுப்பி மக்களை அழைக்குமாறு பணிப்பார்கள். பிலால் (ரலி) அவர்கள் கூட்டுத் தொழுகை நடைபெறப் போகிறது என்பதை 'அஸ்ஸலாத்துல் ஜாமிஆ' என தம் உயர்ந்த தொனியால் ஒலித்தறிவிப்பர். பின்னர் அண்ணலார் (ஸல்) அவர்கள் தம் தோழர்களை அணிவகுக்கச் செய்து தொழுகை நடத்து வார்கள்.

ஒவ்வொரு தொழுகையின் போதும் அவ்வாறே செய்து வந்தனர். மிகச்சில நாட்களே அவ்வாறு நடை பெற்றது. ஓர் இரவு ஹலரத் அப்துல்லாஹ் இப்னு

பொருளடக்கம்

ஜைது * (ரலி) அவர்களின் கனவில் ஒருவர் தோன்றி இன்று வழக்கத்தில் உள்ளதைப் போன்ற—இறைவனின் புகழொலி கொண்டே—தொழுகைக்கு அழைப்பு விடும் முறையினைக் கற்பித்து மறைந்தார். விழித்தெழுந்து ஹலரத் அப்துல்லாஹ் இப்னு ஜைது (ரலி) அவர்கள் பெருமானார் (ஸல்) அவர்களைச் சந்தித்து தாம் கண்ட கனவை எடுத்துரைத்தனர். அதனை ஒரு நல்வழி காட்டுதலாகவே அண்ணலார் (ஸல்) அவர்களும் பொருந்தி ஏற்றார்கள். எனினும் பிலால் (ரலி) அவர்களின் சந்தக் குரலினால் கவரப்பெற்ற பெருமானார் (ஸல்) அவர்கள் ஹலரத் அப்துல்லாஹ் இப்னு ஜைது (ரலி) கற்ற சொற்றொடர்களை பிலால் (ரலி) அவர்களுக்குக் கற்பிக்கச் செய்து பிலால் (ரலி) அவர்களைக் கொண்டே பாங் கொலிக்கச் செய்தார்கள்

'அல்லாஹு அக்பர், அல்லாஹு அக்பர்' — என்ற வெண்கலத்தொனி விண்ணில் மிதந்து மதீனாவிலும்

---

* ஹிஜ்ரத்து முன்னதாகவே அக்கபா பள்ளத்தாக்கில் அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் கரம்பிடித்து பிரமாணம் செய்த அன்ஸார்களில் ஒருவரே இத்தோழர்; 'கஸ்ரஜ்' கோத்திரத்தைச் சார்ந்தவர். இவரின் தந்தை ஜைது இப்னு ஸஅலபா (ரலி) அவர்களும் அண்ணலார் (ஸல்) அவர்களின் ஒரு தோழரே. மதீனாவில் மிகக்குறைந்த நில புலன்களையே பெற்றிருந்த ஹலரத் அப்துல்லா இப்னு ஜைது (ரலி) அவர்கள் அவற்றையும் அல்லாஹ்வின் பாதையில் அறம் வழங்கினர். தந்தை ஜைது இப்னு ஸஅலபா (ரலி) அவர்களின் ஏழ்மையை அறிந்த அண்ணலார் (ஸல்) அவர்கள் தனயனின் தர்மத்தை அங்கீகரித்து மீண்டும் அவற்றை தந்தையின் பங்காகத் திரும்பத் தந்துவிட்டார்கள். அதனைக் கொண்டு அக்குடும்பமே செழித்தது. பத்ருப் போர் முதல் எல்லாப் போர்களிலும் பங்கேற்ற ஹலரத் அப்துல்லாஹ் இப்னு ஜைது (ரலி) அண்ணலார் (ஸல்) அவர்களின் பால்

—தொடர்ச்சி மறு பக்கத்தில்

பொருளடக்கம்

அதனைச் சூழ்ந்த மலைகளிலும், சோலைகளிலும், பாலைகளிலும், மணற்காடுகளிலும் ஐங்காலமும் எதிரொலிக்கலாயிற்று. யத்ரிபைச் சூழவும் இஸ்லாம் முகிழ் விரிக்கத் துவங்கிவிட்டிருந்த காலமது. சந்தங்கமழும் பிலாலின் ஏகத்துவச் சங்கநாதம் எழக்கேட்டதுமே ஆண்கள் தங்கள் தொழில் துறைகளிலிருந்து விடுபட்டு விரைவர் பள்ளி நோக்கி. பெண்களும் தங்களின் இல்லங்களை விட்டும் வெளியாகி வருவர். சிறார்களும் தங்களின் விளையாட்டுகளை மறந்து திரும்புவர். அத்தனை பேரையும் பள்ளியினுள் திரட்டிச் சேர்த்திடும் அக்கன்னல் குரல் அண்ணலார் (ஸல்) அவர்களின் செவிக்குமே எட்டும். அவர்கள் தங்களின் இல்லங்களில் இருக்கும் சமயம். பெருமானார் (ஸல்) அவர்கள் மற்ற தொடர்புகளிலிருந்து திரும்பி தொழவாரம்பித்து விடுவார்கள். மக்கள் பள்ளியில் திரண்ட பின்னர் பிலால் (ரலி) அவர்கள் அண்ணலார் (ஸல்) அவர்களின் திருவாசலில் நின்று,

اَلصَّلٰوةُ يَا رَسُوْلَ اللّٰه

'அஸ்ஸலாத் யா ரஸூலல்லாஹ் — ஆண்டவனின் தூதரே! தொழுகை(க்கெனச் சித்தமாகி விட்டோம்) என

---

கொண்டிருந்த பேரன்பும் பேணுதலும் பெரும் வியப்புக்குரியவைகளாகும். பெருமானார் (ஸல்) இவ்வுலகு நீத்த அன்று அவர்களின் பிரிவினைத் தாங்கமாட்டாத அத்தோழர் 'இறைவா! உன் தூதரின் முகத்தை இனி காணமுடியாத என் புறக்கண்களால் இனி எந்த உலகாயுதப் பொருளையும் நான் காண விரும்பவில்லை. நீ என் பார்வையைப் பறித்துக் கொள்வாயாக என வழுத்தினார்கள். மறுகணமே அவர்களின் புறப்பார்வை மறைந்தே போனது. அகக்கண்களாலேயே அண்ணலரின் நினைவை அனுபவித்துச் சுகித்து தம்மின் 64ம் வயது வரை வாழ்ந்த அம்மாநபித் தோழர் ஹிஜ்ரி 32ல் ஹலரத் உதுமான் (ரலி) அவர்களின் கிலாஃபத்தின்போது மரணமடைந்தனர்.

பொருளடக்கம்

மென்குரலெழுப்புவர். பெருமானார் (ஸல்) அவர்கள் பள்ளிக்கு வந்து தொழுகை நடத்துவார்கள்.

பரட்டைத் தலையும், தடித்த உதடுகளும் கொண்ட ஒரு மெலிந்த உடலுக்குள்ளே இறைவன் தன் அருளாய்ப் புதைத்திருந்த குரலின் இனிமையும், வலிமையும் கூடி மக்களைக் கட்டுண்டு திரும்பச் செய்தன அத்தொனியின் பின்னே. அக்குரலெழுப்பப்படும் ஒவ்வொரு நேரத்துக்காகவும் மதீனா காத்திருந்தது.

தொழுகை நெருங்கும் பல சந்தர்ப்பங்களில் பெருமான் நபி (ஸல்) அவர்களே பள்ளியினுள் விரைவார்கள்.

قُمْ يَا بِلَالُ أَرِحْنَا بِالصَّلٰوةِ

'எழும் பிலால்! தொழுகை(க்கு அழைக்கும் உம் தொனி)யால் எமக்கு உயிரூட்டும்' எனப் பணிப்பார்கள். பிலால் (ரலி) எழுந்திடுவர். அவரின் குரல் வெடிக்கும். உணர்வுகள் பொங்கும். சத்தியச் சங்கநாதம் முழங்கும். சந்தங் கமழும் நகரமெங்கும். மக்கள் கூட்டம் பள்ளியினுள் திரளும். 'அஷ்ஹது அன்ன முஹம்மதர் ரஸூலுல் லாஹ்' — அண்ணல் முஹம்மது (ஸல்) அல்லாஹ்வின் தூதர் என திண்ணமாக நான் சான்று கூறுகிறேன்' என்ற தம் பிரகடனத்தோடேயே அவரின் கை சுட்டிக் காட்டும் பக்கம் மாந்தர் தம் முகங்களனைத்துமே திரும்பும். அங்கே....

தம் காதலர் எழுப்பும் கவின் குரலைச் செவிமாந்திச் சுகிக்கும் மாநபி (ஸல்) அவர்களின் மதி முகம் ஒளிவீசும்! மாநபி (ஸல்) அவர்கள் மண்ணில் நடமாடிய காலமெல்லாம் மதீனா வாழ் மக்கள் பெற்ற பேரின்ப நிலை அது!

'மஸ்ஜிதுன் னபவீயை' ஒட்டினாற் போல் நஜ்ஜார் குடும்பத்தைச் சார்ந்த ஒரு பெண்மணியின் வீடொன்

பொருளடக்கம்

றிருந்தது. அடர்ந்த இருட்டிலேயே விழித்தெழுந்து அதன் முகட்டிலேறி அமர்ந்து வைகறையின் விடியலை எதிர்நோக்கிக் காத்திருப்பர் பிலால் (ரலி). கடும்குளிரிலும் நெருப்பு மூட்டி தம் உடலின் அயர்வுகளைக் களைந்துக் காத்திருக்கும் வாலாயங்கொண்ட அவர்கள் ஒருநாள் வைகறையின் பிறப்புக்கு முன்பே பாங்கொலித்து விட்டனர். அந்த அவசரமும் அண்ணலார் (ஸல்) அவர்களின் அங்கீகாரத்தைப் பெற்றது. வைகறையின் தோற்றத்துக்குப் பின் மீண்டும் ஹலரத் இப்னு உம்மி மக்தூம் (ரலி) அவர்களைக் கொண்டு பாங்கொலிக்கச் செய்த அண்ணலார் (ஸல்) அவர்கள் அதனையே வாலாயமாக்கினார்கள். பிலால் (ரலி) அவர்களின் முந்தின பாங்கொலியை இரவெல்லாம் விழித்து வணங்கியவர்கள் சற்று ஓய்வு கொள்வதற்கும், உறக்கத்தில் இரவைக் கழித்தவர்கள் விழித்து ஆயத்தமாவதற்கும் அடையாளமாக அறிவித்தார்கள். இரண்டாவது பாங்கொலிக்குப் பின்னரே காலை தொழுகை நடைபெறும். ரமலான் மாதத்தில் ஹலரத் பிலால் (ரலி) அவர்களின் முதல் பாங்கொலியைச் செவியேற்று மக்கள் தாங்கள் உண்டு கொண்டிருக்கும் 'ஸஹ்ரின்' உணவைத் துரிதமாக உண்டு முடிப்பர். காலைத் தொழுகைக்கு முன் மட்டும் இருமுறை பாங்கொலிக்கும் வாலாயத்தை ஹலரத் பிலால் (ரலி) அவர்கள் நடமாடிய மக்கா மதீனா ஆகிய இரு நகரங்களும் இன்றளவும் மாற்றிக் கொள்ளவில்லை.

காலை பாங்கொலிக்கு முன்னதாக இறைவனைத் துதித்து வழுத்துவதும் பிலால் (ரலி) அவர்களின் வழக்கமாக இருந்தது. "இறைவா! உன்னைப் புகழ்ந்து துதிக்கிறேன். உன் மார்க்கத்தின் புறம் குரைஷிகள் நிலை



பொருளடக்கம்

திரும்ப உன்னிடமே உதவி தேடுகிறேன்'' என உரக்கவே இறைஞ்சுவார்கள். அருள் தேட்டக் கவிதைகளையும் இனிய குரலெடுத்து அவர்கள் பாடுவதுண்டு.

காலைத் தொழுகைக்கு மட்டும் பிலால் (ரலி) அவர்களின் குரல் ஒலிக்கத் துவங்கும்போதே பெருமானார் (ஸல்) அவர்கள் பள்ளிக்கு வந்து விடுவதுண்டு. வழக்கத்துக்கு மாறாக ஒருநாள் அண்ணலார் (ஸல்) அவர்கள் பள்ளிக்கு வரத் தாமதாகிவிட்டது. 'ஹய்ய அலஸ் ஸலா, ஹய்ய அலல் ஃபலாஹ் — தொழுகைக்காக விரைந்து வாருங்கள். வெற்றியின் புறம் விரைந்து வாருங்கள்' என இவ்விரு முறை கூறி முடித்தும் பெருமான் நபி (ஸல்) அவர்களை வரக்காணாத பிலால் (ரலி) அவர்கள் அடுத்து,

اَلصَّلٰوةُ خَيْرٌ مِّنَ النَّوْمِ

'அஸ்ஸலாத்து கைரும் மினன் னவ்ம் — தொழுகை தூக்கத்திலும் மேலானது'' என உரத்து ஒலித்தனர். அதே சமயம் பள்ளியினுள் எழுந்தருளிய ஏந்தலரின் முகம் மலர்ந்தது அக்குரல் கேட்டு. தன்னுத்திப்பாகவே பிறந்த தாயினும் பிலால் (ரலி) அவர்களின் உணர்வில் மலர்ந்த அச்சொற்றொடர் கேட்டு அகமகிழ்ந்த அண்ணலார் (ஸல்) இனி எப்போதும் காலைத் தொழுகையில் மட்டும் அவ்வாறே இருமுறை ஒலிக்கக் கட்டளையிட்டார்கள்.

اَلْاِمَامُ ضَامِنٌ وَّالْمُؤَذِّنُ مُؤْتَمَنٌ

தொழுகையில் முன்னிற்கும் இமாமை அவரின் பின் நிற்பவர்களுக்குப் பிணை நிற்பவர் என்றும், பாங்கொலிக்கும் முஅத்தினை மக்கள் நம்பிக்கையின் பொறுப்பாளர் என்றும் சுட்டிக்காட்டி நபி பெருமான் (ஸல்) அவர்கள் இமாம்களுக்கு நேர்வழி காட்டுமாறும் முஅத்தின்களின்

பொருளடக்கம்

பிழை பொறுத்தருளுமாறும் வழுத்தினார்கள். மனித சமுதாயம் மலரத் துவங்கிய மதீனாவின் முதற் பள்ளியில் முதல் இமாமாக நின்ற அண்ணலவர்களின் பின்னே முதல் முஅத்தினாக நிற்க ஹலரத் பிலால் (ரலி) அவர்களே பேறு பெற்றார்கள். ஓடியுழைத்து ஓயும் அத்தனை உயிர்களும் விடியலின் தங்கள் கடமைக்கென எழ நம்பிக்கை கொண்டிருந்த—மதீனாவின் அப்பொறுப்பாளர் அண்ணலார் (ஸல்) அவர்கள் மண்ணில் நடமாடிய காலம் முழுவதும் தாமே அப்பொறுப்பில் நீடித்தார்கள்; மதீனாவில் பள்ளியில் மட்டுமல்லாமல் மாநபி (ஸல்) அவர்கள் எங்கெங்கே சென்றார்களோ அங்கெல்லாம் துயர்ந்தார்கள். எங்கெங்கே பிலால் (ரலி) அவர்களின் பாங்கொலி கேட்குமோ அதனையே அங்கு அண்ணலார் (ஸல்) அவர்களின் வருகையின் அறிவிப்பாக உணர்ந்து சுற்றுச் சூழலில் வாழும் மக்கள் ஒன்று கூடுவார்கள். அண்ணலார் (ஸல்) அவர்களோடு ஹலரத் பிலால் (ரலி) அவர்கள் வரத் தவறிய சந்தர்ப்பங்களிலேயே குபாவின் பள்ளியில் ஹலரத் ஸஅது — அல் கர்ள் (ரலி) அண்ணலவர்களின் அனுமதி பெற்று பாங்கொலித்தனர். எனினும் ஹலரத் ஸஅது—அல் கர்ள் (ரலி) அவர்களுக்கும் அண்ணலார் (ஸல்) அவர்களின் வாழ்நாளில் அவ்வாறான வாய்ப்புகள் மூன்றே முறைகளே கிடைத்தன.

ஒரேயொரு நாள் ஹலரத் பிலால் (ரலி) அவர்கள் தம் காலைக்கடன் கழிக்கச் சென்று திரும்பத் தாமதமானதால் அண்ணலார் (ஸல்) அவர்கள் ஜியாத் இப்னு ஹாரிஸ் (ரலி) அவர்களை பாங்கொலிக்கப் பணித்தார்கள். அன்றே ஹலரத் பிலால் (ரலி) அவர்களுக்கிருந்த ஆன்ம பலத்தை விண்ணவர் கோன் ஜிப்ரயீல் (அலை) அவர்கள் வந்துரைக்க அண்ணலார் (ஸல்) அவர்கள் தோழர்களுக்கும் அறிவித்தார்கள்.

பொருளடக்கம்

மனிதர்கள் இறைவனைத் தொழ மிக ஆரம்ப நாட்களிலேயே எழுப்பப்பட்ட முதல் ஆலயம் கஅபா!

அதனைத் தன் நெஞ்சத்தில் தாங்கி நிற்கும் 'பக்கா' நகரை அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்கள் வெற்றி கொண்ட நாளில் ஹலரத் பிலால் (ரலி) அவர்கள் ஏற்ற பெற்றி எண்ண நயத்திற்கப்பாற்பட்டதாகும்.

அல்லாஹ்வைத் தொழுவதற்கென்றே அமைக்கப் பெற்ற அவ்வீட்டினுள்ளே மனிதர்கள் விளைவித்திருந்த ஈனத்தனமான அலங்கோலங்களனைத்தையும் அகலச் செய்தார்கள் அண்ணலார் (ஸல்) அவர்கள். அன்று வரை தம்மையும் தம் வழி தொடர்ந்தோரையும் தொலைத்திட வல்லபங் கொண்டலைந்த புல்லர்களையும் பொறுத்தருளி பூமான் நபி (ஸல்) அவர்களின் பூரண அதிகாரத்துக்குட் பட்டதாக கஅபா அன்று விளங்கியது. வணக்கத்திற்குரிய வன் அல்லாஹ் ஒருவனே என்று சொன்னதையே குற்ற மாகக் கொண்டு அல்லாஹ்வின் அத் திருவீட்டுக்குள் நுழைய ஒரு நாள் வழி மறுக்கப்பட்ட அவ்வண்ணலரின் திருக்கரத்திலேயே அன்று கஅபாவின் திறவுகோல் இருந்தது. திறவு கோலைப் பாதுகாக்கும் பொறுப்பை அன்று வரை கரமேற்றிருந்த குரைஷித் தலைவர் உதுமான் இப்னு தல்ஹா (ரலி) அவர்களையும் அழைத்துக் கொண்டு கஅபாவின் உள்ளே அண்ணலார் (ஸல்) அவர்கள் அடியெடுத்து வைத்தபோது இரண்டே பேர்கள் உடன் சென்றனர். ஒருவர் அடிமை ஜைது இப்னு ஹாரிஸின் திருமகனார் உஸாமா (ரலி) மற்றவர் அடிமை ரபாஹா பெற்றெடுத்த பிலால் (ரலி).

பெருங்குலத்துக் குரைஷியர் இருவர். அவர்களுள் ஒருவர் அண்ணல் முஹம்மது (ஸல்) மற்றவர் உதுமான் இப்னு தல்ஹா (ரலி). கருநிறத்து அடிமைகள் இருவர்.

பொருளடக்கம்

ஒருவர் பிலால் (ரலி) மற்றவர் உஸாமா (ரலி) — இந்த நால்வரோடேயே இறைவனின் — பழமை வாய்ந்த— அப்பேரில்லத்தின் புதுவாழ்வு மலர்ந்தது.

தமக்கு வாக்களித்த வெற்றியை அருளிய ஒருவனை— அஹதுன், அஹதுன் என பிலால் (ரலி) அழைத்த அல்லாஹ் ஒருவனை — கஃபாவின் உள்ளே—வணங்கி வழுத்திய அண்ணலார் (ஸல்) அவர்கள் கஃபாவின் திரு வாசலில் நின்று தம் செயலுக்காதாரமான இறைவனின் சொல்லை ஓதிக்காட்டினார்கள்.

يَٰٓأَيُّهَا ٱلنَّاسُ إِنَّا خَلَقْنَٰكُم مِّن ذَكَرٍ وَأُنثَىٰ وَجَعَلْنَٰكُمْ شُعُوبًا وَقَبَآئِلَ
لِتَعَارَفُوٓا۟ ۚ إِنَّ أَكْرَمَكُمْ عِندَ ٱللَّهِ أَتْقَىٰكُمْ ۚ إِنَّ ٱللَّهَ عَلِيمٌ خَبِيرٌ ۝

''மனிதர்களே! நிச்சயமாக நாம் உங்களை ஒரு ஆண் ஒரு பெண்ணிலிருந்தே உருவாக்கினோம். பின்னர் ஒருவர் மற்றவரை அறிந்துகொள்ளும் பொருட்டு, உங்களைக் கிளைகளாகவும், கோத்திரங் களாகவும் ஆக்கினோம். (ஆதலால், உங்களில் ஒருவர் மற்றவரை விட மேல் என பெருமை பாராட்டிக் கொள்வதற்கில்லை. எனினும்) உங்களில் எவர் பயபக்தியுடையவராக இருக்கின்றாரோ, அவர் தாம் அல்லாஹ்விடத்தில் நிச்சயமாகக் கண்ணிய வான். நிச்சயமாக அல்லாஹ் யாவையும் நன்கறிந் தோனும் நன்கு தெரிந்தோனுமாயிருக்கிறான் — அல் குர்ஆன் 49:13

அசத்தியம் அழிந்தது. ஆதிக்கபுரியினரின் ஆணவ மும் அழிந்தது. உதயம் பெற்றிருந்த உண்மை அன்று மிக உச்சத்தில் ஒளிவீசியது. பரிதியின் உச்சப் பயணமும் முடிந்து அது சாயத் துவங்கியது.

பொருளடக்கம்

பரம்னைத் தொழ விதியான ளுஹருடைய வேளை! பாரான் வெளிகடந்து வந்த பதினாயிரம் தோழர்கள் கஅபாவைப் புடைசூழ்ந்து நின்றிருந்தனர். அவர்களுக்குள்ளே...

வணங்குதற்குரியவன் அல்லாஹ் ஒருவனே ஒருவன் என்பதை அதே மக்காவின் வீதியில், ஆரம்பத்தில் உறுதி மாறாமல் உரைத்தாரே, அதே பிலாலை அழைத்து சுருதி கூட்டப் பணித்தார்கள் அண்ணலார். எங்கே? கஅபாவின் முகட்டிலேறி!

"அல்லாஹு அக்பர் அல்லாஹு அக்பர்"

"அல்லாஹு அக்பர் அல்லாஹு அக்பர்"

—கஅபாவின் உச்சியிலிருந்து கணீரெனப் பிறந்த வெண்கலக் குரல் மனிதக் கண்களனைத்தையும் ஏறிட்டு நோக்கச் செய்தது!

புரண்டுபோன பல சகாப்தங்களுக்குப்பின் எழுந்த— இபுராஹீமியப்—புகழொலி பாரானின் குன்றுகளனைத்திலும் சென்று எதிரொலித்தது.

மமதைகளை மதித்து சமதர்மங்கண்ட 'ஸர்தா'ரின் திருமுகம் நோக்கி 'படைத்தவனே மிகப் பெரியவன்' என பிலால் (ரலி) அவர்கள் செய்த பிரகடனம் கேட்டு 'பத்ஹா'வின் பள்ளத்தாக்குகள் சிலிர்த்தன.

சிந்தை குளிர செவிசாய்த்திருந்தார்கள் அண்ணலரும் தோழர்களும். அதே குரலையே இருபதாண்டுகளுக்குமுன் ஒரு தெருவோரத்தில் எழுப்பிய அடிமை பிலாலை வதைத்த கரங்களெல்லாம் முடமாகி விட்டிருந்தன அன்று.

பிலாலை எட்டிப்பிடிக்கவென்ன ஏனென்று கேட்கவும் எவருக்கும் துணிவில்லை அன்று. ஹலரத் பிலால் (ரலி) தம்

பொருளடக்கம்

விரல் நீட்டிச் சுட்டிக்காட்டினர், "நிச்சயமாக அண்ணல் முஹம்மதர் அல்லாஹ்வின் தூதர் என்நான் சாட்சியம் கூறுகிறேன்" என்று. அதனைச் செவியேற்ற அங்கிருந்த அத்தனை பேருமே அங்கீகரித்தனர் அண்ணல் முஹம்மதரை அல்லாஹ்வின் தூதராக. ஆனால்!

"இதைச் சொல்ல இந்த கருப்புநிற அடிமைதானா கிடைத்தார் முஹம்மதுக்கு" என முணுமுணுத்தார் ஓர் அரபி.

"பனூ ஜுமஹ்'களின் பழைய அடிமை இப்னு தல்ஹாவின் கட்டிடத்திலேறி கத்துகிறார்" என்று மெல்ல சொன்னார் மற்றொருவர்.

"இனி நாம் உயிரோடிருந்து எந்தப் பயனுமே இல்லை" என விரக்தியடைந்தார் அபூ ஜஹலின் உடன் பிறந்த ஹாரிஸ் பின் ஹிஷாம்.

"நல்ல வேளையாக இக்காட்சியைக் காணுமுன்னதாகவே என் தந்தை 'உஸைத்' மரணித்துப் போனார். அவர் இருந்தால் இக்குரலைக் கேட்கப் பொறாது எதையேனும் கூறி முஹம்மதின் சினத்திற்கு ஆட்பட்டிருப்பார்" எனத் திருப்தி கொண்டார் 'உத்தாப்'—அதே மக்க நகரின் ஆளுநராக மரணிக்கவிருக்கும் தம் விதியை உணராதவராக.

உத்தாபின் தந்தை உஸைத் மட்டுமேயல்ல, உமையா அபூஜஹல் போன்ற—பத்ரில் புதைந்துபோன—பலரின் ஆத்மாக்களும் அங்கிருந்தால் அவைகளும் துடித்தே இருக்கும் ஹலரத் பிலால் (ரலி) நின்ற நிலை கண்டு.

அச்சமயம் இஸ்லாத்தை ஏற்றுவிட்டிருந்த ஹலரத் அபூஸுஃப்யான் (ரலி) அவர்களும் அவர்களிடையே தான் அமர்ந்திருந்தனர். "நாம் பேசுவதையெல்லாம் என்கையி

பொருளடக்கம்

லிருக்கும் இந்தக் கூழாங்கற்களே முஹம்மதிடம் சொல்லி விடக்கூடும். எனவே நான் வாய்மூடியே இருக்கிறேன்'' என அன்னவர் மவுனித்துக் கொண்டனர் — குரோதமே அன்றுவரை தம் மண்டையைக் குடைந்து வந்ததேயன்றி, தம் தாயாதியின் வல்லமையை தாம் உணர்ந்தவரே என்பதற்கடையாளமாக.

ஹலரத் பிலால் (ரலி) அவர்களின் பாங்கொலி நிறைவு பெற்றது. அண்ணலார் (ஸல்) அவர்கள் உரையாடிக் கொண்டிருந்த குரைஷித் தலைவர்களின் முன் வந்து நின்றார்கள். அவர்களின் முகத்தில் புன்னகை இழையோடியது. குரைஷித் தலைவர்களின் உரையாடலில் ஒரு சொல்லையும் தவறவிடாது அண்ணலார் (ஸல்) அவர்கள் விண்டிடக்கேட்டு வியர்த்தனர் அனைவரும். ''அல்அமீன்! தங்களை அல்லாஹ்வின் தூதரென நான் சத்தியமாகவே சாட்சியம் கூறினேன்'' என ஹலரத் அபூ ஸுஃப்யான் (ரலி) தாம் முன்னமே கொண்டுவிட்டிருந்த ஈமானுக்கு வலுச் சேர்த்தனர். ஹலரத் உத்தாப் இப்னு உஸைத், ஹாரிஸ் இப்னு ஹிஷாம் (ரலி) ஆகியோரும் அண்ணலார் (ஸல்) அவர்களின் கரம்பிடித்து அக்கணமே முஸ்லிம்களாயினர்.

அடிமைகள் சிறக்க ஓர் அருளாகப் பிறந்த பெருமானார் (ஸல்) அவர்களின் கரம் பற்றிய முதல் அடிமை ஹலரத் பிலால் (ரலி). அண்ணலார் (ஸல்) அவர்களுக்குத் தங்களை அடிமைப் படுத்திக் கொண்டவர்களுக்கெல்லாம் அவர் முதல்வர்—முதலாமவர்.

பெருமானார் (ஸல்) அவர்களுக்குப் பேரூழியம் புரிந்தவர்களின் ஒரு பட்டியலே உண்டு. எனினும் 'ஹாதா குலாம்' எனச் சுட்டிக் காட்டி அப்பெருமகனார் பூரிக்க நின்ற ஓர் அடிமை பிலால் (ரலி).

பொருளடக்கம்

'கன்ஆன்' நாட்டின் கிணற்றடியில் நபிகளுள் எழிலார் யூஸுஃப் (அலை) சுமந்த அப்பரிவட்டத்தை பெருமையோடு சுமந்த பிரிய தோழர் ஸையிதினா பிலால் (ரலி). அபூபக்கர் (ரலி) அவர்களால் உரிமை வழங்கப் பட்டு விட்ட பின்னரும் அவ் வுரிமை வாழ்வை விட அண்ணலருக்கு அடிமைப்பட்ட வாழ்வை ஓராயிரம் மடங்கு உயர்வானதாய் எண்ணி ஏற்றனர் ஸையிதினா பிலால் (ரலி).

அடிலம விலங்கிடைப் பிறந்து, கொடுமைகளைச் சகித்து உரிமையடைந்த நிலையிலும் பிலால் (ரலி) அவர்களிடம் வெளிப்பட்ட பணிவும் தன்னடக்கமும் அவர்களுக்கே அணிகலன்களாய்த் திகழ்ந்தன. அவர்களின் பெருமையை வளர்த்தன. தாம் பெறும் சிறப்புகளனைத்தும் தாஹா ரஸூல் (ஸல்) அவர்களின் பிறப்பினாலேயே கிடைத்தவை என்ற சத்தியத்தை சாத்துவிகமாகவே உணர்ந்த அடிமை பிலால் (ரலி) அவ்வண்ணலாருக்குத் தம்மை முற்றாகவே அர்ப்பணித்தனர்.

அடிமை நிலையில் அண்ணலவர்களைச் சந்தித்த முதற்பார்வையிலேயே அவர்களைத் தம் ஆண்டகையாக வரித்து விட்டது பிலால் (ரலி) அவர்களின் இதயம். இயல் பிலேயே வெளிச்சம் பெற்ற அதன் மீது அண்ணலவர்களின் பார்வை பட்ட மகத்துவம்—

அழுக்கையகற்றி, அறிவோடு ஞானத்தையும் அருளிடும் நபித்துவ நாயகப் பார்வையின் அற்புதம்—

பிலால் (ரலி) அவர்கள் பெற்றிருந்த ஆன்மீக உச்சத்தை ஹிஜ்ரத்துக்கும் முந்திய தங்களின் 'மிஉராஜ்' என்னும் விண்ணுலகப் பயணம் முடித்து மீண்ட அண்ணலார் (ஸல்) அவர்கள் விளக்கினார்கள்.

பொருளடக்கம்

'சுவனம் பிலாலைக் கொண்டு தேட்டமுற்றிருக்கிறது' என்றருளிய ஏந்தலார் (ஸல்) வினவினார்கள். "சுவனத்துள் எனக்கு முன்னர் நடந்து செல்லும் உம் காலடியோசை கேட்டேன். எந்த உம் நற்செயலால் அப்படித்தரத்தைப் பெற்றீர் ஓ பிலால்!" என்று.

"என் தந்தையும் தாயும் தங்களுக்கர்ப்பணம். ஏந்தலே! வாழ்க்கையின் எந்த நாளிலும் தீச்செயல் புரிய நான் துணிந்ததில்லை. பிழையின் பால் நான் பிசகி விட்டாலும் உடனடியாகவே இரண்டு ரக்அத்துகள் தொழுது என் இரட்சகனிடம் பிழை பொறுக்கத் தேடத் தவறுவதில்லை. இவ்வளவேயன்றி ஏழை நான் எந்த நற் செயலால் பெருமை கொள்வேன்......ஆம் அண்ணலே! தூய்மையேயன்றோ தோழமைக்கு வலுச்சேர்க்கும். எனவே நான் எந்த பொழுதிலும் தூய்மையைத் தவறவிடு தில்லை. தவறி என் 'ஒழு' முறிந்து விடுமானால் உடனடியாகவே 'ஒழு' செய்துக் கொள்வேன். அந்த உணர்வை எனக்களித்த வல்லவனையும் ஒழு செய்தவுடன் வழுத்தித் துதிக்கத் தவறமாட்டேன்" என விளக்கினர் ஹலரத் பிலால் (ரலி).

"ஆம் அதன் பலனே நீர் பெற்ற அப்பேறு" எனக் கூறி அண்ணலார் (ஸல்) மகிழ்ந்தார்கள்.

அண்ணலார் (ஸல்) அவர்களைச் சூழ தோழர்கள் அமர்ந்திருந்த பிரிதொரு சமயம் "சுவனத்தில் முதலாவதாக நுழைபவர் யார்?" என வினவினார் ஒரு தோழர்.

"பிலால்" என அண்ணலார் (ஸல்) அவர்கள் விடையிறுத்தார்கள்.

துடித்துப் பதறினர் பிலால் (ரலி) "என் தந்தையும் தாயும் தங்களுக்கர்ப்பணம். தாங்களோ இறைவனின்

தூதர். சுவனத்துள் தாங்களேயன்றோ முதலில் நுழைவீர்கள்'' என்று.

''பிலாலே! சுவனத்துள் நுழைய முதன் முதலில் அனுமதிக்கப்படுபவன் நானே. ஆயினும் நான் அமர்ந்து செல்லும் ஒட்டகையின் கயிற்றைப் பிடித்து நடத்திச் செல்பவர் நீரே. அப்போது நீரேயல்லவோ முதலில் நுழைவீர்'' என பெருமானார் (ஸல்) அவர்கள் முறுவலித்துக் கூறினார்கள்.

பேறு பெற்ற அத்தோழரை பெரிதும் நேசித்த பெருமானார் (ஸல்) அவர்கள் பிறரையும் அவர்களின் கண்ணியம் பேண ஏவினார்கள்.

ஹலரத் பிலால் (ரலி) அவர்களோடு ஏற்பட்ட ஒரு சச்சரவில் அவர்களை ஹலரத் அபூதர் கிப்ஃபாரீ (ரலி) அவர்கள் 'அடிமைத் தாயின் மகனே!' என விளித்து விட்டார்கள். அதனைக் கேட்டு பிலால் (ரலி) அவர்கள் வருத்தமுற்றார்கள். ஹலரத் அபூதர் (ரலி) அவர்களும் அண்ணலரின் முன்னணித் தோழர்களில் ஒருவரே. 'கிப்ஃபார்!' கோத்திரத்தின் தலைவரும் கூட. எனினும் அச்சம்பவம் பற்றியறிந்த அண்ணலார் (ஸல்) அவர்கள் ஹலரத் அபூதர் (ரலி) அவர்களை அழைத்துவரச் செய்து, ''பிலாவை நீர் ஏசினீரா? அப்படியாயின் அறியாமைக் காலத்தின் அடையாளங்கள் உம்மிடம் இன்னும் எஞ்சியேயுள்ளன'' எனக்கூறி எச்சரித்தார்கள். பின்னர், ''ஒருவருக்கொருவர் உங்கள் சகோதரரை ஏளனமாகப் பேசாதீர்கள்'' என நயம்பட உபதேசித்தார்கள்.

மக்கமாநகர வெற்றி நிகழ்ச்சியைப் பற்றி ஹலரத் ஸல்மான், ஸுஹைப் (ரலி) ஆகியோரோடமர்ந்து உரையாடிக்கொண்டிருந்த ஹலரத் பிலால் (ரலி) 'இறைவனின் வாள் அவனின் வைரியின் கழுத்தில் பாய்ந்திருக்க

பொருளடக்கம்

வேண்டிய வாய்ப்பு தவறி விட்டது, எனக் குறிப்பிட்டார்கள். அவர்கள் அவ்வாறு குறிப்பிட்டது குரைஷித் தலைவரான ஹலரத் அபூ ஸுஃப்யான் (ரலி) அவர்களையே.

ஹிஜ்ரி 8 ஆம் ஆண்டில் தங்களின் பதினாயிரம் தோழர்களும் புடை சூழ புனித மக்கா நோக்கி வந்த நபி பெருமானார் (ஸல்) அவர்கள் 'மர்ருள் ளஹ்ரான்' என்ற இடத்தில் இராத்தங்கி தோழர்கள் அனைவரையும் பரவலாக நெருப்பு மூட்டச் செய்தார்கள். அவ்வாறு மூட்டப்பட்ட போது எழுந்த பெரும் வெளிச்சம் கண்டு அது என்னவென அறிய வந்த மக்காவின் குரைஷித் தலைவர் அபூஸுஃப்யான் ஏராளமான முஸ்லிம்களின் படைகளைக் கண்டு திடுக்கிட்டார். அவரைச் சந்தித்த ஹலரத் அப்பாஸ் (ரலி)—பெருமானாரின் சிறிய தந்தையார் அவர்கள் அபூ ஸுஃப்யானைத் தம் பாதுகாப்பில் ஏற்று அண்ணலார் (ஸல்) அவர்களோடு சந்திப்பேற்படுத்த அழைத்துச் சென்றார்கள். வழியிலேயே ஹலரத் உமர் (ரலி) அவர்களின் பார்வையில் அவர்கள் பட்டனர். உணர்ச்சி வசப்பட்ட உமர் இப்னுல் கத்தாப் (ரலி) 'இதோ இறைவனின் விரோதி அபூ ஸுஃப்யான்' எனக் கூக்குரலிட்டபடி அவர்களைக் கொல்ல வாளொடு பாய்ந்தனர். எனினும் ஹலரத் அப்பாஸ் (ரலி) அபூ ஸுஃப்யானைப் பாதுகாத்து அழைத்துச் சென்று அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களின் கரம் பிடித்து இஸ்லாத்தை ஏற்கச் செய்தார்கள். அச்சம்பவத்தை நினைவு கூர்ந்தே ஹலரத் பிலால் (ரலி) பேசினர்.

அம்மூவரும் பேசும் ஒலி செவிக்கெட்டும் தொலைலேயே ஹலரத் அபூ ஸுஃப்யான் (ரலி) அவர்களும் அமர்ந்திருந்தனர். அச்சமயம் அவ்வழியாக வந்த ஹலரத் அபூபக்கர் (ரலி) அவர்களின் செவிகளிலும் பிலால் (ரலி) அவர்களின் சொல் விழுந்துவிட்டது. புதிதாகவே இஸ்லாத்தை

பொருளடக்கம்

ஏற்றிருந்த ஹலரத் அபூ ஸுஃப்யான் (ரலி) அவர்களும் அச்சொல்லைச் செவியுற்று விரக்தி கொண்டுவிடக் கூடுமே எனக் கவலையுற்ற ஹலரத் அபூபக்கர் (ரலி) அவர்கள், 'குரைஷி குலத் தலைவர் ஒருவரை நீங்கள் ஏளனஞ்செய்யத் துணிந்து விட்டீர்களா? நபி பெருமான் (ஸல்) அவர்களும் அக்குரைஷி குலத்தையே சார்ந்தவர் கள் என்பதை நீங்கள் எண்ணிப்பார்க்க வில்லையா?' என அவர்களைக் கண்டித்துத் திரும்பினார்கள்.

அங்கிருந்துப் பிரிந்த ஹலரத் அபூபக்கர் (ரலி) அவர் கள் அண்ணலார் (ஸல்) அவர்களைச் சந்தித்தபோது நடைபெற்ற சம்பவத்தை விவரித்தார்கள். அதனைச் செவியுற்ற அண்ணலார் (ஸல்) அவர்கள், ''அபாபக்கரே! உம் கண்டனத்தால் பிலாலின் மனதை வருந்தச் செய்து விட்டீரோ. அதன் காரணமாக அல்லாஹ்வும் வருத்த மடைய நேருமே!'' எனக் கவலையுற்றார்கள். அவர் களிடம் விடைபெற்று ஒரு கணமும் தாமதியாது விரைந்து ஹலரத் அபூபக்கர் (ரலி) அவர்கள் பிலால் (ரலி) அவர்களைச் சந்தித்து ஆறுதல் படுத்தினர்.

அண்ணலார் (ஸல்) தம் மனைவியர் அனைவரிலும் ஆயிஷா நாயகியாரிடம் கொண்டிருந்த தனிப்பாசம் பிர சித்தமானது. 'மனிதர்களில் தாங்கள் அதிகம் நேசிப்பது யாரை?' என வினவப்பட்டபோது அவர்கள் 'ஆயிஷாவை' என்றே குறிப்பிட்டார்கள். 'ஆண்களில்' என அடுத்துக் கேட்கப்பட்ட போதே அவர்கள் 'ஆயிஷாவின் தந்தை அபூபக்கரை' என்றார்கள்.

'பலகாரங்களில் 'தக்கடி'யைப் போன்று பெண்களில் ஆயிஷா' எனப் பெருமானார் (ஸல்) அவர்கள் போற்றிச் சிறப்பித்த அவ்வன்னையாரின் இல்லப் பணிகளையும் பிலால் (ரலி) அவர்கள் பார்ப்பதுண்டு. வீட்டின் பாத்தி

ரங்களை பிலால் (ரலி) அவர்கள் கழுவிக் கொண்டிருந்த ஒரு சமயம் ஒரு கோப்பை அவர்களின் கைதவறி விழுந்து உடைந்து விட்டது. அன்னையார் அவர்களால் மிகப் பேணுதலோடு பாதுகாக்கப்பட்டு அண்ணலார் (ஸல்) அவர்கள் பாலருந்த மட்டுமே பயன் படுத்தப்பட்டு வந்த அக்கோப்பை உடைந்தது அன்னையவர்களின் மனதை நோகச் செய்தது.

பிலால் (ரலி) தம் பணி முடித்துச் சென்று விட்டனர். பெருமானார் (ஸல்) அவர்கள் வந்தபோது அவர்களிடம் ஆயிஷா நாயகியார் அதுபற்றி முறையிட்டார்கள். "பெருமானே! பிலாலைத் தாங்கள் கண்டிப்பதேயில்லை. தங்களைப் பற்றிய அச்சமின்மையே இவ்வாறான அவரின் தவற்றுக்கான காரணம்" எனக் குறைப்பட்ட தம் மனைவியை நோக்கி நபி பெருமான் (ஸல்) அவர்கள், "ஆயிஷா! ஒரு மனிதன் வாலாயமான தன் பணியில் தவறிவிடக் காரணம் அவனது கவனம் வேறொரு பக்கம் திரும்பி விடுவதேயாகும். அதேபோல் பிலாலின் கவனம் வேறொரு பக்கம் திரும்பிவிட்ட தாலேயே இன்று அக்கோப்பை அவரின் கைதவறி விழுந்து உடைந்துவிட்டது. ஆனால் ஒரு வேளையின் போது பிலாலின் கவனம் வேறுபுறம் திரும்பி விட்டதெனில் ஆண்டவன் மீதாணையாக அது என் புறமேயன்றி வேறில்லை என்பதை நீ அறியமாட்டாய். இன்று அக் கோப்பை உடைந்ததற்காகக் கண்டிக்க வேண்டுமானால் நான் உன்னையே கண்டிப்பேனேயன்றி நிச்சயம் பிலாலைக் கண்டிக்கமாட்டேன்" என்றார்கள்.

'கைபர்' போர் முடிந்து மதீனா திரும்பிய வழியில் ஓரிடத்தில் அண்ணலார் (ஸல்) அவர்கள் தோழர்களோடு இராத் தங்கினார்கள். பயணக்களைப்பால் அனைவரும்

உறக்கத்தில் ஆழ்ந்துவிட்டால் காலைத் தொழுகைக்கு எழுப்பவேண்டிய பொறுப்பு ஹலரத் பிலால் (ரலி) அவர்களிடமே ஒப்படைக்கப்பட்டது. அவர்களைத் தவிர மற்ற தோழர்களனைவரும் உறங்கலாயினர். அண்ணலார் (ஸல்) அவர்களும் உறங்கலானார்கள். அனைவருக்கும் முன்னதாகக் கண் விழித்தவர்கள் அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களே. கதிரவனின் ஒளி பரவி நிற்பதைக் கண்டார்கள் அண்ணலார்.

விடிந்து வெகுநேரம் ஆகிவிட்டதே! ஏன் பிலால் பாங்கொலிக்கவில்லை. எங்கே அவர்? தேடிச் சென்றார்கள் அண்ணலார் (ஸல்). படையினர் அனைவருக்கும் முந்தினவராக ஹலரத் பிலால் (ரலி) தம் ஒட்டகையின் மீதே சாய்ந்தவர்களாக உறங்கிக் கொண்டிருந்தனர். அவர்களின் முகத்தில் வெய்யில் சுளீரென வீசிக் கொண்டிருந்தது. அண்ணலார் (ஸல்) அவர்கள் அருகே வந்து அழைத்தபோது திடுக்கிட்டுக் கண் விழித்து நின்றனர் பிலால் (ரலி), அவர்களின் பதட்டம் கண்டு அண்ணலார் (ஸல்) அவர்கள் முறுவலித்தார்கள்.

''பிலாலே! என்ன நேர்ந்தது உம்மீது இன்று?'' என காசிம் நபி (ஸல்) அவர்கள் கனிவுடன் வினவினார்கள்.

''ஏந்தலே! தங்களின் ஆன்மாவின் மீது என்ன நிகழ்ந்ததோ அதுவே என்மீதும். எனினும் என் வாழ்வில் இது ஒரு புதுமையே'' என்று தம் தோழர் குறையக் கேட்டு பெருமானார் (ஸல்) அவர்கள், ''ஆம்! இறைவன் நாடும்போது உங்களின் ஆன்மாக்களை தன் வசப்படுத்திக் கொள்கிறான். மீண்டும் அவன் நாடும்போது அவைகளை அவைகளின் உடல்களுக்கு மீளச் செய்கிறான்'' என உரைத்தார்கள்.

மக்கள் நம்பிக்கையின் அப்பொறுப்பாளர் தம் பொறுப்புணர்ந்து இரவெல்லாம் கண்ணுறங்காது நின்று வணங்கினார்கள். வைகறையின் பிறப்புக்குச் சற்று முன்னதாகவே ஓய்வுக்காகச் சாய்ந்தமர்ந்து அடிவானத்தின் வெளுமையைக் கூர்ந்தவர்களாகக் காத்திருந்தார்கள். அதே நிலையில் அவர்களை உறக்கம் ஆட்கொண்டது இறைவனின் நாட்டமே! தம் தோழரின் விடை கேட்டு மனம் பொருந்திய மாநபி (ஸல்) அவர்கள் பிலால் (ரலி) அவர்களை பாங்கொலிக்கச் செய்து தொழுகையை நிறைவேற்றினார்கள்.

மஸ்ஜிதுன் னபவீயில் ஒரு நாள் பாங்கொலித்து அமர்ந்த பிலால் (ரலி) அவர்களின் செவிகளில் அழுகுரல் கேட்டது. மாநபியின் மகளார் ஃபாத்திமா (ரலி) அவர்களின் இல்லத்திலிருந்தே கேட்டது அக்குரல். நாயகியார் ஃபாத்திமா (ரலி) அலீ (ரலி) அவர்களை மணந்து தனியே இல்லறம் நடத்திய கால சம்பவம் அது. மழலையாகப் பிறந்து மணம் பரப்பிக் கொண்டிருந்த சுவனத்தின் மலராம் ஸையிதினா ஹஸன் (ரலி) அவர்களின் அழுகுரலே தாம் கேட்பதென உணர்ந்த பிலால் (ரலி) விரைந்தனர் நபிமகளார் இல்லம் நோக்கி. அங்கே ஃபாத்திமா நாயகியார் திருகையில் மாவரைத்துக் கொண்டிருந்தனர். "அல்பதூல்! திருகையை விட்டு தாங்கள் குழந்தையைக் கவனிக்கலாமே. மாவரைக்க என்னை அனுமதியுங்களேன்" என வேண்டினர் பிலால்.

மக்க நகர வாழ்வில் மாநபியின் செல்வியை தம் தோளில் சுமந்து தாலாட்டி, மடியில் அமர்த்தி உணவூட்டி, உறங்கச் செய்து வளர்த்த வாஞ்சை பிலால் (ரலி) அவர்களின் நெஞ்சத்தில் நிலைத்திருந்தது. தம் தந்தையார்—அண்ணலார் (ஸல்) அகங்கவர்ந்த பிலால் (ரலி) அவர்களின் பால் அன்பும் மரியாதையும் நாயகியார்

பொருளடக்கம்

ஃபாத்திமாவிடமும் இருந்தன. பிலால் (ரலி) அவர்களின் சொல்லேற்று ஃபாத்திமா நாயகியார் எழுந்து மகனார் ஹஸனைச் சுமந்தனர். பிலால் (ரலி) திருகையில் அமர்ந்து மாவரைக்கலாயினர்.

பிலால் (ரலி) அவர்கள் பள்ளிக்குள் மீண்டபோது தொழுகை முடிந்து விட்டிருந்தது. பாங்கொலித்த முஅத் தினை—பிலாலைக்—காணாது வேறொரு தோழர் 'இகாமத்து' சொல்லியிருந்தார். எங்கே சென்றிருந்தனர் பிலால் என அண்ணலார் (ஸல்) வினவினார்கள். என்றைக்குமல்லாது அன்று தாம் 'இகாமத்து' சொல்லத் தவறி விட்ட காரணத்தை பிலால் (ரலி) அவர்கள் விளக்கக் கேட்டு மாநபி (ஸல்) அவர்களின் திருமுகம் மகிழ்வு கொண்டு மலர்ந்தது.

இவ்வாறாக அண்ணலார் (ஸல்) அவர்கள் மனப் பொருத்தம் கொண்ட சம்பவங்கள் ஹலரத் பிலால் (ரலி) அவர்களின் வாழ்வில் அநேகம். அவர்கள் ஒருநாளும் பிலால் (ரலி) அவர்களைக் கடிந்து கொண்டதில்லை; கண்டிக்க நேர்ந்ததில்லை. மக்காவிலும் மதீனாவிலும் கழிந்த—ஏறத்தாழ இருபத்து மூன்றாண்டுகால வாழ்வில் இறைவனின் தூதருக்கென தமது உடலையும் உள்ளத்தையும் உணர்வுகளையும் முழுமையாக அர்ப்பணித்த ஒப்பற்ற ஊழியராக — உபகாரியாக ஹலரத் பிலால் (ரலி) விளங்கினார்கள்.

மதீனாவின் வீதிகளில் ஒருநாள் சென்று கொண்டிருந்த பிலால் (ரலி) அவர்களின் செவிகளில் தம்மை அழைத்த குரல் கேட்டது. ''ஏ ஹபஷீ! மாதத்தில் இன்னும் எத்தனை நாட்கள் மீதமுள்ளனவென்பதை கவனித்தாயா? என் கடனைத் தீர்க்க இன்னும் நான்கே



பொருளடக்கம்

நாட்கள் மீதம் உள்ளன. அதற்குள் நீர் கடன் பட்டிருப் பதை கொடுத்துத் தீர்க்க தவறுவீராகில் உம்மை என் அடிமையாக்கிக் கொள்வேன். ஜாக்கிரதை! முந்தைய மேய்ச்சல் வேலையை நீர் மேற்கொண்டேயாகவேண்டும்'' என்ற ஒரு குரல் கேட்டு ஹலரத் பிலால் (ரலி) விக்கித்து நின்றனர். ஆம்! அவர்கள் கடன் பட்டிருந்த ஒரு யூதனின் குரலே அது. அவ்வளவும் அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களுக்காக அவர்கள் பட்டிருந்த கடன்— ஏழைகள், வறுமைப்பட்டவர்களின் துயரந்துடைக்க அண்ணலார் (ஸல்) அவர்கள் ஏவியபோது, நபி மணித் தோழர்கள் எவரிடமும் ஏதுமில்லாத நிலையில் அண்ணலரின் ஏவலை நிறைவேற்றியே தீரவேண்டுமென அக்கறை கொண்டு ஹலரத் பிலால் (ரலி) அவர்கள் தம்முத்திப் பாகவே தம்மீது சுமத்திக் கொண்ட கடன்கள்.

இனி என்ன செய்வர் பிலால். அன்று முழுவதும் அவர்களுக்கு நிம்மதியில்லை. உமையா இப்னு கலஃபிடம் தாம் பட்ட முந்தைய வேதனைகள் நினைவில் வந்து அவர்களை வதைத்தன. இரவு இஷாத் தொழுகை முடிந்ததும் அண்ணலார் (ஸல்) அவர்கள் முன்வந்து நின்றனர். நடந்த நிகழ்ச்சியை எடுத்துரைத்தனர். ''ஏந்தலே! நான் என்ன செய்வேன். இப்போதும் என் னிடம் அக்கடன் தீர்க்கத்தக்க தொகை ஏதும் இல்லை. அவனோ தான் கூறியபடி என்னை அடிமை கொள்ள நிச்சயம் வந்து விடுவானே. எனவே ஒரு சில நாட்களுக்கு நான் எங்கேனும் தலைமறைவாகி வாழ எனக்கு அனு மதி தாருங்கள். போதுமான பொருள் நம் கைவசம் வந்ததும் நான் அக்கடனை அடைத்து மீண்டு விடு கிறேன்'' எனக்கேட்டு நின்றனர். அண்ணலார் (ஸல்) அவர்கள் எதுவுமே உரைக்கவில்லை. மவுனமாகத் தங்கள் இல்லத்தினுள் சென்று விட்டார்கள்.

பொருளடக்கம்

அவர்களைப் பிரிந்த பிலால் (ரலி) அவர்கள் மதீனாவை விட்டும் வெளியேறிட முடிவு கொண்டார்கள். பயணத்துக்கான ஆயத்தங்களைச் செய்து கொண்டார்கள். பொழுது புலர்வதற்குச் சிறிது நேரமே இருந்தது. ஒரு தோழர் வந்து அவர்களை அண்ணலெம் பெருமானார் (ஸல்) அவர்கள் அழைக்கும் செய்தி கூறினார். பிலால் (ரலி) அவர்கள் சென்றபோது அங்கே! நான்கு புரவிகள் பொதிகளைச் சுமந்தவண்ணம் நின்றிருந்தன. ஹலரத் பிலால் (ரலி) அவர்களைக் கண்டதுமே அண்ணலார் (ஸல்) "உமக்கு நன்மாராயம் ஓ பிலால்! இதோ உம் கடன்களைவிட அதிகமான இறைவனின் அருட்கொடைகள் எனக்கு அன்பளிப்பாக வந்துள்ளன. இவைகளைக் கொண்டு உம் கடன்களைத் தீர்த்திடுவீராக" எனக் கூறியனுப்பினார்கள்.

அண்ணலார் (ஸல்) அவர்களின் புறமே பிலால்(ரலி) அவர்களின் கவனம் எப்போதுமிருக்கும். அவர்களின் பாலே அவர்களின் பார்வை திரும்பியிருக்கும். அண்ணலார் (ஸல்) அவர்களுக்குப் புரியும் ஊழியமே பிலால் (ரலி) அவர்களின் கடமையாகவும் பெருமையாகவும் இருந்தது.

பள்ளியில் பாங்கொலித்து தொழுகைக்கு மக்களை அழைப்பதைப் போல், போர்க்காலங்களில் போருக்கெனவும் மக்களை அவர்கள் கூவியழைப்பர். வீதிகளெங்கும் 'ஹய்ய அலல் ஜிஹாத்—போருக்கென திரண்டு எழுங்கள்' என அவர்களின் குரல் ஒலிக்கும். போர்க் களங்களிலும் செய்திகளையும், கட்டளைகளையும் ஏந்தி அவர்கள் துரிதமாக எத்திவைக்கும் பணிகளை மேற்கொள்வர்.

மாதபிகளார் மனங்குளிர குணங்கொண்டு வாழ்ந்த பிலால் (ரலி) அவர்களைப் பேதலிக்கச் செய்வதாய்

பொருளடக்கம்

இறங்கியது ஒரு பேரிடி. அண்ணலெம்பெருமான் (ஸல்) அவர்களைப் பிரிய நேர்ந்ததே அப்பேரிடி. அண்ணலார் (ஸல்) அவர்கள் தம் இறுதிப் பெரும் ஹஜ்ஜை நிறை வேற்றித்திரும்பிய நாளிலிருந்தே அவர்களின் நடைமுறை களில் விளைந்த மாறுதல்களை மற்ற தோழர்களைப் போலவே ஹலரத் பிலால் (ரலி) அவர்களும் கவனித்தே வந்தனர். மறுமை வாழ்வுக்கான மாநபி (ஸல்) அவர்களின் ஆயத்தங்கள், பிரிய விடைபெறுவதை உணர்த்துவதைப் போன்ற உபதேசங்கள், முதுமையின் தளர்வு, நோயின் சீண்டுதல்கள், காய்ச்சலின் கடுமை இவை அனைத்தாலும் பிலால் (ரலி) அவர்களின் உள்ளமும் அலைக்கழிந்துக் கொண்டிருந்தது. காய்ச்சலின் கடுமையைத் தவிர்க்க பிலால் (ரலி) அவர்களே துருத்திகளில் நீர் அள்ளி அள்ளிக் கொணர்ந்துத்தர அதனை ஊற்றி உடலின் சூட்டைத் தணித்து அண்ணலார் (ஸல்) அவர்கள் மிகச் சிரமத்தோடு பள்ளிக்குவர நேர்ந்த சந்தர்ப்பங்களையும் கண்டு கனிந் தனர் பிலால். ஒருநாள் பிந்திய இரவின் — இஷா— தொழுகைக்கு பாங்கொலித்து நெடுநேரமாகியும் அண்ண லார் (ஸல்) அவர்கள் பள்ளிக்கு வராமை கண்டு அவர் களின் வாசலில் வந்து நின்றனர் பிலால்; அண்ணலரின் வருகைக்காகத் தோழர்கள் காத்திருக்கும் செய்தியை அறிவித்தனர். அண்ணலார் (ஸல்) அவர்களோ காய்ச்ச லினால் விளைந்த கடும் ஆற்றாமையினால் படுக்கை யினின்றும் எழவே மாட்டாமல் ஹலரத் அபூபக்கர் (ரலி) அவர்களைக் கொண்டு தொழுகையை நடத்தப் பணித் தார்கள். அந்தச் செய்தி செவிபட்டதுமே, ''என் நம்பிக் கைகள் யாவும் பொய்த்துப் போயின. என் இடுப்பே முறிந்து போனது. அந்தோ! என் தாய் என்னைப் பெறாமலே இருந்திருக்கலாகாதா? இன்றைய நாளை நான் சந்தித்திருக்க மாட்டேனே'' எனப் புலம்பியவர்

பொருளடக்கம்

களாக ஓடோடி வந்த பிலால் (ரலி) தங்கள் தலையை இறுகப்பற்றியவர்களாக ஒருபுறம் அமர்ந்தே விட்டனர். அண்ணலார் (ஸல்) அவர்களின் கட்டளையை அபூபக்கர் (ரலி) அவர்களிடம் கூறவும் அவர்கள் மறந்தே போயினர்.

அவர்களின் உணர்வுகள் உருக்குலையலாயின. உள்ளம் கனக்கலாயிற்று. நாட்கள் நகர்ந்து கொண்டிருந்தன. ஒருநாள் அன்னை ஆயிஷா (ரலி) அழைப்பதறிந்து பிலால் (ரலி) விரைந்தார்கள். அன்று பிலால் (ரலி) அவர்களின் பாங்கொலி கேட்டு 'அன்று பெற்ற இன்பத் தைப் போல் அதற்கு முன் பிலாலின் பாங்கொலியில் என்றுமே தாம் பெற்றதில்லை' என அண்ணலார் (ஸல்) அவர்கள் கூறியதாக அன்னையார் அறிவிக்கக் கேட்டு நெகிழ்ந்தனர் பிலால்! ஏன் இல்லை? ஏன் இல்லை?! அன்று மட்டுமே என்ன புதுமை???

பிரிவினைக் கிடைப்பட்ட நாட்களில் பிலால் (ரலி) அவர்கள் கொண்டிருந்த மனநிலையின் எதிரொலியோ அது!

அண்ணலார் (ஸல்) அவர்கள் மண்ணறை வாழ்வை ஏற்கப்புகுந்த அன்று பிலால் (ரலி) அவர்களால் பாங் கொலிக்கும் மேடையில் ஏறவே முடியவில்லை. ஹலரத் அலீ, அபூதர் (ரலி) ஆகியோர் அணைத்துத் தாங்கி ஒரு வழியாக அவர்களை மேடையில் ஏற்றி விட்டனர். ஆயினும் என்ன? பிலால் (ரலி) அவர்கள் உடல் குலுங் கியது; உள்ளம் கலங்கியது. 'அல்லாஹு அக்பர் அல் லாஹு அக்பர்' என அழுது வெடித்த அவர்களின் குரல் தேம்பியது, திக்கியது, திணறியது. அஷ்ஹது அன் லாயிலாஹ் இல்லல்லாஹ் என இருமுறை சிரமத்துடன் ஒலித்த பின்னர் தொடர்ந்த அஷ்ஹது அன்ன—முஹம்மத் என்ற அழகுத் திருநாமத்தை எத்துணை முயன்றும்

பொருளடக்கம்

முழுமையாக ஒலிக்க முடியாதாயினர் பிலால். மயங்கிச் சாய்ந்த அவர்களைத் தாங்கி இறக்கினர் தோழர்கள்.

அன்றோடவர்கள் பாங்கொலிக்க மறுத்தே விட்ட னர். கிலாஃபத்தை ஏற்ற-அவர்களின் தாளாளர்-அபூ பக்கர் (ரலி) அவர்களும், மற்ற தோழர்களும் எத்துணை ஆறுதல் வழங்கியும் ஊக்க மூட்டியும் தம் உணர்வுகளைக் கூட்டவே முடியாதாயினர் பிலால். பாசம் அணைத்த ஒரு நேசரைப் பிரிந்த பித்தரின் நிலையில் பிலால் (ரலி) அவர்களை மதீனாவின் வீதிகள் சந்தித்தன.

''அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களைச் சந் தித்தீர்களா? -அல்லாஹ்வின் தூதர் (ஸல்) எங்கேயிருக் கிறார்கள் எனக்குக் காட்டுவீர்களா?'' என அவர்கள் வினவக் கேட்டு ஒவ்வொரு தோழரும் கலங்கினர். அவர்களை விலை கொடுத்து வாங்கி, புனித வழி காட்டி, மனிதராக்கி விட்ட கலீஃபா அபூபக்கர் (ரலி) அவர்களும் கலங்கினர் பிலாலின் நிலை கண்டு. அவர்களை அமைதி யுறச் செய்து மதீனாவின் பள்ளியில் மீண்டும் பாங் கொலிக்கச் செய்ய கலீஃபா அபூபக்கர் (ரலி) அவர்கள் மேற்கொண்ட முயற்சிகளனைத்தும் விரையமாயின. தம் உணர்வுகளுக்கு உயிரூட்டிக்கொண்டிருந்த பேரெழில் முகத்தைக் காணாது தம் குரலின் வலிமையே குன்றி விட்டது எனக் கூறி மறுத்துவிட்டனர் பிலால் (ரலி).

அவர்களின் ஒப்புதல் பெற்று கலீஃபா அபூபக்கர் (ரலி)-அதுவரை 'குபா' வின் பள்ளியில் முஅத்தினாகப் பணியாற்றி வந்த ஹலரத் ஸஅது அல்—கர்ள் (ரலி) அவர்களை மதீனாவின் பள்ளியின் முஅத்தினாக அமர்த் தினார்கள். பின்னரும் என்ன! தொழுகையின் பாங் கொலியில், குத்பாப் பேருரையில் அண்ணலார் (ஸல்) அவர்களின் திருப்பெயர் கேட்குந்தோறெல்லாம் கலங்

கினர் பிலால்! அவர்களின் உடல் குலுங்கியது அழுகையால். மதீனாவில் வாழவே விரக்தி கொண்டு விட்டது அவர்களின் மனம்.

"நம்பிக்கையாளர்களின் நற்செயல்களில் மேலானது நாயனின் பாதையில் போர் புரிவதே" என நபிகள் மாமணி (ஸல்) அவர்கள் நவிலக் கேட்டிருந்தனர் பிலால் (ரலி). எனவே அவர்கள் போர் மேல் சென்றேனும் தங்கள் மனப்புண்ணை ஆற்றிக்கொள்ள நாடினார்கள். அதற்கென கலீஃபா அவர்களிடம் அனுமதி கோரினார்கள். கலீஃபா அபூபக்ர் (ரலி) அவர்களோ அமைதி கொண்டார்கள். எந்தப் பதிலுமே தரவில்லை. அண்ணலார் (ஸல்) அவர்களைப் பிரிந்த துயரம் அவர்களையும் தான் வருத்தியது. அந்த வருத்தத்தை அண்ணலாரின் அன்புக்குடையோர்களின் தோழமையாலேயே மறக்க முயன்று கொண்டிருந்த கலீஃபா பிலால் (ரலி) அவர்களைப் பிரிய எங்ஙனம் துணிவர்?

எனினும் நாட்கள் நகர்ந்தன. பிலால் (ரலி) அவர்களுக்கோ மன அமைதியே கிடைக்கவில்லை. கலீஃபா அவர்கள் பள்ளியின் மேடையில் அமர்ந்திருந்த ஒரு சமயம் திடீரென அவர்கள் முன் எழுந்து நின்றனர் பிலால் (ரலி). "அமீருல் முஃமினீன்! தாங்கள் என்னை உமையாவின் அடிமைத் தளையிலிருந்து அல்லாஹ்வுக்காகவே விடுவித்திருப்பின் அல்லாஹ்வின் பாதையில் போர் மேல் செல்ல என்னை அனுமதியுங்கள். இல்லை தங்கள் தேவைக்காகவே விடுவித்திருப்பின் தங்களின் அருகிலேயே நான் இருந்து கொள்வேன்" எனக் கூறினர்.

அக்கூற்றினால் கலீஃபா அவர்களின் கண்கள் பனித்தன. "பிலால் நான் உம்மை அல்லாஹ்வுக்காகவே விடுவித்தேன். எனினும் என்னை நீர் உம் பிரிவால் சஞ்சலப்

பொருளடக்கம்

படுத்தத் துணியாதீர். முதுமையின் அணைப்பில் சிக்கி விட்ட நான் வாழ்நாளின் மாலைப் பொழுதை அடைந்து விட்டேன். அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களை இழந்து அலங்குலைந்துள்ள என் உள்ளம் உம்முடைய பிரிவையும் சுமக்க முடியாது'' என தழுதழுத்த கலீஃபா அவர்களின் குரல் பிலாலின் வாயடையச் செய்துவிட்டது. அதற்குப் பின் அவர்கள் அக்கோரிக்கையை கலீஃபா அவர்களிடம் எழுப்பவே இல்லை.

இரண்டாண்டுகள் உருண்டோடின. கலீஃபா அபூ பக்கர் (ரலி) அவர்களும் மறைந்தனர். அதற்கிடையே மாநபியின் மகளார் ஃபாத்திமா (ரலி) அவர்களும் பிரிந்து சென்று விட்டனர். மதீனாவில் வாழவே முடியாதாயினர் பிலால். அவர்களைத் தடுக்க புதிதாக கிலாஃபத்தை ஏற்ற உமர் (ரலி) அவர்களாலும் இயலவில்லை. தம் அருகிலேயே ஏதேனும் ஒரு பொறுப்பிலமர்த்தி அவர் களை பெருமைப்படுத்த விழைந்தனர் புதிய கலீஃபா. தாம் கொண்டுள்ள விருப்பத்தை அவர்கள் வெளியிடக் கேட்டதுமே மேலாடையை விலக்கி தம் நெஞ்சத் தாமரையை கலீஃபா அவர்களுக்குக் காட்டினர் பிலால் (ரலி). 'இதையும்விட பெருமையும் உண்டா எனக்கு' எனக் கேட்பதைப்போல் அதில் பதிந்திருந்தது உமையா இப்னு கலஃப் வெந்தணலிட்டு வேகவைத்த கொடுமையின் வடு! ''அமீருல் முஃமினீன்! மார்க்கப்போரைத் தவிர்த்து மற்றெந்த பெருமையையும் என் மனம் நாடவில்லை. அன்பு கூர்ந்து என்னை மதீனாவினின்றும் வெளிச்செல்ல அனுமதியுங்கள். என் விலங்கொடித்த வள்ளல் அபூபக்கர் (ரலி) அவர்களுக்கு நான் பட்டிருந்த கடனே இத்தனை நாள் என்னைத் தாமதிக்கச் செய்தது. இனி என்னைத் தடுத்திட வேண்டாம்'' என்ற அவர்களின் வேண்டுதலைப்

பொருளடக்கம்

புறக்கணிக்க மாட்டாது கலீஃபா உமர் (ரலி) அவர்கள் அவர்களை ஸிரியாவுக்கு அனுப்பி வைத்தார்கள்.

ஹிஜ்ரி 13ம் ஆண்டு ஸிரியாவுக்குச் சென்ற ஹலரத் பிலால் (ரலி) அவர்கள் நான்காண்டு காலம் வரை பல போர்க்களங்களில் பங்கேற்றார்கள். முஸ்லிம் கள் ஈட்டக்கிடைத்த வெற்றிக்கு மேலான வெற்றிகள் கண்டு தங்கள் மாநபிகளார் வாக்களித்துச் சென்ற வாகை வளம்கண்டு மனம் மகிழ்ந்தார்கள்.

ஹிஜ்ரி 16ம் ஆண்டில் — பைத்துல் முகத்திஸ் வெற்றியின் போது ஸிரியாவுக்கு வந்த கலீஃபா உமர் (ரலி) அவர்களை நாட்டின் பல புறமிருந்தும் பிரதானி களும் தளகர்த்தர்களும் 'ஜாபியா'வில் கூடி சந்தித்தனர். ஹலரத் பிலால் (ரலி) அவர்களும் அச்சந்திப்பில் பங் கேற்றனர். மாநபி (ஸல்) அவர்களின் நேசரை நீண்ட இடைவெளிக்குப் பின் சந்தித்த கலீஃபா பெரும் மகிழ்வு கொண்டு வரவேற்று உரையாடினார்கள்.

அங்கிருந்து அனைவரும் ஜெருஸலம் நகர் சென்ற டைந்தனர். கலீஃபா அவர்கள் 'பைத்துல் முகத்திஸின் பொறுப்பை ஏற்றார்கள். புனித நகரின் வெற்றி ஒரு புறமும், ஆண்டுகள் பல கடந்து மாநபியின் கலீஃபா அவர்களைச் சந்திக்கக் கிடைத்த பெருமிதம் மறுபுறமு மாக ஹலரத் பிலால் (ரலி) அவர்கள் மன விரக்தி நீங்கி மகிழ்ந்திருந்த ஒரு மாலை நேரம்.

அந்தி சாய்ந்து அமைதி மக்களை அணைக்கத் துவங் கியிருந்தது. பரிதி தன்பயணத்தை முடித்த புன்முறுவலை பசுமையான வெளிகளின்மேல் வீசி மறைந்தது. மக்ரிபு தொழுகையின் நேரம். பிலால் (ரலி) அவர்களையே பாங்கொலிக்க வேண்டினார்கள் கலீஃபா. சூழ்ந்திருந்த அபூஉபைதா, முஆதிப்னு ஜபல் (ரலி) போன்ற மாநபி

பொருளடக்கம்

(ஸல்) அவர்களின் மேலான தோழர்களின் முகங்களெல்லாமும் அவர்களின் அகங்களின் தாபத்தைப் புலப்படுத்தின. மறுக்க இயலவில்லை மாநபி (ஸல்) அவர்களின் காதலரால். பாங்கொலிக்கலாயினர் பிலால் (ரலி). "அல்லாஹு அக்பர்-அல்லாஹு அக்பர்" என்ற ஏகத்துவ சங்கநாதம் பசுமை நிறைந்த சோலைகளெங்கும் ரீங்கார மிட்டுப் பரவியது. சூழவிருந்தவர்களையெல்லாம் மந்தகாசபுரி நோக்கி இழுத்துச் சென்றன அடுத்தடுத்தெழுந்த ஆன்மீக ஒலிகள். புரண்டுபோன ஒரு சகாப்தமே அனைவர் கண்முன்னே மீண்டும் வந்தது. மதீனாவின் பள்ளியில் அண்ணலார் நடமாடிய ஆத்மீக நினைவலைகள் இதயங்களைத் தாக்க கண்ணீர்க்கடலினுள் மூழ்கினர் கலீஃபாவும் மற்றையோரும்.

தாம் ஸிரியாவிலேயே தங்கி வாழ கலீஃபா அவர்களிடம் அனுமதி வேண்டினார்கள் பிலால் (ரலி). எங்கேனும் அவர்கள் மன அமைதியோடு வாழவேண்டும் என விரும்பிய கலீஃபா அவர்களும் அவ்வாறே அனுமதித்தார்கள். அதுவரை மதீனாவிலேயே வாழ்ந்து வந்த அபூ ருவைஹா (ரலி) அவர்களையும் தம்மோடேயே வாழ ஸிரியாவுக்கே அனுப்பிவிட வேண்டினார்கள் அத்தோழர். அண்ணலார் உருவாக்கிய உறவின் வாஞ்சையை எண்ணி நெகிழ்ந்த கலீஃபா அவர்கள் அவ்வேண்டுதலையும் அங்கீகரித்தார்கள். டமாஸ்கஸில் 'கூலான்' நகரில் இருவருக்கும் நிலங்கள் ஒதுக்கப்பட்டன. 'பத்ரு ஸஹாபாக்கள்' என்ற சிறப்பினால் அவர்களுக்கு வழங்கப்பட்ட நிரந்தர ஊதியமும் டமாஸ்கஸுக்கே முறையாக அனுப்பப்பட்டது. வேளாண்மையையும் வளர்த்து ஒன்றாகவே வாழ்ந்தனர் சகோதரர்கள் இருவரும்.

பொருளடக்கம்

ஸிரியாவின் பசுமை நிறைந்த வாழ்க்கையை ஹலரத் பிலால் (ரலி) அவர்கள் மனமகிழ்ச்சியோடு கழித்துக் கொண்டிருந்தபோது ஒருநாள்!

அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்கள் ஹலரத் பிலால் (ரலி) அவர்களின் கனவில் தோன்றி வினவினார்கள், "பிலாலே! என்ன அநீதி இது? எம்மை வந்து காணவே நேரம் வாய்க்கவில்லையா உமக்கு?" என்று. விழித்தெழுந்த ஹலரத் பிலால் (ரலி) பதறித் துடித்தார்கள், விரைந்தோடி வந்தார்கள் மதீனா நோக்கி. மாநபிகளார் துயில் கொள்ளும் மண்ணறையைக் கண்டதும் பாய்ந்து புரண்டு அவர்கள் அழுத காட்சி கண்டோரனை வரையும் கரைந்துருகச் செய்தது. பிலாலின் வருகைப் பற்றிய செய்தி தீ போல் பரவியது. தெருக்களெங்கும் மக்கள் திரண்டனர் மாநபி (ஸல்) அவர்களின் மெய்க் காதலரைக் காண. பெருமானார் (ஸல்) அவர்களின் நெஞ்சத் தாமரையில் கொஞ்சி வளர்ந்த பேரர்கள் ஹஸன், ஹுஸைன் (ரலி) இருவரும் ஓடோடி வந்தனர் தங்களைச் சுமந்து திரிந்த தயாளரைக்காண. ஆகா! அண்ணலார் (ஸல்) அவர்களின் திருத்தோற்றமே யல்லவா இரு கூராக பங்கிடப்பட்டுக் காட்சி தருகிறது கண்முன்னே! அள்ளியணைத்தார்கள் பிலால் (ரலி) அவ்விருவரையும். மாலை வரை கொஞ்சி மகிழ்ந்த சுவனத்தின் அவ்விரு சுந்தர மலர்களும் கெஞ்சின, "பிலால்! எங்கள் பாட்டனார் மனங்குளிர ஒலித்த உம் குரலை நாங்களும் செவியேற்கச் செய்யும். ஒரேயொரு முறை எங்களுக்காக மீண்டும் நீர் பாங்கொலியும்" என்று.

எவ்விதம் தவிர்ப்பர் பிலால் (ரலி) அவ்வேண்டுதலை. அண்ணலரின் திருச்சன்னிதானமல்லவோ அது!

பொருளடக்கம்

மறு நாள் காலை மதீனாவின் பள்ளியில் அம்மா நபிக் காதலரின் குரல் ஒலிக்கலாயிற்று!

புவனத்தின் மேட்டில் பிறந்து சுவனத்தின் முகடெல்லாம் ஒலித்த சுந்தரக்குரல் ஒலிக்கலாயிற்று!!

அரிஷ்னீ—எனக்கு ஜீவனூட்டுவீராக என அண்ணலார் (ஸல்) விரும்பி விழைந்தார்களே அந்த சந்தக்குரல் ஒலிக்கலாயிற்று!!!

"அல்லாஹு அக்பர் அல்லாஹு அக்பர்" என்ற தொனி நகரையே உலுப்பி விட்டது; மதீனாவின் அத்தனை ஜீவன்களையும் தட்டி எழுப்பி விட்டது.

"அஷ்ஹது அன் லாயிலாஹ இல்லல்லாஹ்" என்ற சத்தியப் பிரகடனம் அண்ணலாரின் ஆரம்பகால மதீனாப் பிரவேச நிலையை நினைவு படுத்தி விட்டது. அல்லாஹ்வின் தூதர் மீண்டும் எழுந்தருளியே விட்டார்களோ என்ற வியப்புணர்வு கொண்டு விரைந்தோடி வந்தனர் மக்கள் பள்ளி நோக்கி.

உணர்ச்சிகளின் மோதலால் தத்தளித்து நின்ற அச்சத்தியக்காதலர் 'அஷ்ஹது அன்ன முஹம்மதர் ரஸூலுல்லாஹ்' எனத் தம் கனிவாய் திறந்து மணியோசை முழங்கக் கேட்டு பதறிக்கலங்கி நிற்காதார் எவருமே இருக்கவில்லை மதீனாவின் இல்லங்களில்.

அண்ணலாரின் மண்ணறை நோக்கித் தம் கை நீட்டி ஆண்டவனின் தூதரென சாட்சியம் கூறித் தம் குரல் வெடித்த பிலால் நிலை குலைந்தனர். உணர்வுகளின் உளர்வால் மதீனா நகரம் அன்றடைந்த நிலையை அதற்கு முன் என்றுமே அடைந்ததில்லை. மண்ணகம் கேட்ட இஸ்லாத்தின் அந்த முதல் முஅத்தின் விடுத்த கடைசி பாங்கொலி அதுவே. அதற்குப்பின் ஹலரத் பிலால் (ரலி)

பொருளடக்கம்

என்றுமே பாங்கொலிக்கவில்லை; நீண்ட நாட்கள் வாழவே இல்லை.

மிகச்சில நாட்களே மதீனாவில் தங்கியிருந்த பிலால் (ரலி) அவர்கள் கலீஃபா அவர்களிடம் அனுமதி பெற்று மீண்டும் ஸிரியாவுக்கே வந்து விட்டார்கள். அங்கும் அவர்களை அண்ணலாரின் பிரிவினை ஏக்கம் விட்டு விலக வில்லை. முதுமையும் அதற்கு வெண்சாமரம் வீசிற்று. நோயும் வந்தணைத்தது.

ஹிஜ்ரி 20ம் ஆண்டில் ஒருநாள். அதுவே அவர்களின் மரணத்துக்கு முந்திய நாள். படுக்கையில் அவர்கள் சோர்ந்து கிடந்தனர். அருகில் அமர்ந்திருந்த அவர்களின் மனைவியார் அழலானார் தம் கணவரின் நிலை கண்டு. அழுகுரல் கேட்டே கண் விழித்த மாநபித் தோழர் முகம் மலரப் பேசினார்கள், "நீ அழவேண்டாம். என்னை வருத்தும் பிரிவினையின் தாபம் விலகவேண்டிய நேரம் நெருங்கிவிட்டது. நாளை என் வேந்தரை நான் நிச்சயம் சந்திப்பேன்" என்று.

அவ்வாறே நிகழ்ந்தேறியது. மறுநாள் அவர்களை மரணம் அணைத்தது. ஏறத்தாழ அவர்களின் வயது அப்போது அறுபத்து மூன்று. அண்ணலார் (ஸல்) அவர்கள் தங்கள் இக வாழ்வுக்கெனப் பொருந்தி ஏற்ற அதே காலகட்டம் வரை வாழ்ந்து பிரிந்த அப்பெரியாரின் உடல் டமாஸ்கஸின் அடக்க தலத்தில் 'பாபுஸ்ஸகீர்' என்ற வாசலருகே அடக்கப்பட்டுள்ளது.

'நீர் ஏழையாகவே வாழ்ந்து ஏழையாகவே மரணிப்பீராக" எனத் தம் ஏந்தலர் (ஸல்) பணித்த வழியை ஹலரத் பிலால் (ரலி) அவர்கள் என்றுமே தவறவிட வில்லை. என்றாலும் அவர்கள் பெற்ற ஏற்றத்தை எங்ஙனம் மதிப்பிடுவது. கெய்ஸரையும் கிஸ்ராவையும்

வெற்றி கண்டு பத்தரை ஆண்டுகாலம் பாராண்ட கலீஃபா ஃபாரூக்குல் அஃலம் அவர்கள் திருவாயால் 'ஸையிதீ — என் தலைவரே' என்றழைக்கப்பட்ட பேறு பெற்ற நபி மணித்தோழர் ஹலரத் (ரலி) அவர்களே. எனினும் அச்சமயங்களிலெல்லாம் "அமீருல் முஃமினீன்! நேற்று வரை அடிமையாக இருந்த ஒரு அபிஸீனியன் நான்" என்றே பணிவு கொள்வர் பிலால் (ரலி).

அந்தப் பணிவே ஹலரத் பிலால் (ரலி) அவர்களின் பெருமையை வளர்த்த மாபெரும் அணிகலன். மஸ்ஜிதுன் நபவீயில் ஒருநாள் பிலால் (ரலி) அவர்களை அழுத வண்ணம் அமர்ந்திருக்கக் கண்டு தோழர்கள் திடுக்கிட்டனர். அணுகி வினவியபோது, "அல்லாஹ்வின் திரு வேதத்தை ஓதிக்கொண்டிருந்தேன். அல்லாஹ், தான் நாடியவர்களுக்கு நேரிய வழியைக் காட்டுகிறான் என்ற சொற்றொடரை ஓதினேன். என் நிலையை எண்ணிப் பார்க்கிறேன். தன் பேரருளைச் சொரிய அல்லாஹ் என்னையும் நாடிய கருணையை நினைவு கூர்கிறேன். என் பெற்றோர்கள் அடிமைகளாய் இந்த நாட்டுக்கு இழுத்து வரப்படாதிருந்தால் இந்தப் பெருவாழ்வை எப்போது நான் கண்டிருப்பேன்" என அவர்கள் தம் நன்றிப் பெருக்கை வெளிப்படுத்தினார்கள். அல்லாஹ் அவர்களின் மீது புரிந்த பேரருளே பாங்கொலிக்கப்படும் நேரமெல்லாம் அவர்களின் நினைவு மனிதர்களின் எண்ணங்களில் பசுமையடைந்து கொண்டேயிருக்கிறது.

ஃ ஃ ஃ

பொருளடக்கம்

عمار بن ياسر بن عامر بن مالك بن كنانة

# ஹலரத் அம்மார் இப்னு யாஸிர் (ரலி)

இஸ்லாத்தின் ஆரம்ப காலத்தில் மக்கநகர குறைஷிகளின் கொடுமைகளுக்குத் தம் குடும்பத்தையே பலி கொடுத்த பெரியார் ஹலரத் யாஸிர் பின் ஆமிர் (ரலி)— யமன் நாட்டைச் சார்ந்தவர். தம் குடும்பத்தை விட்டுப் பிரிந்து எங்கோ வாழ்ந்த தம் உடன்பிறந்தார் ஒருவரைத் தேடி, ஹாரிஸ் மாலிக் என்ற மற்றுமிரு உடன் பிறந்தார்களுடன் பயணம் புறப்பட்ட அவர் மக்கநகரையும் வந்தடைந்தார். அங்கிருந்து அவ்வுடன்பிறந்தார் இருவரும் தங்கள் பயணத்தைத் தொடர்ந்த போது, ஹலரத் யாஸிர் (ரலி) புனித பூமியைப் பிரிய மனமற்றவராக அபூ ஹுதைபா இப்னு முகைரா என்ற-மக்ஸூமி கோத்திரக் குரைஷியின் ஆதரவைப் பெற்று மக்காவிலேயே தங்கி வாழலானார். அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்கள் பிறப்பதற்கு ஐந்தாண்டுகளுக்கு முன் நிகழ்ந்த குடியேற்றம் அது. அபூ ஹுதைபா, ஸுமையா என்ற தம் அடிமைப் பெண்ணை ஹலரத் யாஸிர் (ரலி) அவர்களுக்கு மணமுடித்து வைத்தார். அத்தம்பதியர் பெற்ற செம்மலே ஹலரத் அம்மார் (ரலி). சட்டப்படி குழந்தை அம்மார் அபூ ஹுதைபாவின் அடிமையேயானாலும் அப்பெருமனத்தார் அம்மார் அவர்களுக்கு அவர் மழலையாகத் தவழ்ந்த போதே விடுதலை வழங்கி விட்டார். சிறுவர் அம்மார் அபூ ஹுதைபாவின் நிழலிலேயே —தம் பெற்றோர்களிடமே வளரலானார். அப்துல்லாஹ் என்ற ஓர் இளவலும் அவருக்கு இருந்தார்.

இஸ்லாம் பிறந்த காலத்தில் அபூ ஹுதைபா இப்னு முகைரா உயிர் வாழ்ந்திருக்கவில்லை. ஹலரத் யாஸிர் (ரலி) அவர்களும் ஏறத்தாழ நாற்பத்தைந்தாண்டு கால வாழ்வை அப்புனித பூமியில் கழித்த ஒரு பழங்குடியாகி

விட்டிருந்தனர். அந்நிலையில் மக்காவில் 'அல்-அமீன்' என அறியப்பட்டிருந்த அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களைப் பற்றியும் அவர் அறிந்தே இருக்கவேண்டும். எனினும் அவர்களின் நபித்துவம் பற்றிய செய்தியை மட்டும் அவர் அறியாதிருக்க நியாயமுண்டு. அவரின் முதுமை மட்டுமே அதற்கான காரணமல்ல. தாருல் அர்க்கமுக்கு வெளியே வீதிகளில் சந்திக்கின்ற மிகவேசில முஸ்லிம்களும் தங்களின் பார்வைகளினால் மட்டுமே சங்கேதப் பரிமாற்றங்களோடு மார்க்கத்தை மட்டுப்படுத்தி வைத்திருக்க வேண்டியிருந்த காலம் அது.

யாஸிரின் மகனார் அம்மார் (ரலி) வளர்ந்து வாலிபத்தை அடைந்து விட்டனர். மழலையாகத் தவழ்ந்த போதே சுதந்திரக் காற்றை நுகரத் துவங்கிவிட்டிருந்த அம்மார் (ரலி) சுதந்திரமான உணர்வுகளையே கொண்டிலங்கினர். அவ்வுணர்வுகளோடேயே வளர்ந்து வாலிபத்தைப் பெற்றிருந்த காலத்தில் மக்க நகர வீதிகளில் புதிய சர்ச்சைக் காட்பட்டிருந்த — பூமான் முஹம்மது (ஸல்) அவர்களின் கொள்கைகள் ஹலரத் அம்மார் (ரலி) அவர்களை ஈர்த்ததில் வியப்பேதுமில்லை.

வணங்குதற்குரியவன் அல்லாஹ் ஒருவனே எனச் சாற்றுகின்றனர்—அவன் தூதர் முஹம்மத் (ஸல்) எனச் செவியுற்றதுமே 'அல் அமீன்' அவர்களைக் காண ஆவல் மீக்குற்ற அம்மார் (ரலி) அவர்கள் விரைந்தனர். அண்ணலார் (ஸல்) தங்கியிருக்கும் இடமாகத் தாம் செவியுற்ற —தாருல் அர்க்கமை அடைந்த அம்மார் (ரலி) அதன் வாசலிலேயே அமர்ந்திருந்த ஸுஹைப் இப்னு ஸினான் (ரலி) அவர்களைக் கண்டு வியப்புற்றனர். இருவரும் நீண்ட நாட்களாகக் கூட்டாளிகள். அவரும் தாம் கொண்டதே போன்ற மனஎழுச்சி கொண்டு அங்கு வந்து காத்திருக்

பொருளடக்கம்

கிறார் என அறிந்தபோது ஹலரத் அம்மார் (ரலி) அவர்களின் மகிழ்ச்சி இரட்டிப்பாயிற்று. இருவரும் ஒன்றிணைந்தே உட்சென்று அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் கரம்பிடித்து இஸ்லாத்தில் இணைந் தனர். அச்சமயம் ஹலரத் அபூபக்கர் (ரலி) அவர்களோடு ஐந்து அடிமைகளையும் இரண்டு பெண்களையுமே தாம் அங்கு கண்டதாக ஹலரத் அம்மார் (ரலி) அவர்கள் அறிவித்திருந்த போதிலும், ஏறத்தாழ முப்பத்தைந்து பேர்கள் வரை அதுவரை இஸ்லாத்தை ஏற்றிருந்தார் கள் என வரலாற்றாசிரியர்கள் எழுதுகின்றனர். ஹலரத் அம்மார் (ரலி) அவர்களின் மூலமே அண்ணலார் (ஸல்) அவர்களின் நபித்துவத் தோற்றம் பற்றிய செய்திகளை யும் சிறப்புகளையும் அறிந்து பெற்றோர்களான யாஸிர்— ஸுமையா (ரலி) ஆகியோரும் ஓரிரு தினங்களிலேயே இஸ்லாத்தை ஏற்றார்கள்.

தங்களின் பாரம்பரியத்தைப் பழிக்கப்பிறந்த புதிய மார்க்கத்தின் தோற்றம் குரைஷிகளைச் சினங்கொள்ளச் செய்தபோது அவர்களின் கோரப்பார்வைக்கு முதற் பலி யாய் நின்றவர்கள் முஸ்லிம்களாயிருந்த எளியவர்களும் வறியவர்களுமேயாவர். அபூஹுதைபாவின் இறப்பினால் ஆதரவற்றுப்போன ஹலரத் யாஸிர் (ரலி) அவர்களின் குடும்பத்தினரை மக்ஸூமி கோத்திரத்தார் தங்களின் கோர விளையாட்டுகளுக்குரிய பகடைக் காய்களாக்கிக் கொண்டனர். போதாக்குறைக்கு ஸுமையா அம்மையார் (ரலி) அவர்கள் அதுவரை அடிமைத்தளையிலிருந்து விடு தலை பெறாமலுமிருந்தனர். ஆனால் இஸ்லாத்தை அக்குடும்பத்தினர் ஏற்றுப்பெற்ற மனஎழுச்சி ஒரே நாளைக்கு மேலாகத் தங்களின் மதமாற்றத்தை மறைத்து

வைக்கவும் அவர்களை விடவில்லை. பாலை வெய்பிலிலும் தகிக்கும் பாறைகளுக்கடியிலும் கிடத்தப்பட்டு அக்குடும் பத்தினர் படும் வேதனைகளைக் கண்ணுற்ற சமயங்களி லெல்லாம், ''யாஸிரின் குடும்பத்தோர்களே! இவற்றுக் குரிய பலன்களை அல்லாஹ் உங்களுக்கு சுவனத்தில் நிச்சயம் தருவான்'' என நன்மாராயம் மொழிவதைத் தவிர்த்து அண்ணலார் (ஸல்) அவர்களாலும் வேறொன் றுமே செய்யமுடியாத கையறு நிலை! ஆனால், அக்குடும் பத்தினர் எவரும் தங்களின் உறுதியில் தளர்வடைய வில்லை. வன்னெஞ்சக் குரைஷியர்களின் வெங்கொடுமை களால் அவர்களை அணுவளவும் அசைக்கவே முடிய வில்லை.

முதுமை அடைந்து விட்ட ஹலரத் யாஸிர் (ரலி) அவர்களின் இருகால்களும் இரண்டு ஒட்டகைகளோடு தனித்தனியாகக் கட்டப்பட்டு, அவ்விரு ஒட்டகைகளும் எதிரெதிர்த்திசைகளில் விரட்டப்பட்டு அவர்களின் உடல் இரு கூறாகக் கிழித்தெறியப்பட்டது.

ஸுமையா அம்மையாரை உருக்குச் சட்டை அணி வித்து வெய்யிலில் நிறுத்தி வதைத்தனர் மக்ஸூமிகள். அச்சமயம் அவ்வழியாக வந்த அபூஜஹல் தன் வில்லை வளைத்து அம்மையாரின் பெண்மைத் தலத்தை நோக்கி அம்பெய்ய, துடிதுடித்துச் சாய்ந்த உடலைக் கண்டு கை கொட்டி நகைத்தனர் கொடியவர்கள். இறைவனின் மார்க்கத்திற்காகத் தம் உயிரை அர்ப்பணித்த முதற்பெண் மணி அம்மார் (ரலி) அவர்களை ஈன்ற இம்மாதரசி ஸுமையாவே யாவர்.

பெற்றோர்களைப் பிணைத்திருந்த அடிமை விலங் கின் பிடியற்றவராக இருந்த நிலையிலும் ஹலரத் அம்மார் (ரலி) அவர்கள் தம் எளிமையின் காரணமாக ஏற்க

பொருளடக்கம்

நேர்ந்த கொடுமைகள் எழுத்தில் வடிக்கத் தக்கவையல்ல ஒரு நாள் எரியும் தணலிடையிலும் கிடத்தப்பட்டு அத் தோழர் கிடந்த நிலையில் அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களே அவ்வழியாக வந்தார்கள். "யாரஸூ லல்லாஹ்—அல்லாஹ்வின் தூதரே!" என ஹலரத் அம்மார் (ரலி) அவர்கள் எழுப்பிய அலறல் குரல் அண்ண லார் (ஸல்) அவர்களின் பார்வையை ஈர்த்தது. "நெருப்பே! நீ நபி இப்ராஹீம் (அலை) அவர்களுக்கு ஆனதே போன்று அம்மாருக்கும் சாந்தியளிக்கக் குளிர்ந்து விடு" என அண்ணலார் (ஸல்) அவர்கள் விடுத்த ஏவலோடு ஹலரத் அம்மார் (ரலி) அவர்களின் அலறல் நின்றது. எரியும் தணலிடையே அவர் அமைதியோடு கிடப்பது கண்டு குரைஷிகள் வேறென்ன தான் செய்வதென வழி யறியாமல் அவரை விடுவித்து விட்டனர்.

மற்றொரு சமயம் அக் கொடியவர்கள் அத்தோழரைத் தண்ணீருக்குள் தலைகீழாக மூழ்க வைத்துப் பிடித்துக் கொண்டனர். அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர் களைப் பற்றி அவதூறான சொற்களைக் கூற பலவந்தப் படுத்தினர். வேதனையின் திணறல்களினூடே ஹலரத் அம்மார் (ரலி) அவர்களின் வாய்வழியாக அச்சொற்கள் வெளிப்பட்ட மறுகணமே 'அம்மார் இஸ்லாத்தை விட்டும் வெளிப்பட்டு விட்டார்' என நபி பெருமான் (ஸல்) அவர்களிடமே சென்று அறிவிக்கச் செய்தனர் அக் கொடியோர். அண்ணலார் (ஸல்) அவர்களோ, "ஈமான் அம்மாரின் உதிரத்தோடு உறைந்து விட்டது. உச்சி முதல் உள்ளங்கால் வரை ஈமான் ஊறப் பெற்ற அம்மார் இஸ்லாத்தை விட்டும் ஒரு போதும் வெளியாகமாட்டார்" என்றே அறிவித்தார்கள்.

அண்ணலார் (ஸல்) அவர்கள் அத்தோழரின் பால் தாம் பெற்றெடுத்த மக்கள் பால் கொண்டிருந்த அன்பைப்

பொருளடக்கம்

போல் அன்பு கொண்டிருந்தார்கள். கொடியவர்களின் கரங்களிலிருத்து விடுபட்டு வந்து அழுது நின்ற அத் தோழரை அரவணைத்து நடந்ததென்னவென்று வினவி னார்கள். தமக்கிழைக்கப்பட்ட துன்பங்களையெல்லாம் விவரித்த ஹலரத் அம்மார் (ரலி) ''எம்மானே! தங்களைப் பற்றிய அவதூறான சொற்களை உதிர்க்கும்வரை அவர்கள் என்னை விடவே இல்லை. என் உள்ளமோ அல்லாஹ்வின் சந்நிதானத்தில் நான் அடையப்போகும் கதியை நினைத்து அச்சத்தால் நடுங்குகிறது'' எனப் பதறினர். அவர்களின் கண்ணீரைத் துடைத்த அண்ணலார் (ஸல்) 'அம்மாரே! நீர் அவலுறல் வேண்டாம். இதுபோன்ற சூழ்நிலை எதிர்ப்படும் போதெல்லாம் நீர் இன்று போலவே நடந்து கொள்வீராக' என ஆறுதல் வழங் கினார்கள்.

مَنْ كَفَرَ بِاللّٰهِ مِنْۢ بَعْدِ اِيْمَانِهٖۤ اِلَّا مَنْ اُكْرِهَ وَقَلْبُهٗ مُطْمَئِنٌّ ۢ بِالْاِيْمَانِ
وَلٰـكِنْ مَّنْ شَرَحَ بِالْكُفْرِ صَدْرًا فَعَلَيْهِمْ غَضَبٌ مِّنَ اللّٰهِ‌ ۚ وَلَهُمْ عَذَابٌ عَظِيْمٌ ۝

''எவரேனும் விசுவாசங் கொண்டதன் பின்னர், அவர் அல்லாஹ்வை—(நிராகரித்தால் அவரைப்பற்றி கவனிக்கப்படும்.) அவருடைய இருதயம் விசுவாசத் தைக் கொண்டு முற்றிலும் திருப்தியே அடைந் திருக்க, எவருடைய நிர்ப்பந்தத்தின் மீதும் அவர் (இவ்வாறு) நிராகரித்தால்— அவர் மீது யாதொரு குற்றமுமில்லை). எனினும் (இத்தகைய) அவர்களு டைய இருதயத்தில் நிராகரிப்பே நிறைந்திருந்(து இவ்வாறு செய்)தால் அவர்கள் மீது அல்லாஹ்வுடைய கோபந்தான் ஏற்படும். அவர்களுக்கு மகத்தான வேதனையும் உண்டு'' என்ற (16:106) இறைவசன மும் அச்சமயம் இறங்கியது.

ஹலரத் பிலால் (ரலி) ஸஅது இப்னு அபீவக்காஸ் (ரலி) முதலானோருடன் இணைந்து ஹலரத் அம்மார்

பொருளடக்கம்

(ரலி) அவர்களும் ஹிஜ்ரத்துச் செய்தனர். மதீனா வந்த அவர்கள் முபஷ்ஷர் இப்னு முன்திர் (ரலி) அவர்களின் விருந்தினராகத் தங்கியிருந்தனர். பின்னர் ஹுதைபத்துல் யமான் (ரலி) அவர்களின் சகோதரராகப் பிணைக்கப் பெற்றனர்.

மாநபி பெருமான் (ஸல்) அவர்களோடிணைந்து மஸ்ஜிதுன்னபவீயை நிர்மாணிக்க மும்முரமாக உழைத்த உத்தமர்களில் அம்மார் (ரலி) அவர்களும் ஒருவர். "நாங்களெல்லாம் ஒவ்வொரு கல்லாகச்சுமந்து வருகையில் அம்மார் (ரலி) இரண்டிரண்டு கற்களாய்ச் சுமந்து கொணர்வர். முகமெல்லாம் வியர்வை வழிந்தோட அதில் படிந்து புரளும் புழுதியை அண்ணலார் (ஸல்) அவர்கள் மிகக் கனிவோடு துடைத்து விடுவார்கள்" என ஹலரத் அபூஸஈது (ரலி) அறிவிக்கின்றனர். திடீரென ஒரு தோழர் பல கற்களைப் பெருஞ்சுமையாய் ஹலரத் அம்மார் (ரலி) அவர்களின் மீது ஏற்ற, அதன் பளு தாளாது அம்மார் (ரலி) அவர்கள் அமர்ந்து விடக் கண்டு 'அந்தோ! அம்மார் இறந்தே போனார்' எனப் பலரும் கூக்குரலிட்டனர் விரைந்து வந்தடைந்த அண்ணலார் (ஸல்) அவர்கள், 'இல்லை அம்மார் இறக்கமாட்டார்'— எனப் பகர்ந்தவர்களாக கற்களையெல்லாம் இறக்கி தங்களின் கரங்களாலேயே அன்போடு வியர்வையையும் துடைத்து விட்டார்கள்.

மாநபித் தோழர்களிடையே உழைப்பின் அயர்வு களைய விளையாட்டாக உருவாக்கப்பட்ட நிகழ்ச்சியே அது என அறிந்த அண்ணலார் (ஸல்) அவர்கள், "இப்னு ஸுமையா! இன்று நீர் இறந்திடமாட்டீர். ஆனாலும் ஒரு நாள் துரோகிகளின் கூட்டம் உம்மைக் கொல்லும். நீர் அவர்களை இறைவனின் பால் அழைத்து நிற்பீர். அவர்களோ உம்மை நரகின் பால் அழைப்பர்" என்றார்கள். அதுவே தமக்கு இறவாப் பெருவாழ்வை உறுதிப்

படுத்தும் நன்மாராயமாக காலமெல்லாம் ஹலரத் அம்மார் (ரலி) அவர்களை மகிழச் செய்தது.

ஆரம்பகாலத்திலேயே இஸ்லாத்தை ஏற்றதோடன்றி அதனைப் பகிரங்கப்படுத்தியதற்குரிய பலனாகக் குரைஷியர்களிடம் ஏற்றவன் கொடுமைகளாலேயே மனத்திண்மை பெற்றிருந்த தோழர்களில் ஒருவரே அம்மார் (ரலி). இனி அவர்களின் மரணம் கொலையின் மூலமே என அண்ணலார் (ஸல்) அவர்களால் முன்னறிவிக்கப்பட்ட பின்னர் அச்சத்துக்கும் தயக்கத்துக்கும் அவசியமே அற்றுப் போய்விட்டது அவர்களுக்கு. நெஞ்சத் துணிவு மிகுந்த அந்நபிமணித் தோழர் அண்ணலார் (ஸல்) அவர்களின் வாழ்நாளில் 'பத்ரில் துவங்கி தபூக்கில் நிறைவடைந்த' அத்தனைப் போர்க்களங்களிலும் பங்கேற்று ஆண்மையுடன் போராடினார்கள்.

அண்ணலார் (ஸல்) அவர்களின் மறைவுக்குப் பின்னரும் கலீஃபா அபூபக்கர் (ரலி) அவர்களால் பொய்யன் முஸைலமாவோடு போராட 'யமாமா'வுக்கு அனுப்பப்பட்ட படையில் பங்கேற்றுச் சென்று வீரப்போர் புரிந்தார்கள். 'அப்போர்க்களத்தில் அவர்களின் ஒரு காது அறுந்து தரையில் விழுந்துத் துடித்துக் கொண்டிருந்தது. அம்மார் (ரலி) அவர்களோ அதனைப் பொருட்படுத்தாமலே சீறிச் சினந்து பாய்ந்து எதிரிகளின் அணிகளைப் பிளந்து முன்னேறிக் கொண்டிருந்தார்கள். ஒரு சமயம் முஸ்லிம்களின் அணி பின்னடைய நேர்ந்தது. மறுகணமே ஹலரத் அம்மார் (ரலி) அவர்களின் பெருங்குரல் ஒலித்தது. "ஓ முஸ்லிம்களே! சுவனத்தை விட்டுமா விரண்டோடத் துணிந்து விட்டீர்கள். அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களோடு நின்று போரிடுகையில் ஒருநாளும் நாங்கள் இவ்வாறு ஓடவில்லையே! இதோ

நான் அம்மார் இப்னு யாஸிர் நிற்கின்றேன். எனக்குதவ விரைந்து வாருங்கள்'' என அவர்கள் விடுத்த அழைப்பால், உணர்வு கொண்ட படையினர் மீண்டும் திரும்பினார்கள்; ஊன்றி நின்று போராடினார்கள் — என ஹலரத் அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

ஹிஜ்ரி 20ம் ஆண்டில் கலீஃபா உமர் (ரலி) அவர்களால் கூஃபாவின் ஆளுநராக அனுப்பப்பட்ட ஹலரத் அம்மார் (ரலி) அவர்கள் ஏறத்தாழ இரண்டாண்டு காலம் அப்பொறுப்பில் இருந்தார்கள். அச்சமயத்திலும் எளிய வாழ்வையே மேற்கொண்ட அவர்கள் தங்களின் தேவைப் பொருள்களையும் கடைத் தெருவில் தாங்களே வாங்கி, தாங்களே சுமந்து செல்வார்கள். எனினும் ஒரு பணியாளையும் கூட தமக்காக அமர்த்திக் கொள்ளாத அப்பெரு நபித் தோழரை கூஃபாவாசிகள் தங்களின் தலைமைப் பொறுப்பில் நீடிக்க விடவில்லை. பஸரா வாசிகளோடு அவர்களுக்கு ஏற்பட்ட நிலப்பங்கீடு பற்றிய ஒரு சச்சரவில் ஹலரத் அம்மார் (ரலி) அவர்கள் தலையிடவில்லை என்ற ஒரு காரணத்துக்காகவே அவர்கள் மீது காழ்ப்பு கொண்டு கலீஃபா அவர்களிடம் குற்றச் சாட்டுகளை இட்டுக்கட்டி முறையிட்டனர். அத்துடனன்றி கூஃபாவிலும் ஆளுநருக்கெதிராகவே பல அவமதிப்புகளையும் புரியலாயினர். மாநபித் தோழரைத் தங்கடங்களுக்கிடைப்படுத்த விரும்பாது கலீஃபா உமர் (ரலி) அவர்கள் ஹலரத் அம்மார் (ரலி) அவர்களை மதீனாவுக்கு வரவழைத்துக் கொண்டார்கள்.

அதற்குப் பின்னர் ஹலரத் அம்மார் (ரலி) அவர்கள் மதீனாவிலேயே வாழ்ந்து வரலாயினர். கலீஃபா உதுமான் (ரலி) அவர்களின் அனுமதியோடு பல முஹாஜிர்

பொருளடக்கம்

களும், அன்ஸார்களும் பிற மாநிலங்களில் தங்கிவாழப் பிரிந்து சென்றபோதும் ஹலரத் அம்மார் (ரலி) அவர்கள் மதீனாவைப் பிரியத் துணிந்தனரில்லை. ஆனால் ஹலரத் உதுமான் (ரலி) அவர்களின் கிலாஃபத்தின் பிந்திய காலத்தில் குழப்பங்கள் அலை பாய்ந்து நாட்டின் பல திக்குகளிலிருந்தும் குற்றச்சாட்டுகளும் முறையீடுகளும் தலைநகருக்கு வரலாயின. அவை பற்றிய உண்மைகளை ஆய்ந்து வந்து கூற தமது நம்பிக்கைக் குரியவர்களைத் தெரிந்தெடுத்து பலபுறமும் அனுப்பிய கலீஃபா அவர்கள் ஹலரத் அம்மார் (ரலி) அவர்களையும் அதற்காகவே எகிப்தின் புறம் அனுப்பி வைத்தார்கள். அவ்வாறு எகிப்து சென்ற அவர்களை கலீஃபா அவர் களோடு கருத்து முரண்பட்டு எகிப்தில் வாழ்ந்துக்கொண் டிருந்த குரைஷித் தலைவர்கள் எவ்வாறோ தம் வயப் படுத்தி அங்கேயே தங்கவைத்துக் கொண்டார்கள். அச் சமயம் ஹலரத் அம்மார் (ரலி) அவர்கள் ஏறத்தாழ தொண்ணூறு வயதுகளுக்கு நெருக்கமான பெரும் முது மையையும் எத்திவிட்டிருந்தார்கள்.

ஹலரத் அலீ (ரலி) அவர்கள் கிலாஃபத்தை ஏற்ற போது அவர்களை வந்தடைந்த ஹலரத் அம்மார் (ரலி) அவர்கள், சமூகம் இருமுகப்பட்டிருந்த நிலையில் தங்க ளின் மரணம் வரையிலும் கலீஃபாவுக்குத் துணையாகவே தொண்டாற்றினார்கள். ஆயிஷா நாயகியாரின் தலைமை யில் முஸ்லிம்களின் ஒரு கூட்டமே போர்ப்பரணி பாடி பஸரா நகரைக் கைப்பற்றி நின்றபோது ஹலரத் அம்மார் (ரலி) அவர்கள் ஹஸன் (ரலி) அவர்களை அழைத்துச் சென்று கூஃபாவிலிருந்து கலீஃபா அவர்களுக்காதரவாக பெரும்படை திரட்டித் திரும்பினார்கள்.

கூஃபாவின் பள்ளியில் இமாம் ஹஸன் (ரலி) அவர் களின் பேச்சுக்குத் துணையாக மேடையேறிய இவர்கள், 'மக்களே! அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் இம்மை

பொருளடக்கம்

யிலும் மறுமையிலும் அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் புனித மனைவியர் என்பதை நான் அறிவேன். எனினும் இறைவனின் கட்டளையைப் பேணுவதா அல்லது ஐயத்தின்பாற்பட்ட வழியைப் பின்பற்றுவதா? என்பதே இப்போது நமக்கேற்பட்டுள்ள பிரச்சினை' என வினா எழுப்பி மக்களைச் சிந்திக்கச் செய்தனர்.

"உண்மை அம்மாரின் பக்கமே இருக்கும்" என அண்ணலார் (ஸல்) அவர்கள் அருளிய முன்மொழி, நினைவில் தோன்றி எதிரணி கண்ட நாயகத் தோழர் களையும் பின்னடையச் செய்தது.

ஒட்டகைப் போரில் கலீஃபா அலீ (ரலி) அவர்களின் புறம் நின்று வீரப் போராற்றிய ஹலரத் அம்மார் (ரலி) அவர்கள் ஸிப்ஃபீன் போரிலும் பங்கேற்றார்கள். அச் சமயம் அவர்கள் ஏறத்தாழ 92 வயதுகளைக் கடந்து விட்டிருந்த போதிலும் சத்தியத்தைக் காக்கக் கிளர்ந்த வீரியம் அவர்களின் முதுமை உணர்வுகளைத் தலைதூக்க விடாமலே அமர்த்திவிட்டது. "இறைவனின் மீதாணை யாக நியாயம் நம் பக்கமே இருக்கிறது. வெற்றி பெற்றா லும் சரி, வீர மரணமடைந்தாலும் சரியே. அலீ (ரலி) அவர்களின் புறம் நின்று போர் புரிந்தவர்களுக்கே இம்மையில் இஸ்லாத்துக்காக உயிர் நீத்த பேறும், மறுமை யில் சுவனப்பெருவாழ்வும் கிட்டும். எனவே என்னைத் தொடருங்கள், சுவனத்தின் வாயில் அதோ திறந்திருக் கிறது" என மற்றவர்களை அழைத்த வண்ணம் எதிரி களின் அணிகளைப் பிளந்து முன்னேறிக்கொண்டிருந்த னர். ஹலரத் முஆவியா (ரலி) அவர்களின் படையினர் புறம் தலைமை தாங்கி நின்ற ஹலரத் அம்ர் இப்னுல் ஆஸ் (ரலி) அவர்களைக் கண்ட அவர்கள் 'அதோ அந்தக் கொடிபிடித்தவரை எதிர்த்து அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களோடிணைந்து (பத்ரு, உஹது, அகழ்

ஆக) மூன்று போர்க்களங்களைக் கண்ட நான் இன்று நான்காம் முறையாகவும் அவரோடு போரிடுகிறேன். அந்த மாவீரர் என்னை மரணக்குழியினுள் இறக்கிவிட்டாலும் சரியே நான் சத்தியத்தின் புறமே நிற்கிறேன் என்ற நம்பிக்கையை இழக்கமாட்டேன்'' என முழங்கினார்கள்.

தாகம் மேலிட்டுத் தண்ணீர் கேட்ட அவர்களிடத்தில் ஒருவர் கிண்ணத்தில் பால் கொணர்ந்து தந்து அருந்தக் கோரினார். அதனைப் பெற்றதுமே ஹலரத் அம்மார் (ரலி) அவர்களின் முகம் மலர்ந்தது. 'இப்னு ஸுமையா! உமது கடைசி உணவு பாலாகவே இருக்கும்' என அண்ணலெம்பெருமான் (ஸல்) அவர்கள் கூறக்கேட்டிருக்கிறேன். எனவே இன்று என் ஏந்தலரை நான் சந்திப்பது திண்ணம்—எனப் பகர்ந்தவர்களாக அதனை அருந்திவிட்டு விரைந்தார்கள். களத்தில் எதிர்ப்பட்டவர்களையெல்லாம் மளமளவென வெட்டிச் சாய்த்து வாளேந்தி அவர்கள் திரும்பிய திக்கெல்லாம் வைரிகள் விரண்டோடினர். தொண்ணூற்றிரண்டு வயதுகளைக் கடந்திருந்த அம்முது பெருந்தோழரின் புனித இரத்தத்தில் தங்கள் வாட்களைக் கறைப்படுத்த அஞ்சியும் பின்னடைந்தனர் பலர். இறுதியாக இப்னு கவிய்யா என்ற துரோகி அவர்களைத் தன் ஈட்டியால் தாக்கி, துவண்டு விழச் செய்தான். மற்றொரு ஸிரியாவாசி அவர்களின் தலையைத் துண்டித்தான்.

ஹலரத் அம்மார் (ரலி) அவர்களின் மரணத்தால் எதிரணியில் இருந்த அம்ர் இப்னுல் ஆஸ் (ரலி) அவர்களே அதிகம் திகைப்படைந்தனர். கொலையாளிகள் இருவரும் தங்களின் பிரதாபங்களைப் பீற்றிக் கொண்டவர்களாக ஹலரத் முஆவியா (ரலி) அவர்களின் அவையை

பொருளடக்கம்

அடைந்தனர். ஹலரத் அம்மார் (ரலி) அவர்களைக் கொன்ற பெருமையை அவர்களில் ஒவ்வொருவரும் தமக்கே உரிமை கூறித் தர்க்கித்தனர். அச்சமயம் ஆங்கமர்ந்திருந்த ஹலரத் அம்ர் இப்னுல் ஆஸ் (ரலி) அவர்கள் "நரகத்தை அனந்தரங்கொள்ளவா போட்டியிடுகிறீர்கள்?" என்றே அவர்களை வினவினார்கள். அச்செயல் ஹலரத் முஆவியா (ரலி) அவர்களையும் சினங்கொள்ளச் செய்தது. "என்ன அம்ரிப்னுல் ஆஸ்! நமக்காகத் தங்கள் உயிர்களையே பணயம் வைத்து நிற்கும் வீரர்களை இப்படித்தானா வாழ்த்துவது?" என அவர்கள் சினந்து கேட்க, "ஆம், ஆண்டவனின் மீதாணையாக அப்படித்தான். நானும் கூட ஏன் இருபதாண்டுகளுக்கு முன்பாகவே செத்துத் தொலையவில்லை என்றே கவலையுறுகிறேன்" என்றார்கள் ஹலரத் அம்ரிப்னுல் ஆஸ் (ரலி).

அண்ணலார் (ஸல்) அவர்களின் முன்னறிவிப்பை ஹலரத் அம்ரிப்னுல் ஆஸ் (ரலி) அவர்களும் அறிந்திருந்ததே அவர்களின் திகைப்புக்குக் காரணம். அப்போரிலிருந்தே தங்களை விடுவித்துக் கொள்ளவும் அவர்கள் முடிவு கொண்டனர். எனினும் ஹலரத் முஆவியா (ரலி) அவர்கள் 'அம்மாரின் மரணத்துக்குப் பொறுப்பாளிகள் நாமல்ல. போர்க்களத்துக்கு அம்முதியவரை அழைத்து வந்தவர்களே பொறுப்பாளிகள்' என சாகஸமாகப் பேசி அம்முடிவை மாற்றச் செய்தார்கள்.

உண்மையில் ஹலரத் அம்மார் (ரலி) அவர்களின் மரணம் நீதியை நிலைப்படுத்துவதாக — சத்தியத்தைச் சுட்டிக்காட்டுவதாக அமைந்தது. நடுநிலை காத்த பல நபிமணித் தோழர்களையும் கலீஃபா அலீ (ரலி) அவர்களின் புறம் வாளேந்தி நிற்கவேண்டியிருந்த அவர்களின்

பொருளடக்கம்

கடமையை உணரச் செய்வதாயமைந்தது. ஹலரத் குஸைமா பின் ஸாபித் (ரலி) போன்ற பல தோழர்கள் ஒட்டகை—ஸிப்ஃபீன் ஆகியஇரு போர்க்களங்களுக்கும் வந்திருந்தார்களானாலும் அவர்கள் வாளேந்தாது நடுநிலை காத்தனர். ஹலரத் அம்மார் (ரலி) அவர்களின் அர்ப்பணத்தையே அவர்களெல்லாம் சத்தியத்துக்குரிய சாட்சியமாகக் கொண்டு கலீஃபா அவர்களுக்காதரவாகப் போர் புரிந்து தாங்களும் தியாக வாழ்வினை ஏற்றனர்.

ஹலரத் அம்மார் (ரலி) அவர்களின் மரணச்செய்தி கலீஃபா அலீ (ரலி) அவர்களிடமிருந்து நீண்ட பெருமூச்சையே வெளிவரச் செய்தது. உண்மையில் கலீஃபா அவர்களின் ஒரு கரமே விழுந்ததென எதிரிகள் மகிழ்ந்தனர். "இஸ்லாத்தில் இணைந்த அன்றும் இறைவன் அம்மாரின் மீது அருள் புரிந்தான். மரணத்தின் வாயில் புகுந்த போதும் அல்லாஹ் அவர் மீது அருள் புரிந்தான். மறுமையில் அவர் எழுப்பப்படும்போதும் நிச்சயம் என் இரட்சகன் அவர்பால் கருணை புரிவான். அண்ணலார் (ஸல்) அவர்களின் கரம் பிடித்த தங்கள் விசுவாசத்தை வெளிப்படுத்தத் துணிந்த நான்கைந்து பேர்களில் ஒருவராகவே நான் அவரை முதலில் கண்டேன். மாநபி பெருமானின் தோழர்களில் முதியோர் எவரும் அம்மாரின் பிழை பொறுக்கப்படுவதில் ஐயம் கொள்ளமாட்டார். அம்மார் உண்மையாளராக உண்மைப்படுத்துபவராக விளங்கினார். அவரைக் கொன்றவன் நரகமே சேர்வான்" எனப் புகழ்ந்த கலீஃபா அவர்கள் தாமே அம்மார் (ரலி) அவர்களை இரத்தக்கறை படிந்த அவரின் ஆடையோடேயே போர்த்தித் தொழுவித்து, தங்கள்கரங்களாலேயே கூஃபாவின் மண்ணறையில் அடக்கினார்கள்.

ஹலரத் அம்மார் (ரலி) அவர்கள் எந்நாளும் இறையருள் சூழப்பெற்றிருந்தவர்களே. அவர்களின் குடும்பமே

பொருளடக்கம்

இறவாத பெருவாழ்வைப் பெற்றதன்றோ! தாங்கள் பிரியும் வரையும் அவர்களிடம் மாறாத அன்பு கொண்டிருந்த நபிகள் பெருமான் (ஸல்) அவர்கள் ஹலரத் அம்மார் (ரலி) அவர்களை 'தையிபுல் முதையிப்-நல்லோர் பெற்ற நல்லவர்' என அழைத்தார்கள். ஒரு சமயம் ஹலரத் அம்மார் (ரலி) அவர்களோடு ஏற்பட்ட சச்சரவில் ஹலரத் காலித் (ரலி) அவர்கள் ஹலரத் அம்மார் (ரலி) அவர்களின் மனம் புண்படும்படி பேசி விட்டார்கள். அச்செய்தி அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் செவிகளை எட்டியபோது அண்ணலார் (ஸல்) அவர்கள் 'அம்மாரிடம் விரோதங் கொண்டவர் அல்லாஹ்விடமே விரோதங் கொண்டார்' என நவின்றார்கள். அதனைக் கேட்டு அச்சமுற்ற ஹலரத் காலித் (ரலி) அவர்கள் விரைந்து சென்று ஹலரத் அம்மார் (ரலி) அவர்களை சமாதானப்படுத்தியதோடு பின்னர் தம் வாழ்நாளின் முடிவுவரை அவர்களுக்கு இணக்கமானவர்களாகவே இருந்தனர்.

''மக்கள் அறியாதவாறு தங்களை மறைத்து வாழும் ஒருசிலர் ஏதாவதொரு விஷயம் பற்றி சத்தியம் செய்து விடுவார்களாகில் அவர்களின் சத்தியத்தை இறைவன் நிறைவேற்றி விடுகிறான். அத்தகைய ஒருசிலரில் அம்மார் இப்னு யாஸிரும் ஒருவர்'' என அண்ணலார் (ஸல்) அவர்கள் குறிப்பிட்டிருக்கிறார்கள்.

'அலீ, அம்மார், ஸல்மான் இம்மூவரைக் கொண்டும் சுவனம் தேவையுற்றிருக்கிறது'' என்றும் அண்ணலார் (ஸல்) அவர்கள் கூறியுள்ளதாக ஹலரத் அனஸ் (ரலி) அவர் அறிவிக்கிறார்கள்.

அந்த தம் ஆளுநர் மீது கூஃபாவாசிகள் கல்மாறி பொழிந்தார்கள் எனச் செவியுற்ற கலீஃபா உமர் (ரலி)

பொருளடக்கம்

அவர்களோ 'இறைவா! நல்லோர் பொல்லோரிடையே பேதம் பாராத ஓர் இளைஞனை நீ தக்கீஃப் கோத்திரத்திலிருந்து கூஃபாவாசிகளின் புறம் சாட்டி விடுவாயாக. அவன் அவர்களின் மீது தன் காட்டாட்சியை நடத்தட்டும்' எனச் சபித்தே விட்டார்கள். அந்தச் சாபக்கேடும் பிற்காலத்தில் நிறைவேறியே முடிந்தது.

ஆனால் எத்தகை கொடுமைகள் தமக்கிழைக்கப்பட்ட போதும் ஹலரத் அம்மார் (ரலி) அவர்களோ பொறுமையையே மேற்கொண்டார்கள். இமாமாக நின்ற அவர்களின் தொழுகையிலேயே குறைகளைக் கூறினர் கூஃபாவாசிகள். ஹலரத் அம்மார் (ரலி) அவர்களோ, "அண்ணல் எம் பெருமான் (ஸல்) அவர்களின் பின்னேயே நின்று தொழுகையைக் கற்றவன் நான். அவர்களின் அடிச் சுவட்டைக் கூட காணாத இவர்கள் என் தொழுகையில் குறை கூறுகிறார்களே" என்பதைத் தவிர்த்து வேறொன்றும் கூறவில்லை.

ஒரு முறை அவர்களோடு வழக்காடிய கூஃபாவின் செல்வந்தன் ஒருவன் 'ஒற்றைச் செவியனே!' என அவர்களை விளித்தான். அப்போதும் சினங்கொள்ளாத ஹலரத் அம்மார் (ரலி) அவர்கள் "அந்தோ பரிதாபம்! இறைவனின் பாதையில் இழக்கப்பட்ட என் மேலான செவியையல்லவா நீ பழிக்கிறாய்" என்று மட்டுமே அவனுக்கு எடுத்துரைத்தார்கள்.

கூஃபாவின் ஆளுநர் பொறுப்பைத் துறந்து மதீனா வந்த அவர்களை கலீஃபா உமர் (ரலி) அவர்கள் கண்டு, "அபுல் யக்த்தான்! என் அழைப்பினால் தங்களின் மனம் புண்பட்டதோ?" என வினவினார்கள்.

"அமீருல் முஃமினீன்! தாங்கள் ஆளுநர் பொறுப்பளித்து என்னைக் கூஃபாவுக்கு அனுப்பியபோது நான்

பொருளடக்கம்

எந்த வித மகிழ்ச்சியும் கொள்ளவில்லை. அதுபோலவே பொறுப்பிலிருந்து விலகி மதீனா திரும்ப தாங்கள் அனுப்பிய கட்டளையால் நான் எவ்வித வருத்தமும் அடையவில்லை'' என்றனர் ஹலரத் அம்மார் (ரலி). ஆம் அவர்கள் பொறுப்பேற்றுச் சென்றதும் அல்லாஹ்வுக்காகவே பதவி துறந்ததும் அல்லாஹ்வுக்காகவே. வாழ்க்கையின் ஒவ்வோர் அடியிலும் அவர்கள் இறைவனின் பொருத்தத்தையே தேடினார்கள்.

ஸிப்ஃபீன் போர்க்களத்தில் அவர்கள் வாளேந்திப் புறப்பட்டபோதும் கூட 'இறைவா! ஒரு மலையின் மீதிருந்து உருண்டோ, அல்லது எரியும் தணலில் கிடந்தோ அல்லது நீரில் மூழ்கி இறந்தோ உன் பொருத்தத்தைத் தேடவேண்டும் என்றிருந்தால் நிச்சயமாக நான் அவ்வாறு செய்யப் பின்னடையமாட்டேன். இப்போது நான் வாளேந்திப் புறப்படுவதும் உன் பொருத்தத்தை நாடியே. நீ என்னை அதனைவிட்டும் பேரிழக்கச் செய்து விடாதே'' என இறைஞ்சியவண்ணமே புறப்பட்டார்கள். அவர்கள் தேடிய பேறே அவர்களுக்குக் கிடைத்தது.

ஃ ஃ ஃ

பொருளடக்கம்

صهيب بن سنان بن مالك الربعي النمري

# ஹழரத் ஸுஹைப்-பின் ஸினான் (ரலி)

'**ரோ**மர்களில் முதல் முஸ்லிம்' என அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களால் குறிப்பிடப் பெற்ற ஹழரத் ஸுஹைப் (ரலி) அவர்கள் 'ஸுஹைப் ரூமி' என அழைக்கப்பெற்ற போதிலும் அராபியப் பெற்றோர்களுக்குப் பிறந்தவர்களேயாவர். அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்கள் பிறப்பதற்கு ஏறத்தாழ இருபதாண்டுகளுக்கு முன்னர், இன்றைய பஸராவின் ஒரு பகுதியாகிய உபல்லாவை 'ஸினான்' என்பவர் பாரஸீக மன்னர் கிஸ்ராவின் பிரதிநிதியாக இருந்து நிர்வகித்து வந்தார். அச்சமயம் அதன்மீது படையெடுத்து வந்த ரோமானியர்கள் ஊரைக் கொள்ளையடித்து உடைமைகளை வாரிச் சென்ற போது அவர்களால் சிறை பிடிக்கப் பட்டவர்களில் ஸினானின் ஐந்து வயதுப் பாலகராக விளங்கிய ஸுஹைபும் சிக்கிவிட்டார். ஸுஹைபைத் தேடி அவரின் உடன்பிறந்த சகோதரி உமைமாவும் சிறிய தந்தை உபைதும் பல நாட்கள் பல திசைகளில் அலைந்து ஓய்ந்து விட்டனர்.

ரோமச் சந்தையில் அடிமையாக விலை பேசப் பட்ட ஸுஹைப், ஆயிரக்கணக்கான அடிமைகளோடு அடிமையாக பல கைகள் மாறிக்கொண்டே வளரலாயினார். அக்கால கட்டத்தில் உச்சி முதல் உள்ளங்கால் வரை ஈனத்தனத்தில் ஊறிப்போன ரோமர்களின் மானங் கெட்ட மிருக வாழ்வைக் காணக்கூடிய மிக நெருக்கமான வாய்ப்பு அவருக்கு கிட்டியது. ஒரு கண்ணியமான குடும்பத்தில் பிறந்து தலையெடுத்திருந்த அவரின் குழந்தையுள்ளம் அந்த ஈனப்பிறவிகளின் மானங்கெட்ட சூழ்

பொருளடக்கம்

நிலையை அழிக்க ஒரு புயலையோ பிரளயத்தையோ எதிர்பார்த்து ஏங்கியது.

ரோமர்களிடையே வளர்ந்து வாலிபத்தை அடைந்த ஹலரத் ஸுஹைப் அவர்கள் தங்கள் தாய்மொழியாகிய அரபியை மறந்துவிட்ட போதிலும் தாம் அரபு சமுதாயத்தைச் சார்ந்தவர் என்பதையோ, தமது வழிவாறு அரபு இரத்தத்திலிருந்தே வளர்ந்ததென்பதையோ ஒரு போதும் மறக்கவில்லை. எவ்வாறாயினும் அடிமைத் தளையிலிருந்து விடுபட்டு தமது கூட்டத்தாரோடு சென்று சேரவேண்டுமென்ற ஆவல் அவர்களை அலைக் கழித்துக் கொண்டிருந்த அதே சமயம், 'மர்யமுடைய மகனார் ஈஸா (அலை) அவர்கள் பற்றிய உண்மையை மக்களுக்கு எடுத்துரைத்து இருளிலிருந்து விலக்கிஒளியின் பக்கம் அவர்களை அழைத்துச் செல்லக்கூடிய இறை தூதர் ஒருவர் அரபு தீபகற்பத்தில் தோன்றும் காலம் அண்மிவிட்டது' என்ற செய்தியும் ஒரு கிருஸ்துவ அறிஞர் மூலமாக அவர்களுக்குக் கிட்டியது.

காலமும் கனிந்தது. வாணிப நிமித்தம் ரோமச் சந்தைக்கு வந்திருந்த 'கல்பு' எனப்பட்ட அரபுக் கோத்திரத்தார் அடிமையாக விலை கூறப்பட்ட ஹலரத் ஸுஹைப் அவர்களை வாங்கி மக்காவுக்கே அழைத்து வந்து விட்டனர். ஸுஹைப் அவர்களின் செந்நிற முக அழகில் மனதைப் பறிகொடுத்த அப்துல்லாஹ் இப்னு ஜுத் ஆன் என்ற அரபுத்தலைவர் அவர்களை விலை கொடுத்து வாங்கி, உரிமையுமளித்து தன் ஊழியத்திலேயே இருக்கச் செய்தார். பின்னர் அவர்களிடம் வெளிப்பட்ட ரோமானிய மொழித் தேர்ச்சி, உழைக்கச் சலியாத அவர்களின் உடல் திறன், பழக்கத்தில் ஒளிர்ந்த



பொருளடக்கம்

பண்பாட்டுச் சிறப்புகளெல்லாம் கூடி அவரைத் தம் வாணிபத்தில் ஈடுபடுத்தவே அப்துல்லாஹ் இப்னு ஜுத் ஆனின் உணர்வுகளைத் தூண்டின. அவ்வாறே அவர் களை ஈடுபடுத்தினார். அவ்வாதரவிலேயே இருந்து வாணிபஞ் செய்யலான அவர்கள் மீது இறையருளும் சொரியத் துவங்கியது. நாளுக்கு நாள் வளர்ந்து பெருகிய வாணிபத்தினிடையே ரோமானியப் பாதிரியின் அந்தச் செய்தி ஸுஹைப் அவர்களின் எண்ணத்தில் சஞ்சரித்துக் கொண்டேயிருந்தது.

வாணிப நிமித்தம் ஒருமுறை வெளியில் சென்றிருந்த அவர்கள் திரும்பி மக்காவுக்குள் நுழையும் போதுதான் ''முஹம்மதிப்னு அப்துல்லாஹ் தம்மை ஒரு நபி என அறிவித்திருக்கிறார்'' என மக்கள் அவரிடம் செய்தி கூறி னார்கள்.

''யார்? 'அல்அமீன்' என அழைக்கப்படுகிறாரே அவரா?'' என வினவினர் ஸுஹைப்.

''ஆம், அவரே தாம். ஒரே இறைவனின் பக்கம் மக்களை அழைக்கிறார்; நீதியையும் பரோபகாரத்தையும் வலியுறுத்துகிறார்; தீமைகளைவிட்டும் மானக்கேடுகளை விட்டும் மக்களை திசை திருப்புகிறார்......'' என முணு முணுத்த அம்மக்களிடமே ஸுஹைப், ''அவரை இப் போது எங்கே காணலாம்'' என்று வினவினர்.

''ஸஃபா மலையின் அடிவாரத்தில் உள்ள அர்க்கமின் வீட்டில் காணலாம். ஆனால்! ஓர் எச்சரிக்கை, மறைவாகச் செல்வீராக. நீர் செல்வதை எவரேனும் காண்பாராகில் நீர் தொலைந்தீர்'' என்று காதோடு காதாகக் கூறிவிட்டு மறைந்தார் ஒருவர்.

முஹம்மதிப்னு அப்துல்லாஹ்! ஆம், ஸுஹைபு அவர்களுக்கு முன்னமே பரிச்சயமானவர்கள் தாம். நுபுவ்வத்துக்கு முன்னதாகவே அண்ணலெம்பெருமான் (ஸல்) அவர்களோடு பழகியுள்ள இவர்கள், அண்ணலார் (ஸல்) அவர்களிடம் குடிகொண்டிருந்த அழகிய குணங்களோடு உரையாடல்களின்போது அண்ணலார் (ஸல்) அவர்கள் அறிவுடனும் தெளிவுடனும் தந்த விளக்கங்களும் தம்மை வெகுவாக ஈர்த்திருந்தனவென்று பின்னர் குறிப்பிட்டிருக்கிறார்கள்.

மக்களைப் பிரிந்து ஹலரத் ஸுஹைப் அவர்கள் அர்க்கமின் இல்லத்தை அடைந்தார்கள். அதே சமயம் அங்கு அம்மார் (ரலி) அவர்களும் வந்து சேர்ந்தனர். இருவரும் முன்னரே நட்பு கொண்டவர்களாதலால் ஒன்றாக அமர்ந்து தாங்கள் அங்கு வந்த காரணங்களைப் பரிமாறிக் கொண்டனர். இருவரும் ஒன்றாகவே உள்ளே சென்று ஒருவரையொருவர் முந்தியவராக அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களின் கரம்பிடித்து இஸ்லாத்தில் இணைந்தார்கள்! அச்சமயம் ஏறத்தாழ முப்பது பேர்கள் முஸ்லிம்களாகியிருந்த போதிலும் அவர்களில் பலர் அதனை வெளியிடாமலே இருந்தார்கள்.

அப்துல்லாஹ் இப்னு ஜுத்ஆனும் இறந்துவிட்டிருந்த அன்றைய அரபு மண்ணில் ஹலரத் ஸுஹைப் (ரலி) எவ்வித ஒட்டும் உறவுமற்ற அகதியாகவே இருந்தனர். எனினும் தாம் இஸ்லாத்தை ஏற்றுவிட்ட செய்தியை மறைத்துவைக்க அவர்களின் தன்மான உணர்வு அவர்களை அனுமதிக்கவில்லை. எனவே தங்களின் மனமாற்றத்தை மறுதினமே வெளிப்படுத்தி குரைஷிகளின் கொடுமைகளை விலை பேசலாயினர். ஹலரத் பிலால், அம்மார், கப்பாப் (ரலி) போன்றவர்களுக்கேற்பட்ட

கதியே ஹலரத் ஸுஹைப் (ரலி) அவர்களுக்கும் ஏற் பட்டது. மீண்டும் ஒரு நற்காலம் தமக்குப் பிறக்கும் என்ற நம்பிக்கையோடு ஹலரத் ஸுஹைப் (ரலி) அவர் களும் பொறுமையை மேற்கொண்டனர். ஆம்! அந்த நற் காலமும் பிறந்தது.

மக்காவை விட்டும் ஹிஜ்ரத்து செய்ய இறைவனின் அனுமதியை நாடி அண்ணலார் (ஸல்) அவர்கள் காத் திருக்கும் செய்தி எப்படியோ ஸுஹைப் (ரலி) அவர் களுக்கும் தெரிந்திருந்தது. அனுமதி கிடைத்து புறப்படும் போது, இவர்களுக்குத் தாம் அறிவிப்பதாக ஹலரத் அபூ பக்கர் (ரலி) அவர்கள் கூறியிருந்தார்கள். அவர் களோடிணைந்தே ஸுஹைப் (ரலி) அவர்களும் மக் காவை விட்டும் வெளியேறிவிட திட்டமிட்டிருந் தனர். ஆனால் ஹிஜ்ரத்தின் இரவில் குரைஷிகள் மேற் கொண்டிருந்த நடமாட்டங்கள், இவர்களை வந்து சந்திக்காமலே ஹலரத் அபூபக்கர் (ரலி) அவர்களை அண்ணலார் (ஸல்) அவர்களோடு புறப்படச் செய்தன. மறு நாள் விடிந்து, அண்ணலார் (ஸல்) தம் தோழரோடு புறப்பட்டு விட்டார்கள் என்ற செய்தி கிடைத்த பின் ஸுஹைப் (ரலி) அவர்கள் தாங்களும் வெளியேறச் சமயம் நாடிக் காத்திருந்தார்களாயினும், குரைஷிகள் ஒருவர் மாறியொருவராக முறைவைத்து இவர்களைக் காவல் காத்தனர்.

ஓர் இரவு ஹலரத் ஸுஹைபு (ரலி) அவர்கள் மலங் கழிக்க வெனக் கூறி வெளியில் சென்றனர்; சற்று நேரத் தில் வீடு திரும்பினர்; மறுமுறையும் மலங்கழிக்க வெனக் கூறிச் சென்றனர்; மீண்டும் திரும்பினர். இவ்வாறாகவே பலமுறை அவர்கள் சென்றுவரக் கண்டு காவல் நின்றவர்களில் ஒருவன் சொன்னான், "லாத்தும் உஸ்ஸாவும் உன் வயிற்றைப் பாழாக்கி விட்டன" என்று.

பொருளடக்கம்

அதைக் கேட்டு மற்றவன் சிரித்தான். ஹலரத் ஸுஹைப் (ரலி) அவர்களுக்கு வயிற்றுப் போக்கு ஏற்பட்டு விட்டதாக முடிவு கட்டிய காவலர்கள் இருவரும் சிறிது நேரத்தில் நிம்மதியுடன் உறங்கலாயினர். அவ்வாய்ப்பைத் தவறவிடாது ஹலரத் ஸுஹைப் (ரலி) அவர்கள் மதீனாவை நோக்கி விரைந்தார்கள்.

நகரின் எல்லையையும் அவர்கள் கடந்திருக்கவில்லை. அதற்குள்ளாகவே விழித்துக் கொண்ட காவலர்கள் கூச்சலிட்டு ஊரைக் கூட்டினர். ஸுஹைப் (ரலி) தப்பி விட்டதை அறிந்த குரைஷிகள் புரவிகள் மீதேறி மதீனாவின் புறம் விரைந்தனர். பாலைவனப் பாதையில் விரைந்து சென்றுக் கொண்டிருந்த ஹலரத் ஸுஹைப் (ரலி) ஒரு மேட்டின் மீதேறி நின்று கொண்டனர். அவர்களுக் கெதிராகத் தங்கள் விற்களை ஏந்திய குரைஷிகள் ''அடிமையாக இந்நகருக்கு வந்த நீர் இங்கு வந்த பின்னரே உரிமை பெற்றவரானீர். பொருள் சேர்த்தீர். பின்னர் நீர் நன்றி கெட்டு முஹம்மதுடன் இணைந்து அவரது மார்க்கத்தை ஏற்றீர். இப்பொழுது உம்மை எங்கள் நாட்டுச் செல்வத்தை எடுத்துக் கொண்டு தப்பிச் செல்ல ஒருக்காலும் நாங்கள் விடமாட்டோம்'' எனக் கொக்கரித்தனர். ஸுஹைப் (ரலி) அவர்களும் சளைக்கவில்லை. தங்களின் அம்புக் கூட்டையும் எடுத்துக் காட்டிய அவர்கள் 'குரைஷிகளே! அம்பெய்வதில் எனக்குள்ள ஆற்றலை நீங்கள் அறிவீர்கள். என் குறி ஒருக்காலும் தப்புவதில்லை என்பது உங்களனைவருக்கும் தெரிந்ததே. ஆண்டவனின் மீதாணையாக என்னிடம் உள்ள அம்புகளத்தனையும் தீரும் வரை உங்களை நான் கொல்லாமல் நின்றிருக்கப்போவதில்லை. பின்னர் என் வாளையும் நான் உங்களுக்கெதிராகப் பயன் படுத்துவேன். உங்களின் குறிக்கோள் என் உடைமைகளே எனில், அவைகளை

பொருளடக்கம்

என் வீட்டின் மூலையில் நான் புதைத்தே வந்தேன். நீங்கள் தாராளமாகச் சென்று எடுத்துக் கொள்ளுங்கள். உங்களின் உயிர்கள் உங்களுக்கு அருமையானவையாக இருந்தால் என் வழியில் குறுக்கிடாதீர்கள்'' எனப் பேசினார்கள்.

தமது உடைமைகளை ஹலரத் ஸுஹைபு (ரலி) அவர்கள் இழக்கத் துணிந்த அளவுக்கு குரைஷிகள் தங்கள் உயிர்களை இழக்கத் துணியவில்லை. உண்மையிலே அம்பெய்வதில் ஹலரத் ஸுஹைபு (ரலி) அவர்களுக்கிருந்த பயிற்சியும் தேர்ச்சியும் அனைவராலும் அறியப்பட்டே யிருந்தது. ஸுஹைபு (ரலி) அவர்களின் வீட்டினுள் புதைக்கப்பட்டிருந்த செல்வத்தையே குறியாகக் கொண்டு திரும்பினர் குரைஷிகள். ஹலரத் ஸுஹைபு (ரலி) அவர்களோ மதீனாவை நோக்கி நடந்தார்கள். தமது வாழ்நாளின் சேமிப்புகள் அவர்களின் பாதையில் தடையாகக் குறுக்கிடவில்லை. பயணத் தொலையும் பசியின் களையும் அவர்களை வருத்திய போதெல்லாம் தம் பெருமான் நபியின் திருமுகம் அவர்களின் கண்முன்னே தோன்றி களிப்பூட்டிக் கொண்டிருந்தது.

'குபா' வந்தடைந்த ஹலரத் ஸுஹைபு (ரலி) அவர்கள், அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களை ஹலரத் குல்ஸூம் பின் ஹதம் (ரலி) அவர்களின் இல்லத்தில் சந்தித்தனர். தம் தோழரைக் கண்டதுமே அண்ணலார் (ஸல்) அவர்கள் ''அபா யஹ்யா! மிகச்சிறந்த வாணிபம் செய்து வந்துள்ளீர்'' என மும்முறை குதூகலித்தார்கள். ''பெருமானே! எனக்கு முன் தங்களை எவரும் சந்திக்கவில்லையே. நிச்சயம் என் நிலையை ஹலரத் ஜிப்ரயீலே தங்களிடம் கூறியிருக்கவேண்டும்'' என வியந்தனர் ஸுஹைபு (ரலி).

பொருளடக்கம்

சோதனை வயப்பட்டு மீண்ட பின்னர் தாம்பட்ட வேதனைகளை விவரிப்பது மனித இயல்பே. அவ்விதமே விவரிக்கலான ஹலரத் ஸுஹைபு (ரலி) அவர்கள், "பெருமானே!, ஹிஜ்ரத்தின் பயணத்தில் தாங்களும் என்னை தங்களோடிணைத்துக் கொள்ளவில்லை. அபூபக்கரும் எனக்கறிவிக்கவில்லை. என்னைத் தனியாகக் கண்டதாலன்றோ குரைஷிகள் என்னை விரட்டி வந்தனர். நான் உழைத்துச் சேர்த்த உடைமைகளையெல்லாம் விலையாக்கி என் உயிரைக் காக்கவேண்டியதாயிற்று" எனக் குறைப்பட்டுக் கொண்டனர்.

"ஆயினும் நீர் கவலையுறவேண்டாம் அபா யஹ்யா! நீர் மிக லாபகரமான ஒரு வாணிபத்தையே முடித்து வந்துள்ளீர்' என அவர்களுக்கு ஆறுதல் கூறிய அண்ணலார் (ஸல்) அவர்கள்,

وَمِنَ النَّاسِ مَن يَشْرِي نَفْسَهُ ابْتِغَاءَ مَرْضَاتِ اللَّهِ ۗ وَاللَّهُ رَءُوفٌ بِالْعِبَادِ ۝

"அல்லாஹ்வின் (திருப்) பொருத்தத்தைப் பெறுவதற்காகத் தன்னுடைய உயிரையே தியாகஞ் செய்யக் கூடிய (ஸுஹைப் ரூமி போன்ற)வர்களும் மனிதர்களில் உண்டு. அல்லாஹ் (அத்தகைய) அடியார்கள் மீது மிகவும் கருணையுடையோன்" என்ற (2:207) திருவசனத்தை ஓதிக்காட்டினார்கள்.

ஹலரத் ஸுஹைப் (ரலி) மதீனாவில் ஸஅத் பின் கஸீமா (ரலி) அவர்களின் விருந்தினராகத் தங்கிப் பின்னர் ஹாரிஸ் பின் அல் ஸமா (ரலி) அவர்களின் சகோதரராகப் பிணைப்பேற்றார்கள். சிறந்த வில் வீரராகத் திகழ்ந்த அவர்கள் பத்ரு, உஹது உள்பட எல்லாப் போர்களிலும் பங்கேற்றனர். ஓய்ந்த நேரங்களில் தங்களின் போர்ச்சாகஸங்களை விவரிப்பதிலும்

பொருளடக்கம்

அவர்களுக்குத் தனி இன்பமிருந்தது. நபித்துவத்துக்கு முன்னரேயே அண்ணலார் (ஸல்) அவர்களுக்கு அறிமுகப் பட்டிருந்த அவர்களின் வாய்மை, நேர்மை போன்ற குணநலன்களாலும் வீரம், துணிவு போன்ற திறன்களா லும் அண்ணலார் (ஸல்) அவர்களின் பேரன்புக்குரியவர் களாக அவர்கள் விளங்கினர்.

அண்ணலார் (ஸல்) அவர்களின் மறைவுக்குப் பின் தலைமை ஏற்ற கலீஃபாக்களாலும் அவர்கள் பெரிதும் மதிக்கப் பெற்றனர். கலீஃபா உமர் (ரலி) அவர்களோ தம் மரணத்தொழுகையை நடத்த அவர்களையே வேண் டியதோடு புதிய கலீஃபா தேர்ந்தெடுக்கப்படும் வரை மஸ்ஜிதுன் னபவியில் தொழுகையை நடத்தும் இமாமாக வும் அவர்களையே நியமித்தார்கள்.

விருந்தோம்பலில் அவர்கள் மேற்கொண்ட விரிவால் அவர்கள் விரையமே செய்கிறார்கள் என்ற குற்றச்சாட்டை யும் ஏற்க நேர்ந்தது. கலீஃபா உமர் (ரலி) அவர்களே ஒருநாள் இவர்களைப் பற்றிய தம் மனங்கொண்டிருந்த மூன்று குறைகளை வெளியிட்டார்கள்.

'யஹ்யா என்ற ஒருபெயரால் நபியவர்கள் வாழ்ந்ததே யன்றி அப்பெயரில் எந்தக் குழந்தையும் தமக்கில்லாத நிலையில் ஹலரத் ஸுஹைபு (ரலி) தம்மை அபூ யஹ்யா எனப் பிரபலப்படுத்திவிட்டது,

விருந்தோம்பலில் அவர்கள் கடப்பு செய்தது,

ரோமராகவே தாமிருந்தும் ஹலரத் ஸுஹைபு (ரலி) தம்மை ஓர் அரபியென்று கூறிக் கொண்டது — ஆகிய வையே உமர் (ரலி) அவர்கள் கண்ட மூன்று குறைகள். அதற்குரிய பதிலாக ஹலரத் ஸுஹைபு (ரலி) அவர்கள்,

"அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்கள் ஒருநாள் என்னை அபா யஹ்யா என்றழைத்தார்கள். அவர்களின்

பொருளடக்கம்

திருவாயால் வெளிப்பட்ட அப்பெயர் எனக்கு மிகப் பிடித்தமாகி விட்டது. மக்களும் அவ்வாறே தொடர்ந்து என்னை அழைக்கலானார்கள். நான் அவர்களைத் தடுக்க வில்லை.

'உங்களில் மேலானவர் மனிதர்களுக்கு உணவளிப் பவரும் ஸலாமுக்கு பதில் கூறுபவருமே' என அண்ணலார் (ஸல்) அவர்கள் கூறக்கேட்டிருக்கிறேன். எனவே நான் விருந்தோம்பலில் கடப்பேற்படுவதைப் பற்றி கவலை கொள்ளவில்லை.

ரோமானியர்களிடமிருந்து நான் விலைபேசி வாங்கப் பட்டேனேயன்றி பிறப்பினால் நான் அரபியே. குழந்தைப் பருவத்தில் என்னை ரோமர்கள் சிறை பிடித்துச் சென்று தங்களின் அடிமையாக்கிக் கொண்டார்கள்'' என விளக் கினார்கள்.

இறுதியாக அப்பெரியார் ஹிஜ்ரி 38-ல் தமது 72-ம் வயதில் மதீனாவிலேயே மரணமடைந்து ஜன்னத்துல் பகீஃஇல் அடக்கம் செய்யப் பெற்றார்கள்.

ஃ ஃ ஃ

பொருளடக்கம்

المقداد بن عمرو الأسود الكِندي

# ஹலரத் மிக்தாத் இப்னு அஸ்வத் கிந்தீ (ரலி)

''மக்கமாநகரில் இஸ்லாத்தை நிராகரித்தவர்களுக் கெதிராக நின்று தாங்கள் முஸ்லிமாகி விட்டதை முதன் முதலாகப் பகிரங்கப்படுத்திய எழுவருள் ஹலரத் மிக்தாத் (ரலி) அவர்களும் ஒருவர்'' என ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரலி) அறிவித்தனர்.

ஒவ்வொரு நபிக்கும் உயிர்த் தோழர்களாக எழுவரை அளித்த அல்லாஹ் என்னுடைய உயிர்த்தோழர்களாக பதினான்கு பேர்களை அளித்துள்ளான் என்றருளிய நபி பெருமான் (ஸல்) அவர்கள், (1) ஹலரத் அபூபக்கர் (2) உமர் (3) அலீ (4) ஹம்ஸா (5) ஜஃபர் (6) ஹஸன் (7) ஹுஸைன் (8) அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (9) ஸல்மான் (10) அம்மார் (11) ஹுதைபா (12) அபூதர் (13) மிக்தாத் (14) பிலால் (ரலி-அன்ஹும்) எனப் பதினான்கு பெயர்களை அறிவித்தார்கள்.

ஹலரத் மிக்தாத் (ரலி) அவர்களைப் பற்றி மேலும் பல புகழுரைகளை நபி பெருமான் (ஸல்) அவர்கள் வழங்கி யுள்ளார்கள். 'பஹ்ரா' வைச் சேர்ந்த அம்ரு இப்னு ஸஅலபா என்பவருக்குப் பிறந்த ஹலரத் மிக்தாத் (ரலி) பாரம்பரியப்பகை காரணமாக தாங்கள் பிறந்த மண்ணைத் துறந்து மக்காவில் குடி புகுந்தனர். அங்கே அஸ்வத் கிந்தீ என்பார் இவர்களது குடும்பத்தை ஆதரித்து மிக் தாத் அவர்களை வளர்க்கும் பொறுப்பை ஏற்றுக் கொண் டதால் அவரது பெயராலேயே இவர்கள் மிக்தாத் இப்னு அஸ்வத் கிந்தீ என அறியப்படலாயினர்.

பொருளடக்கம்

மக்கமாநகரில் இன்னும் அவர்கள் காலூன்றவே இல்லை - அதற்குள்ளாகவே ஏகத்துவத்தின் அழைப்பு அவர்களின் செவியில் பட்டுவிட்டது. ஹலரத் மிக்தாத் (ரலி) அவர்கள் ஓர் அகதியாகவே நின்ற நிர்க்கதியான நிலையிலும் அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களின் அழைப்பை ஏற்றதோடு மட்டுமல்ல, மக்கநகரின் பிறப்புக் குடிகளாக நின்றவர்களெல்லாம் உண்மையை வெளிப்படுத்த அஞ்சி நின்ற நிலையில் இவர்கள் தாங்கள் முஸ்லிமாகி விட்டதை கஅபாவின் முன்னிலையில் பகிரங்கமாக அறிவித்தும் விட்டனர். அதன் பலன்........!

கொடுமையின் கோரக் கரங்களில் அவர்கள் சிக்கித் தவித்தார்கள். பொறுமையின் எல்லைக் கோட்டைக் கடந்து புகலிடம் தேடி அபிஸீனியாவை அடைந்தார்கள். சில காலம் கழித்து அவர்கள் மக்காவுக்கு வந்த போது முஸ்லிம்கள் மதீனாவுக்குக் குடியமர்ந்தவண்ணமிருந்தனர். ஆனால் இம்முறை ஹலரத் மிக்தாத் (ரலி) தப்பிக்க முடியவில்லை. ஆதரவற்ற அவர்களை மக்காவின் குரைஷிகள் வளைத்துப் பிடித்துத் தடுத்துக் கொண்டார்கள்.

அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களும் மதீனா சென்று விட்டார்கள். ஹலரத் மிக்தாத் (ரலி) அவர்கள் மக்காவிலேயே சில காலம் மவுனித்து வாழ்ந்து இஸ்லாத்தையே அவர்கள் மறந்து விட்டார்கள் என்ற எண்ணத்தைக் குரைஷிகளுக்கு ஊட்டவேண்டியதாயிற்று. மக்காவின் குரைஷிகள் இருநூறு பேர்களைக் கொண்ட ஒரு படை முஸ்லிம்களைத் தேடித் துன்புறுத்துவதற்காக அபூ ஜஹலின் மகனார் இக்ரிமாவின் தலைமையில் மதீனாவை நோக்கிப் புறப்பட்டது. அச்சமயம் ஹலரத் மிக்தாத் (ரலி) அவர்களும், அவர்களின் நிலையிலேயே

மக்காவில் சிக்கியிருந்த ஹலரத் உத்பா இப்னு கஸ்வான் (ரலி) அவர்களும் அப்படையில் இணைந்து கொண்டனர்.

மதீனா சென்ற முஸ்லிம்களுக்கும் ஏறத்தாழ ஓராண்டு காலத்துக்குப்பின் தங்களை எதிர்ப்போரை எதிர்த்துப் போரிட இறையனுமதி கிடைத்தது. ஹிஜ்ரி 2ம் வருடத் துவக்கத்தில் அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்கள் ஹலரத் உபைதா இப்னு ஹாரிஸ் (ரலி) அவர் களின் தலைமையில் அறுபது பேர்களைக் கொண்ட படையை குரைஷிகளின் நடமாட்டங்களைக் கவனிக்க அனுப்பியிருந்தார்கள். அவ்விரண்டு படைகளும் 'ராஃபிஉ' என்ற தலத்தில் எதிர் கொண்டன. அச்சமயத்தில் தருணம் கிடைத்து அவ்விரு தோழர்களும் முஸ்லிம் படை யினர் பக்கம் சென்றடைந்தனர். அவர்களோடிணைந்தே மதீனா சென்றடைந்தனர்.

அடுத்த சில நாட்களிலேயே பத்ருப் போர் நடை பெற்றது. இஸ்லாமிய வரலாற்றில் நடைபெற்ற முதல் போரல்லவா பத்ருப் போர். மதீனாவை முஸ்லிம்கள் புகலி டமாகக் கொண்டபின் மக்கத்துக் குரைஷிகளோடு அவர் கள் ஓரிரு சிறு மோதல்களை அதுவரை நடத்தி விட்டி ருந்தனர். ஆயினும் மதீனாவிலேயே புகுந்து முஸ்லிம் களை ஒட்டு மொத்தமாகத் திட்டமிட்டுக் குரைஷிகள் பெரும் படை திரட்டி வந்த அம்முதல் முயற்சியை முறி யடிக்கத்தக்க அளவு முஸ்லிம்களின் எண்ணிக்கையும் அது வரை பெருகியிருக்கவில்லை. எனவே அண்ணலார் (ஸல்) அவர்கள் போருக்கான—தங்கள் தோழர்களின் மன நிலையை அறிய விரும்பினார்கள். முஹாஜிர்களின் சார் பாக முதலில் ஹலரத் அபூபக்கர், உமர் (ரலி) ஆகியோர் எழுந்து தங்களது போர் ஆர்வத்தையும் ஆதரவையும் புலப்படுத்திப் பேசினார்கள். அவர்களையடுத்து எழுந்து நின்ற ஹலரத் மிக்தாத் (ரலி) அவர்கள் "இறைவனின்

பொருளடக்கம்

தூதரே! நாங்கள் ஹலரத் மூஸா (அலை) அவர்களின் தோழர்கள் கூறியதே போல் 'நீங்களும் உங்களின் இறைவனும் சென்று போரிடுங்கள். நிச்சயமாக நாங்கள் இங்கேயே உட்கார்ந்து கவனித்துக்கொண்டிருப்போம்' என்று ஒருபோதும் கூறமாட்டோம். ஆண்டவனின் மீதாணையாக தாங்கள் எங்களை (ஆப்பிரிக்கக்கரையோரமிருக்கும்) பர்க்குல் கிமார் (பட்டினம்) வரை அழைத்தாலும் சரியே, தங்களுடன் நாங்கள் இணைந்தே வருவோம். எங்களின் உடலில் இறுதிச் சொட்டு ரத்தம் இருக்கும் வரையிலும் எங்களின் இறுதிமூச்சு வரையிலும் தங்களின் முன்னும் பின்னும் வலமும் இடமுமாகச் சூழ்ந்து நின்று நாங்கள் போரிடுவோம்'' என முழங்கினார்கள். அவர்களின் பேருணர்ச்சி கண்டு முஹாஜிர்கள் அன்ஸார்கள் ஆகிய நபிமணித் தோழர்களின் முகங்களெல்லாம் மலர்ந்து அவர்களை நோக்கலாயின.

ஃபிர்அவ்னின் கொடுமைப் பிடியிலிருந்து தங்கள் கூட்டத்தினரைத் தப்பிக்கச் செய்து ஹலரத் மூஸா (அலை) அவர்கள் இறைவனின் கட்டளைப்படி ஸிரியாவை நோக்கி அவர்களை அழைத்துச் சென்றார்கள். பைத்துல் முகத்திஸ் அமைந்துள்ள புனித பூமியை அவர்களுக்கு வாழுமிடமாக வசப்படுத்தித் தருவதாக வாக்களித்து இறைவன் அதற்குச் சில நிபந்தனைகளையும் அவர்கள் மீது விதித்திருந்தான். அப்பூமியில் அச்சமயம் ஆதிக்கங் கொண்டு அநீதியான வாழ்க்கையில் திளைத்திருந்த 'அமாலிக்கா' வர்க்கத்தாரோடு போராடி அவர்களை அங்கிருந்து வெளியேற்றிட வேண்டுமென்பதும் அந் நிபந்தனைகளுள் ஒன்று. ஆனால் நெடிதுயர்ந்து திடகாத்திர பருமன் கொண்ட 'அமாலிக்கர்' களின் 'ஆஜானுபாகு' பற்றிச் செவியுற்று அவர்களோடு போராட பனீ இஸ்ராயீல்கள் மறுத்து விட்டனர். இறைவனின் அருளை மறந்த

பொருளடக்கம்

தறுதலைத் தனத்தால் அவர்கள் சாபக்கேட்டில் சிக்கித் தட்டலைந்த வரலாற்றை திருக்குர்ஆனின் மாயிதா-மரவைகள் என்ற ஆறாவது அத்தியாயத்தில் இருபதாம் வசனத்திலிருந்து விளக்கப்பட்டுள்ளது. தங்களின் நபிமார்களை நட்டாற்றில் கைவிட்ட முந்திய சமுதாயத்தார்களை போலன்றி உயிருள்ளவரை உறுதியுடன் அண்ணலார் (ஸல்) அவர்களைத் தொடர்வோம் என ஹலரத் மிக்தாத் (ரலி) அவர்கள் தம் உரையால் வெளிப்படுத்திய ஈமானின் உறுதி கண்டு, பெருமானார் (ஸல்) அவர்களின் முகம் பிரதிபலித்த பெருமிதத்தை அப்போது சிறுவராக இருந்து கவனித்த ஹலரத் அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அவர்கள், 'அச்சமயம் நான் பருவமடைந்திருப்பின் நானல்லவோ அவ்வாறு கூறியிருப்பேன்' என பிற்காலத்தில் நினைவு கூர்ந்தார்கள்.

அம்பெய்வதிலும், ஈட்டியால் போர் புரிவதிலும் வல்லமை பெற்றிருந்த இவர்கள் பத்ருப் போரில் குதிரையில் ஏறி வீரப்போர் ஆற்றினாகள். பத்ருப் போரில் இவர்கள் மட்டுமே புரவி வீரராக உலா வந்தாகவும் வரலாற்றாசிரியர்கள் சிலர் குறிப்பிடுகின்றனர். "போரின் போது அவரின் அருகாமையில் நிற்பதே எனக்குப் பேரின்பம் தருவதாக இருந்தது" என ஹலரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரலி) புகழ்ந்துள்ளார்கள். பத்ருப்போருக்குப் பின் நடைபெற்ற உஹதுப் போரிலும் அகழ்ப் போரிலும் கூட இவர்கள் பங்கேற்றிருந்தனர்.

உஹதுப் போருக்குப் பிந்திய ஆண்டுகளில் வஞ்சகமாகக் கைது செய்யப்பட்டு தன்ஈம் என்ற தலத்தில் தூக்கு மேடையில் தொங்கவிடப்பட்ட ஹலரத் குபைப் இப்னு அதீ (ரலி) அவர்களின் உடலைக் கவர்ந்து வர அண்ணலார் (ஸல்) அவர்கள் ஹலரத் ஸுபைர் இப்னு அவ்வாம் (ரலி) அவர்களோடு ஹலரத் மிக்தாத் (ரலி)

பொருளடக்கம்

அவர்களையே அனுப்பி வைத்தார்கள் (-'மரணத்தின் மடியில் மாநபியின் தோழர்கள்' என்ற நூலில் அவ்வரலாற்றைப் பார்க்கலாம்)

மக்கமா நகரின் மீது படையெடுக்க அண்ணலார் (ஸல்) அவர்கள் இரகசியமாகவே செய்த ஏற்பாடுகளைப் பற்றிய தகவலை ஒரு பெண்மணி குரைஷிகளிடம் தர எடுத்துச் செல்லும் செய்தியை இறையறிவிப்பின் மூலம் பெற்ற அண்ணலார் (ஸல்) அவர்கள் அதனைப் பறித்து வர ஹலரத் அலீ, ஸுபைர் (ரலி) ஆகியோரோடு இவர்களையே அனுப்பி வைத்தார்கள்.

ஹிஜ்ரி 20ம் ஆண்டில் எகிப்தின் புறம் படை நடத்திச் சென்ற ஹலரத் அம்ர் இப்னுல் ஆஸ் (ரலி) அவர்களின் வேண்டுதலின் பேரில் பதினாயிரம் பேர்களைக் கொண்டு துணைப்படைய்ய அனுப்பி வைத்த கலீஃபா உமர் (ரலி) அவர்கள் ஹலரத் மிக்தாத், உபாதா இப்னு ஸாமித் (ரலி) போன்ற நாற்பெரும் நபிமணித் தோழர்களை அப்படைக்குத் தளகர்த்தர்களாக்கி அனுப்பினார்கள். அச்சமயம் கலீஃபா அவர்கள் ஹலரத் அம்ர் (ரலி) அவர்களுக்கு எழுதிய கடிதத்தில் 'உமக்கு உதவுவதற்காக நான் அனுப்பியுள்ள நான்கு தளகர்த்தர்களுள் ஒவ்வொருவரும் பதினாயிரம் வீரர்களுக்குச் சமமானவர்கள்' என்று குறிப்பிட்டிருந்தார்கள்.

பெரும் பாலும் வறுமையிலேயே உழன்ற ஹலரத் மிக்தாத் (ரலி) அவர்கள் சில நேரங்களில் இலைகளையே தின்று பசி தீர வேண்டியவர்களாகவும் இருந்தனர். அண்ணலார் (ஸல்) அவர்களோடு தாங்கள் கழித்த ஆரம்ப நாட்களை அவர்கள் நினைவு கூர்வர். ''என் தோழர்கள் இருவரோடு மதீனா வந்து சேர்ந்த நான் ஆரம்பத்தில் வறுமையிலேயே

பொருளடக்கம்

வாடினேன். பசியின் வருத்தத்தை நாங்கள் வெளியிடக் கேட்டு எந்த தோழரும் எங்களுக்கு உதவவில்லை. காரணம் அச்சமயத்தில் அவர்களின் நிலையும் எங்களுடையதைப் போன்றதே. அண்ணலார் (ஸல்)அவர்கள் சில நாட்கள் எங்களைத் தங்கள் விருந்தினராகத் தங்கச் செய்தார்கள். அச்சமயத்தில் அவர்களின் இல்லத்தில் நான்கு ஆடுகள் இருந்தன. அவற்றின் மடுக்களில் பால் கறந்து நான்கு குவளைகளில் வைத்து ஒவ்வொருவரும் அருந்திக் கொள்வோம். அதுவே எங்களின் ஒவ்வொரு நாள் உணவும். ஒரு நாள் இரவு நெடுநேரமாகியும் நபி பெருமான் (ஸல்) அவர்கள் வீடு திரும்பவில்லை. எவரேனும் அன்ஸாரித் தோழர் அண்ணலார் (ஸல்) அவர்களைத் தம் விருந்தினராக அழைத்துச் சென்றிருக்கலாம் என்றெண்ணினேன். பசி என் வயிற்றைக் கிள்ளியது. என் ஊகத்தை உறுதிப்படுத்திக் கொண்டவனாக நான் அண்ணலவர்களுக்கென வைக்கப்பட்டிருந்த பாலையும் எடுத்துக் குடித்து முடித்தேன். பின்னரே என் ஊகம் தவறானதை நான் உணர்ந்தேன். பெருமானார் (ஸல்) அவர்கள் வந்துவிட்டார்கள்.

அண்ணலார் (ஸல்) அவர்கள் குடிலினுள் வந்ததும் தொழலானார்கள். நான் என் பார்வையால் போர்த்திப் படுத்த வண்ணம் கவனித்துக்கொண்டிருந்தேன். சிறிது நேரம் தொழுது முடித்த நபிகளார் தங்களுக்கென வைக்கப்பட்டிருக்கக் கூடிய குவளையைச் சென்று எடுத்தார்கள். அது வெறுமையாக இருந்தது. அதனை வைத்து விட்டு தாங்கள் தொழுத தலத்துக்கு மீண்ட அண்ணலார் (ஸல்) இருகரங்களையும் ஏந்தினார்கள். என்ன சாபக்கேடு வெளிப்படப்போகிறதோ, நான் நாசமடைந்தேன் என எண்ணியவனாகத் திகைத்தேன். ஆனால் என் ஏந்தலரின் திருவாயிலிருந்து 'இறைவா!

பொருளடக்கம்

என் பசி தீர்ப்பவரின் பசி தீரச் செய்வாயாக, என் துயர் துடைப்பவரின் துயர்துடைப்பாயாக' என்ற இறைஞ்சு தல்களே வெளி வந்தன. நான் விரைந்தெழுந்தேன். போர்வையைச் சுருட்டிக் கொண்டவனாக ஒரு பாத்திரத் தோடு வெளி நடந்தேன்—ஆடுகள் நிற்கும் பக்கம். அவை நான்கின் மடுக்களும் சுரத்துக் கனத்திருந்தன. அவற்றிலிருந்து பாத்திரம் நிறைய பால் கறந்துக் கொணர்ந்து அண்ணலார் (ஸல்) அவர்களுக்குத் தந்தேன். அவர்கள் அருந்தினார்கள்; பின்னர் குவளையை என்னி டம் தந்து என்னையும் அருந்தச் சொன்னார்கள். நான் அருந்தி விட்டு அவர்களிடமே தந்தேன். "மிக்தாத்! நீர் பசி தீர்ந்தீரா?" என அவர்கள் வினவக்கேட்டு எனக்கு வந்த சிரிப்பை அடக்க என்னால் முடியவில்லை. "அபுல் அஸ்வத்! என்ன செய்தி" என என் ஏந்தலர் (ஸல்) புன்னகையுடன் வினவினார்கள். நடந்தவற்றை நான் விவரிக்கக் கேட்ட அண்ணலார் (ஸல்) அவர்கள், "அதுவும் ஆண்டவனின் அருளே" எனப் புகழ்ந்தார்கள். இது மிக்தாத் (ரலி) அவர்களால் நினைவு கூரப்பெற்ற ஒரு நிகழ்ச்சி.

ஒரு நாள் ஹலரத் மிக்தாத் (ரலி) அவர்கள் ஒரு பாழடைந்த இடத்தில் தங்கள் காலைக் கடனைக் கழிக்க அமர்ந்தார்கள். அச்சமயம் அங்கிருந்த வளையினுள்ளி ருந்து வெளி வந்த ஓர் எலி, தன் வாயில் கவ்வி வந்த சிறு தங்க நாணயமொன்றை அவர்களின் முன்னே போட்டுச் சென்றது. வளையினுள் புகுந்த அது மீண்டும் ஒரு நாணயத்தைக் கொணர்ந்து போட்டது. இவ்வாறாக அது திரும்பத்திரும்பச் சென்று ஒவ்வொரு நாணயமாக பதினான்கு நாணயங்களைக் கொண்டு வந்து சேர்த்தது. தம் கடன்களைக் கழித்த பின் ஹலரத் மிக்தாத் (ரலி) அந்



பொருளடக்கம்

நாணயங்களோடு அண்ணலார் (ஸல்) அவர்களின் முன் வந்து நின்று நடந்தவை விவரித்தார்கள். அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்கள் 'அவை அனைத்தும் உமக்கே சொந்தம். அவற்றை நீர் விரும்பியபடி பயன்படுத்திக் கொள்வீராக.' என்று கூறி அவற்றில் வளம் பெருகச் செய்யுமாறு வழுத்தினார்கள். அவற்றுள் கடைசி நாணயம் தீர்வதற்கு முன்பாகவே மிக்தாத் (ரலி) அவர்களின் இல்லத்தில் வெள்ளியாலான ஒரு குவியலையே தாம் கண்டதாக ஹலரத் ழுபாஅ (ரலி) அவர்கள் அறிவித்துள்ளார்கள்.

ஹலரத் மிக்தாத் (ரலி) முகஸ்துதியையும் வீண் புகழையும் வெறுப்பவர்களாக இருந்தார்கள். கலீஃபா உதுமான் (ரலி) அவர்களின் அவையில் சிலர் அவர்களைப் புகழ்ந்து பேசியபோது சினமடைந்த அவர்கள் அவ்வாறு பேசியவர்கள் மீது மண்ணை வாரி வீசினார்கள். அது பற்றி கலீஃபா அவர்கள் வருந்திய போது முகஸ்துதி செய்பவர்களின் வாயில் மண்ணை அள்ளி நிரப்பவே அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்கள் தமக்குப் பணித்திருப்பதாக அவர்கள் அறிவித்தார்கள்.

''அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களைக் கண்ணாரக் கண்ட தாங்கள் அரும்பேறு பெற்றவர்கள். எங்களுக்கு அப்பேறு கிட்டவில்லையே'' என ஒரு தாபஈப் பெரியார் வருந்தக் கண்டு அவர்கள் சினமடைந்தனர். அதனைக் கண்டு வியந்த மக்களிடம் அவர்கள், ''கிடைத்திருக்கும் பேற்றை விட்டு கழிந்துபோன நாட்களுக்காக அவர் ஏன் வருந்துகிறார். அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களின் காலத்தில் வாழ்ந்த எத்தனையோ பேர்கள் அவர்களைப் புறக்கணித்து நரக வாழ்வை வரிந்து கொள்ளவில்லையா? அன்றைய தினம் இவர்

பொருளடக்கம்

வாழ்ந்திருப்பாரேயானால் எந்தக் கூட்டத்தைச் சார்ந் திருந்திருப்பார் என்பதை இவர் அறிவாரா? எந்த விதமான சோதனைகளுக்கும் உட்படாமல் அவர்களின் போதனைகளை ஏற்கக் கிடைத்த பேற்றுக்காகவல்லவோ நீங்கள் இறைவனுக்கு நன்றி செலுத்த வேண்டும்'' என்று விளக்கினார்கள்.

இயற்கையிலேயே வயிறு பெருத்திருந்த அவர்கள் முதுமையின் காரணமாகப் பெரும் சிரமம் ஏற்றனர். அவர்களின் ஒரு ரோம அடிமை தனக்கு மருத்துவம் தெரியுமெனக் கூறி, அவர்களின் வயிற்றினை அறுத்து உள்ளிருந்த கொழுப்பினை தான் நீக்கி விடுவதாகவும் கூறி, மருத்துவம் செய்து முடித்தும் விட்டான். ஆனால் அவனுடைய திறமைக் குறைவின் காரணமாக அதுவே அவர் களுக்குப் பெரும் நோயாகி மரணப்படுக்கையிலேயே அவர்களைக் கிடத்தி விட்டது. தவறு தெரிந்த அவ்வடிமை ஓடி மறைந்தான். அவர்களோ அந்நோயினாலேயே மரணமடைந்தார்கள்.

மதீனாவிலிருந்து மூன்று கல் தொலைவில் வாழ்ந்து வந்த அவர்கள், ஹிஜ்ரி 33ல் தங்களின் எழுபதாவது வயதில் மரணமடைந்தார்கள். அவர்களின் புனித உடல் மதீனா கொண்டுவரப்பட்டு கலீஃபா உதுமான் (ரலி) அவர்களால் தொழுவிக்கப்பட்டு 'ஜன்னத்துல் பகீஃ'இல் நல்லடக்கம் செய்யப்பட்டது.

❀ ❀ ❀

பொருளடக்கம்

خباب بن الأرت التميمي يكنى أبا عبد الله

# ஹலரத் கப்பாப் (ரலி)

## இப்னு அல் - அர்த்

நஜ்தின் மீது படையெடுத்து வந்த ஒரு கொள்ளையர் கூட்டம் கால்நடைகளையும் சிறுவர்களையும் கைது செய்து அடிமைச் சந்தையில் விலை பேசியது. அடிமைச் சிறுவர்களில் ஒருவராயிருந்த கப்பாப் ஓரிரு கைகள் மாறி மக்காவின் கடைத்தெருவுக்கு வந்தபோது உம்மு அன்மார் என்ற அரபுச் சீமாட்டி அவரை விலைகொடுத்து வாங்கினாள்.

அடிமையாக வாங்கப்பட்ட கப்பாப் ஆரம்பத்தில் ஒரு கொல்லனின் பட்டறையில் கூலிக்கு அமர்த்தப்பட்டார். அங்கேயே வாள்களை உருவாக்க அவர் தேர்ச்சி பெற்ற பின் உம்மு அன்மார் ஒரு கடையை வாடகைக்கு எடுத்து, வாள்கள் செய்யும் பட்டறை அமைத்து, கப்பாபைக் கொண்டு வருவாய் தேடிக் கொண்டாள்.

திரண்ட உடற்கட்டுடன் கூடிய கப்பாப் வயதில் குறைந்தவரானாலும் அறிவில் மிகுந்தவராக விளங்கினார். தம் வேலை தீர்ந்த ஓய்வு நேரங்களில் ஆழ்ந்த சிந்தனை வயப்பட்டிருந்த அவரின் மனக்கண்முன், மிருகங்களாக உலவிக்கொண்டிருந்த அரபுகளின் அறியாமைக் கோலங்கள் நிழலிட்டுக்கொண்டிருந்தன. அவர்களைக் கவிந்து நின்ற அந்தகாரம் அவரது உள்ளத்தை பெரிதும் வருத்தியது. அந்த இருள் விலக ஒரு நாள் நிச்சயம் ஒளி பிறக்கவே செய்யும் என அவரது அறிவு கூறினாலும் அவ்வொளியைத் தம் வாழ்நாள் காணுமா என்பதே அவரின் சிந்தனையின் கேள்வியாக இருந்தது. அந்த ஏக்கம் வெகு நாட்கள் நீடிக்கவில்லை. தாம் ஏங்கிக்

பொருளடக்கம்

காத்திருந்த அந்த விடிவெள்ளி ஹாஷிம் குடும்பத்தா ரிடையே தெரிந்தபோது அவர் ஓடிச் சென்று அதனைப் பற்றிக் கொண்டார்.

ஆறாமவராக இஸ்லாத்தை ஏற்று 'ஸாதிஸுல் இஸ் லாம்' என்ற சிறப்பைப் பெற்ற ஹலரத் கப்பாப் (ரலி) அவர்கள், தங்களின் மாறுதலை மூடி மறைத்து வைக்க வில்லை. அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களை இவர்கள் அடிக்கடி சந்திக்கும் தகவல் உம்மு அன்மா ருக்குத் தெரிந்தது. அவள் தன் சகோதரன் 'ஸப்பாஉ' என்பவனிடம் முறையிட அவன் ஒரு கூட்டத்தைச் சேர்த்துக்கொண்டு இவர்கள் மீது பாய்ந்தான். ஹலரத் கப்பாப் (ரலி) அவர்களோ எவருக்கும் அஞ்சுபவர்களா யில்லை. "உங்களுடைய தெய்வங்களை என் உள்ளத்தை விட்டும் நான் எடுத்தெறிந்துவிட்டேன். வணக்கத்திற்குரிய ஒரேயொருவனாக அல்லாஹ்வையும் அவனின் தூதராக முஹம்மது (ஸல்) அவர்களையும் ஏற்றுக்கொண்டேன்" என வெளிப்படையாகவே கூறினார்கள்.

ஹலரத் கப்பாப் (ரலி) அவர்களுக்கும் அவர்களின் எஜமாட்டிக்கும் ஏற்பட்ட பிளவுச் செய்தி மக்காவின் வீதிகளில் பரவியது. சுதந்திரமாக இருந்த உயர் குடும் பத்தைச் சார்ந்த ஓரிரு முஸ்லிம்களும் தங்களின் மத மாற்றத்தை வெளியிடாது மறைமுகமாக வைத்திருந்த நிலையில்—மக்காவில் தமக்காக எந்த ஓர் உதவியுமற்ற —ஓர் அடிமை தாம் மதம் மாறியதை வெளிப்படுத்தியது மட்டுமின்றி தம் எஜமாட்டியின் பாரம்பரியத் தெய்வங் களையே எதிர்த்துப் போராடத் துவங்கி விட்ட துணிவு மற்ற எஜமானர்களின் அறிவுகளுக்கெல்லாம் ஓர் அறை கூவலாக அமைந்துவிட்டது. ஹலரத் கப்பாப் (ரலி) அவர்களின் அந்தச்செயல் ஒரு முன் மாதிரியாக அமைந்து விடக்கூடும் என்ற அவர்களின் கணிப்பு தவறவில்லை.

பொருளடக்கம்

அன்றைக்குப் பின் மற்ற நபி மணித்தோழர்களும் ஒருவர் பின் ஒருவராகத் தங்கள் நிலையை வெளிப்படுத்தத் துவங்கி விட்டனர்.

கஅபாவின் சாரலில் குரைஷிகள் ஒன்று கூடினர். அபூ ஸுஃப்யான் இப்னு ஹர்ப், வலீத் இப்னு முகைரா, அபூ ஜஹல் போன்ற செல்வர்கள் கலந்தாலோசித்தனர். வாழையடி வழையாகத் தங்களின் முன்னோர்கள் வணங்கி வந்த தெய்வங்களை அழிக்கத் தோன்றியிருக்கும் இப்புதிய மார்க்கத்தை முளையிலேயே கிள்ளியெறிய, அதில் இணை பவர்கள் ஒவ்வொருவரையும் கடுந்துன்பத்திற்குள்ளாக்க வேண்டும். அதற்கு ஆரம்பமாக தங்கள் தங்கள் அடிமை கள் மீது எத்தகைய கொடுமைகளை இழைக்க வேண்டு மெனில், ஒன்று அவ்வடிமைகள் தங்களின் புதிய மார்க் கத்தை விட்டொழிக்க வேண்டும் அல்லது அவ்வடிமைகளே செத்தொழிய வேண்டும் என்று முடிவு கண்ட அவர்கள், ஹலரத் கப்பாப் (ரலி) அவர்களின் பொறுப்பை 'ஸப்பாஉ இப்னு உஸ்ஸா' விடம் ஒப்படைத்தனர்.

கொதிக்கும் வெய்யிலில் தகிக்கும் பாலையில் ஹலரத் கப்பாப் (ரலி) அவர்கள் வெறும் மேனியராய்க்கட்டியிழுக் கப்பட்டார்கள். இரும்புச் சங்கிலிகளால் பிணைக்கப் பட்டு, நையப் புடைக்கப்பட்டு நாவரண்டு துடிக்கும்போ தெல்லாம் அவர்கள் ஒரு சொட்டுத் தண்ணீரையும் காண மாட்டார்கள். குரைஷிகள் தங்களின் கொடுமைகளால் அவர்களின் கோலமழியச் செய்து, ஒருக்கால் அவர்கள் மனம் மாறியிருப்பர் என்ற நம்பிக்கையோடு அவர்களைச் சற்று பேச அனுமதிக்கும் போதெல்லாம் 'அண்ணல் முஹம்மது (ஸல்) அல்லலாஹ்வின் தூதர்' என்ற உண்மையையே அவர்கள் திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருந்தார்கள். எவ்வித ஆற்றலும் இல்லா 'லாத்'தையும் 'உஸ்ஸா' வையும் அவர்கள் ஏசுவது கண்டு

பொருளடக்கம்

ஆத்திரமடையும் குரைஷிகள் அவர்களை வெறும் மேனியராகத் தரையில் கிடத்தி சுடும் பாறைகளை அவர் களின் நெஞ்சின் மேல் வைத்து விடுவர். அதன் சூட்டி னால் அவர்களின் உடல் வெந்து உருகும்.

உம்மு அன்மார் ஒரு பெண்ணாக இருந்தாலும் ஒரு பேயின் இதயத்தைத் தாங்கியிருந்தாள். ஒரு நாள் அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்கள், அவளின் கடை யருகே நின்று ஹலரத் கப்பாப் (ரலி) அவர்களோடு உரையாடிக் கொண்டிருக்கக் கண்ட அவளின் உள்ளம் கொதித்தது. அன்றிலிருந்து அவள் அடிக்கடி தன் கடைக்கு வரத்துவங்கினாள். வந்ததுமே ஓர் இரும்பை எடுத்து எரியும்அடுப்பில் வைத்துக் காய்ச்சுவாள். அது பழுக்கச் சூடேறியவுடன் அதனை எடுத்து ஹலரத் கப்பாப் (ரலி) அவர்களின் உச்சந் தலையில் வைத்து விடுவாள். உடனே ஹலரத் கப்பாப் (ரலி) அவர்கள் மூர்ச்சித்து விழுந்து துடிப்பார்கள். அவள் தன் சகோதரனையும் அவளின் கூட்டாளிகளையும் அழைத்து அக் கோலத்தைக் காட்டி நகைப்பாள்.

ஹலரத் கப்பாப் (ரலி) அவர்கள் பட்ட உடல் துன்பம் போதாதென்று உழைத்துச் சேர்த்த உடைமை களையும் இழந்தார்கள். நெருப்பிடை நின்று அவர்கள் உழைத்துச் சேர்த்த ஒரு தொகையை ஆஸ் இப்னு வாயில் என்பவனிடம் தந்து வைத்திருந்தார்கள். அதனைச் சென்று அவர்கள் கேட்டபோது பெருமானார் திருநபி (ஸல்) அவர்களின் தோழமையை விட்டும் அவர்கள் விலகினாலே அதனைத் தான் திரும்பத் தரமுடியும் என ஆஸ் மறுத்தான். ஹலரத் கப்பாப் (ரலி) அவர்கள், "நீ செத்து மடிந்து மீண்டும் உயிர்த்தெழும் போதும் நான் அத்தோழமையை விட்டகலாதிருக்கக் காண்பாய்" என அவனுக்குக் கூறினார்கள்.

என்ன நான் செத்த பின் மீண்டும் உயிர்த்தெழு வேனா?'' என வியந்தான் ஆஸ் இப்னு வாயில்.

"நிச்சயம் நீ உயிர்ப்பிக்கப் படுவாய்'' என கப்பாப் (ரலி) கூறினார்கள்.

"அப்படியானால் மீண்டும் நான் உயிர் பெற்றெழுந் திடும்போதும் என்னிடம் பொருள்களும் செல்வமும் இருக்கும். அவற்றிலிருந்தே உம் கடனைத் திருப்பித் தருவேன்'' என ஏகத்தாளமாகக் கூறித் திரும்பிக்கொண் டானவன்.

ஹலரத் கப்பாப் (ரலி) அவர்களுக்கு ஆஸ் பின் வாயில் செய்த துரோகத்தை இறைவனுக்கே விட்ட ஓர் அறைகூவலாகத் திருமறை சொல்லிக் காட்டுகிறது.

أَفَرَءَيْتَ الَّذِى كَفَرَ بِـَٔايَـٰتِنَا وَقَالَ لَأُوتَيَنَّ مَالًا وَوَلَدًا ۝ أَطَّلَعَ الْغَيْبَ أَمِ اتَّخَذَ
عِندَ الرَّحْمَـٰنِ عَهْدًا ۝ كَلَّا ۚ سَنَكْتُبُ مَا يَقُولُ وَنَمُدُّ لَهُۥ مِنَ الْعَذَابِ مَدًّا ۝
وَنَرِثُهُۥ مَا يَقُولُ وَيَأْتِينَا فَرْدًا ۝

(நபியே!) நம்முடைய வசனங்களை நிராகரித் தோனை நீர் பார்த்தீரா? அவன், '(மறுமையிலும்) நிச்சயமாக நான் ஏராளமான பொருள்களையும் சந்ததிகளையும் கொடுக்கப் பெறுவேன்' என்று கூறு கிறான். அவன் (பின்னர் நடக்கக்கூடிய) மறைவான விஷயங்களை அறிந்து கொண்டானா? அல்லது ரஹ்மானிடத்தில் (இத்தகையதோர்) உறுதி மொழி யைப் பெற்றிருக்கிறானா? (அவன் கூறுகிறபடி) அன்று. அவன் கூறுகின்றவற்றை நாம் எழுதிக் கொண்டே வருகின்றோம். (அதற்குத் தக்கவாறு) அவனுடைய வேதனையையும் நாம் அவனுக்கு அதிகப் படுத்துவோம். அவன் (தன்னுடையதென்று) கூறும் (பொருள்கள்) யாவையும் நாமே அனந்தரங்கொண்டு

பொருளடக்கம்

விடுவோம். அவன் (இவைகளை விட்டுவிட்டுத்)தனி யாகவே நம்மிடம் வருவான்— என்ற 19:77to80 இறை செய்திகள் அண்ணலார் (ஸல்) அவர்கள் பால் இறங்கின.

கொடுமைகளனைத்தையும் பொறுமையோடு சகித்துக் கொண்டிருந்த ஹலரத் கப்பாப் (ரலி) அண்ணலெம்பெரு மான் (ஸல்) அவர்கள் மூலம் ஹிஜ்ரத்துக்கான அனுமதி கிடைத்தபோது மதீனா புறப்படச் சித்தமானார்கள். எனினும் உம்மு அன்மாரின் கொடுமைகளால் குருதி வடித்த அவர்களின் நெஞ்சத்தின் இறைஞ்சுதல் நிறை வேறக் கண்ட பின்னரே அவர்கள் மக்காவைவிட்டும். வெளியேறினார்கள்.

கொடுமையின் கோர உருவெடுத்திருந்த உம்மு அன்மாருக்குத் திடீரென்று—அதுவரை எவரும் கண்டும் கேட்டுமிராத - ஒருவித தலைவலி கண்டது. வலி மிகுந்த போதெல்லாம் அவள் நாயைப் போலவே குரைத்தாள். அந்நோய்க்குப் பரிகாரம் தேடி நாற்புறமும் அலைந்த அவளின் மக்களிடம் கடைசியாக ஒரு மருத்துவன், பழுக்கக் காய்ச்சப்பட்ட இரும்பை அவள் தலையில் வைத்தாலே அவ்வலி நிற்கும் எனக் கூறினான். நோயினால் அவள் துடிக் கும்போதெல்லாம் அவளின் மக்கள் இரும்பைப்பழுக்கக் காய்ச்சி அவளின் உச்சந்தலையில் வைப்பர். உடனே வலி குறையும். இரும்பின் சூடு ஆறியவுடன் அவள் கத்து வாள். மீண்டும் இரும்பைக் காய்ச்சி முன்போலவே வைப் பர். இதே மருத்துவத்தில் அவள் செத்தொழிந்தாள்.

மதீனாவில் குடியேறிய ஹலரத் கப்பாப் (ரலி) அவர்கள் தங்களின் வாழ்நாள் அது வரை கண்டறியாத நிம் மதியை அங்கு கண்டார்கள். பத்ருப் போரில் பங்கேற்றுச் சிறப்படைந்த அவர்கள் உஹதுப் போரில் ஹலரத்

பொருளடக்கம்

ஹும்லா (ரலி) அவர்களின் கரங்களால் உம்மு அன்மாரின் உடன் பிறந்தான் ஸப்பாஉ கொல்லப்பட்டது கண்டு மகிழ்ந்தார்கள்.

குலஃபாயெ ராஷிதீன்கள் நால்வரின் காலத்தையும் கண்ட ஹலரத் கப்பாப் (ரலி) அவர்கள், அந்நால்வரா லும் பெரிதும் மதிக்கப் பெற்றார்கள். கலீஃபா உமர் (ரலி) அவர்களைச் சந்திக்க வந்த அவர்களை ஒரு முறை கலீஃபா அவர்கள் ஓர் உயர்ந்த மேடையில் அமரச் செய்த னர். ஆரம்பத்தில் அப்பெருமையை ஏற்க மறுத்த அவர் களை நிர்ப்பந்தமாகவே ஏற்க வைத்த கலீஃபா அவர்கள், 'அம்மேடையில் அமர உம்மை விடத் தகுதி பெற்றவர் ஒரேயொருவரே' எனக்குறிப்பிட்டார்கள்.

'அந்த ஒருவர் யார்' என ஹலரத் கப்பாப் (ரலி) அவர்கள் வினவினார்கள்.

'பிலால்' எனக் கலீஃபா அவர்கள் கூறக் கேட்டு ஹலரத் கப்பாப் (ரலி) ஒரு புன்னகையை உதிர்த்தனர்.

"அமீருல் முஃமினீன்! பிலாலுக்குப் பரிந்துரைக்க மக்காவின் குரைஷிகளில் ஓரிருவர் இருந்தனர். அதற்கும் கூட நாதியற்றல்லவோ நான் இருந்தேன்." எனக்கூறி ஹலரத் கப்பாப் (ரலி) அவர்கள் தங்கள் மேலாடையை உயர்த்திய போது அவர்களின் விலாப் புறத்தைக் கண்டு திகைத்தார்கள் கலீஃபா. ஹலரத் கப்பாப் (ரலி) அவர்கள் மக்காவில் குரைஷிகள் தமக்கிழைத்த ஒரு கொடுமையை மக்கள் தலைவருக்கு விளக்கினார்கள்.

'......எனக்காகவே அவர்கள் நெருப்பு மூட்டினர். அது அலை பாய்ந்து எரிந்து அடங்கியது. என் ஆடை களைக் களைந்து அந் நெருப்புக் கங்குகளின் மீது என்னைக் கிடத்தினர். வேதனையால் நான் புரளாதவாறு என்

பொருளடக்கம்

வயிற்றின் மீது ஒருவன் தன் காலை வைத்து அழுத்திக் கொண்டான். என் முதுகு தீய்ந்து விலாப்புறத்திலிருந்து உருகி வடிந்த கொழுப்பினாலேயே அந்நெருப்பு அவிந்தது. என் தசைகள் கனன்று, கழன்று தெரியும் எலும்புகளே இவை'' என அவர்கள் விவரித்து முடித்த போது கலீஃபா அவர்களின் தாடி நனைந்திருந்தது— கண்ணீரால்.

வறுமையிலும், பசியிலும் உழன்ற ஹலரத் கப்பாப் (ரலி) அவர்களின் பிற்காலம் நன்கு வளம் பெற்றிருந்தது. தங்கள் கனவிலும் அவர்கள் ஒரு நாளும் காணாத அளவுக்குப் பொன்னும், வெள்ளியும் அவர்களின் குடிலில் குவிந்தன. எனினும் ஹலரத் கப்பாப் (ரலி) அவர்கள் அச்செல்வங்களையெல்லாம் மண்வீட்டில் கொட்டி வைத்தார்களேயன்றி தங்களின் மன வீட்டில் குடியேற்றவில்லை. அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களின் பிரிவினையால் மதீனாவில் வாழப் பொறாது கூஃபாவில் குடியேறி வாழ்ந்த அவர்கள் தங்கள் வீட்டின் ஒரு புறம் பெரும் பேழையொன்றை அமைத்து, தங்களின் பங்காக வந்து சேர்ந்த தங்கத்தையும், வெள்ளியையும் அதில் கொட்டிடச் செய்தார்கள். அவர்களின் வாழ்நாளில் என்றுமே அப்பேழை மூடப்பட்டதில்லை. வீதியில் செல்லும் ஏழைகளுக்கும் எளியவர்களுக்கும் நன்கு தெரியும்படியாக அப்பேழை வைக்கப்பட்டிருந்தது. தேவைப்பட்டவர்கள் தங்களுக்குத் தேவைப்பட்ட போதெல்லாம் தங்களின் தேவைக்கேற்ப அப்பேழையிலிருந்து அள்ளிச் செல்ல அவர்களின் அனுமதியைப் பெறத் தேவையே இல்லாதிருந்தது.

அதன் வரவுகளையும் செலவுகளையும் மறுமையின் அச்சத்தின் காரணமாக அவர்கள் ஒரு நாளும் கணக்கிட்டதேயில்லை. தங்களின் எழுபத்து மூன்றாம் வயதில் மரணத்

தின் மடியில் அவர்கள் தஞ்சமடைந்த தருணத்திலும் எண்பதினாயிரம் தங்கக் காசுகள் அப்பேழையில் எஞ்சியிருக்க மற்ற நபிமணித் தோழர்கள் கண்டார்கள்.

"அல்லாஹ்வின் மீது ஆணையாக ஒரு நாளும் அவற்றை நான் முடிந்து வைத்ததுமில்லை, எடுத்துச் சென்றவர்களைத் தடுத்ததுமில்லை" என்று கூறிய அவர்கள் கண்ணீர் வடித்தார்கள். காரணம் கேட்கப்பட்ட போது அவர்கள், "என்னுடைய எத்தனையோ தோழர்கள் இவ்வுலகை விட்டும் சென்றார்கள். அவர்கள் தங்களின் இவ்வுலக வாழ்வில் பொன்னையோ வெள்ளியையோ பெற்றிருக்கவில்லை. அந்தோ என் தோழர் ஹம்ஸா! மரித்த அவரின் உடலைப் போர்த்த ஒரு முழு ஆடையும் அவரிடம் இருக்கவில்லை. இருந்த ஒரு போர்வையைக் கொண்டு அவர் தலையிலிருந்து போர்த்தப்பட்டு வெளித் தெரிந்த கால்களை சருகுகளால் போர்த்தப்பட்டு அடக்கப் பெற்றார். இவர்கள் யாவரும் தங்கள் செயல்களுக்கான பலனை மறுமையில் பெற்றுக் கொள்ளச் சென்று விட்டனர். அளவிலாப் பொன்னையும் வெள்ளியையும் கண்டு விட்ட நான் என் மறுமை வாழ்வு வெறுமையாக்கப்பட்டு என் செயல்களுக்கு கூலி இம்மையிலேயே முடிந்து விட்டதோ என்றெண்ணியே அழுகின்றேன்" என்றார்கள்.

ஹிஜ்ரி 37ல் ஸிப்ஃபீன் போர்க்களத்திலிருந்து திரும்பிக் கொண்டிருந்த கலீஃபா அலீ (ரலி) அவர்களிடம் ஹலரத் கப்பாப் (ரலி) அவர்களின் மரணச்செய்தி அறிவிக்கப்பட்டது. கலீஃபா அவர்கள் விரைந்து சென்று தாங்களே முன்னின்று அப்புனித உடலைத் தொழுவித்து ஹலரத் கப்பாப் (ரலி) அவர்கள் கூறிச் சென்றபடியே—கூஃபாவுக்கு வெளியே அடக்கம் செய்தார்கள்.

மக்கமா நகரில் அண்ணலார் (ஸல்) அவர்களைச் சந்திக்க குறைஷித் தலைவர்கள் வந்த ஒரு சமயம் ஹலரத்

கப்பாப், பிலால், ஸுஹைப், அம்மார் ஆகிய ஏழைகளை ஆங்கமர்ந்திருக்கக் கண்டு முகம் சுளித்தனர். அண்ணலார் (ஸல்) அவர்களோடு தாங்கள் உரையாட விரும்புவதால் அவர்களை அங்கிருந்து அகற்றிவிட அவர்கள் கோரிய போது அண்ணலார் (ஸல்) அவர்கள் முதலில் மறுத்து விட்டார்கள். மீண்டும் குரைஷிகள் அண்ணலார் (ஸல்) அவர்களை நெருங்கி தாங்கள் அவர்களின் அருகேஅமர்ந்து அவர்கள் கூறுவதைச் செவிமடுக்க விரும்புவதாகவும் ஆனால் தங்களிடம் அடிமைப்பட்டிருந்தவர்களோடு தாங்களும் சமமாக பிறர் பார்வையில் பட தாங்கள் வெட்கமடைவதாகவும் எனவே, தாங்கள் அமர்ந்து கேட்கும் வரை அவர்களை அங்கிருந்து விலக்கிவிடுமாறும், தாங்கள் விடைபெற்ற பின்னர் அவர்களை அழைத்துக் கொள்ளலாமென்றும் வேண்டினர்.

ஒருக்கால் அவர்கள் தங்கள் போதனையைச் செவியுற்று மனந்திருந்தலாமென்ற எண்ணத்தில் அண்ணலார் (ஸல்) அவர்களும் அவ்வேண்டுதலை ஏற்கத் துணிந்த சமயத்தில் இறைசெய்தி இறங்கியது.

وَلَا تَطْرُدِ الَّذِيْنَ يَدْعُوْنَ رَبَّهُمْ بِالْغَدٰوةِ وَالْعَشِيِّ يُرِيْدُوْنَ وَجْهَهٗ ؕ مَا عَلَيْكَ مِنْ
حِسَابِهِمْ مِّنْ شَيْءٍ وَّمَا مِنْ حِسَابِكَ عَلَيْهِمْ مِّنْ شَيْءٍ فَتَطْرُدَهُمْ فَتَكُوْنَ مِنَ الظّٰلِمِيْنَ (

"(நபியே!) தங்கள் இறைவனின் திருப்பொருத்தத்தை விரும்பி காலையிலும் மாலையிலும் பிரார்த்தித்துக் கொண்டிருப்போரை நீர் விரட்டி விடாதீர்! அவர்களுடைய கணக்கிலிருந்து யாதொன்றும் உம்முடைய பொறுப்பாகாது. உம்முடைய கணக்கிலிருந்து யாதொன்றும் அவர்களுடைய பொறுப்பாகாது. ஆகவே நீர் அவர்களை விரட்டினால் அக்கிரமக்காரர்களில் நீரும் ஆகிவிடுவீர்" என்றிறங்கிய (6 : 52) வேதவசனம ஹலரத் கப்பாப் (ரலி) அவர்

பொருளடக்கம்

கள் உள்ளிட்ட நால்வரின் சிறப்புக்கும் இன்றும் சான்று கூறி நிற்கின்றது.

அண்ணலார் (ஸல்) அவர்களின் கரம் பற்றிய ஆரம்ப நாளிலிருந்தே ஹலரத் கப்பாப் (ரலி) அவர்கள் அருள் மறையைக் கற்றதோடன்றி கற்பிப்பவராகவும் விளங்கினர். அண்ணலார் (ஸல்) அவர்களைக் கொல்ல வாளேந்தி விரைந்த உமர் (ரலி) அவர்கள் இடை வழியில் தங்களின் உடன் பிறந்த தங்கையே முஸ்லிமாகியுள்ள செய்தி கிடைத்து, சினங்கொண்டு திரும்பி தங்கையின் வீட்டை அடைந்த போது, அங்கே அத்தங்கைக்கும் தங்கையின் கணவருக்கும் ஹலரத் கப்பாப் (ரலி) அவர்களே திருமறையைக் கற்பித்துக் கொண்டிருந்தனர். முதலில் அவர்கள் உமர் (ரலி) அவர்களின் அச்சத்தால் ஓடி மறைந்துக் கொண்டனர். பின்னர் அங்கிருந்த சுவடிகளில் காணப் பட்ட இறைவசனங்களால் உமர் (ரலி) — அவர்களின் உள்ளம் ஈர்க்கப்பட்டு விட்ட நிலையைக் கண்டபோது தங்கள் மறைவிடத்திலிருந்து வெளிப்பட்டு அவர்களுக்கு சோபனம் கூறினர்; அண்ணலார் (ஸல்) அவர்கள் அப் போதிருந்த அர்க்கம் (ரலி) அவர்களின் இல்லத்தையும், அதற்கு முந்திய நாள் அண்ணலார் (ஸல்) அவர்கள் உமர் (ரலி) அவர்களுக்கு இதய வெளிச்சமருள இறைவனை வழுத்தியதைத் தாம் செவியுற்றதையும் உமர் (ரலி) அவர்களிடம் எடுத்தோதினர்.

அண்ணலவர்களின் தோழமையை மிக ஆரம்ப காலத் திலேயே ஏற்றிருந்தும், கிலாஃபத்தே ராஷிதாவின் மிகப் பிந்திய காலம் வரை வாழ்ந்திருந்தும் அண்ணலவர்களின் முப்பத்து இரண்டே அருள்மொழிகளையே அவர்கள் வெளி யிட்டிருப்பது அவர்களின் பேணுதலுக்கு அடையாளமாக விளங்குகிறது.

பொருளடக்கம்

زيد بن الحارث رضي الله عنه

# ஹலரத் ஜைது இப்னு ஹாரிஸ் (ரலி)

தூமத்துல் ஜந்தல் என்ற இடத்தில் வாழ்ந்துக் கொண்டிருந்த ஓர் அரபுக் கிருஸ்துவக்குடும்பத்தில் ஸஅதீ பின்த்து ஸஅலபா என்ற பெண்மணியின் திருமகனாகப் பிறந்தவர்கள் ஹலரத் ஜைது (ரலி). எட்டு வயதுச் சிறுவ ராகத் தம் அன்னையுடன் பயணம் செய்துகொண்டிருந்த அவர் வழியில் மஅன்பின் ஜரீர் என்பவனின் கொள்ளைக் கூட்டத்தால் சிறைபிடிக்கப்பட்டு 'உக்காழ்' சந்தையில் அடிமையாக விலை பேசப்பட்டனர். சிறுவர் ஜைதின் முகத்தில் ஒளிவீசிய சாந்தமும் அமைதியும் அவரது மேலான எதிர்காலத்துக்குக் கட்டியங் கூறிக் கொண் டிருந்தன.

அச்சந்தையிலேயே தம் வாணிபத்தையும் நடத்த வந்திருந்த ஹக்கீம் பின் ஹிஸாம் என்ற குரைஷித் செல் வர்—அன்னை கதீஜா நாயகியாரின் உடன் பிறந்தார் மகன்—நானூறு திர்ஹங்களுக்கு சிறுவர் ஜைதை விலை பேசிப்பெற்று, தம்மோடு மக்காவுக்கு அழைத்து வந்தார். ஒரு சில ஆண்டுகளுக்குப் பின் அவரிடமிருந்து அச் சிறுவரை அன்பளிப்பாக அடையப்பெற்ற கதீஜா நாயகியார் அண்ணலெம்பெருமான் (ஸல்) அவர்களை மணமுடித்தபோது, தம் கணவருக்கு ஊழியம் புரிவதற் கென, அச்சிறுவரை நியமித்து பெருமானார் (ஸல்) அவர் களுக்குத் தம் அன்பளிப்பாகவும் அர்ப்பணித்தார். அவரது வரலாற்றுப் பின்னணியை அவரிடமிருந்தே கேட்டறிந்த அண்ணலார் (ஸல்) அவர்கள் உளம் இளகி அவருக்கு உரிமையளித்தது மட்டுமின்றி அவரது விருப்பப்படி எங்கும் செல்ல அவருக்கு அனுமதியும் வழங்கினார்கள். ஆனால் அநாதையாகி, அடிமையாகி, கைகள் பல மாறி வந்து இறுதியாக உரிமைபெற்ற சிறுவர் ஜைது (ரலி)

பொருளடக்கம்

அன்புருவாய்த் தாம் கண்ட அண்ணலவர்களின் நிழலையே நிரந்தரமாக்கிக் கொண்டார்கள். அச்சமயம் அவர்களின் வயது பதினைந்தாகயிருந்தது.

கொள்ளையர்களின் கரங்களில் தம் குலையைப் பறிகொடுத்து ஜைதின் தாய் வடிக்கத் துவங்கிய கண்ணீர் ஓய்ந்தபாடில்லை. இப்படி ஓர் அவலம் தன் குடும்பத்துக்கு நேரும் என தன் கனவிலும் எண்ணியிராத -ஜைதின் தந்தை-ஹாரிஸ் பின் ஷர்ஜீல் தன் நெஞ்சத்தின் வேதனையைக் கவிதைகளால் வடித்துக் கொண்டிருந்தார். தன் கண்மணி, உலகின் ஏதேனுமொரு மூலையில் உயிருடன் இருக்கும் சேதியாவது கிடைக்காதா என்று பயணிகளாக வருவோர்போவோர் அனைவரிடமும் அவர் கேட்டுப் புலம்பிக் கொண்டிருந்தார்.

அறியாமைக் காலத்தில் புனிதத் திருவீட்டை இடம் சுற்றவந்த-ஜைதின் குடும்பத்துக்கு அறிமுகமுடைய-சிலர், கஅபாவின் தவாஃபில் கலந்து கொண்டிருந்த ஜைதை அடையாளம் கண்டு கொண்டனர். ஜைதும் அவர்களை விளங்கிக் கொண்டார். சுகதுக்கங்கள் அவர்களிடையே பரிமாறிக் கொள்ளப்பட்டன. தம் பெற்றோர்கள் படும் துயரைச் செவியுற்ற ஜைது, 'கவலற்க, புனித பூமியில் புகழச் சிறந்த குடும்பத்தில் ஒருவனாய் நான் இருக்கின்றேன்' என்ற செய்தியை மட்டும் அவர்களுக்காக அனுப்பி வைத்தனர்.

ஹஜ்ஜிலிருந்து திரும்பிவந்த தம் கூட்டத்தார் மூலம் மக்காவில் தன் மகன் இருக்கும் செய்தியறிந்த ஹாரிஸ் தன் உடன் பிறந்தார் கஅபையும் அழைத்துக் கொண்டு, ஏராளமான பொருள்களையும் எடுத்துக் கொண்டு மக்கா நோக்கி விரைந்தார் - என்ன விலை கொடுத்தும் தன் குலக்கொழுந்தை மீட்டே திரும்புவதென்ற முடிவுடன்.

பொருளடக்கம்

'ஸாதிக்குல் வஅதல் அமீன்' என்ற சரித்திர நாயகரின் சிறப்பை மக்காவின் திக்கெட்டும் பேசக் கேட்ட அவர்கள், நிச்சயம் தம் குடி தழைக்கும் என்ற நம்பிக்கையோடு அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்கள் முன் வந்து நின்றனர். ''கண்ணியம் நிறைந்த பெருமானே! துன்பங்களைத் துடைப்பவராகவும், துயருற்றோர்க்கு அருளாகவும் சிறைப்பட்டோரை ஆதரிப்பவராகவுமே தங்களைப் பற்றி நாங்கள் அறிந்தோம். தங்களிடத்தில் பணியாற்றும் எங்கள் திருமகனை என்ன விலை கொடுத்தும் பெற்றுச் செல்ல நாங்கள் நம்பிக்கை கொண்டு வந்துள்ளோம்'' என ஜைதின் தந்தையர் இருவரும் வேண்டி நின்றனர். நாயகத் திருமேனி (ஸல்) அவர்கள், ''ஜைது உங்களுடன் வர பிரியப்பட்டால் அவரை அழைத்துச் செல்வதற்குப் பகரமாக உங்களின் செல்வமெதுவும் எனக்குத் தேவையில்லை. ஒருக்கால் ஜைது என்னோடேயே இருக்க விரும்பினால் ஜைதின் விருப்பத்தை உங்கள் விருப்பம் மிகைக்க நான் சம்மதிக்கமாட்டேன்'' என விதித்த நிபந்தனையையும் அவ்விருவரும் ஏற்றனர்.

அதன் பின் அண்ணலார் (ஸல்) அவர்கள் ஹலரத் ஜைது அவர்களை யழைத்து ''வந்திருப்பவர்கள் யார் என நீர் அறிவீரா?'' எனக் கேட்டார்கள்.

''பெருமானே! என் தந்தையும் என் சிறிய தந்தையுமே இவ்விருவரும்'' எனப் புரிந்து கொண்டனர் சிறுவர் ஜைது.

''அவர்களோடு நீர் செல்லவிரும்பினால் தாராளமாக செல்லலாம். அல்லது என்னோடேயே நீர் தங்க விரும்பினால் உமக்கு எந்தத் தடையுமில்லை'' எனப் பூரண உரிமை தந்தார்கள் பெருமானார் (ஸல்).

அ—14.

பொருளடக்கம்

''பெருமானே! தங்கள் நேசத்தை மிகைத்து எவருடைய நேசத்தையும் என் நெஞ்சம் காணவில்லை''எனப் பதிலளித்தார்கள் ஹலரத் ஜைது.

''பெற்றவர்களோடு வாழக்கிடைக்கும் உரிமை வாழ்வைவிட குற்றேவல் புரியும் இந்த அடிமை வாழ்வையா நீ தெரிந்தெடுத்தாய் மகனே!'' எனத் திகைத்தார் ஹாரிஸ்.

''என் தந்தையே! ஆயிரம் உரிமை வாழ்வுகளை விட அண்ணலாரின் நிழலில் கிடைக்கும் அடிமை வாழ்வையே நான் மேலாகக் கருதுகிறேன். என் மகிழ்ச்சியே உங்கள் குறிக்கோள் என்றால் என்னை அதற்கு அனுமதியுங்கள்'' என வேண்டினர் ஜைது (ரலி). நன்றி நிறைந்த அச்சொற்கள் அண்ணலெம்பெருமான் (ஸல்) அவர்களின் நெஞ்சத்துள் பூத்துக் கிடந்த பாசத்தீயைச் கிளர்ந்து எரியச் செய்தன. ஹலரத் ஜைது அவர்களின் கரம் பற்றியழைத்து வந்து கஃபாவின் முன் நின்ற அண்ணலார் (ஸல்) அவர்கள் அங்கு கூடி நின்ற குரைஷிகளிடையே, ''ஜைதை இன்று என் மகனாக நான் ஏற்றுக் கொண்டேன். நான் அவருக்கு வாரிசாவேன். அவர் எனக்கு வாரிசாவார்''என அறிவித்தார்கள். அக்காட்சியைக் கண்டு அக மகிழ்ந்த ஜைதின் தந்தை உள்ளம் உவந்து தம் மகனை அண்ணலார் (ஸல்) அவர்களிடம் ஒப்படைத்து நிம்மதியுடன் நாடு திரும்பினார்.

அன்று முதல் ஹலரத் ஜைது (ரலி) அவர்கள் 'ஜைது இப்னு முஹம்மத்' என்றே அழைக்கப்பட்டார்கள். அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்கள் நபித்துவம் பெற்று, இஸ்லாம் தழைத்தோங்கவாரம்பித்த பின்னர்,

பொருளடக்கம்

ادْعُوهُمْ لِآبَائِهِمْ هُوَ أَقْسَطُ عِنْدَ اللَّهِ

"நீங்கள் (வளர்த்த) அவர்களை அவர்களின் (உண்மையான) தந்தைகளின் பெயர்களைக் கூறி அழையுங்கள். அதுதான் அல்லாஹ்விடத்தில் மிக நீதமாக இருக்கிறது" என்ற (33. 05) அருட்கட்டளை இறங்கிய பின்னரே அவர்கள் ஜைது இப்னு ஹாரிஃஸ் என அழைக்கப்படலாயினர்.

அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்கள் தம் நபித்துவத்தை அறிவித்த மறுகணமே அவர்களின் கரம் பற்றி ஏற்க முந்தினவர்களிலும் முதல்வர்களாக ஐந்து பேர்களை வரலாறு காட்டுகிறது. அண்ணலார் (ஸல்) அவர்களின் இல்லறத்தரசியார் அன்னை கதீஜா (ரலி) அவர்களே முதன் முதலாக இஸ்லாத்தை ஏற்றனர்—பெண்களில். அதேபோல் ஆண்களில் முதல் முஸ்லிமாகச் சிறப் பேற்றவர்கள் ஸைய்யிதினா அபூபக்கர் (ரலி). சிறுவர்களில் இஸ்லாத்தை ஏற்க முந்திக்கொண்டவர்கள் ஸைய்யிதினா அலீ (ரலி). இம் மூவரும் மக்க நகர குறைஷி குலப் பெருமக்கள்; அண்ணலார் (ஸல்) அவர்களோடு இரத்த பந்தம் கொண்டவர்கள். இவர்களல்லாத மற்ற இருவர்—அடிமைகள்—முதன்மைச் சிறப்பினைப் பெற்றுக் கொண்டனர். ஒருவர் ஹலரத் பிலால் (ரலி). மற்றவர் ஹலரத் ஜைது இப்னு ஹாரிஃஸ் (ரலி). ஹலரத் பிலால் (ரலி) அடிமையான நிலையிலேயே இஸ்லாத்தை ஏற்ற முதல்வர். ஹலரத் ஜைது (ரலி) அவர்கள் அதற்கு முன்னரே அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களால் உரிமை விடப்பெற்றிருந்தனர். எனவே உரிமை பெற்று விட்ட அடிமைகளில் அவர்களே முதல் முஸ்லிமாவார்கள். அதோடு மட்டுமல்ல, இறைவனின் திருமறையில் தமது பெயர் குறிப்பிடப் பெற்ற ஒரே நபி மணித்தோழர் ஹலரத் ஜைது (ரலி) அவர்களேயாவர். பெருமானார்

திரு நபி (ஸல்) அவர்களின் பல பெருந்தோழர்களின் சிறப்புகளைப் பற்றிப் புகழும் அருள் வசனங்கள் அவ்வப் போது இறங்கப் பெற்றன வென்றாலும், ஜைது என்ற அவர்களின் இயற்பெயராலேயே இறைவனால் சுட்டிக் காட்டப் பெறும் பேற்றை அண்ணலார் (ஸல்) அவர்களில் ஒரு நூறாயிரம் தோழர்களில் பெற்றுச் சிறந்தவர்கள் இவர்கள் மட்டுமே

ஹலரத் ஹம்ஸா (ரலி) அவர்கள் இஸ்லாத்தை ஏற்ற பின்னர் அண்ணலார் (ஸல்) அவர்கள் ஹலரத் ஜைது (ரலி) அவர்களை ஹலரத் ஹம்ஸா (ரலி) அவர்களின் சகோதரராகப் பிணைத்தார்கள். அப்பிணைப்பினால் பெரும் மனப்பொருத்தம் கொண்ட ஹம்ஸா (ரலி) அவர்கள், தாங்கள் வெளிச் செல்ல நேரும்போதெல்லாம் எல்லாப் பொறுப்புகளையும் ஹலரத் ஜைது (ரலி) அவர் களிடமே ஒப்படைத்துச் செல்வார்கள். ஹிஜ்ரத்திலும் அவ் விருவரும் இணைந்தே சென்றனர். மதீனாவில் முஹாஜிர் கள் அன்ஸார்களிடையே ஏற்படுத்திய பிணைப்பிலும் அண்ணலார் (ஸல்) அவர்கள் அவ்விருவரையும் பிரியாது தங்கள் சகோதர உறவைத் தொடரச் செய்தார்கள்.

ஹலரத் பிலால் (ரலி) போன்றவர்களையெல்லாம் ஆரம்ப காலத்தில் வதைத்தெடுத்த குரைஷிகள் ஹலரத் ஜைது (ரலி) அவர்களை ஒரு பொருட்டாகவே கவனிக்க வில்லை. ஹலரத் ஹம்ஸா (ரலி) அவர்களின் அச்சமும் அவர்களுக்கு ஒரு தடையாக இருந்திருக்கலாம். ஆயினும் தாயிஃப் நகரத்தின் வீதிகளில் தாஹா ரஸூல் (ஸல்) அவர்கள் தீயோர்களால் கல்மாரி பொழியப்பட்டுத்தாக் குண்ட நாளில் ஹலரத் ஜைது (ரலி) அவர்களும் உட னிருந்து உளைவேற்றனர். கொடியவன் ஒருவன் வீசிய கல்லைத் தடுத்திட ஹலரத் ஜைது (ரலி) அவர்கள் குறுக் கிட்ட போது, அது அவர்களின் முகத்தில் பட்டு ரணமேற்

பொருளடக்கம்

படுத்தியது. பூமான் நபி (ஸல்) அவர்கள் தம் புனித மேனியில் ரத்தம் வழிந்தோட அயர்ந்து ஒரு புறம் அமர்ந்த போது, இவர்கள் அருகில் கிடைத்த பச்சிலைகளைப் பறித்துக் கொணர்ந்து அண்ணலார் (ஸல்) அவர்களின் பொன்மேனியில் பற்றிட்டனர்.

அண்ணலார் (ஸல்) அவர்களுக்கு வாரிசுரிமையாகக் கிடைத்த — தந்தை அப்துல்லாஹ்வின் - உடைமைகளில் 'பரகாஹ்' என்ற ஓர் அடிமைப் பெண்ணும் இருந்தார் ஆமினா அம்மையாரின் இறப்புக்குப் பின் அண்ணலார் (ஸல்) அவர்களை வாஞ்சையோடு வளர்த்த அவ்வம்மையை 'அன்னை ஆமினாவுக்குப் பின் நீரே என் தாய்' எனப் போற்றினார்கள் பெருமானார் (ஸல்); அவர்பால் பேரன்பும் செலுத்தினார்கள். அன்னை கதீஜா நாயகியாரை மண முடித்த மகிழ்ச்சியின் பிரதி பலிப்பாக அடிமைத்தளையிலிருந்து அவருக்கு விடுதலையும் நல்கினார்கள். அந்த வெற்றிடத்தை நிரப்பவே அன்னை கதீஜா (ரலி) ஜைதை அமர்த்தினர்—அண்ணலரின் பணியில்.

'பரகாஹ் மதீனாவாசியொருவரை மணந்து 'அய்மன்' என்ற மகனையும் பெற்றார். அந்த மகனின் பெயராலேயே பின்னர் அவர் 'உம்மு அய்மன்' என அழைக்கப்பட்டார். சில நாட்களில் அம்மதீனாவாசி மரணமடைந்தார். விதவைக் கோலத்தில் உம்முஅய்மனைக் கண்டு அண்ணலவர்களின் நெஞ்சம் நெகிழ்ந்தது. ''ஒரு சுவனத்துப் பெண்ணை மணமுடிக்க நாடும் எவரும் இவரை மணமுடித்துக் கொள்வீராக'' என அவர்கள் உரைத்த மொழி ஜைதின் செவி வழிப்புகுந்து உள்ளத்தில் இறங்கியது. அச்சமயம் உம்மு அய்மன், ஜைது (ரலி) அவர்களை விட மிக முதியவராகவே இருந்தார். எனினும் ஹலரத் ஜைது (ரலி) தயக்கமுறவில்லை. தம் அண்ணலாரின் சொல்லையுணர்ந்து உம்மு அய்மனை மண முடித்த

பொருளடக்கம்

ணர். அவ்விருவரும் பெற்ற செல்வரே உஸாமா (ரலி). மக்காவில் மாநபி (ஸல்) அவர்களின் குடும்பத்தில் ஒருவராகவே வாழ்ந்த ஹலரத் ஜைது (ரலி) அவர்களுக்கு அண்ணலார் (ஸல்) அவர்கள் மதீனாவில் தனிக்குடிலமைத்துத் தந்தார்கள். அத்துடன் அன்றி இளைஞர் ஜைது (ரலி), தம் வயதொத்த ஓர் இளம் மனைவியுடனும் இல்லறத்தை அனுபவிக்க வேண்டும் என ஆவலுற்ற அண்ணலார் (ஸல்) அவர்கள், தங்கள் தந்தையுடன் பிறந்த மாமியின் மகளான ஹலரத் ஜைனப் பின்த்து ஜஹ்ஷ் (ரலி) அவர்களை அவர்களுக்கு மணமுடிக்க நாடினார்கள்.

குரைஷி குலத்தைச் சார்ந்த ஹலரத் ஜைனப் (ரலி) அண்ணலாரவர்களால் உரிமை விடப்பட்ட ஹலரத் ஜைதை மணமுடிக்க விருப்பமற்றவராய் முதலில் அதற்கு மறுப்பு தெரிவித்தனர். ஆயினும்,

وَمَا كَانَ لِمُؤْمِنٍ وَلَا مُؤْمِنَةٍ إِذَا قَضَى اللّٰهُ وَرَسُولُهُ أَمْرًا أَنْ يَكُوْنَ لَهُمُ الْخِيَرَةُ
مِنْ أَمْرِهِمْ وَمَنْ يَعْصِ اللّٰهَ وَرَسُوْلَهُ فَقَدْ ضَلَّ ضَلٰلًا مُّبِيْنًا

"அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் யாதொரு விஷயத்தைப் பற்றிக் கட்டளையிட்ட பின்னர், அவ்விஷயத்தில் அதற்கு மாறாக வேறு அபிப்பிராயங் கொள்வதற்கு விசுவாசியான எந்த ஆணுக்கும் பெண்ணுக்கும் உரிமையில்லை. அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் எவரேனும் மாறு செய்தால், நிச்சயமாக அவர்கள் பகிரங்கமான வழி கேட்டிலேயே இருக்கிறார்கள்--என்ற (33: 36) திருவசனம் இறங்கக் கேட்டு 'மாநபியின் மனப் பொருத்தத்துக்கு மேலாக என் மனப் பொருத்தத்தை மிகைப்படுத்த நான் துணிய மாட்டேன்' எனக் கூறி ஏற்றனர்.

பொருளடக்கம்

ஓராண்டுக்கும் சிறிது கூடுதலாக மட்டுமே அவர்களின் இல்வாழ்வு நடைபெற்றது. பின்னர் ஒரு நாள் அண்ணலவர்களின் இல்லறத்திலேயே ஹலரத் ஜைனப் (ரலி) பங்கேற்க வேண்டுமென்பது இறைவனின் கற்பனை என்ற செய்தி வந்தது. அண்ணலாரவர்களோ நாணமுற்றவர்களாக அச்செய்தியை வெளியிடவே இல்லை.

ஹலரத் ஜைது--ஜைனப் (ரலி) இருவரின் வாழ்க்கையிலும் பூசல்கள் தோன்றலாயின. ஜைது (ரலி) அவர்கள் தம் மனைவியை மணத் தொடர்பிலிருந்து விடுவித்துவிட நாடி பலமுறை அண்ணலார் (ஸல்) அவர்களிடம் வந்து முறையிடலாயினர். அத்தருணங்களிலெல்லாம் அண்ணலாரவர்கள் இறைவனுக்கு அஞ்சுமாறும், அவன் நமக்குத் தந்துள்ள அனுமதிகளனைவற்றுள்ளும் அவனுக்கு அதிகம் வெறுப்பானது மணவிடுதலையே என்றும் கூறி, அவ்வாறு செய்து விடாதிருக்க ஜைது (ரலி) அவர்களைத் தடுத்தும் வந்தார்கள்.

அவ்வாறாக அவர்கள் தயங்கிடக் காரணம் இயல்பிலேயே அவர்கள் கொண்டிருந்த நாணம் மட்டுமேயன்றி ஹலரத் ஜைது (ரலி) அவர்கள் பால் கொண்டிருந்த வாஞ்சையுமாகும். அன்றி தன் மகனின் மனைவியையே முஹம்மத் (ஸல்) மணந்து கொண்டார் என நயவஞ்சகர்கள் பழி தூற்றி விடுவார்களே என அண்ணலார் (ஸல்) அஞ்சினார்கள்.

وَحَلَآئِلُ اَبْنَآئِكُمُ الَّذِيْنَ مِنْ اَصْلَابِكُمْ

உங்களுக்குப் பிறந்த உங்கள் புதல்வர்களின் மனைவிகளையும்—(நீங்கள் மணம் செய்து கொள்வது விலக்கப்பட்டிருக்கிறது) என்று திருக்குர்ஆன் (4:23) கட்டளையிடுகிறது. அரபுகளோ ; மகனாக வரிந்துக்

பொருளடக்கம்

கொண்டவரையும் சொந்த மகனாகவே பாவிப்பவர்களா யிருந்தனர்.

ஒரு நாள் அண்ணலார் (ஸல்) அவர்கள் தங்கள் மனைவியருள் ஒருவரோடு அமர்ந்திருக்கையில் இறை செய்தி இறங்கலாயிற்று.

وَاِذْ تَقُوْلُ لِلَّذِيْٓ اَنْعَمَ اللّٰهُ عَلَيْهِ وَاَنْعَمْتَ عَلَيْهِ اَمْسِكْ عَلَيْكَ زَوْجَكَ وَاتَّقِ اللّٰهَ وَتُخْفِيْ فِيْ نَفْسِكَ مَا اللّٰهُ مُبْدِيْهِ وَتَخْشَى النَّاسَ ۚ وَاللّٰهُ اَحَقُّ اَنْ تَخْشٰىهُ ؕ فَلَمَّا قَضٰى زَيْدٌ مِّنْهَا وَطَرًا زَوَّجْنٰكَهَا لِكَيْ لَا يَكُوْنَ عَلَى الْمُؤْمِنِيْنَ حَرَجٌ فِيْٓ اَزْوَاجِ اَدْعِيَآئِهِمْ اِذَا قَضَوْا مِنْهُنَّ وَطَرًا ؕ وَكَانَ اَمْرُ اللّٰهِ مَفْعُوْلًا ۝

"அல்லாஹ் எவருக்கு அருள் புரிந்து, நீரும் அவர்மீது கருணை கூர்ந்திருந்தீரோ, அவரிடத்தில், 'நீர் அல்லாஹ்வுக்கு பயந்து; (ஜைனபு ஆகிய) உம்முடைய மனைவியை (விவாக பந்தத்திலிருந்து நீக்காது) உம்மிடமே நிறுத்திக் கொள்ளும்' என்றுகூறிய போது, அல்லாஹ் வெளியாக்க இருந்ததை, மனிதர்களுக்கு அஞ்சி, நீர் உம் மனதில் மறைத்தீர். நீர் பயப்பட மிகத் தகுதியுடையோன் அல்லாஹ் தான் (மனிதர்களல்லர்). ஜைது (என்பவர் மனம் மாறி தன் மனைவியாகிய) அவளைத் தலாக்கு கூறிவிட்ட பின்னர், நாம் அவளை உமக்குத் திருமணம் செய்து வைத்தோம். ஏனென்றால், விசுவாசிகளால் (சுவீகரித்து) வளர்க்கப்பட்டவர்கள், தங்கள் மனைவிகளைத் தலாக்கு கூறி விட்டால், (அவர்களை வளர்த்த விசுவாசிகள், அப்பெண்களைத் திருமணம் செய்து கொள்வதில் யாதொரு தடையுமிருக்கக் கூடாதென்பதற்காக (இது) நடைபெற்றே தீர வேண்டிய அல்லாஹ்வுடைய கட்டளையாக இருந்தது-என்ற

பொருளடக்கம்

(33 : 37 ஆவது) திருவசனம் இறங்கக் கேட்டு அண்ணலார் (ஸல்) அவர்கள் ஹலரத் ஜைனப் (ரலி) அவர்களுக்கு அதனையறிவித்து அவர்களைத் தங்களின் இல்லறத்தில் ஏற்றார்கள்.

இத்திருவசனத்தில் ஹலரத் ஜைது (ரலி) அவர்கள் தங்களின் இயற்பெயராலேயே குறிப்பிடப்படுவதைப் போன்ற ஒரு பேற்றை அண்ணலார் (ஸல்) அவர்களின் ஒரு நூறாயிரம் தோழர்களில் மற்றெவரும் பெற்றதில்லை என்பது மட்டுமல்ல, ஹலரத் ஜைது (ரலி) அல்லாஹ்வின் அருள் சூழப்பெற்றவர், அண்ணலாரின் கருணை வயப் பெற்றவர் என்பதற்கும் இத்திருவசனத்தின் துவக்கமே கட்டியங் கூறுகிறது.

பத்ருப் போர் முதல் எல்லாப் போர்களிலும் ஹலரத் ஜைது (ரலி) பங்கேற்றுள்ளனர். பத்ருப்போரின் வெற்றிச் செய்தியை அறிவிக்க மதீனாவின் மேற்குப் பகுதிக்கு ஹலரத் அப்துல்லாஹ் இப்னு ரவாஹா (ரலி) என்ற அன்ஸாரியை அனுப்பி வைத்த அண்ணலார் (ஸல்) அவர்கள், கிழக்குப் பகுதிக்கு ஹலரத் ஜைது (ரலி) அவர்களையே அனுப்பி வைத்தார்கள்.

பத்ருப் போரில் முஸ்லிம்களால் கைது செய்யப்பட்ட எதிரிகளுள் பெருமானார் (ஸல்) அவர்களின் மருமகனார் அபுல்—ஆஸும் இருந்தனர். அன்னவர் அன்று வரை இஸ்லாத்தை ஏற்றிருக்கவில்லை. அவரை விடுவிக்க மக்காவிலிருந்து ஈட்டுப் பணம் கொடுத்தனுப்பியிருந்த அவரின் மனைவியார்—அண்ணலார் (ஸல்) அவர்களின் தலைமகளார்—ஜைனப் (ரலி) தமக்கு தம் அன்னை கதீஜா நாயகியரால் அணிவிக்கப்பட்டிருந்த ஒரு கோமேதக மாலையையும் அனுப்பியிருந்தார். அதனைக் கண்டவுடன், தம் வழிக்கு உறுதுணையாய் நிற்க முதன் முதலா

கவே துணிந்த தம் உத்தமத் துணைவியாரின் நினைவு களிர்ந்து; உணர்வு கொண்ட நபிகளார் தம் தோழர்களின் ஒப்புதலுடன் அம்மாலையை அபுல் ஆஸ் அவர்களிடமே திரும்பத் தந்து விட்டார்கள்—மக்காவில் உள்ள தம் மகளார் ஜைனபைத் தம்மிடம் அனுப்பிட வேண்டுமென்ற நிபந்தனையுடன். அந்நிபந்தனையை ஏற்றுச் சென்ற அபுல் ஆஸ் அவர்கள் தம் வாக்குறுதிப்படி ஜைனப் பின்த்து ரஸூல் அவர்களை மதீனாவுக்கு அனுப்பி வைத்த போது மக்காவின் எல்லையிலிருந்து அவர்களை அழைத்து வரும் பொறுப்பை ஹலரத் ஜைது (ரலி) அவர்களே மேற் கொண்டனர்.

பத்ருப் போரில் தங்களின் தலைவர்களையெல்லாம் பலிகொடுத்த குரைஷிகள் தங்களின் தலைமையை ஹலரத் அபூஸுஃப்யானிடம் ஒப்புவித்தனர். தன் தந்தை உத்பா வையும் சிறிய தந்தை ஷைபாவையும் உடன் பிறந்தான் வலீதையும் பத்ரில் பலிகொடுத்துவிட்டிருந்த அபூஸுஃப் யானின் மனைவி ஹிந்தா அதற்குப் பழிதீர்க்காதவரை தன் தலைக்கு எண்ணெ தேய்ப்பதில்லை எனச் சபதம் பூண்டிருந்தார்—கணவரோடு இல்லற இன்பங்கொள்வ தில்லை என்பதற்கடையாளமது. எனவே முஸ்லிம்களை விரைந்து பழிதீர்க்கத் துடித்த அபூஸுஃப்யான் அதற் கென மேற்கொண்ட ஓரிரு முயற்சிகள் தோல்வியுற்ற துடன், முஸ்லிம்களையும் எதிர் நடவடிக்கைகளை மேற் கொள்ளச் செய்தன. அதன் பலனாக மக்கத்துக் குரைஷி களுக்கு, தங்கள் வாணிபத்துக்காக ஸிரியாவுக்குச் செல்ல விருந்த கடலோரப் பாதை கலக்கத்துக்குரியதாக ஆகிவிட் டது. ஹிஜ்ரி 3ம் ஆண்டின் ஆரம்பத்தில், அவர்கள் நஜ்தின் வழியாக 'இராக்'குக்குச் சென்று வாணிபஞ் செய்ய முடிவு செய்து ஸஃப்வானின் தலைமையில் ஒரு குழுவைஅனுப்பி வைத்தனர். அப்போது மக்காவிலிருந்து திரும்பி வந்த

மதீனாவாசி ஒருவரின் மூலம் அச்செய்தியறிந்து அண்ண லார் (ஸல்) அவர்கள் அவ்வாணிபக் குழுவினரை வழி மறிக்க நூறு வீரர்களை ஒப்படைத்து ஹலரத் ஜைது (ரலி) அவர்களையே அனுப்பி வைத்தார்கள். தலைமை யேற்றுச் சென்ற ஹலரத் ஜைது (ரலி) அவர்கள் திறன் பட தாக்குதல் நடத்தி மக்காவாசிகளை முறியடித்து விரட்டி அவர்கள் ஏற்றிச் சென்ற ஏராளமான வெள்ளி யையும் ஒட்டகைகளையும் கொண்டு வந்தனர்.

அதற்குப் பின்னரும் அண்ணலார் (ஸல்) அவர்களால் தலைமையளித்து அனுப்பப்பட்ட ஓரிரு படையெடுப்பு களிலும் ஹலரத் ஜைது (ரலி) அவர்கள் வெற்றியுடனேயே திரும்பினர். ஹிஜ்ரி 5ம் ஆண்டில் 'முஸ்த்தலிக்' என்ற அரபிக்கோத்திரத்தின் மீது அண்ணலார் (ஸல்) அவர் களே படை நடத்திச் சென்ற சமயம் அவர்கள் தங்களின் இந்த முன்னாள் அடிமையிடம் மதீனாவின் அதிகாரத் தையே ஒப்படைத்துச் சென்றார்கள்.

ஹிஜ்ரி 8ம் ஆண்டில் நடைபெற்ற முஅத்தா போரின் படைத்தலைமையையும் அண்ணலார் (ஸல்) அவர்கள் ஹலரத் ஜைது (ரலி) அவர்களிடமே ஒப்புவித்தனுப் பினார்கள். ஹுதைபியா உடன்பாட்டின் மூலம் மக்கநகர மக்களோடு போர் ஓய்வு கண்ட அண்ணலார் (ஸல்) அவர் கள், அவ்வாய்ப்பையே பயன்படுத்தி சுற்றிலும் இருந்த அரபு மாநில மன்னர்கள் குறு நிலத் தலைவர்களையெல் லாம் இஸ்லாத்தின்பால் அழைத்து, தூதர்களின் மூலம் மடல்களை அனுப்பி வைத்தார்கள். அவ்வாறு கெய்ஸ ருக்கு ஒரு மடலை ஏந்திச்சென்ற ஹலரத் ஹாரிஸ் பின் உமைர் (ரலி) அவர்களை வழியில் புஸ்ரா என்ற தலத் தில் இருந்த-கெய்ஸரின் பிரதி நிதி-ஷரஹ்பீல் பின்அம்ரு என்பவன் கொன்றுவிட்டான். அதற்குப் பழிதீர்க்க ஹிஜ்ரி 8ம் ஆண்டில் மூவாயிரம் பேர்களைக் கொண்ட ஒரு

பொருளடக்கம்

படையை அண்ணலார் (ஸல்) அவர்கள் அனுப்பி வைத்தார்கள். அப்படையில் அரபு நாட்டின் மிக உயர்ந்த பாரம்பரியத் தலைவர்களெல்லாம் பங்கு பெற்றிருக்க, அவர்களின் தலைமையை ஹலரத் ஜைது (ரலி) அவர்களிடமே ஒப்படைத்த அண்ணலார் (ஸல்) அவர்கள், அப்போரில் ஜைது (ரலி) கொல்லப்பட்டால் ஹலரத் ஜஅஃபர் இப்னு அபூதாலிப் (ரலி) தலைமை ஏற்க வேண்டும் எனவும், அவரும் கொல்லப்பட்டால் ஹலரத் அப்துல்லாஹ் இப்னு ரவாஹா (ரலி) தலைமை ஏற்கவேண்டுமெனவும், அவரும் கொல்லப்பட்டால் படையினர் தங்களுக்குள் ஒருவரைத் தலைவராகத் தேர்ந்தெடுத்துக் கொள்ளவேண்டுமெனவும் அறிவித்தார்கள்.

அதனை ஆங்கு நின்று செவியுற்றுக் கொண்டிருந்த ஒரு யூதர், ‘அபல் காஸிம்! நீர் உண்மையில் ஒரு நபியாக இருப்பின் இம்மூவரும் போரில் கொல்லப்படுவது உறுதி. ஏனெனில் பனீஇஸ்ராயீல்களில் தோன்றிய நபிமார்களும் இவ்வாறாக ஒரு நூறு தளகர்த்தர்களையும் வரிசைப்படுத்திப் போருக்கு அனுப்பியுள்ளனர். அவர்கள் அனைவருமே கொல்லப்பட்டுத்தான் போயினர்’ என்றார். அண்ணலார் (ஸல்) அவர்களிடம் நேரிடையாகவே அவ்வாறுரைத்த அவர் ஹலரத் ஜைது [ரலி] அவர்களையும் தனிமையில் சந்தித்து, ‘நீர் நம்புவது போல் முஹம்மது (ஸல்) ஒரு நபியாயின் இப்போரில் நீர் நிச்சயம் கொல்லப்பட்டே போவீர்’ என்று சுட்டிக்காட்டினார். மரணத்துக்கு அஞ்சி முஸ்லிம்கள் பின்னடைந்து விடுவார்கள் என்ற தீய நம்பிக்கையோடே யூதர்கள் அத்தகைய உண்மைகளை நேரத்துக்குத் தக்கவாறு வெளியிடுவதைத் தங்கள் தொழிலாக்க கொண்டிருந்தனர். அவர்களின் நினைப்புக்கு நேர்மாறாக முஸ்லிம் தளகர்த்தர்கள் ஒவ்வொருவரும் போரில் கிடைக்கக் கூடிய மரணத்தையே ஒரு பேறாக எண்ணிப் போர்க்களம் புகுந்தனர்

பொருளடக்கம்

அண்ணலார் (ஸல்) அவர்களின் அவ்வறிவிப்பைக் கேட்டு அவர்களின் ஒன்றுவிட்ட இளவலான ஜஅஃபர் இப்னு அபூதாலிப் (ரலி) அவர்கள், 'பெருமானே! தாங்கள் என்னைவிட ஜைதையே முற்படுத்தி வைப்பீர்கள் என நான் ஒருபோதும் நினைக்கவே இல்லை' எனக் கவலையுற்றனர். மேலும் பலரும் அத்தலைமைக்கு ஆவலுற்று நின்ற நிலையிலும் 'நன்மை எதிலிருக்கிறது என்பதை நீங்கள் அறியமாட்டீர்கள்' என்றறிவித்த அண்ணலார் (ஸல்) அவர்கள் ஜைது (ரலி) அவர்களிடமே போர்க் கொடியை ஒப்படைத்து அனுப்பி வைத்தார்கள். அந்தப் போரிலேயே ஹலரத் ஜைது (ரலி) அவர்கள் தங்கள் இன்னுயிரை ஈந்தார்கள்.

ஹலரத் ஜைது (ரலி) அவர்களின் இழப்பு அண்ண லார் (ஸல்) அவர்களை வருத்திய நிலையை வெளிப்படை யாகவே தோழர்கள் கண்டனர். ஹலரத் ஜைது (ரலி) அவர்களின் இல்லம் சென்ற அண்ணலார் (ஸல்) அவர்கள் இடைவழியிலேயே அழுத வண்ணம் ஓடி வந்த ஜைது (ரலி) அவர்களின் இளைய மகளை அள்ளியணைத்துக் கொண்ட போது அவர்களின் உடலே குலுங்கியது அழுகை யால். அதனைக் கண்ட ஹலரத் ஸஅது இப்னு உபாதா (ரலி) 'ஏந்தலே! பெருமானே!! என்ன இது?' என ஆறுத லாய் வியந்திட, அண்ணலார் (ஸல்) அவர்கள் அன்பின் மிகுதியால் அமைந்த பாசத்தின் வெளிப்பாடு அது என்ற ருளினார்கள்.

பெருமானார் (ஸல்) அவர்கள் ஹலரத் ஜைது (ரலி) அவர்களிடம் கொண்டிருந்த பற்றும் பாசமும் அத்தகைய தாயிருந்தது. ஒரு காரியமாக ஹலரத் ஜைது (ரலி) அவர் கள் எங்கும் செல்வார்களாயின் அவர்களின் வரவுக்காக அண்ணலார் (ஸல்) அவர்கள் வழி மீது விழி வைத்துக் காத்திருப்பார்கள்.

பொருளடக்கம்

ஹிஜ்ரி ஆறாம் ஆண்டு ரமலான் மாதம் ஸிரியாவை நோக்கிச் சென்ற முஸ்லிம்களின் வாணிபக் கூட்டத்தை 'பத்ரக்' என்ற தலத்தில் ஒரு வழிப்பறிக் கூட்டம் தாக்கிக் கொள்ளையடித்தது. அவர்களுக்குப் பாடம் புகட்ட அண்ணலார் (ஸல்) அவர்கள் ஒரு சிறுபடையை ஹலரத் ஜைது (ரலி) அவர்களின் தலைமையில் அனுப்பி வைத்தார்கள். ஹலரத் ஜைது (ரலி) அவர்கள், தங்கள் படையொடு பகலில் பதுங்கியிருப்பதும் இரவெல்லாம் பயணம் செய்வதுமாகவே பாதை கடந்து திடுமென அவ்வழிப்பறிக் கூட்டத்தை அடர்ந்துத் தாக்கி விரண்டோடச் செய்தார்கள். வெற்றியுடன் மதீனா திரும்பிய அவர்கள், அண்ணலார் (ஸல்) அவர்களின் இல்லத்தினுள் அடியெடுத்துவைத்த சமயம், தங்களின், இடையில் ஒரு துணியை மட்டுமே உடுத்தி வீட்டில் அமர்ந்திருந்த நபி பெருமான் (ஸல்) அவர்கள், அதே நிலையில் ஓடோடிச் சென்று அவர்களைத் தம் கழுத்தோடணைத்துக் கட்டி முத்தமிட்டு வரவேற்றார்கள். "அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்கள் அவ்வளவு திறந்த மேனியுடன் எவரையும் சந்திக்க நான் கண்டதேயில்லை" என அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்.

"நாயகத் திருமேனி (ஸல்) அவர்களின் இறுதிக் காலத்தில் ஹலரத் ஜைது (ரலி) அவர்கள் இருந்திருப்பார்களாகில் அண்ணலார் (ஸல்) அவர்கள் தம் பிரதிநிதியாக அவர்களையே நியமித்திருப்பார்கள்" எனவும் அன்னை ஆயிஷா நாயகியார் அறிவித்துள்ளார்கள்.

ஃ ஃ ஃ

பொருளடக்கம்

أسامة بن زيد بن حارثة رضي الله عنهم

# ஹலரத் உஸாமா இப்னு ஜைத் (ரலி)

''அன்னை ஆமினாவுக்குப் பின் நீரே என் அன்னை யாவீர்'' என அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்கள் போற்றிய உம்மு அய்மன் (ரலி) அவர்களை ஹலரத் ஜைது இப்னு ஹாரிஸ் (ரலி) அவர்கள் மணமுடித்து, நபித்துவ சகாப்த ஏழாம் ஆண்டில் அவ்விருவரும் பெற்ற மகனாரே ஹலரத் உஸாமா (ரலி). சோதனை மிகுந்த மக்கநகர வாழ்வில் நாளொரு துன்பமும் பொழுதொரு தொல்லையுமாக ஏற்று, பொறுமையுடன் நடமாடிக் கொண்டிருந்த பெருமான் நபி (ஸல்) அவர்களுக்கு ஹலரத் உஸாமா (ரலி) அவர்களின் பிறப்பு பேராறுதலா யிருந்தது; பெருமகிழ்வைத் தந்தது. ஹலரத் ஜைதிப்னு ஹாரிஸ் (ரலி) அவர்கள் மீது அளவிலா அன்பு கொண் டிருந்த அண்ணலார் (ஸல்) அவர்கள் உஸாமா (ரலி) அவர்களின் பிறப்பினால் கொண்ட பெருமகிழ்ச்சி எவருக் கும் வியப்பையளிக்கவில்லை. நபிமணித் தோழர்கள் யாவரும் ஹலரத் உஸாமா (ரலி) அவர்களை 'மஹபூபுர் ரஸூல்' என அழைத்தார்கள். ''உஸாமாவை மற்ற எவரையும் விட அதிகமாக நான் நேசிக்கிறேன். அவர் எதிர்காலத்தில் மேலான மனிதராகத் திகழ்வார்'' என அண்ணலார் (ஸல்) அவர்கள் கூறியிருந்தார்கள். மதீனா வாழ்க்கையில் ஒரு நாள் மஸ்ஜிதுன்னபவீயில் தம் பேரர் ஹஸன் (ரலி) அவர்களை ஒரு துடையின் மீதும் உஸாமா (ரலி) அவர்களை மற்றொரு துடையின் மீதும் அமர்த்திக் கொண்டவர்களாக அமர்ந்திருந்த அண்ணலார் (ஸல்) அவர்கள் ''இறைவா! இவர்கள் இருவரையும் நான் நேசிக் கிறேன். நீயும் இவர்களை நேசிப்பாயாக'' என்றிறைஞ் சினார்கள்.

குறைந்த வயதின் காரணமாக உஹதுப் போரில் பங் கேற்க வாய்ப்பிழந்த இவர்கள் தங்களின் பதினைந்தா

பொருளடக்கம்

வது வயதில் அகழ்ப் போரில் வாளேந்திப் போர் புரிந்தார் கள். மக்காவின் வெற்றியின் போதும் அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களின் பின்புறமாக புரவி மீது அமர்ந்து வந்த இவர்கள், நபி பெருமான் (ஸல்) அவர்களுட னும் ஹலரத் பிலால், உதுமான் பின் தல்ஹா (ரலி) ஆகிய இருவருடனும் கஅபாவினுள் செல்லப் பேறு பெற்றார்கள். ஹுனைன் போரில் முஸ்லிம் படைகள் நாற்புறமும் சிதறியோட நேர்ந்த சமயத்தில் அண்ணலார் (ஸல்) அவர்களின் புரவியைச் சூழ்ந்தே அசையாது நின்ற ஹலரத் அப்பாஸ், ஹலரத் அபூ ஸுஃப்யான் இப்னு ஹாரிஸ் போன்ற ஏழே தோழர்களில் ஹலரத் உஸாமா (ரலி) அவர் களும் ஒருவர். குறைந்த வயதிலேயே ஹலரத் உஸாமா (ரலி) அவர்களிடம் குடிகொண்டிருந்த வீரமும் விவேகமும் துணிவும் திறனும் பெருமானார் (ஸல்) அவர்களின் பற்றையும் பாசத்தையும் பெருக்கெடுக்கச் செய்தன. மற்ற அனைவரையும் விட ஹலரத் உஸாமா (ரலி) அவர்கள் மாநபி (ஸல்) அவர்களோடு நெருங்கி உரையாடுபவர் களாயிருந்தனர்.

மக்ஸூமி கோத்திரத்தைச் சார்ந்த ஒரு பெண்மணி களவாடியதாகக் குற்றம் சாட்டப்பட்ட சமயம் அவரது கரத்தைத் தறிக்கும்படி நபி பெருமான் (ஸல்) அவர்கள் தீர்ப்பளித்தார்கள். துர்ப்பேறாக அப்பெண்ணின் பெயரும் ஃபாத்திமாவாகவே இருந்தது. பனீ மக்ஸூமிகள் அரபு களிடையே செல்வச் செழிப்படைந்த ஒரு குடும்பத்தார். எனவே தங்களைச் சார்ந்த ஒரு பெண்மணி களவாடிய குற்றத்துக்காக கரம் துண்டிக்கப்படுவதை கோத்திரத் துக்கேயான இழுக்காக எண்ணி அவர்கள் கலங்கினார்கள். எனவே அதுபற்றி அண்ணலார் (ஸல்) அவர்களிடம் பரிந்துரைக்க நபிமணித் தோழர்கள் பலரையும் அவர்கள் நாடினர். ஆனால் பெருமானார் (ஸல்) அவர்கள் தீர்ப்பு

பொருளடக்கம்

வழங்கிய பின் அதனை மாற்றிடப் பரிந்துரைக்க எவரே துணிவர். இறுதியாக அனைவரும் பெருமானார் (ஸல்) அவர்களிடம் உரையாடுவதில் மிக நெருக்கமானவராக ஹலரத் உஸாமா பின் ஜைது (ரலி) அவர்களையே கண்டனர். இளைஞர் உஸாமா (ரலி) அவர்களும் துணிந்து பெருமானார் (ஸல்) அவர்களிடம் மக்ஸூமிகளுக்காகப் பரிந்துரைத்து விட்டார்கள். ஆனால் அண்ணலார் (ஸல்) அவர்களின் முகம் சினத்தால் சிவந்து விட்டது. ஏனெனில் தீர்ப்பு அவர்களுடையதல்லவே!

وَالسَّارِقُ وَالسَّارِقَةُ فَاقْطَعُوٓا أَيْدِيَهُمَا جَزَآءًۢ بِمَا كَسَبَا نَكَٰلًا مِّنَ ٱللَّهِ ۗ
وَٱللَّهُ عَزِيزٌ حَكِيمٌ

"ஆணோ, பெண்ணோ எவர் திருடினாலும் (-அத்தீ)ச் செயலுக்குத் தண்டனையாக-அவர்களின் கைகளைத் துண்டித்து விடுங்கள் (5 : 38) என (யாவரையும்) மிகைத்தோனும் ஞானமுடையோனுமாகிய அல்லாஹ்வினால் ஏற்படுத்தப்பட்ட எடுத்துக் காட்டான தண்டனை வரம்பிலேயே மாற்றமா!

அண்ணலார் (ஸல்) அவர்களின் செந்நிற முகத் தோற்றத்தால் மனம் கலங்கிய ஹலரத் உஸாமா (ரலி) அவர்கள் தங்கள் பிசகுதலுக்குப் பிழை பொறுக்கத் தேடிக்கொண்டார்கள். பின்னர் மக்களைக் கூட்டி உரையாற்றிய உத்தம நாயகர் (ஸல்) அவர்கள், "மேன்மக்கள் புரிந்த குற்றங்களை புறந்தள்ளி, நலிந்தவர்களை மட்டுமே தண்டித்து பேதங் காட்டியதாலேயே உங்களுக்கு முன் சென்ற சமூகத்தார் பலர் அழிந்தனர். எனது ஆன்மாவைத் தன் கரம் பற்றியுள்ள அந்த ஆண்டவனின் மீதாணையாக முஹம்மதின்



பொருளடக்கம்

மகள் ஃபாத்திமாவே திருடினாலும் அவரின் கரத்தைத் துண்டிக்கவே நான் கட்டளையிடுவேன்'' என விளக்கினார்கள்.

வாளேந்திய இளமையிலும் இவர்களைக் கொண்டு ஒரு தவறுதல் ஏற்பட்டு விட்டது. 'பதக்' கின் எல்லையில் வாழ்ந்த நாடோடிகளான 'பனீ முர்ரா'களுக்கு எதிராக அனுப்பப்பட்ட படையில் ஹலரத் உஸாமா (ரலி) அவர்களும் இருந்தனர். அதிலேயே அவர்கள் முதன் முதலாக வாளேந்திப் போர் புரிந்ததும். அதற்கு முன்னர் நடைபெற்ற அகழ்ப்போரிலும் ஹலரத் உஸாமா (ரலி) அவர்கள் பங்கு கொண்டாலும் அதில் அகழின் பின்னே சக வீரர்களோடு காவலாய் அமர்ந்திருந்ததோடேயே சரி. நேரடியான போர் அனுபவம் அவர்களுக்கு பனீ முர்ரா களோடேயே ஏற்பட்டது. அச்சமயம் பதினேழே வயதுகளையடையப் பெற்றிருந்த ஹலரத் உஸாமா (ரலி) அவர்களின் தோற்றத்தைக் கண்டு 'முர்ரா'களைச் சார்ந்த மிர்தாஸ் இப்னு நுஹைக் என்பவர் நையாண்டி செய்தார். வீறு கொண்ட ஹலரத் உஸாமா (ரலி) அவரை விரட்டிப் பாய்ந்தனர். இருவருக்குமிடையே நெடு நேரம் நடைபெற்ற தனிமைப் போரில் இறுதியாகச் சளைத்த மிர்தாஸ் 'லாயிலாஹ இல்லல்லாஹ்' என உரக்க ஒலிக்கலானார். அவ்வாறு அவர் திரும்பத் திரும்ப மீட்டுக் கொண்டிருந்த நிலையிலேயே ஹலரத் உஸாமா (ரலி) அவர்கள் அவரை வெட்டிக் கொன்று விட்டனர். இது இஸ்லாமிய யுத்த தர்மத்துக்குப் புறம்பானதாகிவிட்டது.

> ''விசுவாசிகளே! அல்லாஹ்வுடைய பாதையில் (யுத்தத்திற்காக) நீங்கள் சென்றால் (யுத்த முனையில் உங்களுக்கெதிர்ப்படுவார் விசுவாசிகளா நிராகரிப்போரா என்பதைத்) தெளிவாக அறிந்து கொள்ளுங்கள். (அவர்களில் எவரேனும் தம்மை

விசுவாசி என்று உங்களுக்கு அறிவிக்கும் பொருட்டு) உங்களுக்கு ஸலாம் கூறினால், (அவர்களிடம் உள்ள) இவ்வுலக வாழ்க்கைக்குரிய (அற்பப்) பொருளை நீங்கள் அடையக் கருதி, "நீ விசுவாசியல்ல" என்று கூறி (அவரை வெட்டி) விடாதீர்கள். எனத் திருக்குர் ஆன் (4 . 94.) கட்டளையிட்டிருந்தது

போரில் களைத்து எதிரிகள் தாங்கள் சரணடை வதைப் புலப்படுத்தும் வார்த்தைகளைச் கூவிடும் நிலையிலும், அவர்களை விட்டுவிட்டால் அவர்களிடமிருந்து கிடைக்கும் பொருள்களை இழக்க நேரிடுமென அஞ்சி அவர்களைக் கொன்றே வந்தார்கள் முஸ்லிம்கள். உயிருக் கஞ்சி அவ்வெதிரிகள் வெளியிடும் விசுவாசம் கோழைத் தனமானதென காரணம் காட்டப்பட்டதைக் கண்டித்து அல்லாஹ் இறைக்கி வைத்த வேதக்கட்டளை தொடர்ந்து,

"இதற்கு முன்னர் நீங்களும் இவ்வாறே (பயந்து பயந்து இஸ்லாத்தை வெளியிட்டுக் கொண்டு) இருந் தீர்கள். அல்லாஹ் உங்கள் மீது அருள் புரிந்தான். அதன் பின்னரே நீங்கள் உண்மை விசுவாசிகளா னீர்கள்"

என முஸ்லிம்களை அறிவுறுத்தியிருந்தது. இங்கே ஹலரத் உஸாமா (ரலி) மிர்தாஸைக் கொன்றது மிர்தாஸினால் சுண்டப்பட்டெழுந்த தன்மான உணர்வினாலேயேயன்றி பொருளாசையினால் அல்ல. ஆயினும் அடிப்படையில் அது குற்றமேயன்றி வேறல்ல.

பனூ முர்ராகளைத் தோற்கடித்து வெற்றியுடன் திரும்பிய படையினரை வரவேற்ற மாநபிகளார் (ஸல்) தம் வளர்ப்பு மகன் பெற்ற பேரர் உஸாமாவின் கன்னிப் போர் அனுபவத்தைக் கூறுமாறு ஆவலுடன் கேட்டார்கள். அவர் உற்சாகத்துடன் கூறிவர, கேட்ட வண்ணமேயிருந்த

பொருளடக்கம்

அண்ணலார் (ஸல்) அவர்கள் மிர்தாஸ் கொல்லப்பட்ட கோலத்தைக் கேட்டதும் திகைத்து விட்டார்கள். "உஸாமா! அம் மனிதர் 'லாஇலாஹ இல்லல்லாஹ்' எனக் கூறக் கேட்டுமா நீர் அவரைக் கொன்றீர்?" எனப் பெருமானார் (ஸல்) அவர்கள் கேட்டார்கள். "அண்ணலே! அவர் என் வாளுக்கஞ்சி அவ்வாறு கூறினாரேயன்றி உளமார இஸ்லாத்தை ஏற்கவில்லை" என்றனர் உஸாமா (ரலி). என்றாலும் நபி பெருமான் (ஸல்) அவர்களின் உள்ளம் அமைதியடையவில்லை.

"உஸாமா! உளமார அவர் ஏற்கவில்லை என்பதை எவ்விதம் நீர் அறிந்தீர். அவரது இதயத்தை நீர் பிளந்தா பார்த்தீர்" எனத் திரும்பத் திரும்ப வினவிய அண்ணலார் (ஸல்) அவர்கள், "மறுமையில் இறைவனின் திருமுன் இதற்கென்ன புகல் கூறுவீர்" என மிக வருந்தினார்கள். மிர்தாஸிடமிருந்து கைப்பற்றப்பட்ட உடைமைகளனைத்தையும் அவரது குடும்பத்தாரிடம் ஒப்படைத்துவிட ஹலரத் உஸாமா (ரலி) அவர்களைப் பணித்த அண்ணலார் (ஸல்) தண்டப்பரிகாரமாக ஓர் அடிமையை உரிமை விடவும் ஏவினார்கள். பிற்காலத்திலும் இச்சம்பவத்தை நினைக்குந்தோறெல்லாம் ஹலரத் உஸாமா (ரலி) "அன்றைக்கே நான் புதிதாகவே இஸ்லாத்தில் இணைந்திருக்கலாகாதா"? எனவருந்துவார்கள். ஏனெனில் 'இஸ்லாத்தில் இணைவது முந்திய பாவங்களனைத்தையும் அழித்து விடும்' என அண்ணலார் (ஸல்) அவர்கள் அறிவித்துள்ளார்கள். ஆனால் உஸாமா (ரலி) அவர்களோ இஸ்லாத்திலேயே பிறக்கப் பேறு பெற்றவராவர்.

அதற்குப் பின் ஹலரத் உஸாமா (ரலி) அவர்கள் தமது வாழ்நாளின் இறுதி வரை எந்த ஒரு முஸ்லிமுக்கும் எதிராகத் தமது வாள் உயர்ந்து விடாமல் மிக விழிப்புடன் பேணிக் கொண்டனர். ஒட்டகைப் போரில் அவர்

பொருளடக்கம்

களைப் பங்கேற்க கலீஃபா அலீ (ரலி) அவர்கள் அழைத்த போதும் அண்ணலார் (ஸல்) அவர்கள் ஒரு முறை கண்டித்த அதே தவற்றை மறுமுறையும் தாம் செய்ய விரும்பவில்லை எனக் கூறி விலகி நின்றார்கள்.

பதினெட்டே வயதுடைய இளைஞராக தம் தந்தை ஜைதிப்னு ஹாரிஸ் (ரலி) அவர்களின் தலைமையில் "மூத்தா" போரில் கலந்து கொண்ட இவர்கள் தம் கண்ணெதிரேயே கொல்லப்பட்ட தம் தந்தையின் உடலைக் கண்டும் சற்றும் கலங்கிடாமல் ஹலரத் ஜஅஃபர், அப்துல்லாஹ் இப்னு ரவாஹா, காலித் ஸைஃபுல்லாஹ் (ரலி) ஆகியவர்களின் தலைமையிலும் தொடர்ந்து போர் புரிந்தார்கள். வெற்றிக்குப் பின் மற்ற ஷுஹதாக்களோடு தம் தந்தையின் உடலையும் அடக்கம் செய்து, தந்தையார் ஏறி வந்த ஒட்டகையின் மீதே ஏறி மதீனா வந்தடைந்த அவர்களிடமே அண்ணலார் (ஸல்) அவர்கள் ஹிஜ்ரி 11ல் மீண்டும் ஒரு படையைத் தந்து ரோமர்களைப் பழிதீர்க்கப் பணித்தனுப்பினார்கள். அச்சமயம் இருபதே வயதுகளடைந்திருந்த அவர்களின் தலைமையில் ஹலரத் அபூ உபைதா, ஸஅது இப்னு அபீவக்காஸ், ஸஈது இப்னு ஜைத், கத்தாதா இப்னு நுஃமான் (ரலி) போன்ற முதிர்ந்த நபிமணித் தோழர்களெல்லாம் கலந்து சென்றனர்.

படை புறப்பட்ட தருணத்திலேயே அண்ணலார் (ஸல்) அவர்களும் நோய்வயப்பட்டார்கள். ஒரு காத தொலைவே கடந்து தங்கியிருந்த உஸாமா (ரலி) அவர்களுக்கும் அச் செய்தி எட்டியது. வரலாற்றில் மங்காப் புகழைத் தமக்களித்த மாநபிகளார் (ஸல்) நோயுற்ற செய்தியறிந்து மதீனா விரைந்தோடி வந்தனர் ஹலரத் உஸாமா (ரலி). மயக்கமுற்றிருந்த மாநபி நாதர் (ஸல்) அவர்கள், தம் திரு நுதலில் முத்தமிட்டு நின்ற ஹலரத் உஸாமா (ரலி) அவர்களைப் புரிந்து கொண்டார்கள்.

பொருளடக்கம்

தாம் பேசமுடியாத நிலையிலும் அண்ணலார் (ஸல்) தங்கள் கரங்களை விண்பால் ஏந்துவதும் ஹலரத் உஸாமா (ரலி) அவர்களின் முகத்தில் தடவுவதுமாக இருந்தார்கள். அந் நிலையிலும் அண்ணலார் (ஸல்) அவர்கள் படை நடத்திப் புறப்படும்படி உஸாமா (ரலி) அவர்களுக்கு சாடையாகவே உத்திரவிட்டார்கள். ஆனால் மறுதினமே அண்ணலார் (ஸல்) அவர்களின் ஆன்மா பிரிந்த செய்தி கிடைத்ததால் படை நடத்திப் புறப்படச் சித்தமாக விருந்த உஸாமா (ரலி) மீண்டும் மதீனா திரும்பிவிட்டார்கள். அண்ணலார் (ஸல்) அவர்களின் திரு உடலை நல்லடக்கம் செய்யும் புனிதப் பணியிலும் பங்குகொண்டார்கள்.

அண்ணலார் (ஸல்) அவர்களின் மறைவுக்குப் பின் கிலாஃபத்தை ஏற்ற ஹலரத் அபூபக்கர் (ரலி) அவர்கள் முதற்காரியமாக ஹலரத் உஸாமா (ரலி) அவர்களின் படையையே அனுப்பி வைத்தார்கள். அவ்விளந்தளபதியைப் புரவிமேலேற்றி கால் நடையாகவே தாம் வந்து அம்முது பெருங் கலீஃபா அனுப்பி வைத்த ஐம்பதினாயிரம் பேர்கள் கொண்ட அப்படையே இஸ்லாமிய வரலாறு ஆரம்பகாலத்தில் கண்ட மிகப் பெரும்படை. ஹிஜ்ரீ 11ம் ஆண்டு ரபீஉல் அவ்வல் மாதம் 21ம் நாள் மதீனாவிலிருந்து புறப்பட்ட அப்படை நாற்பதே நாட்களில் ரோமர்களைப் பழிதீர்த்து மிகப்பெரும் வெற்றி முழக்கத்தோடு மதீனா மீண்டது.

‘மஹ்பூபுர் ரஸூல்’ என்ற காரணத்திற்காகவே ஹலரத் உஸாமா (ரலி) அவர்களைப் பெரிதும் மதித்தனர் கலீஃபா உமர் (ரலி) அவர்களும். தங்களின் காலத்தில் போர்வீரர்களுக்கு மாதாந்திரப்படி நிர்ணயித்த அக் கலீஃபா தங்கள் மகனாருக்கு இரண்டாயிரத்து ஐந்நூறு காசுகளையும் உஸாமா (ரலி) அவர்களுக்கோ மூவாயிரம்

பொருளடக்கம்

காசுகளையும் நிர்ணயித்தார்கள். ''அமீருல் முஃமினீன், எந்தப் போரிலும் உஸாமா என்னைவிட முந்தி நிற்காத போது அவருக்கு நீங்கள் முன்னிடம் தந்ததேன்?'' என ஹலரத் அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அவர்கள் வினவியபோது, ''உஸாமாவின் தந்தை உம் தந்தையைவிட நபி பெருமான் (ஸல்) அவர்களுக்கு அதிகம் பிரியமானவராக இருந்தார். உஸாமாவும் அண்ணலார் (ஸல்) அவர்களுக்கு உம்மைவிட அதிகம் பிரியமானவர். எனவேதான் நான் அண்ணலார் (ஸல்) அவர்களின் நேசத்தை என்னுடைய நேசத்தைவிட உயர்வாக்கி வைத்தேன்'' என்றார்கள் கலீஃபா.

கலீஃபா உதுமான் (ரலி) அவர்களின் காலத்திலேற்பட்ட குழப்பங்களை விட்டும் ஹலரத் உஸாமா (ரலி) அவர்கள் விலகியே நின்றார்கள். பின்னர் கிலாஃபத்தை ஏற்ற அலீ (ரலி) அவர்களிடமே இவர்கள் பேரன்பும் மரியாதையும் கொண்டிருந்தார்கள். ஆயினும் ஸிப்ஃபீன் போருக்காக கலீஃபா அலீ (ரலி) அவர்கள் புறப்பட்டபோது ''சிங்கத்தின் குகையில் தாங்கள் நுழைந்தாலும் தங்களின் பின்னேயே நானும் நுழைந்து விடுவேன். இப்போரில் மட்டும் பங்கேற்க என் மனம் இசையவில்லை'' எனக்கூறி விலகிக் கொண்டார்கள். ஆரம்ப காலத்தில் அண்ணலார் (ஸல்) அவர்களின் மனம் நோக, தாம் இழைத்துவிட்ட பிசகே அவர்களை அவ்வாறு பின்னடையச் செய்துவிட்டபோதிலும் அலீ (ரலி) அவர்களின் புறம் நிலை கொண்டிருந்த வாய்மையையும் நேர்மையையும் நன்கு அறிந்திருந்த அவர்கள் அன்னவர்க்குத் தாம் துணை நின்று போராடாதது பற்றி காலமெல்லாம் வருந்தவே செய்தார்கள்.

அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களின் பேரன்பைப் பெற்றிருந்த ஹலரத் உஸாமா (ரலி) அவர்களின்

பொருளடக்கம்

பேற்றினைக் காணப்பொறாத காழ்ப்பாளர்களும் இருக்கவே செய்தனர். இவர்களின் அன்னையார் உம்மு அய்மன் (ரலி) நீக்ரோ இனத்தைச் சார்ந்தவராக இருந்தமையால் ஹலரத் உஸாமா (ரலி) அவர்கள் உருவத்தில் தம் அன்னையார் போன்று கருத்த நிறமும் சப்பையான மூக்கும் கொண்டிருந்தனர். மனிதர்களின் முகப்பொலிவை மட்டுமேயன்றி அகப்பொலிவையும் காணும் இயல்பு கொண்ட அண்ணலார் (ஸல்) அவர்கள் மக்கா வெற்றியிலும் இறுதி ஹஜ்ஜிலும் ஹலரத் உஸாமா (ரலி) அவர்களைத் தம் ஒட்டகையின் மீதும் பின்னமர்த்தி வரக்கண்டு அக் காழ்ப்பாளர்களின் உணர்வுகள் புழுங்கின. இறுதி ஹஜ்ஜை முடித்து இறைவனின் திருவீட்டை இடம் சுற்றி விடைபெற வந்த அண்ணலார் (ஸல்) ஏதோ காரியமாகத் தங்களைப் பிரிந்து சென்றிருந்த ஹலரத் உஸாமா (ரலி) அவர்கள் திரும்ப வரும்வரை தவாஃபைத் துவக்காது காத்திருந்தார்கள். ஹலரத் உஸாமா (ரலி) அவர்கள் திரும்ப வருவதையும், அண்ணலார் (ஸல்) அவர்கள் தவாஃபைத் துவக்க ஆயத்தமாவதையும் கண்ட யமன் வாசிகள் சிலர் "இந்த சப்பை மூக்குடைய கருத்த சிறுவனுக்காகவா இறைவனின் தூதர் தவாஃபைத் துவக்காது காத்திருந்தார்கள்" என வினவிக் கொண்டார்கள். அண்ணலார் (ஸல்) அவர்களின் மறைவுக்குப் பின்னர் அதே யமன் வாசிகளே மதம் மாறியவர்கள் என்றும், கலீஃபா அபூபக்கர் (ரலி) அவர்களால் அனுப்பப்பட்ட படையினரால் முறியடிக்கப்பட்டு மீண்டும் முஸ்லிமானார்கள் என்றும் ஹலரத் உர்வா இப்னு ஸுபைர் (ரலி) அறிவிக்கின்றனர். நபிமணித் தோழர்களுள் எவருடைய கண்ணியத்தையும் பழிப்பவர்களின் இதயங்கள் ஈமானையே இழந்துவிடக் கூடிய பேராபத்தை விளங்க வைப்பதாயுள்ளது ஹலரத் உர்வா (ரலி) அவர்களின் இந்த அறிவிப்பு.

பொருளடக்கம்

அண்ணலார் (ஸல்) அவர்களின் அந்திம காலத்தில் அனுப்பப்பட்ட பெரும்படைக்குத் தலைவராக ஹலரத் உஸாமா (ரலி) அவர்கள் நியமிக்கப்பட்டபோதும் அது பற்றிய முணுமுணுப்பு தோழர்களிடையே தோன்றியது. அச்செய்தியறிந்த அண்ணலார் (ஸல்) அவர்கள் தாம் நோயுற்றிருந்த நிலையிலும் பள்ளியின் மேடைமீதேறி அமர்ந்து தங்கள் தோழர்களை நோக்கி, "ஒருவனான என் இறைவனின் மீது ஆணையிட்டு நான் கூறுகிறேன். ஜைதும் தலைமைப் பதவிக்குத் தகுதியானவராகவே இருந்தார். இப்போது உஸாமாவும் அப்படியே. எனவே உஸாமாவின் தலைமையில் நீங்கள் ஒன்றுபட்டுக் காரிய மாற்றுங்கள். மனிதர்களில் ஜைது எனக்கு மிகவும் வேண்டியவராக இருந்தார். இப்போது உஸாமாவும் அப்படியே. அல்லாஹ்வுக்கு அஞ்சுமாறு நான் உங்களுக்கு அறபோதம் செய்கின்றேன்'' என எச்சரித்தார்கள்.

அண்ணலார் (ஸல்) அவர்கள் தம் வாழ்நாள் முழுவதும் ஹலரத் உஸாமா (ரலி) அவர்களைத் தம் பராமரிப்பிலேயே வைத்திருந்தார்கள். அதன் பலனாக போதிய கல்வி ஞானமும் அவர்களுக்கிருந்தது. அண்ணலார் (ஸல்) அவர்களின் 128 அருள்மொழிகளையும் ஹலரத் உஸாமா (ரலி) அவர்கள் மூலம் உலகம் பெற்றுள்ளது.

உஸாமா (ரலி) அவர்களின் முதல் திருமணம் ஜைனப் பின்த்து ஹன்ளலா என்ற பெண்மணியோடு அண்ணலார் (ஸல்) அவர்களாலேயே நடத்திவைக்கப்பட்டது. ஆயினும் ஏதோ காரணத்தினால் அப்பெண்ணை மண விடுதலை செய்தபின் உஸாமா (ரலி) அவர்கள் நயீம் பின் அப்துல்லாஹ் அன் னிஹாம் (ரலி) என்ற தோழரின் இல்லத்தில் மறுமணம் புரிந்து இப்ராஹீம் என்ற ஆண் மகவையும் பெற்றனர். பின்னர் பல திருமணங்களை

முடித்த அவர்கள் ஆண் பெண் சந்ததிகளையும் உலகில் விட்டு சென்றார்கள். 3000 திர்ஹங்களை அரசாங்க ஊதியமாகப் பெற்றிருந்ததோடு வாதியுல்குரா என்ற இடத்தில் வருவாய்க்கான நிலபுலன்களும் அவர்களுக்கிருந்தன.

அண்ணலார் (ஸல்) அவர்களின் அன்பையும் ஆசியையும் பெற்ற இவ்வரும் தோழர் ஹிஜ்ரி 54ல் ஹலரத் முஆவியா (ரலி) அவர்களின் ஆட்சி காலத்தில் தமது 60வது வயதில் மதீனாவில் மரணமடைந்தாகள்.

ஃ ஃ ஃ

# ஹலரத் இப்னு உம்மி மக்தூம் (ரலி)

عَبَسَ وَتَوَلّٰىٓ ۙ اَنْ جَآءَهُ الْاَعْمٰى ؕ وَمَا يُدْرِيْكَ لَعَلَّهٗ يَزَّكّٰىٓ ۙ اَوْ يَذَّكَّرُ فَتَنْفَعَهُ الذِّكْرٰى ؕ اَمَّا مَنِ اسْتَغْنٰى ۙ فَاَنْتَ لَهٗ تَصَدّٰى ؕ وَمَا عَلَيْكَ اَلَّا يَزَّكّٰى ؕ وَاَمَّا مَنْ جَآءَكَ يَسْعٰى ۙ وَهُوَ يَخْشٰى ۙ فَاَنْتَ عَنْهُ تَلَهّٰى ۚ كَلَّآ اِنَّهَا تَذْكِرَةٌ ۚ

"(நமது நபியாகிய) அவர் கடுகடுத்தார்; புறக் கணித்தார் (எதற்காக?) தம்மிடம் ஓர் அந்தகர் வந்த தற்காக. (நபியே! உம்மிடம் வந்த) அவர் பரிசுத்த வானாக ஆகிவிடக் கூடும் என்பதை நீர் அறிவீரா? அல்லது (உம்முடைய நல்லுபதேசத்தை) அவர் சிந்தித்து அந் நல்லுபதேசத்தால் அவர் பயன் பெற லாம் என்பதை நீர் அறிவீரா? அவ்வாறிருக்க அவரை நீர் ஏன் கடுகடுத்துப் புறக்கணித்தீர்? (நபியே! மார்க் கத்தை) எவன் அலட்சியம் செய்கிறானோ அவன் பக்கமே நீர் கவனம் செலுத்துகின்றீர். அவன் பரி சுத்தவானாகா விட்டால், அதைப் பற்றி உம்மீது யாதொரு குற்றமும் இல்லை(யே?)எவர் —தாமாகவே உம்மிடம் ஓடி வருகின்றாரோ அவர் தாம் (அல்லாஹ் வுக்குப்) பயப்படுகின்றவர். எனினும் நீர் அவரை அலட்சியம் செய்து விடுகின்றீர். அவ்வாறு செய்வது நன்றன்று." இது மெய்யாகவே ஒரு நல்லுபதேச மாகும்.

பொருளடக்கம்

யாருக்காக!

ஒரு தோழருக்காக!

புறப்பார்வையை இழந்திருந்தாலும் அகப்பார்வையின் வெளிச்சத்தால், முத்தாய் ஒளிர்ந்த முஹம்மதென்னும் இரத்தின மணியின் ஒளியை உணர்ந்து முந்திச் சென்று பற்றினரே—அந்த ஓர் அந்தகருக்காக!!

ஹலரத் அப்துல்லாஹ் இப்னு உம்மி மக்தூம் (ரலி) அவர்களுக்காக.

கைஸ் இப்னு ஸாபித் என்பவருக்கு இவர்களைப் பெற்றெடுத்த 'ஆத்திக்கா' என்ற பெண்மணி, பிறவியிலேயே இவர்களைக் கண்ணிழந்தவராகப் பெற்றெடுத்ததால் 'பார்வையற்றவரின் தாய்' — 'உம்முமக்தூம்' என்றழைக்கப்பட்டார். அதுபோன்றே ஹலரத் அப்துல்லாஹ் இப்னு கைஸ் (ரலி) தம் தாயின் பெயரைக் கொண்டு இப்னு உம்மி மக்தூம் என்றழைக்கப் பெற்றனர்.

ஹலரத் இப்னு உம்மி மக்தூம் (ரலி) அவர்கள் பெரும்பாலான நேரங்களில் அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களின் அவையில் அமர்ந்து மார்க்க ஞானங்களையும் சட்ட விளக்கங்களையும் கேட்டறிபவர்களாக இருந்தார்கள். அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களைச் சந்திக்க வருகிற குரைஷிச் செல்வர்கள், இவர்களின் எளிமையான தோற்றத்தையும் பார்வையற்ற நிலையையும் கண்டு 'நாங்கள் அமரும் சபைகளில் இவரைப் போன்றவர்களும் அமர்வது எங்களுக்குப் பிடிக்கவில்லை' என்று சொல்லவும் செய்வார்கள். நாளடைவில் அவர்களைத் திருத்திவிடலாம் என்ற நம்பிக்கையோடும், அவர்களோடு நட்பு கொண்டிருப்பதன் மூலம் அவர்களின் இன்னல்களிலிருந்து ஏழை முஸ்லிம்களை ஓரளவு நிம்மதி

பொருளடக்கம்

பெறச் செய்யலாம் என்ற எண்ணத்தோடும் அவர்களைத் தனிமையில் வைத்து நபிபெருமான் (ஸல்) அவர்கள் உரையாடுவதுண்டு.

அதே விதமாக ஒருநாள் உத்பா இப்னு ரபீஆ, அவனது இளவல் ஷைபா, வலீது இப்னு முகைரா உமையா இப்னு கலஃப், அபூ ஜஹ்ல் முதலிய செல்வமும் செல்வாக்கும் மிக்க தலைவர்கள் எழுப்பிய வினாக்களுக்கு அண்ணல் எம்பெருமானார் (ஸல்) அவர்கள் விளக்க மளித்துக் கொண்டிருந்தார்கள். அதே சமயம் ஹலரத் இப்னு உம்மி மக்தூம் (ரலி) அவர்களும் அங்கு வந்தடைந் தனர். கண் பார்வையற்ற அத்தோழர் குரைஷித் தலைவர் கள் அங்கமர்ந்திருந்ததை அறிய நியாயமில்லை. பேசும் ஒலியைக் கொண்டாவது ஊகித்திருக்கலாம். ஆனால் தாம் வந்த தருணத்தில் பெருமானார் (ஸல்) அவர்கள் விளக்கமளிக்கும் ஒலியை மட்டுமே செவியுற்ற அவர்கள், "எம்மானே! எனக்கும் ஏதேனும் கூறுங்கள். நானும் பாடமிட்டுக் கொள்கிறேன்" எனக்கூறிய வண்ணமே அமர்ந்தார்கள். அண்ணலார் (ஸல்) அவர்களோ அதனைப் பொருட்படுத்தாது குரைஷித் தலைவர்களின் புறமே விளக்கமளித்துக் கொண்டிருந்தார்கள். தாம் பிந்தி வந்ததனால் செய்திகள் தொடர்பற்றுச் செவியுற்ற ஹலரத் இப்னு உம்மி மக்தூம் (ரலி) அவர்கள் தமக்கும் அதனை விளக்கும் படியாக மீண்டும் மீண்டும் குறுக்கிட்டபடியே இருந்தார்கள். அந்தக் குறுக்கீட்டினால் சங்கடமடைந்த நபிகளார் சற்றுக் கடுகடுத்த குரலில் ஹலரத் இப்னு உம்மி மக்தூம் (ரலி) அவர்களை அடக்கி அமர்த்தி விட்டு குரைஷித் தலைவர்களின் புறம் முகந்திருப்பிப் பேசலானார்கள்.

ஹலரத் இப்னு உம்மி மக்தூம் (ரலி) அவர்கள் ஒரு ஏழை என்பதனாலோ, அல்லது குரைஷித் தலைவர்கள்

பொருளடக்கம்

பெற்றிருந்த செல்வ போகத்தையும் செல்வாக்கையும் மதித்தோ அண்ணலார் (ஸல்) அவர்கள் அவ்வாறு கடுகடுக்கவில்லை. ஹலரத் இப்னு உம்மி மக்தூம் (ரலி) வெகு முன்னதாகவே இஸ்லாத்தை உணர்ந்து அதனை ஏற்றுக் கொண்டிருந்த ஒரு தோழர். குரைஷித் தலைவர் களோ அதுவரை இஸ்லாத்தை ஏற்காதிருந்தனர். எனவே அவர்களுக்கு விளக்கமளிப்பதையே தம் முதற்கடமையாக அண்ணலார் (ஸல்) அவர்கள் எண்ணியிருக்கலாம். தங்களின் விளக்கத்தை ஏற்று அத்தலைவர்கள் அக்கணமே இஸ்லாத்தை ஏற்று விட வேண்டுமென ஆவல் கொண்டும் அவர்களின் வினாக்களுக்கு விடையளிக்க கவனம் செலுத்தியும் இருக்கக் கூடும். தம்மின் வழியை ஏற்று, தம்மிடம் பேரன்பு கொண்ட ஒருவரின் தோழமையால் தமக்குள்ள உரிமையோடும் அண்ணலார் (ஸல்) அவர்கள் சற்று கடுகடுத்திருக்கவும் கூடும். ஆனால் குண நலமேம்பாடு களின் நிறையுருவான தன் தூதரிடத்தில் சிறு கடுகடுப்பும் வெளியானது இறைவனுக்குப் பொருத்தப்படவில்லை.

பெருமான் நபி (ஸல்) அவர்களிடத்தில் என்றுமே தாம் கேட்காத கடுகடுப்பான குரலை அன்று செவியுற்ற ஹலரத் இப்னு உம்மி மக்தூம் (ரலி) அவர்கள், தாம் ஏதோ தவறிழைத்து, அது அண்ணலெம்பெருமான் (ஸல்) அவர்களுக்குத் தெரிந்து, அதன் காரணமாகவே கடுகடுக்கிறார்கள் என ஐயுற்றவராக, அச்சமயம் தாம் அங்கு அமர்வது நல்லதல்ல என முடிவு கொண்டு அங்கிருந்து எழுந்து செல்லலாயினர்.

மனத்தளர்வு கொண்ட அவரின் நடையில் தோன்றிய அவலம் ஆண்டவனின் கருணையைப் பொங்கச் செய்தது. கண்கள் தரப்படாத ஓர் அடிமைக்கு கண்ணியத்தைத் தர நாடிய இறைவன் தன் தூதரையே எச்சரித்தான்—ஆரம்பத்தில் கண்டபடி.

பொருளடக்கம்

இறை செய்தியைப் பெற்ற பெருமான் நபி (ஸல்) அவர்கள் எழுந்து விரைந்தார்கள்; ஓடிச்சென்று தம் தோழரைத் திரும்ப அழைத்து வந்தார்கள்; தம் போர்வையை விரித்து அதில் அவரை அமரச் செய்தார்கள்; அவரின் பொருட்டு இறைவன் தம்மை எச்சரித்ததையும் எடுத்துரைத்தார்கள்.

அச்சம்பவத்துக்குப் பின் அண்ணலார் (ஸல்) அவர்கள் தங்களின் வாழ்நாள் முழுவதும் அத்தோழரை மிகவும் கண்ணியப்படுத்தினார்கள். அவரைக் காணும் போதெல்லாம் "எவர் பொருட்டு என் இறைவன்என்னை எச்சரித்தானோ அவருக்கே சோபனம்" எனக்கூறி வரவேற்பார்கள்; உபசரிப்பார்கள்; அவரின் தேவையை முதலில் வினவுவார்கள்; மக்காவை விட்டும் ஹிஜ்ரத்து செய்ய உத்திரவானபோதும் அவரை ஹலரத் முஸ்அப் இப்னு உமைர் (ரலி) அவர்களோடு முதலிலேயே அனுப்பி வைத்தார்கள்.

அன்னை ஆயிஷா (ரலி) அவர்களும் அவரைப் பெரிதும் உபசரிப்பார்கள்; அண்ணலார் (ஸல்) அவர்கள் தாங்கள் மதீனாவை விட்டும் வெளிச்செல்ல நேர்ந்த பல தருணங்களில் ஹலரத் இப்னு உம்மி மக்தூம் (ரலி) அவர்களை தொழுகையை நடாத்தும் இமாமாக நியமித்துச் சென்றிருக்கிறார்கள். மதீனாவின் பள்ளியில் ஹலரத் பிலால் (ரலி) அவர்களையடுத்த இரண்டாவது முஅத்தினாக அவர்களே இருந்தனர். காலைத் தொழுகைக்கான பாங்கை அவர்களே ஒலிப்பது வாலாயம்.

கண் பார்வையற்றிருந்த அவர்கள் தம்முடைய இல்லம் மஸ்ஜிதுன் னபவீயை விட்டும் தொலைவில் இருந்ததாலும், வழித் துணைக்கும் தமக்குதவ எவரும் இல்லாததாலும் தங்கள் இல்லத்திலேயே தொழுதுக்

பொருளடக்கம்

கொள்ள ஒருமுறை அண்ணலார் (ஸல்) அவர்களிடம் அனுமதி கோரினர். ஆனால் மஸ்ஜிதுன் னபவீயின் பாங் கொலி அவரது இல்லத்தினுள் கேட்கிறதா என வினவிய அண்ணலார் (ஸல்) அவர்கள், அவர் ஆம் எனக் கூறக் கேட்டு, அப்படியானால் அவர் பள்ளிக்கு வந்தே ஆக வேண்டும் எனக் கூறிவிட்டார்கள்.

''விசுவாசிகளில் (போருக்குச் செல்லாமல்) இருந்து கொண்டவர்கள் (போருக்குச் சென்று) தங்களுடைய பொருள்களையும் உயிர்களையும் அல்லாஹ்வுடைய பாதையில் தத்தம் செய்தவர்களுக்குச் சமமாக மாட்டார் கள்'' என்ற இறை செய்தி இறங்கியது. அதனைக்கேட்டு ஹலரத் இப்னு உம்மி மக்தூம் (ரலி) ''பெருமானே! என் கண்களில் பார்வை இருக்குமானால் நிச்சயம் நான் போரில் கலந்து கொள்வேனே'' எனக் கவலையடைந்தனர். அச்சமயமே ஹலரத் ஜிப்ரயீல் (அலை) அவர்கள் 'விசு வாசிகளில் நோய் போன்ற காரணங்களின்றி போருக்குச் செல்லாமல் இருந்து கொண்டவர்கள் என்ற திருத்தத் தோடு (4 : 75) அவ்வசனத்தை ஓதிக் காட்டினார்கள்— என ஹலரத் ஜைது இப்னு ஸாபித் (ரலி) அறிவிக்கி றார்கள்.

இவ்வாறாக நோய் போன்ற தங்கடங்களுடைய முஸ் லிம்களுக்கு போர் மேல் செல்லாது தங்கிக் கொள்ள ஓர்அனு மதி இப்னு உம்மி மக்தூம் (ரலி) அவர்களால் கிடைத்தது. ஆயினும் அன்னவருக்கோ போர் ஆர்வம் அதிகமாகவே இருந்தது. தங்களின் கரத்தில் கொடியைத் தந்து தங்களை யும் களம்நடுவே நிறுத்துமாறு அவர்கள் கூறுவர். அவருக் குப் பார்வையற்ற குறையைச் சுட்டிக் காட்டுபவர்களிடம், 'அதுவும் நன்மையானதே! நான் புறங்காட்டி ஓடமுடியா தல்லவா?' என அவர்கள் கேட்பார்கள்.

பொருளடக்கம்

படிப்படியாகப் போர் ஆர்வம் மிகைத்த அவர்கள் காதிஸ்ஸிய்யாப் போர்க்களத்தில் கொடி பிடித்து நின்றனர் என்று ஹலரத் அனஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கின்றனர். அப்போரிலேயே அவர்கள் மரணித்ததாகவும் தெரிகிறது.



பொருளடக்கம்

عبد الله بن جحش رضي الله عنهم

# ஹலரத் அப்துல்லாஹ் இப்னு ஜஹ்ஷ் (ரலி)

ஹிஜ்ரி மூன்றாம் ஆண்டின் ஷவ்வால் மாதம் ஓர் இரவு, முஹாஜிர்களும் அன்ஸார்களுமாக எழு நூறு பேர்கள் முனைப்புடன் போர் ஆயத்தங்களை மேற் கொண்டிருந்தனர். மக்க நகரின் மகுடமணிகளாய்த் திகழ்ந்த அருந்தலைவர்களையெல்லாம் பத்ருப் போரில் பலி கொடுத்துச் சென்ற குரைஷிகள் முஸ்லிம்களைப் பழி தீர்க்க மூவாயிரம் பேர்களாகத் திரண்டு வந்து தங்கி யிருந்தனர் உஹது மலைச் சாரலில். அவர்களைச் சந்திக் கவே மதீனா வாசிகள் ஆயத்தங்கள் மேற்கொண்டிருந் தார்கள்.

தங்களின் வாட்களைத் தீட்டிக் கொண்டிருந்தவர்கள்,

அம்புகளையும் ஈட்டிகளையும் கூர்மைப்படுத்திக் கொண்டிருந்தவர்கள்,

புரவிகளைத் தட்டிச் சித்தப்படுத்திக் கொண்டிருந் தவர்கள்—

அவ்வாறான எத்தனையோ பேர்களிடையே, போரில் வெற்றிதேடி—தங்கள் பெற்றியை நாடி—மண்ணில் நெற்றிகளைப் பதித்துக் கண்ணீர் சிந்தி இறைஞ்சிக் கொண்டிருந்தவர்களும் பலபேர். அவர்களையெல்லாம் பார்வையிட்ட வண்ணம் உலவிக் கொண்டிருந்தனர் மாவீரர் ஸஅது இப்னு அபீவக்காஸ் (ரலி).

வணக்கத்தில் ஈடுபட்டிருந்தவர்களில் நாற்பது வயது கள் மதிக்கத்தக்க ஒருவரின் கண்கள் ஹலரத் ஸஅது (ரலி) அவர்களைக் கண்டு கொண்டன. விருட்டென எழுந்து

பொருளடக்கம்

கொள்ளப்பட்டேன்'' எனக் கூறக்கேட்டு நீ ''ஆம் அப்துல்லாஹ்! நீ உண்மையே கூறினாய்'' என ஏற்க வேண்டும்—என்று அவர் இறைஞ்சக் கேட்டு ஹலரத் ஸஅது (ரலி) அவர்களும் ''ஆமீன்'' என்றார்கள்.

அவ்விருவரின் வேண்டுதல்களும் அங்கீகரிக்கப்பட்டன. மறுநாள் நடைபெற்ற போரில் அவர் கொல்லப்பட்டு அவரது மூக்கும் காதுகளும் அறுக்கப்பட்டு ஒரு நூலில் கட்டித் தொங்கவிடப் பட்டிருந்ததாக ஹலரத் ஸஅது (ரலி) அவர்களே அறிவித்துள்ளார்கள்.

அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் தந்தையுடன் பிறந்த 'உமைமா' என்ற மாமியின் மகனார் ஹலரத் அப்துல்லாஹ் இப்னு ஜஹ்ஷ் (ரலி) அவர்களே அவ்வாலிபர்; உம்முல் முஃமினீன் ஹலரத் ஜைனப் பின்த்து ஜஹ்ஷ் (ரலி) அவர்களின் உடன் பிறந்தவர்; அண்ணலார் (ஸல்) அவர்களைவிடப் பனிரண்டாண்டுகள் இளையவர். அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்கள் அர்க்கமின் இல்லத்தை அடைக்கலத் தலமாக்கிக் கொள்ளுமுன்பே அவர்களின் கரம் பற்றி இஸ்லாத்தை ஏற்ற இவர்கள், குறைஷிகளின் கொடுமைகள் தாங்காது, தம்மின் உடன் பிறந்தார்களாகிய, அபூ அஹமத், உபைதுல்லாஹ், ஜைனப், உம்மு ஹபீபா, ஹம்னா, உபைதுல்லாஹ்வோடு மணவாழ்வு கொண்டிருந்த —உம்முல் முஃமினீன் உம்மு ஹபீபா பின்த்து அபூ ஸுஃப்யான் ஆகியோருடன் அபிஸீனியாவுக்கு அடைக்கலந்தேடிச் சென்றனர். அவர்களில் உபைதுல்லாஹ் மட்டும் அபிஸீனியாவில் கிருஸ்த்துவராக மாறி மரணித்தும் விட்டார். எஞ்சியவர்களுடன் சில நாட்கள் கழித்து மக்கா திரும்பிய இவர்கள் மீண்டும் தம் குடும்பத்தார் அனைவருடனும் மதீனாவுக்கு ஹிஜ்ரத்து செய்தனர்.

ஸஅது (ரலி) அவர்களின் கரம்பற்றிக் கொண்டு அவர் கேட்டார், ''ஸஅத்! தாங்களும் சற்று இறைஞ்சலா காதா?'' என்று.

''நிச்சயம் இறைஞ்சுவேன். நீர் ஆமீன் கூறுவீரா!'' என ஸஅது (ரலி) அவர்கள் வினவினார்கள்.

''ஆகட்டும்'' எனச் சம்மதித்தாரவர்.

ஹலரத் ஸஅது (ரலி) அவர்கள் இறைஞ்சலானார் கள். இறைவனைப் புகழ்ந்து துதித்து அண்ணலார் (ஸல்) அவர்கள் மீது வாழ்த்து கூறி, ''என் இறைவா! நாளை போர்க்களத்தில் ஒரு பலமான எதிரியை வந்து என்னைச் சந்திக்கச் செய்வாயாக. அவன் முழுப் பலத் தோடு என்னைத் தாக்க வேண்டும். நானும் அவனோடு கடுமையாகப் போரிடவேண்டும். இறுதியில் நீ எனக்கு வெற்றியைத் தந்தருள வேண்டும்'' என அவர்கள் இறைஞ்சக் கேட்டு ''ஆமீன்'' என்றனர் அவ்வாலிபர்.

பின்னர் அவரும் இறைஞ்சலானார்: யா அல்லாஹ்! எதிரிகளில் கடுமையான ஒருவனைச் சந்திக்கும் வாய்ப் பினை நாளை நீ எனக்கு அருள்வாயாக! நான் என் முழு வலி மையையும் கொண்டு அவனைத் தாக்க வேண்டும். அவனும் என்னைக் கடுமையாகத் தாக்கிக் கொல்ல வேண்டும். உன் பாதையில் நான் கொல்லப்பட்ட பின் அவன் என் வயிற் றைக் கீறிக் கிழிக்க வேண்டும். என் மூக்கையும் துண்டு துண்டுகளாக அறுத்து என் உருவத்தை அவன் சிதைக்க வேண்டும். மறுமை நாளன்று உன் பெருஞ் சன்னிதானத் தில் நான் சிதைக்கப்பட்ட கோலத்தோடு வந்து நிற்கை யில், நான் அக்கோலத்தில் ஆக்கப்பட்ட காரணத்தை நீ கேட்க வேண்டும். அப்போது நான்; ''என் இறைவா! உன்னுடையவும் உன் தூதருடையவும் விரோதிகளால் நான் உனக்காகவும் உன் தூதருக்காகவுமே இவ்விதம் பலி

முன்னரே அபிஸீனியா சென்று திரும்பிய ஹலரத் அப்துல்லாஹ் (ரலி) அவர்களுக்கு 'ஹிஜ்ரத்' புதிய அனுபவமல்லவாயினும் இம்முறை மக்காவை விட்டும் நிலையாகக் குடி பெயர்ந்து சென்றதில் ஒரு தனிச் சிறப்பு அவர்களுக்கிருந்தது. ஆண்கள், பெண்கள், முதியவர்கள், இளையவர்கள் உட்பட அக்குடும்பத்தாரனைவரும் ஒட்டு மொத்தமாக இணைந்து, இஸ்லாத்தை ஏற்று, ஊரைத் துறந்து வெளியேறிச் சென்றதால் அக்குடும்பத்தார் குடியிருந்த ஒரு பகுதியே வெறிச்சோடிக் கிடந்தது.

ஊரைத் துறந்து சென்றவர்கள் யார் யார் என ஆய்ந்த வண்ணமே மக்காவின் வீதிகளில் சுற்றி வந்த அபூ ஜஹ்ல், கேட்பாரற்றுத் திறந்து கிடந்த—ஹலரத் அப்துல்லாஹ் இப்னு ஜஹ்ஷ் (ரலி) அவர்களின்—மாபெரும் வீட்டினுள் நுழைந்து பார்வையிட்டான். அங்கு குவிந்துக் கிடந்த உடைமைகளையெல்லாம் தன்னுடையவைகளாக்கிக் கொண்டான். அச் செய்தியறிந்து ஹலரத் அப்துல்லாஹ் இப்னு ஜஹ்ஷ் (ரலி) அவர்கள் உள்ளம் வருந்தி முறையிட்டனர். அதுகேட்டு அண்ணலார் (ஸல்) அவர்கள், "அப்தல்லாஹ்! அதற்குப் பகரமாக இறைவன் சுவனத்தில் அருளப் போகும் இல்லத்தை நீர் விரும்பவில்லையா"? எனக் கேட்டார்கள். அதுவே தமக்குப் போதும் என மன அமைதி கொண்ட ஹலரத் அப்துல்லாஹ் (ரலி) மதீனாவில் ஹலரத் ஆஸிம் இப்னு ஸாபித் (ரலி) அவர்களின் பந்தத்தில் வாழலானார்கள்.

மதீனாவில் இவர்களின் வாழ்க்கை சுருக்கமானதாகவே அமைந்தபோதிலும் சிறப்புடையதாய் அமைந்தது. ஹிஜ்ரி 2ம் ஆண்டில் அண்ணலார் (ஸல்) அவர்கள் எட்டு பேர்களைக் கொண்ட ஒரு குழுவுக்குத் தலைவராக அவர்களை நியமித்து, உறையுள்ளிடப்பட்ட ஓர் ஓலையையும் அவர்களிடம் ஒப்புவித்து மதீனாவினின்றும் வெளியே அனுப்பிவைத்

பொருளடக்கம்

தார்கள். இரண்டு நாட்கள் பயணம் கடந்து 'மல்லால்' என்னும் பள்ளத்தாக்கை அடைந்து அவ்வோலையைப் பிரித்துப் பார்த்து அதில் காணப்படுவது போல் செயலாற்றும் படி கூறி அனுப்பி வைத்தார்கள். இஸ்லாமிய வரலாற்றில் ஒரு குழுவின் தலைவராக நியமிக்கப்பட்டு 'அமீருல் முஃமினீன்' என முதன் முதலாகச் சிறப்பிக்கப் பெற்றவர்கள் ஹலரத் அப்துல்லாஹ் இப்னு ஜஹ்ஷ் (ரலி) அவர்களேயாவர்.

இரண்டு நாட்கள் பயணம் கடந்து 'மல்லால்' பள்ளத்தாக்கை அடைந்து ஹலரத் அப்துல்லாஹ் இப்னு ஜஹ்ஷ் (ரலி) அவர்கள் அண்ணலார் (ஸல்) அவர்கள் தந்த ஓலையைப் பிரித்துப் பார்த்தனர். மக்காவுக்கும் தாயிஃபுக்கும் இடைப்பட்ட 'நக்லா' என்னும் இடம் வரை பயணத்தைத் தொடருமாறும் 'நக்லா'வில் மறைந்திருந்து குரைஷிகளின் நடமாட்டத்தைக் கண்காணித்து செய்தியறிவிக்குமாறும் அதில் காணப்பட்டிருந்தது. பயணக்குழுவினரில் தம்மோடு தொடர மனமொப்பியவர்களை மட்டுமே அழைத்துச் செல்லுமாறும் தயங்கிப்பின் தங்க நினைப்பவர்களை நிர்ப்பந்திக்க வேண்டாமென்றும் அதில் காணப்பட்டது. ஆயினும் பயணக்குழுவினரில் எவரும் மனம் சளைக்கவில்லை. அண்ணலரின் கட்டளைப்படி அனைவருமே பயணத்தைத் தொடர்ந்தார்களாயினும் அவர்களில் ஹலரத் ஸஅது இப்னு அபீவக்காஸ், உத்பா இப்னு கஸ்வான் (ரலி) ஆகிய இருவர் மட்டும் இடையில் தவறிவிட்ட தங்களின் ஒட்டகையைத் தேடிப் பிரிய நேர்ந்தது. மற்ற அறுவரும் 'நக்லா'வை அடைந்து அங்கு தங்கியிருந்தார்கள்.

அந்த சமயம் மக்காவின் குரைஷிகளாகிய அம்ரு இப்னு அல்—ஹளரமீ, ஹக்கம் இப்னு கெய்ஸான், உதுமான் இப்னு அப்துல்லாஹ், அவனின் உடன் பிறந்த

பொருளடக்கம்

நவ்ஃபல் ஆகிய நால்வரும் தாயிஃபில் தாங்கள் திரட்டிய பேரீத்தம் பொதிகளையும் மற்ற உணவுப் பொருள்களை யும் ஒட்டகைகளில் ஏற்றிக்கொண்டு அவ்வழியாகவே வந்தனர். முஸ்லிம்கள் அவர்களைக் கவனித்த அதேசமயம் அவர்களும் முஸ்லிம்களைக்கண்டு திடுக்கிட்டனர். அவர் களின் முகத்தோற்றம் வெளிப்படுத்திய திடுக்கத்தை ஹலரத் அப்துல்லாஹ் (ரலி) அவர்களும் கவனித்துக் கொண்டார்கள். அதனைத் தங்கள் தோழர்களுக்கும் சுட்டிக் காட்டிய அவர்கள், ''திடுக்கத்தை விலக்கி அவர்கள் மன அமைதி பெற, நம்மால் அவர்களுக்கு ஆபத்தில்லை என அவர்கள்உணரச் செய்யவேண்டும். எனவே உங்களில் ஒருவர் மற்றவரின் தலையைச் சிரையுங்கள்'' எனக் கட்டளையிட்டனர். அதன் படியே ஆமிர் இப்னு ரபீஆ என்பவர் 'உக்காஷா' என்ற தோழரின் தலையைச் சிரைக்க லானார். அதனைக் கண்ட குரைஷிகள் 'இவர்கள் புனிதப் பயணிகள், போராட வந்தவர்களல்ல எனப் பேசிக் கொண்டவர்களாகப் பதட்டம் நீங்கி இடைத் தங்கி, உணவு சமைக்கலாயினர்.

இப்போது ஹலரத் அப்துல்லாஹ் இப்னு ஜஹ்ஷ் (ரலி) தங்களை எதிர் கொண்டு உருவாகும் நெருக்கடி யைப் பற்றி தோழர்களோடு ஆயலானார்கள். அத்தலம் மக்காவைச் சூழ்ந்த புனித எல்லைக்கு அருகாமையில் இருந்தது. அன்று ஜமாதில் ஆகிர் மாதத்தின் இறுதி நாளாகவும் இருந்தது. அன்று மாலைப் பொழு தானால் ரஜபு மாதப் பிறை தெரிந்து விடலாம். அப் படித் தெரிந்து விடுமானால் புனித மாதங்களில் ஒன்றான அதில் தாங்கள் வாளேந்த முடியாதாகிவிடும். மாலைக் குள்ளாகவே குரைஷிகள் அதனை விட்டும் நகர்ந்து விடு வார்களானால் புனித எல்லைக்குள் நுழைந்து தங்கள் கரங்களை விட்டே தப்பி விடுவர். ஆனால், நகருக்குள்

பொருளடக்கம்

நுழையும் அவர்கள் மக்காவாசிகளிடம் முஸ்லிம்கள் அங்கு தங்கியுள்ள செய்தியைக் கூறலாம். குரைஷிகள் திரண்டு வந்து தங்களைச் சிறை பிடிக்கலாம்; கொல்லலாம். அவர்களிடமிருந்து தப்பி வெகு தொலை கடந்து மதீனாவை எத்துவது சிரமமாகிவிடும். அண்ணலார் (ஸல்) அவர்கள் ஏவிய பணியை நிறைவுபடுத்த இயலாதாகி விடும்—இவ்வாறெல்லாம் ஒருவரோடொருவர் கருத்துக்களைப் பரிமாறிக் கொண்டிருந்த அவர்களின் உணர்வுகள் கிளர்ந்து அவர்களின் உறைகளில் உறங்கிக் கொண்டிருந்த வாள்களையும் அம்புகளையும் விரைந்து வெளியில் இழுக்கச் செய்தன. அவர்களில் ஹலரத் வாகித்இப்னு அப்துல்லாஹ் தமீமி (ரலி) என்ற தோழரின் அம்பு எதிரிகளின் தலைவனான அம்ரு இப்னு அல் ஹளரமீயின் உயிரைக் குடித்தது. உதுமானும், ஹக்கமும் சிறை பிடிக்கப்பட்டனர். நவ்ஃபல் மட்டும் தப்பி விட்டான். அவர்களிடமிருந்து கிடைத்த பொருள்களையெல்லாம் எடுத்துக் கொண்டு ஹலரத் அப்துல்லாஹ் இப்னு ஜஹ்ஷ் (ரலி) மதீனா திரும்பலானார்கள். அவற்றை ஐந்து பங்குகளாக்கி நான்கு பங்குகளை அவர்கள் தங்களுக்கிடையில் பங்கிட்டுக் கொண்டனர். ஒரு பங்கை அண்ணலார் (ஸல்) அவர்களுக்குக் காணிக்கையாக்க முடிவு செய்து எடுத்துக் கொண்டு பயணம் தொடர்ந்தனர்.

பொருதித் தாங்கள் ஈட்டிய பொருள்களின் ஐந்திலொரு பாகக் காணிக்கையை மகிமைக்குரிய மாநபிகளாரின் முன் காணிக்கையாக சமர்ப்பித்து அவர்களின் வாழ்த்தைப் பெற எண்ணி வந்த ஹலரத் அப்துல்லாஹ் (ரலி) அவர்கள், பூமான் நபி (ஸல்) அவர்களின் பொன் நிறத் திருமுகம் சினத்தால் செந்நிறமடைவதையே கண்டார்கள். கோபத்தால் மனஞ்சடைந்த அண்ணலார் (ஸல்) அவர்கள், 'இதற்காக நான் உங்களைக் கூட்டி அனுப்பவில்லை. அழியும் இவ்வுடைமைகள் எனக்குத்

பொருளடக்கம்

தேவையுமில்லை. நான் அவைகளைப் பார்க்கவும் மாட்டேன். எடுத்துச் செல்வீராக. எடுத்துச், செல்வீராக' என வெறுத்து முகந்திருப்பிக் கொண்டார்கள்.

ஆம். அண்ணலார் (ஸல்) அவர்கள் குரைஷியர்களின் நடமாட்டங்களைக் கண்காணிக்கவே அவர்களை அனுப்பினார்களேயன்றி எவரையும் கொல்லவோ, எவரோடும் பொருதவோ அவர்களை ஏவவில்லை. இதற்கிடையே மக்காவின் குரைஷிகள் தூற்றலானார்கள். ''முஹம்மத் (ஸல்) தெய்வீகம் பொருந்திய வெறும் கற்பனைகளையே கதைக்கிறார். ஆனால், அவர் புனித மாதங்களையும் கூட பொருட்படுத்துவதில்லை. தடுக்கப்பட்ட மாதங்களில் கொலையும் கொள்ளையும் புரியத் தம் தோழர்களை ஏவுகிறார்'' என அவர்கள் எழுப்பிய கூக்குரல் வனாந்திர வாசிகளின் எண்ணங்களையெல்லாம் சீண்டியது. இஸ்லாத்தின் எழுச்சி கண்டு புழுங்கிப் போயிருந்த யூதர்களுக்கும் நல்லதொரு வாய்ப்பாக அமைந்தது அச்சம்பவம். மதீனாவின் மேல் போர் தொடுக்க குரைஷிகளுக்கு ஊக்கமளிக்கும் குரல்களை அவர்கள் ஒலிக்கலானார்கள்.

கொல்லப்பட்ட ஆமிர் இப்னு அல் ஹளரமி மக்காவின் ஒரு முக்கிய கிளைக்குச் சார்புடையவனாக இருந்தான். சிறைப்பிடிக்கப்பட்ட உதுமானும் அவனுடன் பிறந்த நவ்ஃபலும் 'முகைரா' என்ற குரைஷிச் சீமானின் பேரன் மார்களாயிருந்தனர். ஹக்கம் இப்னு கெய்ஸான், ஹிஷாம் இப்னு முகைராவினால் உரிமை விடப்பெற்ற ஓர் அடிமையாயிருந்தார். இந்நிலையில் குரைஷிகள் அச்சம்பவத்தைத் தங்களுக்கு விடப்பட்ட ஓர் அறை கூவலாகவே கொண்டு தங்களின் குரோதத்தைக் கூர்மைப்படுத்திக் கொண்டதும் வியப்பல்ல.

வரும் தகவல்கள் அனைத்தும் எதிரிகளின் போர் முனைப்புகள் பற்றியவையாகவே இருக்கக் கண்டு அண்ண

பொருளடக்கம்

லார் (ஸல்) அவர்கள் கவலை கொண்டார்கள். ஹலரத் அப்துல்லாஹ் இப்னு ஜஹ்ஷ் (ரலி) அவர்கள் தாங்கள் மாதங்களின் புனிதத்துவத்தைப் புறக்கணிக்கவில்லை என்றும், ஜமாதுல் அவ்வல் மாதத்தின் கடைசி நாளி லேயே தாங்கள் தாக்குதல் நடத்தியதாகவும், அன்று மாலையே ரஜபின் தலைப் பிறையைத் தாங்கள் கண்ட தாகவும் விளக்கிக் கூறியும் அண்ணலார் (ஸல்) அவர்கள் அமைதியுறவில்லை. தங்களின் அனுமதியின்றியே ஆமிரின் குருதிக்குளத்தில் தம் கரத்தைத் தோய்த்தெடுத்த ஹலரத் அப்துல்லாஹ் இப்னு ஜஹ்ஷ் (ரலி) அவர்களின் செயலைச் சரியென ஏற்க மறுத்தே விட்டனர். அண்ணலார் (ஸல்) அவர்களின் மனதை வருந்தச் செய்து விட்டதையே காரணமாகக் கொண்டு மற்ற முஸ்லிம்களும் முகந்திருப்பிக் கொண்டனர். ஹலரத் அப்துல்லாஹ் இப்னு ஜஹ்ஷ் (ரலி) அவர்களுடையவும் அவர்களின் தோழர்களுடைய வும் உள்ளங்கள் கலங்கலாயின. இனித் தாங்கள் அழிந்தோம் என அவர்களெல்லாம் மனச் சோர்வும் கொண்டனர். அதற்கும் மேலாகப் பெருமான் நபி (ஸல்) அவர்களின் மனமும் சோர்ந்தது. குரைஷியர்களின் தூற்று தலுக்கு விடையாகத் தாம் விளக்கத்தக்க நீதியான ஒரு காரணத்துக்கான வழிகாட்டுதலைத் தம் இறைவனிட மிருந்தே நாடியவர்களாக அமைதி கொண்டு அமர்ந்தி ருந்த அண்ணலார் (ஸல்) அவர்களின் முன்னே விண்ண வர்கோன் வந்துற்றனர்.

يَسْـَٔلُونَكَ عَنِ الشَّهْرِ الْحَرَامِ قِتَالٍ فِيهِ ۖ قُلْ قِتَالٌ فِيهِ كَبِيرٌ ۖ وَصَدٌّ عَن سَبِيلِ اللَّهِ
وَكُفْرٌۢ بِهِۦ وَالْمَسْجِدِ الْحَرَامِ وَإِخْرَاجُ أَهْلِهِۦ مِنْهُ أَكْبَرُ عِندَ اللَّهِ ۚ

"சிறப்புற்ற மாதங்களில் யுத்தம் செய்வதைப் பற்றி உம்மிடம் அவர்கள் கேட்கின்றனர், நீர் கூறும் அவைகளில் யுத்தம் புரிவது பெரும் பாபம் (தான்)!

பொருளடக்கம்

ஆனால், (மனிதர்கள்) அல்லாஹ்வுடைய மார்க்கத்(தில் சேர்வ)தை (நீங்கள்) தடுப்பதும், அவனை நீங்கள் நிராகரிப்பதும், (ஹஜ்ஜுக்கு வருபவர்களை) மஸ்ஜிதுல் ஹராமுக்கு (வரவிடாது தடுப்பது)ம் அதில் வசிப்போ(ரில் விசுவாசங்கொண்டோ(ரை அதிலிருந்து வெளியேற்றுவதும் அல்லாஹ்விடத்தில் (அதை விட) மிகப்பெரும் பாபங்களாக இருக்கின்றன''.

என்ற (2 : 217)செய்தியுடன்.

ஹலரத் அப்துல்லாஹ் இப்னு ஜஹ்ஷ் (ரலி) அவர்கள் தாக்குதல் நடத்திய சமயத்தில் ரஜபு மாதப் பிறை தோன்றவில்லை. அதற்கு முன்னதாகவே தாங்கள் தாக்குதலை முடித்து விட்டதாக அவர்கள் கூறினார்கள். குரைஷிகளோ ரஜபு மாதம் பிறந்து விட்டதாகக் குற்றஞ் சாட்டினார்கள். தப்பி வந்த நவ்ஃபல் மக்காவை அடைந்து குரைஷிகளைச் சந்தித்த சமயம் பிறை தெரிந்து விட்டிருக்கலாம். அல்லாஹ் அவர்களின் குற்றச் சாட்டைப் பொய் எனப் புறக்கணிக்கவில்லை. மறதியும் பிசகுதலும் தன் பிறப்பிலேயே இணையப்பெற்றவனே மனிதன். அவற்றிற்கப்பாற்பட்டவன் அல்லாஹ் ஒருவனே. தான் நாடியவர்களை மன்னிக்க தனக்கேயுள்ள அதிகாரத்தோடு இறைவன் மேற்கண்டவாறு செய்தி கூறினான்.

இறைவனின் செய்தி பெற்று அண்ணலார் (ஸல்) அவர்களின் முகம் மலர்ந்தது. தம் தோழர் கொணர்ந்த காணிக்கைப் பொருள்களை ஏற்று மகிழ்ந்தார்கள். கைதிகளையும் தம் பொறுப்பில் ஏற்றார்கள். ஹலரத் அப்துல்லாஹ் இப்னு ஜஹ்ஷ் (ரலி) அவர்களுடையவும் அவர்களின் தோழர்களுடையவும் இதயங்களைக் கவிந்து நின்ற கவலை மேகம் விலகியதென்றாலும் புதியதோர் ஐயம்

பொருளடக்கம்

அவர்களைப் பற்றிக் கொண்டது-தாங்கள் மேற்கொண்ட நடவடிக்கை அல்லாஹ்வுடையவும் அவன் தூதருடையவும் பொருட்டாகவே மேற்கொள்ளப்பட்டதாக அங்கீகரிக்கப் படுமா? அதற்குரிய மறுமைப் பலன் தங்களுக்குக் கிடைக் குமா? அல்லது தங்களின் பிசகுதல் பொறுக்கப்பட்டதோடு போரில் கிடைத்த உலகாயதப் பொருள்களோடேயே தங்களின் நடவடிக்கைக்குரிய பலன் மட்டுப்படுத்தப்பட்டு விடுமா? என்று.

அவர்கள் ஐயப்படுவது போன்று அல்ல; உலகாயத உறவுகள் அனைத்தையும் உதாசீனப்படுத்தி மறுமை வாழ்வைப் பற்றி அவர்கள் கொண்ட நம்பிக்கை ஒருக் காலும் நட்டமுடையதாக ஆகிவிடாதென்ற உறுதி மொழியை ஏற்று மீண்டும் ஜிப்ரயீல் (அலை) வந்தனர்.

''மெய்யாகவே விசுவாசங் கொண்டவர்களும், (காஃபிர்களின் துன்பத்தால் 'மக்கா' வாகிய) தம் ஊரை விட்டும் வெளிப்பட்டு (ஹிஜ்ரத் செய்து) அல்லாஹ்வுடைய பாதையில் (ஜிஹாத்) யுத்தம் புரி கின்றவர்களும் தாம், அல்லாஹ்வின் கருணையை நிச் சயம் எதிர்பார்க்கலாம். மேலும் அல்லாஹ் மிக மன் னிப்போனும் பேரன்புடையோனுமாயிருக்கின்றான்.

—அல்குர்ஆன் 2 : 218

ஹலரத் அப்துல்லாஹ் இப்னு ஜஹ்ஷ் (ரலி) அவர் களோடு இணைந்து சென்றிருந்த ஹலரத் (1) ஸஅது இப்னு அபீ வக்காஸ் (2) உத்பா இப்னு கஸ்வான் (3) வாக்கித் இப்னு அப்துல்லாஹ் (4) அபூ ஹுதைஃபா இப்னு உத்பா (5) உக்காஷா இப்னு முஹ்ஸின் (6) ஆமிர் இப்னு ரபீஆ (7) ஸுஹைல் இப்னு பைழா (8) காலித் இப்னு புகைர் (ரலி) ஆகிய அனைவருமே 'மக்கா'வைத் துறந்து சென்ற முஹாஜிர்களாக இருந்தது குறிப்பிடத் தக்கது.

போரில் கைப்பற்றப்படும் எதிரிகளின் உடைமைகளைப் பற்றிய எந்த இறை கட்டளையும் அதுவரை இறங்காமலே இருந்தது. பத்ருப் போரையடுத்து எதிரிகளிடமிருந்து கைப்பற்றப்பட்ட உடைமைகளை என்ன செய்வது என்ற சிந்தனை எழுந்தபோது ஹலரத் அப்துல்லாஹ் இப்னு ஜஹ்ஷ் (ரலி) அவர்களால் மேற்கொள்ளப் பட்ட நடைமுறையே இறைவனால் அங்கீகரிக்கப்பட்டதே போல்

"நீங்கள் உறுதியாக அறிந்து கொள்ளுங்கள் : உங்களுக்கு யுத்தத்தில் கிடைத்த பொருள்களில் ஐந்திலொரு பாகம் அல்லாஹ்வுக்கும் (அவனுடைய) தூதருக்கும் (அவருடைய) பந்துக்களுக்கும் அநாதைகளுக்கும், ஏழைகளுக்கும் யாத்திரீகர்களுக்கும் உரித்தாகும். -என்ற (8 : 41) இறை கட்டளை இறங்கியது.

இதற்குப் பின்னர் நடைபெற்றதே பத்ருப் போர். பத்ருப் போரிலும் பங்கு பற்றி வீரத்துடன் போராற்றிய இப்பெரியார் உஹதுப் போரில் களத்திலிறங்கிய போது அவர்களின் வாள் தூளாகிப் பறந்தது. அண்ணல் எம் பெருமான் (ஸல்) அவர்கள் ஓர் ஈத்தம் மட்டையையே எடுத்து அவர்களின் கரத்தில் தந்தார்கள். அதனைக் கொண்டே வீரச்சமர் புரிந்து எதிரிகளில் பலரை வீழ்த்திய அவர்கள் இறுதியில் தங்களின் வேட்கைப்படியே வீர மரணம் எய்தினார்கள். அந்த வேட்கையை அவர்களுக்கு நிறைவேறச் செய்தவன் ஹக்கம் இப்னு அக்னஸ் தக்ஃபீ என்பவனாகும்.

உருக்குலைக்கப்பட்டிருந்த அவர்களின் உடல் ஹலரத் ஹம்ஸா (ரலி) அவர்களின் உடலோடு சேர்த்து ஒரே மண்ணறையில் அடக்கப் பெற்றது.

ஃ ஃ ஃ

பொருளடக்கம்

عبد الله بن سلام رضي الله عنهم

# ஹலரத் அப்துல்லாஹ் இப்னு ஸலாம் (ரலி)

மதீனாவில் வாழ்ந்த யூதர்களில் 'கைனுகாஹ்' கோத்திரத்தில் நபி யூஸுஃப் (அலை) அவர்களின் பாரம் பரியத்தைச் சார்ந்தவர்களாக ஹலரத் அப்துல்லாஹ் இப்னு ஸலாம் (ரலி) பிறந்திருந்தனர். இஸ்லாத்திற்கு முந்திய காலத்தில் ஹஸீன் இப்னு ஸலாம் என்ற பெய ரால்-யூதர்களிடையே ஒரு பேரறிஞராக அறியப்பட்டு வாழ்ந்த இவர்களை மதீனா வாசிகள் அனைவருமே தங்கள் மதவேறுபாடுகளை மறந்து மதித்திருந்தனர். துறவிபோல் வாழ்ந்த அவர்களின் தூய்மையான வாழ்வும் நன்மைகளையே நாடி-நல்கி வாழ்ந்த அவர்களின் உயர் ஒழுக்கப் பண்புகளும் மக்களின் பார்வையில் அவர்களை உயர்ந்திருக்கச் செய்தன.

உறக்கம் நீங்கி தாம் விழித்திருக்கும் நேரத்தை அப் பேரறிஞர் மூன்றாகப் பங்கிட்டு ஒன்றை தவச்சாலையில் மக்களுக்கு அறபோதம் வழங்கவும், இன்னொன்றை தம் தோட்டத்தின் பராமரிப்புக்கெனவும், பிரிதொன்றை தௌராத்தை ஆய்ந்துணர்வதற்கெனவும் ஒதுக்கி வாழ்ந் தனர். தௌராத்தை ஓதிவருகையில், மக்களின் மருள் கலைந்து அவர்களின் மனதைத் துலக்க மறுவிலா முழு மதியாய்த் தோன்றி மாநிலத்தில் ஒளிவீசவிருக்கும் மக்க நகர மாநபியின் பிறப்பைப் பற்றிய முன்னறிவிப்பு தம் கண்களுக்கு முன்னால் வருந்தோறெல்லாம் அவர்களின் விழிகள் குத்திட்டு நிற்கும். அந்த மாநபி, தாம் பிறந்த தலத்தை விட்டும் குடி பெயர்ந்து மதீனாவின் மண்ணைப் புனிதம் பெறச் செய்யப் போகும் செய்தியைப் படிக்கும்

பொருளடக்கம்

ஒவ்வொரு சமயமும் அவர்களின் நெஞ்சம், "என் ஆண்டவனே! அது வரை என் வாழ்நாளை வளரச் செய்தருள். அவர்களை என் கண்களால் நான் காணச் செய்தருள்" என்று இறைஞ்சிக் கொண்டிருக்கும்.

பெருமான் நபி (ஸல்) அவர்களின் தோற்றம், அவர்களின் திருப்பெயர், அவர்களின் பாரம்பரியம், அவர்களின் குண ஒழுக்கம், அவர்கள் பிறக்கும் காலம், இடம் - இவை யாவையுமே ஆய்ந்து நன்கறிந்திருந்த அந்த யூதப் பெரியார், நயவஞ்சகத் துரோகிகள் - கொலைக்கஞ்சாக் கொடியவர்கள் எனத் தாம் நன்கு அறிந்திருந்த யூதர்களிடமிருந்து அவற்றை மறைத்தே வைத்திருந்தனர்; திரு நபி (ஸல்) அவர்களின் திருவடிகள் மதீனாவின் மணலில் பதியும் காலம் வரையிலும் தம் வாய்க்குப் பூட்டிட்டே வைத்தனர்.

தம் தோட்டத்தில் அவர்கள் பணியாற்றிக் கொண்டிருந்த ஒரு நாள் 'குபா'வில் புதிய நபியின் தோற்றத்தைப் பற்றி ஒரு மனிதர் கூவிச் செல்வது அவர்களின் செவியில் கேட்டது.

நான்மறைக் கெட்டாப் பேரின்ப வாழ்வை
    நவிலுமா விக்குறுந் துணையை
தீன்வழி நடந்தி யானந்தக் காட்சி
    சேர்க்கு மெய்ஞ் ஞானதே சிகரை
பான்மறை ஞானப் பாகைகள் உணர்ந்த
    பக்திய ரெடுத்த சற் குருவை
தானமா ரமுதத் திருமுஹம் மதுவைக்* காணக் காத்

திருந்த ஹஸீன் இப்னு ஸலாம் அவர்கள் தம் நிலை மறந்தனர். அல்லாஹு அக்பர்; அல்லாஹு அக்பர்—என அவர்களின் வாய் உரத்துக் கூவியது.

---

* உமறுப் புலவரின் முதுமொழி மாலை

பொருளடக்கம்

அருகே ஒரு மரத்தடியில் அமர்ந்திருந்த அவர்களின் சிற்றன்னை, "அல்லாஹ் உன்னை நாசமாக்குவானாக! எவரோ ஒருவர் வந்திருப்பதற்காக இவ்வளவு பெரிய சொற்களைச் சொன்ன நீ மூஸா இப்னு இம்ரான் (அலை) வந்ததாகக் கேட்டால் சொல்வதற்கு என்ன வைத்திருக்கிறாய்?" என்று இரைந்தார்.

"என் சிற்றன்னையே! ஆண்டவன் மீதாணையாக இப்போது வந்திருப்பவர் மூஸா இப்னு இம்ரான் (அலை) அவர்களின் சகோதரரேயாவர். அவருடைய மார்க்கத்தையே ஏந்தி இவரும் வந்துள்ளார்" என்று அவருக்குப் பதிலுரைத்தனர் ஹுஸைன் இப்னு ஸலாம்.

சில வினாடிகள் சிந்தனைக்குப் பின் "அல்லாஹ்வின் புறமிருந்து வந்த எல்லா நபி மார்களுக்குமொரு முத்திரையாக வருவார்; முந்திய நபிமார்களனைவரையும் உண்மைப் படுத்துவார் என்று நீ அடிக்கடி கூறி வந்தாயே அந்த நபியா இவர்" என்று விளக்கங்கேட்ட தம் சிற்றன்னைக்கு "ஆம்" என உரைத்த ஹுஸைன் இப்னு ஸலாம் 'குபா' வை நோக்கி விரைந்தனர்.

மக்கமா நகரிலிருந்து வந்திருந்த அந்தப் புதிய பயணியைச் சூழ்ந்து மக்கள் கூட்டமாக நின்றிருந்தனர் 'குபா'வில். அக் கூட்டத்தினரை விலக்கிக் கொண்டு முன் சென்ற ஹுஸைன் இப்னு ஸலாம் அவர்களின் செவிகள் கூர்மை கொண்டன.

أَيُّهَا النَّاسُ أَطْعِمُوا الطَّعَامَ وَأَفْشُوا السَّلَامَ وَصِلُوا الْأَرْحَامَ

وَقُومُوا بِاللَّيْلِ وَالنَّاسُ نِيَامٌ تَدْخُلُوا الْجَنَّةَ بِسَلَامٍ

"மனிதர்களே! சமாதானம் தழைக்கச் செய்யுங்கள் - (பசித்தவர்களுக்கு) உணவளியுங்கள்—நெருங்கிய உற

வினர்களை உபசரியுங்கள்—உலகோர் உறங்கும் நள்ளிரவுக் காலங்களில் நீங்கள் நின்று இறைவனை வணங்குங்கள்; நீங்கள் சாந்தியுடன் சுவனம் புகுவீர்கள்'' என்றொலித்துக் கொண்டிருந்த மாமனிதரின் திரு முகத்தை உற்று நோக்கினர் ஹுஸைன் இப்னு ஸலாம். இது ஒரு சாதாரண மனிதரின் முகமல்ல. நிச்சயம் இது ஒரு மிகப் பெரும் தீர்க்கதரிசியின் திருமுகமே என்று அவர்களின் உள்ளம் திரும்பத் திரும்பக் கூறியது. என்றாலும் அந்த யூதப்பேரறிஞர் எந்த ஓர் அவசர முடிவும் செய்திடவில்லை. வேண்டாத போது உண்மையை மறைத்து எத்தகைய அபாண்டத்தையும் ஒருவர் மீது சுமத்தும் துணிவு கொண்ட நன்றி கெட்ட சமூகம் தமக்குப் பின்னணியாய் நிற்பதை அவர் அறிந்திருந்தார்.

நபி பெருமான் (ஸல்) அவர்கள் 'குபா'விலிருந்து மதீனா வந்தடைந்து, ஹலரத் அபூ அய்யூப் (ரலி) அவர்களின் வீட்டில் தங்கியிருந்தார்கள். மாநபி (ஸல்) அவர்களைக் காண ஹலரத் ஹுஸைன் இப்னு ஸலாம் மறுமுறை வந்தார்கள். அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களிடம் தாம் மூன்று விஷயங்களைக் கேட்டறிய வந்திருப்பதாகக் கூறினார்கள்.

முதலாவதாக ''மறுமை நாள் பிறப்பதற்கு முன் தோன்றும் முதல் அறிகுறி யாது?'' என அவர்கள் வினவினர்.

நபி பெருமான் (ஸல்) அவர்கள், ''கிழக்கிலிருந்து ஒரு நெருப்பு தோன்றி மேற்கு நோக்கிப் பரவும்'' என்றார்கள்.



பொருளடக்கம்

இரண்டாவதாக, ''நம்பிக்கையாளர்களுக்கு சுவனத்தில் முதலாவதாகத் தரப்படும் உணவு எது?'' என அவர்கள் வினவினர்.

அண்ணலார் (ஸல்) அவர்கள், ''மீனின் சினை'' என்றார்கள்.

மூன்றாவதாக ஹஸீன் இப்னு ஸலாம், ''குழந்தையின் சாயல் தந்தையைப் போன்றோ தாயைப் போன்றோ அமையக் காரணம் என்ன?'' என்று வினவினர்.

பெருமானார் (ஸல்) கூறினார்கள்-''தம்பதிகளின் வீடு கூடலின் போது ஏற்படும் கருச் சேர்க்கையில் தந்தையின் இந்திரியம் மிகைத்திருந்தால் குழந்தையின் சாயல் தந்தையைப் போன்றும் தாயின் சுக்கிலம் மிகைத்திருந்தால் தாயைப் போன்றும் அமையும்'' என்று.

'இவை நபிமார்கள் மட்டுமே அறிந்திருக்கக் கூடிய செய்திகள்' என வியந்த ஹஸீன் இப்னு ஸலாம் அவர்கள் மாநபி (ஸல்) அவர்களின் திருக்கரம் பற்றி, ''வணக்கத்திற்குரிய ஒருவனாக அல்லாஹ்வையும் அவனின் தூதராகத் தங்களையும் நான் ஏற்றேன்'' என உறுதி கூறினார்கள்.

நபி பெருமான் (ஸல்) அவர்கள், 'உம் பெயரென்ன' வெனக் கேட்டார்கள்.

ஹஸீன் இப்னு ஸலாம் என்றாரவர்.

''இல்லை, அப்துல்லாஹ் இப்னு ஸலாம்'' என அண்ணார் (ஸல்) திருத்தினார்கள்.

'ஆம். நிச்சயம் இனி நான் அப்துல்லாஹ் இப்னு ஸலாமே' என அவர்கள் ஏற்றனர். பின்னர் தம் இல்லம் வந்தடைந்த ஹலரத் அப்துல்லாஹ் இப்னு ஸலாம் (ரலி) தம் மனைவி மக்கள் அனைவரையும் இஸ்லாத்தின் பால்

பொருளடக்கம்

அழைத்தனர். அவர்கள் அனைவருமே அவ்வழைப்பை ஏற்றார்கள். அவரது சிற்றன்னை காலிதாவும் இஸ்லாத்தை ஏற்றார். அவர்கள் இஸ்லாத்தை ஏற்று விட்ட செய்தியை தாம் கூறும் வரை எவரிடமும் வெளியிட வேண்டாம் என ஹலரத் அப்துல்லாஹ் இப்னு ஸலாம் அனைவரையும் எச்சரித்து வைத்தனர்.

மீண்டும் திரும்ப வந்து நபி பெருமான் (ஸல்) அவர்களைச் சந்தித்த ஹலரத் அப்துல்லாஹ் இப்னு ஸலாம் (ரலி) அவர்கள், "இறைவனின் தூதரே! யூதச் சமுதாயத்தில் என் தந்தையும் ஓர் அறிஞராகவே இருந்தார். நானும் ஓர் அறிஞனாகவே மதிக்கப்படுகிறேன். எனினும் இவர்கள் ஒரு குழப்பக்கார சமூகத்தவராவர். எவ்விதப் பழியையும் என் மீது சுமத்த அவர்கள் தயங்கமாட்டார்கள். எனவே நான் இங்கு ஒரு புறம் மறைந்து இருந்துக்கொள்கிறேன். தாங்கள் அவர்களை அழைத்து என்னைப் பற்றிய அவர்களின் கருத்துக்களைக் கேளுங்கள்" என்றனர்.

நபி பெருமான் (ஸல்) அவர்களும் அதனை ஏற்று, யூதத் தலைவர்கள் சிலரை அழைத்து வரச் செய்தார்கள். "உங்களில் ஹஸீன் இப்னு ஸலாம் எத்தகையவர்!" என அவர்களிடம் வினவினார்கள்.

"அவர் எங்களில் மேலானவர்; மேலானவரின் புதல்வர்; அறிஞர்; அறிஞரின் மகன்" என்றெல்லாம் யூதத் தலைவர்கள் புகழ்ந்தார்கள்.

"ஒருக்கால் அவர் இஸ்லாத்தை ஏற்றால் நீங்களும் ஏற்றுக் கொள்வீர்களோ" என பெருமானார் (ஸல்) வினவினார்கள்.

"ஒருக்காலும் இல்லை. ஆண்டவன் அவரை அப்படி ஏற்காதிருக்கச் செய்வானாக" என்றனர் யூதக் கூட்டத்தார்.

பொருளடக்கம்

“அஷ்ஹது அன் லாஇலாஹ இல்லல்லாஹு வஅஷ்ஹது அன்ன முஹம்மதர் ரஸூலுல்லாஹ்” என ஒலித்த வண்ணம் ஹலரத் அப்துல்லாஹ் இப்னு ஸலாம் (ரலி) தம் மறைவிடத்திலிருந்து வந்தனர். மறுகணமே யூதர்கள், “நீர் பொய்யுரைக்கின்றீர். நீர் எங்களில் மிகத் தீயவர்; தீயவரின் புதல்வர்; அறிவீனர்; அறிவீனரின் புதல்வர்” என்றெல்லாம் தூற்றியவர்களாக அங்கிருந்து அகன்றனர்.

ஹலரத் அப்துல்லாஹ் இப்னு ஸலாம் (ரலி) தம் மாநபியின் தாளடியமர்ந்து மாமறையைக் கற்றுணர்ந்தனர்; மணி மொழிகளைக் கேட்டறிந்தனர். தவ்ராத்தையும், இஞ்சீலையும், ஃபுர்கானையும் ஒரு சேரத் தாங்கி நின்ற நெஞ்சத்தையுடைய அம்மாநபித் தோழரைப் பற்றி ‘மதீனாவில் அக்காலத்தில் வாழ்ந்த வேதநூல் வல்லுனர்களில் மிக மேலானவர்’ என அல்லாமா ஃதஹபீ (ரஹ்) எழுதுகின்றனர்.

நாயகத் திருமேனி (ஸல்) அவர்களோடு பதினோராண்டு காலம் நெருங்கிப் பழகிய இவர்கள், தம் திருவாய் மூலம் அறிவித்த அறவுரைகள் இருபத்து ஐந்தேயானாலும், அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் அறவுரைகளில் மறைந்திருந்த ஞான இரத்தினங்களை ஹலரத் அபூ ஹுரைரா (ரலி) போன்ற ஹதீதுப் பேராசிரியர்களும் இவர்களிடம் கேட்டறிந்துள்ளார்கள்.

‘வெள்ளிக் கிழமையன்று ஒரு நேரமிருக்கின்றது. அந்நேரத்தில் அடியான் கேட்பதை இறைவன் நிச்சயம் தருகிறான்’ -என்று அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்கள் அருளியதாக ஹலரத் அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் கூறக் கேட்டு, ‘அது எந்த நேரம் என்பதை நீர் அறிவீரா?’ என இவர்கள் வினவினர். அது கேட்டு வியப்படைந்த

பொருளடக்கம்

ஹலரத் அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் அதனைத் தமக்கு அறிவிக்குமாறு இவர்களைப் பின் தொடர 'மாலை நேர (அஸர்) தொழுகைக்கும் அந்தி நேர (மக்ரிபு)த் தொழுகைக் கும் இடைப்பட்ட நேரம்' என்றனர் இவர்கள்.

'அந்த இடைப்பட்ட நேரத்தில் தொழுகைகளே இல்லாதபோது அது எங்ஙனம் சாலும்?' என ஹலரத் அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் வினவ, ஹலரத் அப் துல்லாஹ் அப்னு ஸலாம் (ரலி), "தொழுகைக்காகக் காத்திருப்பவன் தொழுபவனைப் போலாவான்" என்ற அண்ணலரின் அருள்மொழியை அவர்களுக்கு நினைவூட்டி னார்கள்.

"அறிவையும் ஞானத்தையும் அடைய நாடுபவர்கள் நால்வரைத் தேடிச் சென்று அவற்றைப் பெற்றுக் கொள் ளுங்கள்" எனத் தம் மரணப்படுக்கையின் போது கூறி, அந்நால்வருள் ஒருவராய் ஹலரத் அப்துல்லாஹ் இப்னு ஸலாம் (ரலி) அவர்களையும் குறிப்பிட்ட ஹலரத் முஆது இப்னு ஜபல் (ரலி) அவர்கள், 'யூதராக இருந்து முஸ்லி மாக மாறிய அவரை அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்கள் பதினோராவது சுவன வாசியாகக் குறிப்பிட்டுள் ளார்கள்' எனப் புகழ்ந்துரைத்தார்கள்.

ஒரு நாள் மஸ்ஜிதுன்னபவீயில் அமர்ந்திருந்த நபி பெருமான் (ஸல்) அவர்கள், 'அதோ அவ்வாசலின் வழி யாக இப்போது முதன் முதலாக ஒரு சுவனவாசி வரு வார்' என்றுரைத்தார்கள். மக்கள் கவனித்த வண்ண மிருந்தனர். சற்று நேரத்தில் ஹலரத் அப்துல்லாஹ் இப்னு ஸலாம் (ரலி) அவர்களே அவ்வழியாக வந்ததை நபி மணித்தோழர்களனைவரும் கண்டார்கள். அச்சம்பவம் நபிமணித் தோழர்களிடையே அவர்களின் மாண்பினை மேலும் சிறக்கச் செய்தது.

பொருளடக்கம்

பத்ரு, உஹதுப் போர்களில் அவர்களின் ஈடுபாடு காணப்படவில்லை. ஆயினும் அகழ்ப்போரிலும் அதனை அடுத்த மற்ற போர்களிலும் ஹலரத் அப்துல்லாஹ் இப்னு ஸலாம் (ரலி) பங்குபற்றியுள்ளனர். பைத்துல் முகத்திஸின் வெற்றித் திருவிழாவிலும் கலீஃபா உமர் (ரலி) அவர்களுடன் வந்து கலந்து கொண்டனர்.

கலீஃபா உதுமான் (ரலி)அவர்களின் இல்லம் துரோகிகளால் சூழப்பட்டிருந்த சமயம் அங்கு தோன்றிய இவர்கள், ''மக்களே! இறைவனின் வாளானது உறையுள்ளிடப் பட்டுள்ளது. நபி பெருமான் (ஸல்) அவர்கள் குடி புகுந்துள்ள இப்பட்டணத்தை வானவர்கள் தங்களின் உறை விடமாக்கிக் கொண்டுள்ளார்கள். கலீஃபாவைக் கொல்வது பற்றி நீங்கள் இறைவனுக்கு அஞ்சுங்கள். அவரை நீங்கள் கொல்வீர்களாகில், உங்களோடு சேர்ந்து வாழ்ந்து கொண்டிருக்கும் விண்ணவர்கள் இந்நகரை விட்டும் வெளியேறி விடுவார்கள். உறையுள்ளிருக்கும் இறைவனின் வாள் உருவப்பட்டுவிடும். பின்னர், மறுமை நாள் வரையிலும் அது உறையினுள் திரும்பாது'' என்று விளக்கிக் கூறினார்கள். ஆனால் குழப்பக்காரர்களின் காதுகள் அடைபட்டுக் கிடந்தன. அவர்களின் வெறி தீட்சண்யமடைந்தது. 'கலீஃபாவோடு இந்த யூதரையும் சேர்த்தே கொல்வோம்' என அவர்கள் கூக்குரலிட்டனர். அதனைக் கேட்டு ஹலரத் அப்துல்லாஹ் இப்னு ஸலாம் (ரலி) அவர்கள் அச்சங்கொள்ளவில்லை; ஆத்திரமடைய வில்லை. ''என்னைக் கொல்வதால் எந்தப் பலனும் உங்களுக்கில்லை. ஒவ்வொரு நபியுடைய உயிருக்கும் பகரமாக நபிமார்களைக் கொன்ற சமூகத்தினர் ஒவ் வொருவரும் எழுபதினாயிரம் பேர் வரை பழிவாங்கப் பட்டனர். நபியுடைய கலீஃபா கொல்லப்படுவாரானால் அவரின் கொலைக்குப் பகரமாக முப்பதினாயிரம் பேர்

பொருளடக்கம்

பழிதீர்க்கப்படுவர்'' என அவர்களை எச்சரித்து விலகி னார்கள்.

அவர்களின் முன்னறிவிப்பு பொய்க்கவில்லை. உறை யிலிருந்து உருவப்பட்ட இறைவனின் வாள் இன்னமும் உறையுள் புகவே இல்லை.

கலீஃபா அலீ (ரலி) அவர்கள் மதீனாவுக்கு மாற லாகக் கூஃபாவைத் தலை நகராக்க முனைந்த ஆரம்பத்தி லும் 'அண்ணலார் (ஸல்) அவர்கள் அமர்ந்த இம் மேடையை விட்டும் நீங்கள் அகல வேண்டாம். பின்னர் அதனை நீங்கள் என்றுமே காணமாட்டீர்கள்' என அவர் களை இவர்கள் எச்சரித்தனர். கலீஃபா அவர்களோ ஹலரத் அப்துல்லாஹ் இப்னு ஸலாம் (ரலி) அவர்களைப் பெரிதும் மதித்தார்களாயினும் அச்சொற்களை மட்டும் ஏற்க மறுத்து விட்டார்கள். ஆனால் அம் முன்னறிவிப்பு பொய்க்கவில்லை.

முதுமையின் காரணமாகத் தம் பிற்காலத்தில் ஒரு கைத்தடி பிடித்து நடமாடிய அம்மூதறிஞரின் முகத் தோற்றத்தில் இறையச்சம் ஒரு நாளும் விலகாது குடி கொண்டிருந்தது. ஒரு முறை அவர்கள் தம் தலையின் மீது விறகுச் சுமையோடு செல்லக் கண்ட ஒருவர் செல்வ ராக வாழும் அவர்களின் தகுதிக்குத்தகாத சிரமமல்லவோ அது எனச் சுட்டிக் காட்டியபோது, 'எள்ளத்தனை பெரு மையையும் உள்ளத்துள் கொண்டிருப்பவன் சுவனம் புகமாட்டான்' என நபி பெருமான் (ஸல்) அவர்கள் கூறக் கேட்டுள்ள தாம் தம் பெருமையை அழிக்கவே அவ்வாறு செய்ததாக அவருக்கு விளக்கினார்கள்.

குறைஷிகளோடு நீங்கள் போரிடும் சமயம் அண்மை யில் இருக்கிறது என மதீனா வாசிகளுக்கறிவித்த அவர்கள், 'அச்சமயத்தில் நான் வலு விழந்து கிடந்தேனானாலும்

என்னை ஒரு பலகையில் வைத்து இருதரப்பாருக்கும் இடையே கிடத்தி விடுங்கள்' என அறிவித்திருந்தார்கள்.

சுவனவாசியாகும் பேற்றினைத் தாங்கள் எவ்விதம் அடைந்தீர்கள் என ஒருவர் கேட்ட போது அவர்கள், 'அது அல்லாஹ் அறிந்த ஒன்றாகும்' என்றார்கள்.

'மக்கள் அவ்வாறு பேச ஏதாவதொரு காரணம் இருந்துதானே ஆகவேண்டும்' என ஹஸ்ரத் கைஸ் இப்னு உபாதா (ரலி) அவர்கள் கேட்டார்கள். "அண்ணல் எம் பெருமானார் (ஸல்) அவர்கள் வாழ்ந்த காலத்தில் ஓர் இரவு நான் கனவொன்று கண்டேன். உறங்கிக் கொண்டிருந்த என்னை ஒரு மனிதர் எழுப்பினார். நான் எழுந்து நடக்கத்துவங்கினேன். என் முன்னே இரண்டு பாதைகள் தெரிந்தன. இடப்பக்கம் சென்ற என்னை அம்மனிதர் கரம் பிடித்து 'இது உன் பாதையல்ல' எனக் கூறி விலக்கி வலப்புறப் பாதையில் அழைத்துச் சென்றார். நெடுகிலும் அப்பாதையில் நடந்து சென்று நான் பசுமையான ஒரு தோட்டத்தை அடைந்தேன். அத்தோட்டத்தின் அழகுக்கு அழகு சேர்ப்பதாய் ஒரு தூண் இருந்தது. அதன் உச்சி வானை எட்டியிருந்தது. அம்மனிதர் என்னை அத் தூணைப் பிடித்து ஏறச் சொன்னார். ஏறிச் சென்று அதன் உச்சியைப் பிடித்த நான் விடியும் வரை அதனைப் பிடித்த படியே இருந்தேன் விடிந்த பின்னர் நபிபெருமான் (ஸல்) அவர்களிடம் நான் என் கனவைப் பற்றி கூறினேன். பெருமானார் (ஸல்) அவர்கள், "இடப்பக்கம் நீர் செல்லத் துவங்கிய பாதை நரகப் பாதையாகும். வலப்பக்கம் நீர் சென்ற பாதை சுவனப் பாதையாகும். நீர் பற்றிப் பிடித்த அந்த தூண் இஸ்லாமாகும். அதனை நீர் மரணம் வரையிலும் விடப்போவதில்லை." என விளக்கம் கூறினார்கள் —என்றுரைத்த ஹஸரத்

பொருளடக்கம்

அப்துல்லாஹ் இப்னு ஸலாம் (ரலி) அவர்கள், 'இதுவே நானறிந்த விஷயமாகும். அறியாத ஒன்றை நாவினா லுரைப்பது கூடாது' எனக் கூறி மவுனித்திருந்தார்கள்.

மதீனாவிலேயே இறுதி வரை வாழ்ந்த இப்பெருந் தோழர் ஹிஜ்ரி 43ம் ஆண்டில் ஹலரத் முஆவியா (ரலி) அவர்களின் காலத்தில் மதீனாவிலேயே மரணமடைந் தார்கள்.



பொருளடக்கம்

عدي بن حاتم رضي الله عنهم

# ஹலரத் அதீ இப்னு ஹாத்திம் (ரலி)

அபூ குபைஸ் மலையில் நின்று ஹலரத் இப்ராஹீம் (அலை) அவர்கள் விடுத்த பாங்கின் ஒலியைச் செவியுற்ற ஆன்மீக உலகத்தவர் கஅபாவைக் காண இறைவனால் தங்களுக்கு விதிக்கப்பட்டுள்ள காலத்தையும் நேரத்தையும் எதிர் பார்த்துக் காத்துக் கிடந்தனர். ஆனால் கஅபாவின் முகட்டின் மீதே நின்று ஹலரத் பிலால் (ரலி) அவர்கள் விடுத்த பாங்கொலியைப் பற்றிச் செவியுற்ற அரபுகள் அதற்காகவே காத்திருந்தவர்களே போன்று அணியணியாகப் புறப்பட்டு விட்டனர் மதீனாவை நோக்கி.

ஆம்! உலகத்தாருர்கு, தாம் ஒரு நபி—இறுதித் திரு நபி—என்றுரைத்த அண்ணல் முஹம்மது (ஸல்) அவர்களின் சொல்லுக்கு ஓர் உரைகல்லாக மக்காவை அந்நபிகளார் வெல்ல வேண்டியதையே எதிர்பார்த்துக் காத்திருந்த—சுற்றுச் சூழலைச் சார்ந்த குறு நில மன்னர்களும், மக்கள் தலைவர்களும் கூட்டங் கூட்டமாக அவர்களை நாடி வந்து இஸ்லாத்தை ஏற்கலாயினர். யமன் நாட்டிலிருந்து அப்படி வந்த ஒரு கூட்டத்தார் கூறினர், தங்கள் நாட்டின் ஒரு பகுதியில் வாழும் ‘தை’ கோத்திரத்தவர்கள் இஸ்லாத்திற்கு எதிரான ஒரு வல்லமையாக உருவாகிக் கொண்டிருக்கிறார்கள் என்று. அவர்களை நேர்வழிப் படுத்த வென்று அண்ணல் எம்பெருமானார் (ஸல்) அவர்கள் ஹலரத் அலீ (ரலி) அவர்களின் தலைமையில் ஒரு நூற்று ஐம்பது அன்ஸார்களை அனுப்பி வைத்தார்கள்.

ஒரு தலைமுறைக்கு முந்திய கட்டத்தில் பெருவள்ளலாக வாழ்ந்த ‘ஹாத்திமி’ன் மகனான ‘அதீ’ என்பவரே அத் ‘தை’ கோத்திரத்தாருக்குத் தலைமையேற்று ஒரு சிற்றரசனைப்போல வாழ்ந்து வந்தார். வெறும் அரச

போகத்தையும், மக்கள் மீது ஆதிக்கத்தையும் மட்டுமே தம் தந்தையிடமிருந்து வாரிசுரிமையாக அவர் பெற்றிருக்கவில்லை. ஹாத்திமின் வள்ளன்மையும், வளமிக்க பிற பண்புகளும் கூட அதீயிடம் குடி கொண்டிருந்ததால் 'தை' கோத்திரத்தார் அவருக்குக் கட்டுப் பட்டவர்களாக வாழ்ந்ததோடு, தங்களின் கால் நடைகளில் நான்கிலொரு பகுதியை அவருக்குக் காணிக்கையாகவும் வழங்கி வந்தனர்.

அரபுகள் கூட்டங் கூட்டமாக இஸ்லாத்தை ஏற்கச் செல்கின்ற காட்சியும், அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் அளப்பரும் மாட்சியும், இன்னும் சில நாட்களில் தம் ஆட்சியும் அதிகாரமும் தம்மை விட்டும் அகன்று விடும் என்பதற்கான சாட்சியமாக அவரின் உள்ளத்தில் உருவாகி நின்றன. எனவே, நபி பெருமான் (ஸல்) அவர்களின் புகழ்மணம் அவரின் உள்ளத்தில் வெறுப்பையே வளர்த்தது. ஒரு குரைஷியின் தலைமையை ஏற்க அவரின் உள்ளம் துணியவில்லை. என்றாலும் திரும்பும் திக்கெல்லாம் வெற்றிக் கொடி நாட்டியே திரும்பும் அத்திரு மகனாருக்கு எதிராகத் தம் இயலாமையும் அவரை வருத்தியது. மனஞ் சலிப்படைந்திருந்த அவர் ஒருக்கால் முஸ்லிம்கள் தம் நாட்டின் மீது படையெடுத்து வந்தால், தாம் தம் குடும்பத்தாருடன் எங்கேனும் கிருஸ்துவர்கள் வாழும் ஒரு நாட்டுக்குச் சென்று விட வேண்டும் என முடிவு செய்து அதற்கான வாகனங்களையும் சித்தப் படுத்தி வைத்திருந்தார்.

ஹலரத் அலீ (ரலி) யவர்கள் படையொடு தை கோத்திரத்தாரிடை வந்தபோது அவர்களை அங்கே எந்தச் சிரமமும் எதிர் கொள்ளவில்லை. முஸ்லிம்களின் கொடிகள் தெரியும் செய்தி கிடைத்ததுமே அதீ தம் குடும்பத்தாரோடு விரைந்து வெளியேறி விட்டதால் ஹலரத் அலீ (ரலி)

பொருளடக்கம்

யவர்கள் தை கூட்டத்தவர்களை எளிதாக வென்று அவர்களில் பலரை சிறைப்படுத்தி மதீனாவுக்கு அழைத்தும் வந்தார்கள்.

'அதீ' யின் குடும்பத்திலிருந்து எவ்வாறோ பிரிந்து விட்ட அவரின் சகோதரி-ஹாத்திமின் மகள்-ஸஃபானாவும் மதீனாவுக்கு வந்த கைதிகளில் இருந்தார். மதீனாவின் பள்ளியருகே தங்கவைக்கப்பட்டிருந்த கைதிகளை நபி பெருமான் (ஸல்) அவர்கள் வந்து கண்டார்கள். அவர்களிடையே இருந்த ஸஃபானா, "ஆண்டவனின் தூதரே! என் மீது கருணை காட்டுங்கள். என் தந்தையார் இறந்து விட்டனர். என் பாதுகாவலரும் என்னை விட்டு ஓடி விட்டார். என் விடுதலைக்காக உங்களின் கருணையையே நான் நம்பி இருக்கிறேன்'' எனக் குரல் கொடுத்தார்.

"யார் உன் பாதுகாவலர்?'' எனப் பெருமானார் (ஸல்) அவர்கள் கேட்டார்கள்.

"அதீ இப்னு ஹாத்திம்'' என்றார் ஸஃபானா.

"ஆண்டவனையும் அவன் தூதரையும் விட்டு விரண்டோடும் 'அதீ' யா உன் சகோதரர்! அப்படியானால் நீ ஹாத்திமின் மகளா?'' என மீண்டும் கேட்டார்கள் பெருமானார் (ஸல்).

"ஆம். அல்லாஹ்வின் அருமைத் தூதரே! வள்ளல் எனப் புகழப் பெறும் ஹாத்திம் என் தந்தை. அவர் பெண்களின் மானத்தைக் காத்தார்; ஏழைகளின் பசி தீர்த்தார்; எளியவர்களின் துன்பம் துடைத்தார்; இல்லை என இரந்து வந்தவர்களுக்கு இல்லை என்னாது வழங்கினார். அவரின் மகள் தான் இன்று உங்களின் முன் சிறைப் பட்டு நிற்கின்றேன்'' என்றார் ஸஃபானா.

அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்கள் அப்பெண் மணிக்கு ஆறுதல் கூறினார்கள். ஒரு முஸ்லிமுக்கு

பொருளடக்கம்

இருக்க வேண்டிய நற்குணங்களே ஹாத்திமிடம்அமைந்து காணப்பட்டதாகவும், இறைவனுக்கு இணை வைத் தவர்களுக்கும் பிழை பொறுக்கத் தேடத் தமக்கு அனுமதி யிருந்தால் நிச்சயம் தாம் ஹாத்திமுக்காகப் பிழை பொறுக் கத்தேடுவர் என்றும் கூறினார்கள். ஸஃபானாவைத் தாம் விடுதலை செய்வதாகவும், ஆனால் ஸிரியாவில் வாழும் தம் சகோதரரைச் சென்றடைய நல்லதொரு வழித் துணை கிடைக்கும் வரை அவரை மதீனாவிலேயே தங்கியிருக்குமாறும் அண்ணலார் (ஸல்) அவர்கள் கூறி னார்கள். ''பெருமானே! என் கூட்டத்தார்களைச் சிறை யிருக்க விட்டு நான் தனித்து விடுதலை பெற நாணு கிறேன்'' என்று அடுத்து ஸஃபானா கூறக்கேட்டு நபி பெருமான் (ஸல்) அவர்கள், அவர்களனைவரையும் விடு தலை செய்து, அவர்களுக்கு வாகனங்களும் தந்து வழி யனுப்பி வைத்தார்கள்.

**ஸி**ரியாவில் அதீயைச் சந்தித்த ஸஃபானா, மனைவி மக்களை மட்டுமே காத்து, உடன் பிறந்த தம்மைக் கை விட்டதற்காக அவரைக் கடுமையாகச் சாடினார். குரைஷி களைச் சார்ந்த - குணக்குன்றாய் விளங்கும் அம் மாநபி (ஸல்) தம்மிடம் வெளிப்படுத்திய பண்பையும் பரிவையும் அவரிடம் புகழ்ந்துரைத்தார். தம் தவற்றுக்காக வெட் கித்து, ஆறுதல் கூறித் தம் சகோதரியை அமைதிப்படுத் திய பின் 'அதீ' அவரிடம் கேட்டார், ''அந்த மனிதரைப் பற்றி நீ என்ன முடிவு கொண்டாய்?'' என்று.

''ஆண்டவன் மீதாணையாக அவரைச் சந்திக்க நீர் மேலும் தாமதிக்க வேண்டாம். அவரிடத்தில் நான் கண்ட பரிவை உம் தந்தையிடத்திலும் நான் கண்டதில்லை. அவர் ஒரு நபியாக இருந்தால் அவரை அண்மிடும் நீர் உயர்வு பெறுவீர். அல்லது அவர் ஒரு மன்னராகவே

பொருளடக்கம்

இருந்த போதிலும் சரியே. உம்முடைய கண்ணியம் அவர் முன் ஒரு போதும் குறையாது" என்றார் ஸஃபானா.

'அதீ'யின் வரவுக்காகத் தம் வாசல்கள் திறந்தேயிருப்பதாக நபி பெருமான் (ஸல்) அவர்கள் கூறுவதாகவும் செய்திகள், பலரின் மூலமாக அவரிடம் வந்த வண்ணமிருந்தன. ஒரு குரைஷியின் தலைமையை ஏற்பதையே இகழ்வாக எண்ணிய அதே 'அதீ' இப்னு ஹாத்திம் இப்போது மதீனாவை நோக்கி சென்று கொண்டிருந்தார்— எந்த விதமான முன்னறிவிப்புமின்றி; எந்த விதமான மனக் கலக்கமுமின்றி!

பள்ளியின் வாசலில் வந்து நின்று முகமன் கூறியவரை நோக்கி, அவர் யார்? என அண்ணலார் (ஸல்) வினவினார்கள். 'நான்' அதீ இப்னு ஹாத்திம் என அவர் கூறக் கேட்டதுமே நபி பெருமான் (ஸல்) அவர்கள் தம் இருப்பிடம் விட்டு எழுந்தேவிட்டார்கள்; முன் சென்று அவரின் கரத்தை பற்றி வரவேற்றார்கள்; தங்களின் இல்லத்துக்கே அவரை அழைத்துச் சென்றார்கள்.

வழியில் இளம் செல்வனோடு வந்த ஒரு மூதாட்டி அண்ணலரைச் சந்தித்தார். பெருமானார் (ஸல்) அவர்கள் நின்றார்கள்; அவர்களோடு அம்மூதாட்டி வெகு நேரம் உரையாடினார்: தம் குறைகளைத் தெரிவித்தார். நபி பெருமான் (ஸல்) நின்றபடியே பொறுமையோடு அவர் பேசியவற்றையெல்லாம் கேட்டார்கள். அமுதத் திருமொழி பேசி அவரின் மனக்குறையை தீர்த்து வைத்தார்கள்—அதீ இப்னு ஹாத்திம் தம் உள்ளத்திடம் பேசினார், "ஆண்டவன் மீதாணையாக இவர் அரசரல்ல" என்று.

மீண்டும் அதீயை அழைத்துக் கொண்டு நடந்த நபி பெருமான் (ஸல்) அவர்கள் தங்களின் இல்லத்தினுள்

பொருளடக்கம்

நுழைந்தார்கள். அங்கு தோலினாலான ஒரு விரிப்பு இருந்தது. நபி பெருமான் (ஸல்) அவர்கள் அதனை விரித்து அதீயை அதில் அமரச் சொன்னார்கள். ''தாங்களே அமருங்கள்'' என்றார் அதீ. ஆனால் அவர்கள் மறுபடியும் அவரையே அமரச் சொன்ன போது, பேணுதலைக் கருதி அதீ அமர்ந்து கொண்டார். அவருக்கருகே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தரையிலேயே அமர்ந்து கொண்டார்கள். ஏனெனில் வேறு விரிப்பெதுவும் அங்கில்லை.

''இல்லை! நிச்சயமாக எந்த அரசருக்குரிய பெருமையும் இவர்களிடத்தில் காணப்படவில்லை'' எனக் கூறியது அதீயின் உள்ளம்.

நபி பெருமான் (ஸல்) அவர்கள், அதீக்கு இஸ்லாத்தைப் பற்றி எடுத்துரைத்தார்கள். தாம் ஒரு பூர்வீக மார்க்கத்தின் பேரிலேயே இருப்பதாக அதீ கூறினார். ''உம்மின் மார்க்கத்தைப் பற்றி உம்மை விட அதிகமாகவே நான் அறிவேன்'' என நவின்றார்கள் நபி பெருமான் (ஸல்).

''என் மார்க்கத்தைப் பற்றி தாங்கள் என்னைவிட அதிகமாக எங்ஙனம் அறிந்திருக்க முடியும்?'' என வியந்தார் அதீ.

''உம்முடைய மக்களின் உடைமைகளில் நான்கிலொரு பங்கைப் பெற்று நீர் உண்டீர். ஆனால் அது உமக்குத் தடை விதிக்கப்பட்டதல்லவா?'' என நபி பெருமான் (ஸல்) அவர்கள் வினவினார்கள்.

அதீ வெட்கத்தால் தலை குனிந்தார். அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்கள் தொடர்ந்து அவருடன் உரையாடினார்கள்.

''அதீ! இஸ்லாத்தை ஏற்பதை விட்டும் உம்மைத் தயக்கமுறச் செய்யும் எண்ணங்களையும் நான் அறிவேன். இன்றைய தினம் ஏழைகளும் எளியவர்களும் மட்டுமே முஸ்லிம்களாக இருப்பது கண்டு நீர் தயக்கமடைகிறீர். ஆனால், பொருள்களை அள்ளித் தருபவர்களாகவேயன்றி தர்மத்தை ஏற்பதற்கு அவர்களில் எவரும் இல்லாத நிலையை முஸ்லிம்களில் நீர் வெகு விரைவில் காண்பீர்.

''கூட்டத்தில் முஸ்லிம்கள் குறைந்தவர்களாகவும் அவர்களின் எதிரிகள் நிறைந்தவர்களாகவும் நிற்கக் கண்டு நீர் பின்னடைகிறீர். வெகு விரைவில் காலம் மாறும் — காதிஸிய்யாவிலிருந்து தன்னந் தனியாகப் புறப்படும் ஒரு பெண்மணி எவ்விதக் கலக்கமுமின்றி பயணம் செய்து கஅபாவைக் கண்டு திரும்புவதை நீர் காண்பீர்.

''அதிகாரமும் அரசியல் ஆதிக்கமும் இன்று முஸ்லிமல்லாதாரிடம் இருப்பது உமக்கு ஒரு தடையாக இருக்கவும் கூடும். ஆனால் பாபிலோனியாவின் வெள்ளை மாளிகைகள் முஸ்லிம்களுக்காகத் திறக்கப்பட்டு அவர்களின் கரங்களில் கிஸ்ராவின் கருவூலங்கள் கொட்டப்படும் காலம் வெகு தூரத்தில் இல்லை'' —என நபிபெருமான் (ஸல்) அவர்கள் கூறியபோது இடைமறித்து அதீ கேட்டார் ''பாரசீகத்தின் மன்னர் கிஸ்ராவா?'' என்று.

''ஆம். பாரசீகத்தையாளும் ஹர்மூஸ் கிஸராவின் கருவூலங்களே தான்'' என நபி பெருமான் (ஸல்) உறுதிப் படுத்தினார்கள்.

''அதீ! லா இலாஹ இல்லல்லாஹ்—வணங்கத் தகுதி படைத்தவன் அல்லாஹ்வைத்தவிர எவனுமில்லை என்று கூற நீர் தயங்குவதேன்? அத்தகுதி படைத்தவன் வேறு எவனேனும் இருக்கின்றானா!

பொருளடக்கம்

அல்லாஹு அக்பர் - அல்லாஹ்வே மிகப் பெரியவன் என்று கூற நீர் பின்னடையக் காரணம் என்ன? அல்லாஹ்வை விடப் பெரியவனும் ஒருவன் இருக்கின்றானா?'' எனக் கேட்டார்கள் நபி பெருமான் (ஸல்).

''இல்லவே இல்லை'' என ஏற்ற ஹலரத் அதீ இப்னு ஹாத்திம் (ரலி) அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களின் கரத்தினைப் பற்றி இஸ்லாத்தை ஏற்றனர்.

அவர் இஸ்லாத்தை ஏற்கக் கண்டு அண்ணலார் (ஸல்) பெரு மகிழ்வடைந்தார்கள். அவரின் பாரம்பரிய மரியாதையைப் பேணி, அவரையே மீண்டும் 'தை' கோத்திரத்தாருக்குத் தலைவராக நியமித்து அனுப்பி வைத்தார்கள், ஹலரத் அதீ இப்னு ஹாத்திம் (ரலி) ஈமானின் ஒளியோடு நெடுங்காலம் வாழ்ந்தார்கள். சிறந்த நாவன்மையும் கவிதைத் திறனும் வரப்பெற்றிருந்த அவர் தம் வாழ்நாளின் இறுதிவரை இஸ்லாத்தின் பேரில் உறுதி மிக்கவராய்த் தாம் நிலைத்திருந்தோடு மட்டுமல்ல, தம் கோத்திரத்தவர்களையும் நிலைக்கச் செய்பவராகத் திகழ்ந்தனர். அண்ணலார் (ஸல்) அவர்களின் மறைவுக்குப் பின்னர் கலீஃபா அபூபக்கர் (ரலி) அவர்களின் காலத்தில் மத மாற்றக் குழப்பங்களுக்கு அரபுகள் பலியாகிவிட்ட சமயத்தில் 'தை' கோத்திரத்தாரும் தடுமாறியே போயினர். அவர்களில் பெரும்பாலோர் ஜகாத்தின் விஷயத்தில் தடுமாற்றங்கொண்டு துலைஹாவின் குவைலித் அஸதீயுடன் இணைந்து கொண்டனர். துலைஹாவை அடக்க ஓராயிரம் வீரர்களைக் கொண்ட படையுடன் ஹலரத் காலித் ஸைஃபுல்லாஹ் (ரலி) அவர்களை அனுப்பிவைத்த கலீஃபா அபூ பக்கர் (ரலி) அவர்கள் அக்கலகக் கூட்டத்தாரிட

அ.—18.

பொருளடக்கம்

மிருந்து தை கோத்திரத்தாரைப் பிரித்து நேர்வழியின் பால் அழைக்குமாறு ஏவி ஹலரத் அதீ (ரலி) அவர்களை அனுப்பி வைத்தார்கள்.

ஹலரத் காலித் (ரலி) அவர்களுக்கு முன்னதாகவே தம் கோத்திரத்தாரைச் சென்றடைந்த ஹலரத் அதீ (ரலி) அவர்கள், தம் பாரம்பரியச் செல்வாக்கைப் பயன்படுத்தி அவர்களை மனந்திருந்தி இஸ்லாத்தின் பக்கமே மீளச்செய்தனர். அத்துடனன்றி, ஹலரத் காலித் (ரலி) அவர்களை அணுகி துலைஹாவின் மீது அவர் போர் துவக்கு முன் அப்படையில் இணைந்துள்ள தம் கோத்திர வீரர்களை மீட்க, தமக்கு வாய்ப்பளிக்குமாறு கோரினர். ஹலரத் காலித் (ரலி) அவர்களும் அதற்கிணங்கி தம் நடவடிக்கைகளைச் சற்று தாமதப்படுத்தவே அவ்விடைக் காலத்தில் ஹலரத் அதீ (ரலி) அவர்கள் தம் நல்லுரையால் துலைஹாவோடு இணைந்திருந்த தம் கோத்திரத்து ஓராயிரம் மறவர்களைப் பிரித்தும் விட்டனர். அவர்களனைவரையும் ஒன்று திரட்டி ஹலரத் அதீ (ரலி) அவர்கள் காலித் (ரலி) அவர்களின் படையில் வந்திணைந்ததன் பலனாக இஸ்லாமியப் படையின் பலம் இரண்டு மடங்காயிற்று.

பிழையிலிருந்து மீண்ட தம் கோத்திரத்தாரிடமிருந்து 'ஜகாத்'தாக வரவேண்டிய ஒரு பெருந் தொகையையும் ஹலரத் அதீ (ரலி) அவர்கள் திரட்டிக் கொணர்ந்து கலீஃபா அவர்களிடம் சேர்ப்பித்தனர்.

ஹிஜ்ரி பதிமூன்றாம் ஆண்டில் இராக்கின் மீது படையெடுக்க கலீஃபா உமர் (ரலி) அவர்கள் அரபுலகமனைத்துக்கும் விடுத்த அறை கூவலையும் ஏற்று ஹலரத் அதீ (ரலி) விரைந்தோடி வந்தனர். தம் கோத்திரத்தவர்களைக் கொண்ட ஒரு பெரும் படையுடன் மதீனா வந்தடைந்த அவர்கள் அலுவல்களினூடே அலைக் கழிந்து

பொருளடக்கம்

கொண்டிருந்த கலீஃபா அவர்களுக்கு முகமன் கூறி, 'அமீருல் முஃமினீன்! என்னை நினைவு கொண்டீர்களா?' என வினவக்கேட்டு, "ஏன் இல்லை! மக்கள் நிராகரிப்பில் பின் தங்கி நின்ற சமயம் நம்பிக்கை கொள்ள முந்தின வரல்லவோ நீர். சத்தியத்தை அவர்கள் புரிந்து கொள்ளாத போது அதனை வரிந்து ஏற்றுக் கொண்டவரல்லவோ நீர். மனிதர்கள் துரோகமிழைக்கத் துணிந்த போது நீர் நன்றி யுடன் கடனாற்றினீர். அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களின் மறைவுக்குப் பின் அவர்களின் தோழர்கள் பெற்ற தர்மப் பொருள்களில் முதலாவது உமது கோத் திரத்தாருடைதே" என நினைவு கூர்ந்த கலீஃபா அவர் கள் அவரை அணைத்து உபசரித்தார்கள்.

ஹலரத் முதன்னா (ரலி) அவர்களின் தலைமை ஏற்றுப் போர்க்களங் கண்ட ஹலரத் அதீ (ரலி) 'ஹிரா' விலும் 'காதிஸிய்யா'விலும் வெஞ்சமர் ஆற்றினர். வெற்றிமேல் வெற்றிகளாகச் சேர்த்து வரிசையாக முஸ் லிம்கள் கண்ட போர்க்களங்களிலெல்லாம் தம் பங்கை தவறாது வைத்த ஹலரத் அதீ இப்னு ஹாத்திம் (ரலி), பாரசீகப் படைகள் நிர் மூலமாக்கப்பட்டு, பாபிலோனியா வின் வெண்மாளிகைக் கதவும் முஸ்லிம்களின் வரவுக்காகத் திறந்தேகிடந்ததையும், மதாயினிலிருந்த கிஸ்ராவின் கருவூ லங்களெல்லாம் அவர்களால் கைக்கொள்ளப்பட்டு மதீனா வுக்குக் கொண்டு வரப்பட்டதையும் தம் கண்களால் கண்டு, அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களின் முன்னறிவிப்புகளை நினைவு கூர்ந்தனர். அதுமட்டுமின்றி காதிஸிய்யாவிலிருந்து தன்னந்தனியாகப் புறப்பட்டு வந்த ஒரு மூதாட்டி ஹஜ்ஜு செய்து திரும்பிய காட்சியையும் அவர்களின் கண்கள் கண்டன. "மாநபி (ஸல்) அவர் களின் முன்னறிவிப்புகளில் இரண்டிலனை நான் கண்டு விட்டேன். இனி மூன்றாவதும் நிறைவேறும் என்பதில்

பொருளடக்கம்

என் உள்ளம் ஐயம் கொள்ளவில்லை'' என அவர்களின் நாவுரைத்தது. ஆம்! கலீஃபா உமர் இப்னு அப்துல் அஸீஸ் (ரஹ்) அவர்களின் காலத்தில் தங்களின் தர்மப் பொருளை வாங்குவதற்கு ஓர் ஏழையைத் தேடி சீமான்கள் ஊரூராய் அலைந்ததையும் உலகம் காணத்தான் செய்தது!

மதாயின் வெற்றியையடுத்து துஸ்த்தர் நகர முற்றுகையிலும், ஸிரியாவில் ஹலரத் காலித் (ரலி) அவர்களின் தலைமையில் நடை பெற்ற பலபோர்களிலும் ஹலரத் அதீ (ரலி) அவர்கள் பங்கேற்றனர்,

ஹலரத் உதுமான் (ரலி) அவர்களின் காலத்தில் காணப்பட்ட சில கருத்து வேறு பாடுகள் ஹலரத் அதீ (ரலி) அவர்களின் உள்ளத்தை சடைவுறச் செய்தன. எனவே அக்காலத்தில் அவர்கள் தனிமையில் ஒதுங்கி வாழலாயினர். பின்னர், கலீஃபா ஹலரத் அலீ (ரலி) அவர்களின் காலத்தில் மீண்டும் வாளேந்திய அவர்கள், கலீஃபா அவர்களுக்காதரவாக எல்லாப் போர்களிலும் கலந்து கொண்டனர். ஒட்டகைப் போரில் அலீ (ரலி) அவர்களின் புறம் நின்று சமராற்றிய அவர்கள், அப்போரில் தம் ஒரு கண்ணையும் இழந்தனர். அக்குறையோடேயே ஸிப்ஃபீன் போர்க்களத்திலும் அவர்கள் பங்கேற்றனர். ஹலரத் முஆவியா (ரலி) அவர்களின் புறமிருந்து வந்த ஹலரத் காலித் (ரலி) அவர்களின் புதல்வரோடு ஒரு பகல் முழுதும் நின்று அவர்கள் போர் புரிந்தனர். ஸிப்ஃபீனை அடுத்து நடைபெற்ற நஹ்ரவான் போரிலும் துவக்க முதல் இறுதிவரை அவர்கள் கலீஃபா அலீ (ரலி) அவர்களுக்குத் துணை நின்றனர்.

முக்தாரின் காலம் வரை அவர்கள் உயிர் வாழ்ந்தனராயினும், ஹலரத் அலீ (ரலி) யவர்களின்பால் அளவிலாப் பற்று கொண்டிருந்த அவர்களுக்கு, ஹலரத் அலீ (ரலி)

பொருளடக்கம்

யவர்களின் இறப்புக்குப் பின் வாழ்க்கையே சூனியமாகி விட்டது. அரசியல் தொடர்புகள் அனைத்தையும் அறுத்து, கூஃபாவில் தனிமையில் ஒதுங்கி வாழ்ந்த அவர்கள், ஹிஜ்ரி 67-ல் கூஃபாவிலேயே மரணமடைந்தனர்.

அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் பிந்திய காலத்திலேயே இவர்கள் இஸ்லாத்தை ஏற்றனராயினும், கிடைத்த அக்குறைந்தகால வாய்ப்பையும் அவர்கள் பயனுடையதாக்கிக் கொண்டனர் அண்ணலார் (ஸல்) அவர்களுக்குப் பின் நல்லறக் கலீஃபாக்களோடும் - குறிப்பாக கலைஞானத் திருவீட்டின் தலை வாசலாய்த் திகழ்ந்த ஹலரத் அலீ (ரலி) அவர்களோடும் தொடர்ந்து கொண்டிருந்த தொடர்புகளாலும் அறிவிலும் ஞானத்திலும் தேர்ந்துத் திகழ்ந்த இவர்கள் அறுபத்தாறு நபி மொழிகளையும் அறிவித்துள்ளார்கள். 'தமது கூட்டத்தாரிடையே அவர் ஒரு தலைவராகவும், கனவானாகவும், அறிஞராகவும், கருணை நிறைந்த வள்ளலாகவும் திகழ்ந்தார்'' என வரலாற்றாசிரியர்கள் வரைகின்றனர்.

வள்ளலின் மகனாகப் பிறந்திருந்த அதீ (ரலி) அவர்களின் வள்ளன்மையும் புகழுக்குரியதாகவே விளங்கியது. அவர்களிடத்தில் ஒரு முறை அஷ்அத் இப்னு கைஸ் இரவலாகப் பாத்திரம் கேட்டனுப்பிய போது அவர்கள் பாத்திரத்தைப் பண்டங்களால் நிரப்பி அனுப்பினர். 'நான் வெறும் பாத்திரமே கேட்டனுப்பினேன்' என அவர் கூறி அனுப்பிய போதும், 'நான் எவருக்கும் இரவலாகப் பாத்திரம் தருவதில்லை, அன்பளிப்பாகவே தரும் போதும் பாத்திரத்தை வெறுமையாகத் தருவதே இல்லை' என பதில் அனுப்பினர்.

அவர்களிடத்தில் ஒரு மனிதர் ஒரு நூறு திர்ஹங்களை யாசித்த போது, 'ஹாத்திமின் மகன் நான். நீர் கோரும்

பொருளடக்கம்

ஒரு நூறு திர்ஹங்கள் என் தகுதிக்குக் குறைவானவை எனவே நான் ஒருக்காலும் அவற்றை உமக்குத் தரமாட்டேன்' எனக் கூறி மறுத்து விட்டனர்.

மனிதர்களிடம் மட்டுமின்றி மிருகங்களிடமும் அன்பு செலுத்திய அவர்களின் இல்லத்தில், அன்றாட உணவுப் பொருள்களுக்கான பட்டியலில் எறும்புகளுக்காவும் ஒரு பங்கு சேர்க்கப்பட்டிருந்தது. ரொட்டித் துண்டுகளை அன்றாடம் எறும்புப் புற்றுகளில் பிய்த்துப் போட்டுத் திரும்பிய ஹலரத் அதீ இப்னு ஹாத்திம் (ரலி) ‘அவையும் நம் செல்வத்தில் பங்காளிகளே’ எனக் கூறுபவர்களாயிருந்தனர்.

ஃ ஃ ஃ

பொருளடக்கம்

سهيل بن عمرو رضي الله عنهم

# ஸுஹைல் இப்னு அம்ரு (ரலி)

மக்க நகர வணிகப் பெருஞ் சீமான்களில் ஹலரத் ஸுஹைல் இப்னு அம்ரும் ஒருவர். மற்றச் செல்வர்களைப் போன்றே மாநபி பெருமான் (ஸல்) அவர்களுக்கு ஆரம்ப காலத்தில் இவரும் ஒரு வைரியாகவே திகழ்ந்தார். சமுதாயத்தின் அடித்தளத்தில் வதைபட்டுக் கிடந்த ஏழைகளுக்கும் அடிமைகளுக்கும் ஒரு விடிவாக வந்த இஸ்லாம் தங்களின் ஆதிக்க வன்மையை அழித்து விடும் என்ற அச்சத்தால் அதன் ஆணிவேரையே அறுத்தெறிந்திட கங்கணங்கட்டி நின்ற குரைஷிச் சீமான்களில் ஸுஹைல் இப்னு அம்ரும் ஒருவரே. ஆமிர் கோத்திரத்தின் தலைவரான இவர் தனிமைத் தியானப் பழக்கம் கொண்ட உயர்ந்த பக்திமானாகவும் விளங்கினார். சிறந்த அறிவும் தெளிந்த சிந்தனையும் கொண்டிருந்த இவரால் அண்ணலெம்பெருமான் (ஸல்) அவர்களுக்கு மற்ற குரைஷித் தலைவர்களைக் கொண்டு ஏற்பட்டதைப்போன்ற அறுவறுப்பான சங்கடங்கள் ஏற்பட்டதில்லை. சிறந்த நாவன்மையும் அமையப் பெற்றிருந்த இவரின் எதிர்ப்பு நாகரிகமானதாகவே இருந்தது. மக்காவின் சந்தைகளிலும் மக்கள் கூடும் சந்திப்புகளிலும் இவர் அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களைத் தூற்றிய வண்ணமிருந்தார்.

இவரது இரு பெண்மக்களான உம்முகுல்ஸூமும், ஸஹ்லாவும் முறையே அபூஸப்ரா, அபூஹுதைஃபா (ரலி) ஆகியோருக்கு மணமுடித்தளிக்கப் பெற்றிருந்தனர். தங்களின் கணவன்மார்களோடிணைந்து அவ்விருவரும் இஸ்லாத்தில் இணைந்து விட்டிருந்தனர். அவரின் உடன் பிறந்தவர்களான ஹாத்திப், ஸாலித், ஸக்ரான் ஆகியோரும் முஸ்லிம்களாகி விட்டிருந்தனர். அவற்றோடன்றி அவரின் தலைமகன் அப்துல்லாஹ்வும் அண்ணலார் (ஸல்)

பொருளடக்கம்

அவர்களின் கரம் பற்றியிருந்தார்—அறிவில் சிறந்த தம் தந்தையும் இஸ்லாத்தை ஏற்றேறவிடுவார் என்ற நம்பிக்கையுடன். அண்ணலார் (ஸல்) அவர்களின் நம்பிக்கையும் அவ்வாறானதாகவே இருந்தது. ஆயினும் ஸுஹைல் அத்துணை எளிதில் இஸ்லாத்தின்பால் விரைபவராயில்லை. தம் மகன் அப்துல்லாஹ்வின் மதமாற்றமே அவரை மேலும் வீறு கொள்ளச் செய்தது, தம் எதிர்ப்பில்! தாயிஃபின் பயணத்தில் துயரச்சுமை ஏற்றுத்திரும்பிய நாயகத் திருமேனி (ஸல்) அவர்கள் மக்க நகரினுள் நுழைய தம் இனத்தவர் ஒருவரின் பாதுகாப்பை நாடிய சமயத்தும் கஅபின் கோத்திரத்தாருக்கு எதிராக ஆமிர் கோத்திரத்தவர் பாதுகாப்பளிக்க முடியாது என மறுத்து விட்டார்.

''குரைஷ்' என்ற சிறப்புப் பெயர் பெற்ற ஃபிஹ்ரின் மகனான காலிப் ஈன்ற லுவையின் மக்களே கஅபும், ஆமிரும். ஆமிரின் வழிவாறாகவே வந்தவர் ஸுஹைல். அண்ணல் எம்பெருமான் (ஸல்), அபூபக்கர், உமர், உதுமான் போன்ற நல்லோர்களோடு அவர்களை எதிர்த்து நின்ற மற்ற குறைஷித்தலைவர்களனைவரும் கஅபின் வழிவாறுகளே. ஹலரத் அபூ உபைதா (ரலி) மட்டும் குரைஷின் மற்றொரு மகனான அல்-ஹாரிதின் வழி வந்தவர்.

ஸுஹைலின் நடவடிக்கைகள் பண்பாட்டோடேயே இருந்த போதினும். அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களுக்கு எதிராக அவர் மேற்கொண்ட நாவளம் அண்ணலார் (ஸல்) அவர்களின் அருமைத் தோழர்களின் பொறுமைக்கே ஓர் அறை கூவலாயிருந்தது. பொறுமையின் எல்லையை எட்டிப் பிடித்த ஹலரத் உமர் (ரலி) அவர்கள், ஸுஹைலால் இனிப் பேசவே முடியாதவாறு அவரின் முன்பற்கள் இரண்டையும் தகர்த்துவிட எண்ணி அனுமதி வேண்டினர். ஆயினும் அண்ணலார் (ஸல்)

அவர்கள், "வேண்டாம். ஒரு காலம் வரும் அவர் தம் நாவுரையால் உங்களின் உள்ளங்களை மகிழ்விப்பார்" என முன்னறிவித்துத் தடுத்துவிட்டசர்கள்,

ஹிஜ்ரத்தின் மூலம் முஸ்லிம்களில் மிகப் பலர் தப்ப விட்டதும் குரைஷித் தலைவர்களை சீற்றமடையச் செய்தது. அதற்கு முன்னரே ஸுஹைலின் திருமகன் ஹலரத் அப்துல்லாஹ் அபிஸீனியா சென்ற இரண்டாம் குழுவினரோடு மக்காவைத் துறந்து சென்றிருந்தனர். ஆனால் அங்கிருந்து திரும்ப மக்கா வந்த அவரை இம் முறை தப்பிவிட ஸுஹைல் விட்டு விடவில்லை. அவரின் பெண் மக்கள் தங்கள் கணவன் மார்களுடன் தப்பிச் சென்று விட்ட நிலையிலும் ஹலரத் அப்துல்லாஹ் (ரலி) அவர்களை வளைத்துத் தடுத்த ஹுஹைல், வீட்டினுள் ளேயே அவரைச் சிறை வைத்து, கடுமையான காவலும் மேற் கொண்டார்.

ஸுஹைலின் கொடுமைகள் தாளாது ஹலரத் அப் துல்லாஹ் (ரலி) அவர்களின் உடல் சளைத்து விட்டது. அண்ணலார் (ஸல்) அவர்களும் தம் தோழர் அபூபக்கர் (ரலி) அவர்களுடன் ஹிஜ்ரத்து செய்து விட்டிருந்தார் கள். போதிய வருவாயும் வலிவுமற்ற ஒரு சில ஏழை முஸ்லிம்களைத் தவிர்த்து எவரும் மக்காவில் இல்லை. நிர்க்கதியாக நின்ற ஹலரத் அப்துல்லாஹ் (ரலி) அவர்கள் அண்ணலார் (ஸல்) அவர்கள் தமக்குப் போதித்த ஆன் மீகப் பாடங்களையென்ன - அண்ணலரின் திருப்பெயரை யும் தம் நாவிலெடுக்க முடியாத வண்ணம் நிர்ப்பந்த சூழ் நிலைக்குட்படுத்தப் பட்டார்கள், ஸுஹைலின் கொடுமை யால். நாளடைவில அவர்கள் இஸ்லாத்தையே மறந்து விட்டார்கள் என்றே ஸுஹைலின் குடும்பத்தவர்களும் மற்ற கு[illegible]படுத்தப்

பொருளடக்கம்

பட்டிருந்தார்கள். எனவே ஹிஜ்ரத்துக்குப் பிந்திய இரண்டாம் ஆண்டில் அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களையும் இஸ்லாத்தையும் அழித்திட மார்தட்டிப் புறப்பட்ட ஓராயிரம் குரைஷிகளிடையே தம் தோள் தட்டிப் புறப்பட்ட ஹலரத் அப்துல்லாஹ் இப்னு ஸுஹைஹல் (ரலி) அவர்களை எவருமே ஐயக்கண் கொண்டு நோக்கவில்லை. தம்மில் ஒருவராகவே அவரையும் அவர்கள் எண்ணினர்.

பத்ருப்போரில் முன்னணித் தலைவர்களுள் ஒருவராய் நின்ற ஸுஹைஹலும் தம் மகன் அப்துல்லாஹ்வின் நெஞ்சம் நீறுபூத்த நெருப்பாய் நின்ற இரகசியத்தை அறிந்திருக்கவில்லை. மக்காவில் விட்டுச் சென்றால் ஒருக்கால் தம் மகன் எவரின் சந்திப்பாலாவது மீண்டும் நினைவு தடுமாறித் தவறி விடலாம் என்றெண்ணியே ஸுஹைஹல் அவரைத் தம்மோடு அழைத்து வந்திருந்தார். ஆனால் ஹலரத் அப்துல்லாஹ் (ரலி), போர் ஆயத்தங்களில் மற்றவர்களின் கவனங்கள் பூரணமாகத் திரும்பி இருந்த சமயத்தையே வாய்ப்பாகக் கொண்டு, பாசறையிலிருந்து பிரிந்து சென்று, மறைந்து தப்பி, முஸ்லிம்களின் புறம் சென்றடைந்தனர். திடுமெனத் தம் முன் வந்து நின்ற அத்தோழரைக் கண்டு அண்ணலார் (ஸல்) அவர்களும் மற்ற தோழர்களும் மகிழ்வடைந்தனர்.

படைக்களத்தின் இரு தரப்பினருமே அச்சம்பவத்தை சற்றும் எதிர்பார்த்திருக்கவில்லை. இரண்டாண்டுகளுக்கு முன் பிரிந்து, அன்று தங்களை வந்தடைந்த தோழரைக் கண்ட மகிழ்ச்சியில் முஹாஜிரீன்கள் விண்ணதிர எழுப்பிய தக்பீரின் முழக்கம் குரைஷிகளைத் திகைக்கச் செய்தது. ஸுஹைஹலோ தம் மகனின் அந்தச் செயலால் வெறி கொண்டு விட்டார். ஆயினும் அச்சமயம் ஹலரத் அப்துல் லாஹ் ஒரு சுயேச்சையாளராகி விட்டதால் அவரால் ஏதும்

செய்ய முடியாதாகி விட்டது. பத்ருப்போரின் முடிவில் ஹலரத் மாலிக் இப்னு வக்ஷும் (ரலி) அவர்களின் கரங்களில் கைதாகி நிற்க எழுதப்பட்டிருந்த ஸுஹைலின் விதியும் விலக்கப்பட முடியாமலே ஆகிவிட்டது. எனினும் ஸுஹைல் பின்னர் ஈட்டுப்பணம் தந்து மீண்டு மக்கா திரும்பினார்.

ஹிஜ்ரி 6ம் ஆண்டில் ஹுதைபியாவில் அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களைச் சந்திக்கவந்த ஹலரத் உர்வா இப்னு மஸ்வூத் ஸக்கஃபீ (ரலி) அவர்கள் குறைஷிகளிடம் திரும்பச் சென்று, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களோடு இணங்கிச் செல்வதே குறைஷியர்களுக்கு நலம் பயக்கும் என்று கூறியதை முதலில் குறைஷியர்கள் ஏற்றுக் கொள்ளவில்லை. நபி பெருமான் (ஸல்) அவர்களையும் முஸ்லிம்களையும் எதிர்க்கும்படியாக குறைஷிகள் ஒரு படையை ஏவி அனுப்பிவைத்தனர். ஆனால், அப்படையினர் முஸ்லிம்களால் சிறை பிடிக்கப்பட்டனர். எனினும் நபி பெருமான் (ஸல்) அவர்கள் அவர்களை விடுதலை செய்து குறைஷிகள் சிந்திக்க மீண்டும் ஒரு வாய்ப்பளித்தார்கள்.

ஒருவழியாகத் தங்கள் நிலையிலிருந்து இறங்கி வந்த குறைஷிகள் நபிபெருமான் (ஸல்) அவர்களோடு உரையாட முன் வந்தனர். எந்த விதத்திலும் முஸ்லிம்களை மக்காவுக்குள் நுழையவிடாமலே அவர்களோடு ஓர் உடன்பாடு காணவேண்டுமெனத் திட்டமிட்டு குறைஷிகள் அதற்குத் தகுதியுடையவராக, தங்களில் சொல்வன்மையும் சாதுர்யமுமிக்க ஸுஹைல் இப்னு அம்ருவையே தெரிந்தெடுத்து நபி பெருமான் (ஸல்) அவர்களிடம் அனுப்பி வைத்தனர்.

நபி பெருமான் (ஸல்) அவர்களைச் சந்தித்த ஸுஹைல் வெகுநேரம் உரையாடினார். இறுதியில் இரு

பொருளடக்கம்

வரும் உடன்பாட்டுக்கான நிபந்தனைகளை வகுத்தார்கள். அவற்றை எழுதிக் கொள்ளுமாறு அண்ணலார் (ஸல்) அவர்கள் அலீ (ரலி) அவர்களைப் பணித்தார்கள். அண்ணலார் (ஸல்) அவர்கள் உரைக்க அலீ (ரலி) அவர்கள்—பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம் என — எழுதத் துவங்கிய போதே குறுக்கிட்டார் ஸுஹைல்— "அபல் காஸிம்! ரஹ்மான், ரஹீம் என்பவை நாங்கள் அறியாத சொற்கள். அரபிகளின் மரபுப்படி 'பிஸ்மிகல்லாஹும்ம' என்றே துவங்கச் செய்வீராக" என்று. நபி பெருமான் (ஸல்) அவர்கள் சம்மதித்து அவ்வாறே எழுதச் செய்தார்கள்.

அலீ (ரலி) அவர்கள் எழுதத் தொடர்ந்தார்கள். இந்த உடன்பாடு அல்லாஹ்வின் தூதர் முஹம்மது (ஸல்) அவர்களுக்கும் - என அவர்கள் எழுதியதுமே இடைமறித்தார் ஸுஹைல், 'உம்மை நாங்கள் அல்லாஹ்வின் தூதராக ஏற்றுக் கொண்டால் இங்கு உம்மைத் தடுத்திருக்கப்போவதில்லையே! நமக்குள் எந்தத் தர்க்கமும் தோன்றியிருக்காதே!! இந்த உடன்பாட்டுக்குத் தான் என்ன தேவையேற்பட்டிருக்கப்போகிறது? எனவே முஹம்மதிப்னு அப்துல்லாஹ் என்றே உம்பெயரைக் குறிப்பிடச்செய்வீராக' என்று.

"நீங்கள் என்னை ஏற்காவிடினும் நான் அல்லாஹ்வின் தூதனேயாவேன்" என்று அவரிடம் கூறிவிட்டு அண்ணலார் (ஸல்) அவர்கள் அலீ (ரலி) அவர்களிடம் கேட்டு அல்லாஹ்வின் தூதர் என்ற சொல்லை அடித்துவிட்டு 'முஹம்மதிப்னு அப்துல்லாஹ்வுக்கும் ஸுஹைல் இப்னு அம்ருவுக்கும் இடையிலேற்பட்ட உடன்பாடு' என்றெழுதச் செய்தார்கள்.

உடன்பாட்டின் முதல் நிபந்தனையாக, 'முஸ்லிம்கள் மன அமைதியாக கஅபாவைத் தவாஃபு செய்வதினின்றும்

பொருளடக்கம்

குறைஷிகளால் தடுக்கப்படமாட்டார்கள்' என்று அண்ணலார் (ஸல்) அவர்கள் எழுதச்சொன்னபோதே தடுத்தார் ஸுஹைல், "அது அடுத்த ஆண்டிலேயேயாகும். இவ்வாண்டு நீங்கள் இப்படியே திரும்பிவிடத்தான் வேண்டும்" என்று. அண்ணலார் (ஸல்) அவர்கள் அதனையும் ஆகட்டும் என ஏற்றார்கள்.

ஒருவாறாக உடன்பாடு எழுதி முடிக்கப்பட்டது. (1) முஸ்லிம்கள் இவ்வாண்டு மக்காவுக்குள் நுழையாமல் திரும்பிட வேண்டும் (2) மறு ஆண்டும் வரும் அவர்கள் மூன்று தினங்கள் மட்டுமே மக்காவுக்குள் தங்கி, வெளியேறி விட வேண்டும் (3) அவ்விதம் வரும் அவர்கள் உறையுள்ளிடப்பட்ட ஒவ்வொரு வாளைத் தவிர்த்து மற்றெந்த ஆயுதங்களையும் தம்மோடு எடுத்து வரலாகாது. (4) மக்காவில் அதுவரை வாழ்ந்திருந்த முஸ்லிம்கள் எவரையும் முஸ்லிம்கள் தங்களோடு அழைத்துச் செல்லலாகாது; தங்களோடு வரும் முஸ்லிம்கள் எவரும் மக்காவில் தங்கி விட விரும்பினால் அவர்களை முஸ்லிம்கள் தடுக்கலாகாது (5) மக்காவாசிகள் எவரேனும்—அவர்கள் முஸ்லிம்களாயினும், முஸ்லிமல்லாதாராயினும் மதீனாவுக்கு வந்து விட்டால் முஸ்லிம்கள் அவர்களை மக்கா வாசிகளிடம் திருப்பி அனுப்பி விடவேண்டும்; முஸ்லிம்கள் எவரேனும் மக்கா வந்து விட்டால் அவர்கள் திரும்பச் செல்ல அனுமதிக்கப்பட மாட்டார்கள் (6) மற்ற அரபுக் கூட்டத்தார்கள் தங்கள் விருப்பப்படி முஸ்லிம்களுடனோ அல்லது குறைஷிகளுடனோ தோழமை பூண உரிமையுள்ளவர்கள். அவர்களின் தோழமையை இவ்வுடன்பாடு கொள்ளும் இரு தரப்பினரும் பேணவேண்டும்.

—என்ற நிபந்தனைகளுடன் எழுதப்பட்ட அவ்வுடன்பாட்டில் இன்னும் கையெழுத்திடப்படவும் இல்லை.

பொருளடக்கம்

அதற்குள் ஹலரத் அபூ ஜந்தல் என்ற தோழர் ஓடோடி வந்து அண்ணார் (ஸல்) அவர்களின் அருகே நின்றார்.

அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களோடு உடன் பாடு கண்டமர்ந்திருந்த ஸுஹைல் இப்னு அம்ருவின் மற்றொரு மகனே அபூ ஜந்தல். அவரும் முன்னமேயே முஸ்லிமாகி விட்டிருந்தார். பத்ருப் போர்க்களத்தில் தம் மூத்த மகனார் அப்துல்லாஹ்வைத் தம் பிடியிலிருந்து நழுவவிட்ட ஸுஹைல், அந்த இழப்பின் காரணத்தினா லேயே அபூ ஜந்தல் (ரலி) அவர்களின் மீதிருந்த கண் காணிப்பைக் கடுமையாக்கினார். விலங்கிடப்பட்டு சிறை யில் வதைந்துக் கிடத்த அபூ ஜந்தல் (ரலி) அவர்களின் செவிகளுக்கு மதீனாவிலிருந்து முஸ்லிம்கள் வந்து ஹுதைபியாவில் தங்கியிருக்கும் செய்தி எட்டியது. எப் படியோ சிறையிலிருந்து தப்பி முஸ்லிம்களைத் தேடி வந்த அபூ ஜந்தல் (ரலி) தமக்கு முன்னதாகவே தம் தந்தை ஸுஹைல் அங்கிருப்பதை எதிர்பார்க்கவே இல்லை. அண்ணலார் (ஸல்) அவர்களோடு ஹுதைபியா வந்திருந்த அப்துல்லாஹ் இப்னு ஸுஹைல் (ரலி) தம் இளவலின் வருகையைத் தொலைவிலேயே கண்டு மகிழ்ந் தவராக அவரை வரவேற்க முந்தினார். ஆனால் அபூஜந் தலின் உடலோடு பிணைக்கப்பட்டிருத்த சங்கிலியை எட்டிப்பிடித்து அதனாலேயே அவரின் முகத்தில் அறைந்த ஸுஹைல் அவரைத் தம் பிடியில் கொண்ட வராகக் கூறினார், ''அபல் காஸிம்! நம் உடன்பாட்டை நடைமுறைப்படுத்த உமக்குக் கிடைத்துள்ள முதல் வாய்ப்பு இது'' என்று.

''இன்னும் உடன்பாடு கையெழுத்திடப் படவே இல்லையே'' என அண்ணலார் (ஸல்) கூறினார்கள்.

''கையெழுத்தே ஆகாது— நீர் ஒப்படைக்க மறுத் தால்'' என

பொருளடக்கம்

“பெருமானே! தங்களின் மார்க்கத்தை ஏற்ற காரணத்துக்காகவே என்னை வதைத்தெடுக்கும் இவ்விணை வைப்பவர்களின் கரங்களில் என்னை மீண்டும் ஒப்புவித்து விடாதீர்கள்” என அபூஜந்தல் (ரலி) எழுப்பிய அவலக் குரல் முஸ்லிம்கள் ஒவ்வொருவரின் உள்ளத்தையும் துடிக்கச் செய்தது. ஆனால் பெற்ற தந்தை ஸுஹைலின் இதயமோ கல்லினும் கடினமாக இருந்தது! அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்கள் அவரைத் தனிமையில் அழைத்துச் சென்று தமக்கு அவர் செய்யும் தனிப்பட்ட உபகாரமாக அவரின் மகனை விடுவித்திட வைத்த வேண்டுதலையும் அவர் புறக்கணித்து விட்டார்.

ஆனால் அவரோடேயே வந்திருந்த மக்கா வாசிகளான மிக்ராஸ், ஹுவைத்திப் என்பவர்கள், ஸுஹைலின் முரண்டுதலால் உடன்பாடேற்படுவதே தவறிவிடுமோ என அஞ்சியவர்களாக, அண்ணலார் (ஸல்) அவர்களை அணுகி, அவர்களின் சார்பாக தாங்கள் அபூ ஜந்தல் (ரலி) அவர்களின் பாதுகாப்பை ஏற்பதாகக் கூறினர். அமைதியில் நாட்டங் கொண்டிருந்த அண்ணலார் (ஸல்) அவர்களும் அவர்களின் வாக்கை ஏற்று ஹலரத் அபூஜந்தல் (ரலி) அவர்களை ஒப்புவித்து உடன்பாட்டினை உருவாக்கினார்கள்.

மீண்டும் பிணைக்கப்பட்ட ஹலரத் அபூஜந்தல் (ரலி) தம் உடல் ஏற்றுள்ள காயங்களையெல்லாம் முஸ்லிம்களின் புறம் காட்டிக் காட்டி இந்த நிலையிலா நீங்கள் என்னை அவரிடமே மீண்டும் ஒப்படைக்கிறீர்கள் எனக் கதறிய போதும் அதற்கு விடையாக விட தங்களின் பெருமூச்சுக்களையே முஸ்லிம்கள் கொண்டிருந்தனர். அண்ணலார் (ஸல்) அவர்கள் மட்டும் “அபாஜந்தல்! நாம் அளித்த வாக்குறுதிகளை நாம் பேணுவோம். உம்முடையவும்

பொருளடக்கம்

உம்மைப் போன்ற மற்றவர்களுடையவும் துன்பம் களைய அல்லாஹ் விரைவில் ஒரு வழியைக் காட்டுவான். அதுவரை நீர் பொறுமையை மேற்கொள்வீராக'' என அவருக்கு ஆறுதல் கூறினார்கள். பெற்ற தந்தை ஸுஹைலின் மனமோ எள்ளத்தனையும் இளகவில்லை மகனின் நிலை கண்டு.

நினைத்ததை முடித்து விட்டதம் சாதனையைப் பற்றிய பெருமிதத்தோடு தருக்கித் திரும்பிய ஸுஹைலோ மற்ற குரைஷிகளோ இனி நடைபெறப்போகும் சம்பவங்களை நினைத்துப் பார்க்க நியாயமில்லை. முஸ்லிம்களும் எவரும் தம் கற்பனையிலும் எண்ணியிராத ஒருசெய்தியை அண்ணலார் (ஸல்) அறிவித்தார்கள்.

''நிச்சயமாக நாம் உமக்குத் தெளிவானதொரு வெற்றியைத் தந்தோம்'' என்ற இறைவாக்கையே (48:01) அண்ணலார் (ஸல்) ஓதிக்காட்டினார்கள்.

அண்ணலார் (ஸல்) அவர்கள் அபூஜந்தல் (ரலி) அவர்களுக்குரைத்த நன்மாராயம் நிறைவேறவும் வெகு தாமதமாகவில்லை. அன்னவர் எவ்விதமோ சிறையிலிருந்து தப்பினர். அவரைப் போன்றே மேலும் பலரும் தப்பி மக்காவை விட்டும் வெளியேறினர். இவர்களுக்கெல்லாம் இடம்தந்து மதீனாவில் தங்கவிட ஹுதைபியா உடன்பாடு இடந்தரவில்லை. எனவே அவர்கள் மதீனாவினுள் அனுமதிக்கப்படாதவர்களாக, கடலோரம் சென்று ஒரு தனிக் குழுவினராக வாழத் துவங்கினர். அவ்வழியாகவே வணிகப் பயணம் செய்யவேண்டியிருந்த குரைஷிகளுக்கு இப்போது அவர்களின் பயணங்கள் கலக்கந் தருவனவாயின. ஒரு வழியாக குரைஷிகளே அண்ணலார் (ஸல்) அவர்களிடம், மக்காவிலிருந்து வெளியேறி வரும் முஸ்லிம்களுக்கு அடைக்கலந்தரலாகாது என்ற நிபந்

பொருளடக்கம்

தனையை நீக்கி விடுமாறு கோரி, கடற்கரையோரம் வாழ்ந்த முஸ்லிம்களை மதீனாவுக்கு அழைத்துக்கொள்ளச் செய்தனர். மாநபி (ஸல்) அவர்களின் வாழ்நாளெல்லாம் மதீனாவிலேயே வாழ்ந்து பல போர்களில் பங்கேற்ற ஹலரத் அபூ ஜந்தல் (ரலி) அதற்குப் பின் கலீஃபா உமர் (ரலி) அவர்களின் காலத்தில் ஸிரியப் படையெடுப்பிலும் பங்கேற்றனர். இறுதியாக ஹிஜ்ரி 18ல் அம்வாஸ் கொள்ளை நோயில் மரணித்தனர்.

முஸ்லிம்களுக்கு முற்றிலும் பாதகமாக உருவாக்கப்பட்ட ஹுதைபியா உடன்பாடு அவர்களுக்கே பெரு வெற்றி தரக்கூடியதாக மாறிவிடக் கண்டு சீறிச் சினந்த குறைஷித் தலைவர்களில் ஸுஹைலும் ஒருவரே. அவ்வொப்பந்தத்தின்படி அண்ணலார் (ஸல்) அவர்கள் மறு ஆண்டில் மக்கநகர் வந்து 'உம்ரா' வணக்கத்தை நிறைவு செய்தார்கள். அக்கால கட்டத்தில் அவர்கள் தங்களின் இல்லறத்தில் அன்னை மைமூனா (ரலி) அவர்களை ஏற்கவும் முடிவு செய்தார்கள்.

குறைஷித் தலைவர்களோ நகரினுள்ளிருந்து முஸ்லிம்களின் நடமாட்டங்களைச் சகிக்கப் பொறாதவர்களாக அபூ குபைஸ் மலையின் மீது ஏறிச் சென்று தங்கிக் கொண்டனர். மூன்றாம் நாள் முடியுந் தறுவாயில் ஸுஹைல் தம் சகாவான ஹுவைத்திபோடு வந்து அண்ணலார் (ஸல்) அவர்களைக் கண்டார். ஒப்பந்தப்படி மக்காவில் முஸ்லிம்கள் தங்கியிருக்க ஏற்கப்பட்ட கால கட்டம் முடிவுபெறுவதை நினைவூட்டினார். அண்ணலார் (ஸல்) தம் மண நிகழ்ச்சியை நிறைவுபடுத்தவும் 'வலிமா' விருந்தளிக்கவும் மட்டும் அவகாசம் கோரினார்கள். 'உம்முடைய விருந்தொன்றும் எங்களுக்குத் தேவையில்லை'



பொருளடக்கம்

என நிர்த்தாட்சண்யமாகவே உரைத்த ஸுஹைல் நீர் ஏற்றுக்கொண்டபடி மூன்றாம் நாளின் கடைசி இரவும் கழிந்து விட்டது. எனவே உம்தோழர்களுடன் உடனடியாக வெளியேறிவிடுவீராக என வற்புறுத்தினார்.

காலம் எத்தகைய மாறுதலை விரைவில் காணப் போகிறதென்பதையோ, மாநபி (ஸல்) அவர்கள் மறு ஆண்டிலேயே எத்தகைய மகிமையோடு அந்நகரினுள் நுழையவிருக்கிறார்கள் என்பதையோ அறவே அறிந்திருக்கவில்லை ஸுஹைல். அவரின் செயல் முறையால் சீற்றங்கொண்டு ஹலரத் ஸஅது (ரலி) அவர்கள் தம் வாளை உருவினர். ஆனால் அண்ணலார் (ஸல்) அவர்கள் 'ஸஅதே! எம்மோடு உரையாடும் எம் விருந்தினரை அவமதிக்காதீர்' எனக்கூறித் தடுத்து விட்டார்கள்.

அதே நகரினுள் மறு ஆண்டில் மாநபிகளார் (ஸல்) தங்கள் பதினாயிரம் தோழர்கள் புடை சூழ புகழ் மணக்கப் புகுந்தார்கள். அச்சமயம் அவர்களை எதிர்க்க எவ்விதத் திறனுமற்று குரைஷிகள் முப்புறமும் விலகி வழிவிட்ட போதும் ஸுஹைல், ஸஃப்வான், இக்ரிமா போன்ற வீரத் தலைவர்கள் விவேகம் பெறவில்லை. அவர்களின் சிந்தைகள் தெளியவில்லை; சினம் நீங்கவில்லை. வாளேந்திக் கலாம் விளைவிக்க வந்த அவர்களின் கணைகள் முறியடிக்கப்பட்டன. ஸஃப்வானும் இக்ரிமாவும் புறங்காட்டி ஓடினர். ஸுஹைலோ தம் வீட்டினுள் புகுந்துக் கதவுகளைத் தாளிட்டுக் கொண்டார்.

இரண்டாண்டுகளுக்கு முன் ஹுதைபியாவில் சமாதான உடன்பாடு கொண்டபோதும் தம் முரண்பாடுகளை சற்றும் தளர்த்திக் கொள்ளாத ஸுஹைலின் மமதை மழுங்கிவிட்டது. அவரின் வலிவத்தனையும் முறிந்து விட்டது. 'உம்முடைய விருந்தொன்றும் எமக்குத் தேவை

பொருளடக்கம்

யில்லை' என உதாசீனமாக அவரால் புறக்கணிக்கப்பட்ட பெருமான் முஹம்மது (ஸல்) அவர்களின் பொறுத்தருளும் கருணை நிழலைத் தவிர்த்து அன்று புகலிடம் ஸுஹைலுக்கில்லை. எந்த மக்கள் மீண்டும் தம் கைவசம் சிக்கினால் வதைக்க ஸுஹைல் காத்திருந்தாரோ அந்த மக்களிடமே தூதனுப்பினார்—அண்ணலார் (ஸல்) அவர்களிடம் தமக்கு அடைக்கலம் தேடக்கோரி.

பெற்ற தந்தையின் பாசம் மக்களையும் வருத்தியது. அவ்விருவரும் அண்ணலார் (ஸல்) அவர்களிடம் சென்று தங்களின் தந்தைக்காகப் பாதுகாப்பு கோரினர்.

"அவர் ஆண்டவனின் பாதுகாப்பில் இருக்கிறார். எனவே, அச்சமின்றி தம் வீட்டை விட்டும் வெளிவருவாராக" என அருளியதோடு மட்டுமல்ல, அண்ணலார் (ஸல்) மற்ற தோழர்களிடமும் "ஸுஹைலைப் போன்ற சொல்லாற்றலும் சிந்தனைத்திறனும் அமையப்பெற்ற ஒருவர் ஒருக்காலும் இஸ்லாத்தை விட்டும் விலகி நிற்கவே முடியாது. எனவே அவரைச் சந்திக்கும் எவரும் அவரைப் பழிக்கவேண்டாம்" என எச்சரித்தார்கள்.

மக்காவின் வீதிகளில் இப்போது ஸுஹைல் சுதந்திரமாக உலவினார்—பாரம்பரியமாக அவருக்கு இருந்துவந்த மரியாதையுடன். எவரும் அவரை சிறிதும் இழித்துநோக்கவில்லை. எந்த நிர்ப்பந்தமும் அவருக்கு விளைவிக்கப்படவில்லை. அண்ணலாரவர்களோடு அளவளாவிப் பழகிய அவர் ஹுனைன் போரிலும் முஸ்லிம்களோடு கலந்து பங்கு பெற்றார். ஆனால், அப்போதும் அவர் முஸ்லிமாகிவிடவில்லை. 'ஹவாஸின்'களின் தாக்குதலால் ஹுனைனில் பின்னடைய நேர்ந்த முஸ்லிம்களுடன் அவரும் பின்னடைந்தபோதிலும் மாறாத திடங்கொண்ட மனத்தினராய் நின்று எங்கள் மாநபிகளார் சமைத்த முடிவான

பொருளடக்கம்

வெற்றி அவரின் விழிகளை விரியச் செய்தன. இப்போது அண்ணலார் (ஸல்) குரைஷியரின் மானங்காத்த கோமக னாகவே குரைஷித் தலைவர்களுக்குத் தோற்றமளித் தார்கள்.

அநாதையாகத் தாம் ஆதரிப்பார் எவருமின்றி—மக் காவில் நின்ற காலை, கொடுமையென்னும் கூராயுதமேந்தி தம்மை ஓடஓட விரட்டிய வன்நெஞ்சர்களையும் பழி தீர்க்கத் துணியாத பெருமானார் (ஸல்) அவர்களின் பெருங்குண அழகு குரைஷித் தலைவர்களைத் திணறச் செய்தது.

பன்னீராயிரம் தோழர்களும் சிதறிப் பிரிந்த நிலை யில் தன்னந் தனியராகவே தாளூன்றி நின்று வெற்றியை எட்டிப்பிடித்த அண்ணலரின் வீரம் குரைஷிகளின் கண் களைக்கவிந்து நின்ற குலப் பெருமையையும் கோத்திரப் பகையையும் விலகச் செய்தது.

அண்ணலெம்பெருமான் (ஸல்) அவர்களின் குணப் பெருமையே இப்பொழுது அரசோச்சியது.

'ஜஅரானா'வில் தங்கி அண்ணலார் (ஸல்) அவர்கள் போரில் கிடைத்த பொருள்களையெல்லாம் பங்கிட்டளித் தார்கள். அச்சமயத்திலும் ஸுஹைல் முஸ்லிமாகியிருக்க வில்லை. எனினும் போரில் பங்கேற்ற அவருக்கும் அண்ண லார் (ஸல்) அவர்கள் ஒரு நூறு ஒட்டகைகளைப் பரிசிலாக அளித்தார்கள். 'அவரின் இளமையிலேயே நான் கண்ட குணஅழகை அவரின் முதுமையிலும் அணுவளவும் குறை வின்றி காணுகிறேனே!' என வியந்தார் ஸுஹைல். அப் போது அவரின் உள்ளம் எஞ்சியிருந்த எள்ளத்தனை அழுக்கையும் இழந்து துலங்கியது.

இன்னா செய்தாரையும் இன்முகம் கொண்டுஈர்த்து நன்னயம் பேணிடும் அற்புதத் தகைமை,

பொருளடக்கம்

ஒன்னார் படையினர் முன் தன்னந் தனியராகவே நின்று சாதனை படைத்திடும் ஒப்பில் வீரம்,

தமக்கென கொள்ளாது மனத்தயாளங் கொண்டு அள்ளி வழங்கிடும் வள்ளன்மை,

இந்த மூன்றும் ஒரு நபியிடமேயல்லாது சாதாரண மனிதரிடம் ஒன்றிணைந்திருக்க எங்ஙனம் முடியும் என வியந்த ஸுஹைல் இப்னு அம்ரு (ரலி) தம்மின் இருப தாண்டுகாலப் பகைமையை முற்றாக மறந்து அண்ண லெம்பெருமான் (ஸல்) அவர்களின் கரம்பற்றி இஸ் லாத்தை ஏற்றனர்.

'அவர் தம் நாவுரையால் உங்களின் உள்ளங்களை யெல்லாம் மகிழச் செய்வார்' என பெருமானார் திருநபி (ஸல்) அவர்கள் முன்னறிவித்த காலமும் விரைந்தே வந்தது. அண்ணலார் (ஸல்) அவர்கள் இவ்வுலகைப் பிரிந்த சமயம் மக்காவிலும் ஒரு சிலரிடையே மதமாற்றத் தடுமாற்றங்கள் காணப்பட்டன. அச்சமயம் எவ்விதச் சலனமுமின்றி இறைவனின் திருமார்க்கத்தைப் பாது காக்க உறுதிகொண்டு நின்றனர் ஹலரத் ஸுஹைல் (ரலி). தடுமாற்றத்தின் அறிகுறிகள் தோன்றவாரம்பித்த போதே கஃபாவின் முன் மக்களை ஒன்றுகூட்டி நின்றனர் ஹலரத் ஸுஹைல் (ரலி).

''அண்ணல் முஹம்மது (ஸல்) அவர்களை வணங்கி வந்தவர்கள் அண்ணலார் (ஸல்) அவர்கள் இவ்வுலகை விட்டும் சென்று விட்டனர் என்பதை அறிந்து கொள் ளட்டும். முஹம்மதின் இறைவனையே வணங்கி வந்தவர் கள் உங்களின் அந்த இறைவன் மரணிக்கவில்லை என் பதையும் ஒருக்காலும் அவனை மரணம் பிடிக்காது என் பதையும் உணர்ந்து கொள்வார்களாக. குரைஷிச் சகோதரர்களே! இஸ்லாத்தில் இறுதியாக இணைந்த

பொருளடக்கம்

நீங்கள் இஸ்லாத்தை விட்டும் வெளியேற முந்திக் கொள்ளாதீர்கள். அண்ணல் முஹம்மது (ஸல்) அவர்களின் மறைவு இஸ்லாத்துக்கு எந்தவித நட்டத்தையும் விளைவித்து விடாது. இறைவனின் இந்த மார்க்கம் கிழக்கிலும் மேற்கிலும் விரிந்து பரவி உலகம் முழுமைக்கும் ஒளி பாய்ச்சும் என்பது உறுதி. அதனை விட்டும் வெளியேறுபவன் புனித பூமியில் உயிர் வாழ முடியாது. அவனின் கழுத்தைத் துண்டித் தெறிவேன்'' என்று முழங்கிய ஹலரத் ஸுஹைல் (ரலி) அவர்களின் பேருரை தடுமாறிய உள்ளங்களையெல்லாம் உறுதிபெறச் செய்தது. இஸ்லாம் பிறந்த அந்த பூமியில் குழப்பமும் துரோகமும் தோன்றாது காத்தது.

தமாற்றத்தைத் தடுக்க 'யமாமா'வில் நடைபெற்ற போரில் இவர்களின் மூத்த மகனார் அப்துல்லாஹ் (ரலி) அவர்கள் உயிர் நீத்தனர். அது பற்றியும் அவர்கள் மன மகிழ்வே கொண்டார்கள். தனயரை இழந்த தந்தையைக் காண கலீஃபா அபூபக்கர் (ரலி) அவர்கள் வந்தார்கள். ஆறுதல் கூற வந்த அவர்களிடம், ''போரில் கொல்லப் பட்ட ஒரு தியாகி தம் குடும்பத்தைச் சார்ந்த எழுபது பேருக்குப் பரிந்துரைப்பார் என்று அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்கள் கூற நான் கேட்டுள்ளேன். என் மகன் எல்லோருக்கும் முன்னதாக எனக்கே யல்லவோ பரிந்துரைப்பார். அவ்விதமே நான் நம்புகிறேன்'' என ஹலரத் ஸுஹைல் (ரலி) அவர்கள் பேசக் கண்டு, மாநபி பெருமான் (ஸல்) அவர்களின் வெகு குறைந்த காலத் தோழமையே அன்னவரின் பால் விளைவித்துள்ள தியாக மனப்பக்குவத்தையும் மாறாத பற்றையும் எண்ணி கலீஃபா அவர்கள் வியந்தனர்.

வாழ்நாளின் பெரும் பகுதியை மாநபியின் திரு மார்க்கத்துக் கெதிராகத் தாம் செலவழித்துவிட்ட பாவமே

பொருளடக்கம்

அவர்களின் எண்ணங்களை என்றும் சூழ்ந்து நின்று, இஸ்லாத்தில் கழிக்க அவர்களுக்குக் கிடைத்த குறைந்த கால வாழ்வைப் புடம் போட்டெடுத்தது "மக்காவின் வெற்றிக்குப் பின்னர் இஸ்லாத்தை ஏற்ற குறைஷிச் சீமான்களில் ஸுஹைல் இப்னு அம்ரு (ரலி) அவர்களை விட அதிகமாக தொழுகை—நோன்பு—தர்மம் போன்ற நற்செயல்களில் தம்மை ஈடுபடுத்திக் கொண்டவர் எவருமில்லை' என 'உஸ்துல் காபா'வின் ஆசிரியர் எழுதுகின்றனர்.

அறியாமைக் காலத்தின் தங்களின் தவறுகளை அவர்கள் என்றும் மறந்ததில்லை. மக்காவில் அச்சமயம் வாழ்ந்த ஹலரத் முஆது இப்னு ஜபல் (ரலி) அவர்களிடத்தில் இவர்கள் திருக்குர்ஆனை ஓதக்கற்று வந்தனர். ஹலரத் முஆது (ரலி) அவர்கள் மக்காவை விட்டும் சென்றுவிட்ட பின்னரும் இவர்கள் அவர்களைத் தேடிச் சென்றும் கற்பதைத் தொடர்ந்தார்கள். ளிரார் இப்னு அஜூர் என்பவர் 'எதற்காக அந்த கஸ்ரஜ் கோத்திரத்தாரிடம் சென்று கற்கவேண்டும். நம்முடைய குடும்பத்தைச் சார்ந்த எவருமே அதற்குத் தகுதி படைத்தவராக இல்லையா?" என்று கேட்க,

இவர்கள் "இத்தகைய கோத்திரப் பெருமையே இஸ்லாத்தில் நம்மைப் பின்தள்ளி அன்ஸார்களை முன்னிற்கச் செய்துவிட்டது. இல்லையானால் நாமும் அவர்களோடு சமமாக நிற்போமல்லவா? அக்கோத்திரப் பெருமையையும் குரோத மனப்பான்மையையும் நான் விரும்பவில்லை. அக்காலப் போர்க்களங்களில் என் கூட்டாளிகளோடு நானும் கொல்லப்பட்டுப் போகாமையே நான் பெற்ற பேறாகும். பத்ரு, உஹது, அகழ்ப்போர்களில் நான் நபி பெருமான் (ஸல்) அவர்களை எதிர்த்துப் போராடினேன். அந்தப் பாவங்கள் ஒருபக்கம் தொலையட்டும் என்றால்

பொருளடக்கம்

ஹுதைபியாவில் அவர்களோடமர்ந்து நானே உடன்பாடு கண்டேன். அச்சமயம் அவர்களின் ஒவ்வொரு சொல்லிடையிலும் குறுக்கிட்டுக் குதர்க்கம் பேசிக்கொண்டிருந்த நான் அந்த நினைவு என்னுள் துளிர்க்கும் போதெல்லாம் அவர்களின் திருமுகத்தை ஏறிட்டுப் பார்க்கவும் வெட்கித்தேன்'' என்று கூறி நெஞ்சம் நெகிழ்ந்தார்கள்.

ஸிரியப் போர் பற்றிக் கலந்துரையாட கலீஃபா உமர் (ரலி) அவர்கள் பெரும் பெரும் குரைஷித் தலைவர்களையெல்லாம் மதீனாவுக்கு அழைத்திருந்தார்கள். கூடியிருந்த அனைவரிடையிலிருந்தும் ஓரிருவரையாக அழைத்து அவர்களின் கருத்தறியலானார்கள் கலீஃபா. ஹலரத் பிலால், ஸுஹைப், அம்மார் (ரலி) போன்ற - சோதனை வாழ்வைச்சுமந்த முஹாஜிர்களைக் கலீஃபா அவர்கள் முதலில் அழைத்துப் பேசினார்கள். பின்னர் அவர்களால் பத்ருடைய களம் கண்ட தோழர்கள் அழைக்கப் பெற்றனர். அக் காட்சியைக் கண்டு குரைஷித் தலைவரான அபூ ஸுஃப்யான் (ரலி) அவர்களின் நெஞ்சம் பெரும் வேதனை கொண்டது. ''நம்மிடம் அடிமைகளாக இருந்தவர்களெல்லாம் கலீஃபாவால் அழைக்கப்படுகிறார்கள். வாசலைக் காத்துக் கொண்டு அமர்ந்திருக்கும் நம்மை ஒருவரும் திரும்பியும் பார்க்கக் காணோமே! இந்த நிலையை என் வாழ்நாள் ஒருபோதும் கண்டதில்லையே!!'' என அவர்கள் வருந்தினர். ஆனால்,

ஹலரத் ஸுஹைல் இப்னு அம்ரு (ரலி) அவர்கள் அணுவளவும் வருத்த முறவில்லை. ''அபா ஸுஃப்யான்! இஸ்லாத்தின் அழைப்பை ஏற்க அவர்கள் முந்திக் கொண்டவர்கள். அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் சொல்லுக்குச் செவிசாய்க்கப் பின் தங்கிவிட்ட நமக்கு இன்று அவர்களை முந்திக் கொண்டு செல்ல எந்தத் தகுதியுமில்லை. துன்பங்களையும் துயரங்களையும் அவர்

பொருளடக்கம்

கள் நம்மை விட அதிகமாகவே சுமந்திருக்கிறார்கள். போர்க்களங்களிலாவது முன்னின்று நம் கடனைத் தீர்க்கக் கிடைக்கும் பேற்றையாகிலும் இழக்காதிருப்போமாக எனத் தெளிந்த சிந்தனையோடு அவர்கள் பேசக் கேட்டு ஹலரத் அபூ ஸுஃப்யான் (ரலி) அவர்களும் அமைதி யடைந்தனர்.

ஆம்! இறை மார்க்கத்துக்கும் இறைவனின் தூதருக் கும் இழைத்து விட்ட தம் பழங்காலக் கொடுமைகளால் விளைந்த பாவக்கறைகளை களத்தில் தாம் சிந்தும் செந் நீரால் மட்டுமே கழுவித் துடைக்க முடியும் என ஹலரத் ஸுஹைல் (ரலி) நம்பினர். 'இறைவனின் பாதையில் ஒரு கணமேனும் செலவிடுவது வாழ் நாள் முழுவதும் ஒருவன் தன் இல்லத்திலமர்ந்து புரியும் நற்செயல்களை விட மேலானது' என அண்ணலார் திரு நபி (ஸல்) அவர்கள் கூறத் தாம் கேட்டதாக, ஸிரியப் போர்க்களத்தில் ஹலரத் ஸைஅது இப்னு புழாளா (ரலி) அவர்களிடம் கூறிய இவர் கள், ஸிரியப் போர்க்களத்தை விட்டும் தாம் வீடு திரும்பு வதில்லை என உறுதி கொண்டனர். ஹிஜ்ரி 18ம் ஆண்டில் அம்வாஸில் காலரா கொள்ளை நோய் பரவிய சமயத்திலும் நாடு திரும்ப மறுத்து அக்கொள்ளை நோய் வயப்பட்டே தம் வாழ்வை முடித்தனர்.



பொருளடக்கம்

# ஹலரத் ஹுவைத்திப் (ரலி)

அண்ணலெம்பெருமான் (ஸல்) அவர்கள் நபித்துவம் பெற்ற ஆரம்ப காலத்திலேயே அறுபது வயதுகளை அடைந்திருந்த இப்பெரியார் அப்போதே இஸ்லாத்தின் பால் ஆர்வம் கொண்டிருந்தனர். எனினும் அபுல்ஹக்கம் இப்னு உமையாவின் அச்சுறுத்தல்கள் அவரைத் தடுத்து வந்தன. பத்ருப்போரில் இவர்கள் குறைஷிகளோடு இணைந்து வந்திருந்தனர். ஹுதைபியாவின் நடவடிக்கைகளிலும் ஆரம்பத்திலிருந்தே பங்கேற்று அப்போது உருவாக்கப்பட்ட உடன்பாட்டிலும் குறைஷிகளின் சார்பாக ஒரு சாட்சியாகவும் கைபெழுத்திட்டனர். இத்தனைக்கும் இடையே பெருமான் முஹம்மது (ஸல்) அவர்கள் ஒரு நாள் தங்களை வென்று நிற்பர் என்ற நம்பிக்கை மட்டும் இவர்களுக்கிருந்தே வந்தது. முஹம்மதிடமிருந்து குறைஷிகள் தோல்வியையே சந்திப்பர் என்று இவர்கள் ஹுதைபியாவின் முடிவில் வெளிப்படையாகவே கூறினர்.

ஹுதைபியாவின் உடன்பாட்டின்படி மறு ஆண்டில் நபிபெருமான் (ஸல்) அவர்கள் தங்கள் தோழர்களோடு உம்ரா வணக்கத்தை நிறைவேற்ற மக்கமாநகர் வந்தபோது அவர்களின் நடமாட்டத்தையே பொறுக்கச் சகியாது குறைஷித் தலைவர்கள் 'அபூ குபைஸ்' மலையின் மீது ஏறிக்கொண்டபோது ஹலரத் ஸுஹைல் இப்னு அம்ருவும் இவர்களும் மட்டுமே நகரினுள் இருந்தனர். மூன்றாம் நாள் முடிவில் அண்ணலார் (ஸல்) அவர்களை ஹலரத் ஸுஹைல் (ரலி) சந்திக்க வந்தபோதும் இவர்கள் உடன் வந்தனர். அச்சமயம் அண்ணலார் (ஸல்) அவர்கள் அளிக்க விருந்த விருந்தையும் ஸுஹைல் (ரலி) அலட்சியமாகப் புறக்கணித்ததையும், அவரின் புறக்கணிப்பையும் பொறுத்து நபிபெருமான் (ஸல்) அவர்கள், நாளை கதிரவன் புலரும்

போது எந்த ஒரு முஸ்லிமையும் நகரினுள் நீங்கள் காண மாட்டீர்கள்' என அமைதியுடன் பேசியதையும் ஹுவைத் திபும் காணவே செய்தனர்.

மக்கமாநகர வெற்றியன்று குரைஷிகளின் வலுவத் தனையும் தளர்ந்து விடக்கண்டு முதியவர் ஹுவைத்திப் கதிகலங்கிப் போயினர். தம்மின் குடும்பத்தார்களையெல் லாம் பல்வேறு இடங்களில் பிரித்துப் பாதுகாப்பாக அமர்த்திவிட்டுப் பதுங்கிப் பதுங்கி நகரினுள் நுழைந்த இவர்களின் பார்வையில் ஹலரத் அபூதர் கிப்ஃபாரீ (ரலி) பட்டனர். அவர் இவர்களின் பழைய தோழரேயானாலும் ஏதோ ஒருவித பீதி ஹுவைத்திப் அவர்களின் உள்ளத்தை இன்று பற்றிக்கொண்டது. ஹலரத் அபூதர் (ரலி) அவர் களின் பார்வையும் இவர்களின் புறம் திரும்பியது. பெய ரிட்டு அவர்களை அருகே அழைத்து தம்மைக்கண்டு அவர் கள் ஒடக்காரணம் வினவினர் ஹலரத் அபூதர் (ரலி).

''உங்களுடைய நபி மக்காவைக் கைப்பற்றிக் கொண் டாரன்றோ?'' எனக் கேட்டனர், ஹுவைத்திப்.

''அதனாலென்ன?'' என வினவினர் ஹலரத் அபூதர் (ரலி).

தமது அச்சத்தை வெளியிட்டனர் பெரியார் ஹுவைத்திப். ஹலரத் அபூதர் (ரலி), இறைவனின் பாது காப்பில் நகரம் இருப்பதை அவருக்கு எடுத்தோதி அவரை அணைத்துக் கொண்டனர்.

முஸ்லிம்கள் இன்று வீடுகளில் புகுந்து குரைஷிகளின் பெண்டிர் குடும்பத்தவர்களை யெல்லாம் நடுச்சந்தியில் இழுத்து மானபங்கப்படுத்துவர் என்ற அச்சத்தால் தம் குடும்பத்தினரையெல்லாம் பல்வேறு இடங்களில் அவர் மறைந்திருக்கச் செய்து வந்துள்ள செய்தி கேட்டு வியந்

தனர் அபூதர் (ரலி). அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களால் பெயர்கள் குறிப்பிடப்பட்டு அறிவிக்கப்பட்டுள்ள ஒரு சிலரைத் தவிர்த்து மற்ற நகர மக்கள் யாவரும் அன்று மன்னிக்கப் பெற்றுள்ள செய்தியை ஹலரத் அபூதர் (ரலி) அவர்கள் கூறக்கேட்டு மன அமைதி கொண்ட அம் முதியவர் ஹலரத் அபூதர் (ரலி) அவர்களின் பாதுகாப் போடேயே தம் வீட்டை அடைந்தார்; தம் குடும்பத்தினரையும் அழைத்து வந்து சேர்த்தார்.

பதட்டம் அனைத்தும் நீங்கி அப்பெரியார் பூரண அமைதியடைந்த பின்னர் ஹலரத் அபூதர் (ரலி) அவருக்கு இஸ்லாத்தின்பால் அழைப்புவிடுத்தனர். "ஹுவைத்திப்! இன்னும் எத்தனை காலத்துக்கு இத்தடுமாற்றங்கள். எத்தனையோ சந்திப்புகளில் முன்னணியில் நீர் நின்றீர். நன்மைக்கான வாய்ப்புகளையெல்லாம் இழந்தீர். உண்மையை உணரும் பரந்த சிந்தனையை நீர் பெற்றிருந்தும் ஏதோ ஒன்றினால் நீர் தடுக்கப்பட்டிருந்தீர். இப்போதும் உமக்கு வாய்ப்பு தவறி விடவில்லை, அம்மாநபியின் பெருமை, கண்ணியம் அனைத்தும் குரைஷியாகிய உம்முடையவே பெருமையும், கண்ணியமுமன்றோ" என ஹலரத் அபூதர் (ரலி) அவர்கள் அழைப்பு விடுத்த பாங்கு பெரியார் ஹுவைத்திப் அவர்களை திருநபியின் திருச் சந்நிதானம் நோக்கி அழைத்துச் சென்றது.

ஹலரத் அபூ பக்கர், உமர் (ரலி) முதலிய யாவரும் சூழ அமர்ந்திருந்த இறை தூதர் (ஸல்) அவர்கள், தங்களின் இரு கரங்களையும் நீட்டி ஹலரத் ஹுவைத்திப் அவர்களை வரவேற்றார்கள். ஈமானின் பாதையை மக்காவின் அம் முதுபெரும் சீமானுக்கும் திறந்து விட்டமைக்காக இறைவனைப் புகழ்ந்தார்கள். இஸ்லாத்தில் இணைந்து அகமகிழ்ந்த ஹலரத் ஹுவைத்திப் (ரலி) அன்று அண்

பொருளடக்கம்

ணல் எம்பெருமான் (ஸல்) அவர்களின் தேவைக்காக நாற்பதினாயிரம் தங்கக்காசுகளை கடனாக வழங்கினார்கள்.

இஸ்லாத்தில் இணைந்த பின்னர் ஹலரத் ஹுவைத்திப் (ரலி) ஹுனைன் தாயிஃப் போர்களில் பங்கேற்றனர். ஹுனைன் போரின் வெற்றிப் பொருள்களில் இவர்களும் ஒரு நூறு ஒட்டகைகள் பங்கு பெற்றனர்.

கலீஃபா உமர் (ரலி) அவர்களின் காலத்தில் புனித நகரம் புனர் நிர்மாணம் செய்யப்படுவதற்காக கலீஃபா உமர் (ரலி) அவர்களால் அமைக்கப்பட்ட ஆய்வுக்குழுவில் ஹலரத் ஹுவைத்திப் (ரலி) அவர்களும் அங்கம் வகித்தனர். கொல்லப்பட்ட கலீஃபா உதுமான் (ரலி) அவர்களின் திரு உடல் அடக்கம் செய்யப்படவும் நாதியற்றுக் கிடந்தபோது இறுதியாக அந்நல்லுடலை துணிந்தெடுத்து அடக்கம் செய்தவர்களில் ஹலரத் ஹுவைத்திப் (ரலி) அவர்களும் ஒருவர்.

ஏறத்தாழ ஒரு நூற்று இருபதாண்டுகாலம் வாழ்ந்த இம்முது பெரும் நபிமணித்தோழர் ஹலரத் முஆவியா (ரலி) அவர்களின் காலத்தில் மரணித்தனர். முதுமையும் தளர்வும் அவர்களின் உடலைப் பற்றினவேயன்றி அவர்களின் உள்ளத்தைத் தொடவில்லை. ஹலரத் முஆவியா (ரலி) அவர்களின் காலத்தில் மதீனாவின் ஆளுநராக இருந்த மர்வான் ஒருமுறை அவர்களைச் சந்தித்த போது, ''முதியவரே! இளைஞர்களெல்லாம் இஸ்லாத்தின் பக்கம் தங்களைவிட முந்திக் கொண்ட போது தாங்கள் மட்டும் ஏன் வெகுவாகத் தாமதித்து விட்டீர்கள்?'' என கேலியாக வினவினார்.

''நான் ஆரம்பத்திலேயே அதற்காகப் பல முறை முந்திய போதெல்லாம் உம் பாட்டன் அபுல் ஹக்கம் இப்னு உமையாவேயல்லவோ என்னைத்தடுத்துக் கெடுத்

பொருளடக்கம்

தவர்'' என உரைத்த அவர்கள் மர்வானை அத்துடன் விட்டனரில்லை. இஸ்லாத்தை ஏற்ற ஒரே காரணத்துக்காக ஹலரத் உதுமான் கனீ-துன்னூரைன் (ரலி) அவர்களுக்கு மர்வானின் தகப்பன் இழைத்த கொடுமைகளையெல்லாம் அப்பெரியார் அணுவணுவாக விவரிக்கக் கேட்டு மர்வான் வெட்கத்தால் தலை குனிந்தார்.

## பின்னுரை

நபிகளின் நாயகத் தோழர்கள் பதினாறு பேர்களின் திருவாழ்வுச் சரிதைகளோடு இந்நூலை நிறைவுபடுத்துகிறேன். இவ்வரலாறுகளிடையிடையே மேலும் நான்கு நபிமணித் தாரகைகள் மின்னிச் சிறப்பளிக்கிறார்கள் இந்நூலுக்கு. இந்நூலைப் படித்து முடித்து என் வாசக நண்பர்கள் கொள்ளும் மனநிறைவுக்கும் பெருமிதத்துக்கும் முழு உரிமைக்காரர்கள் அந்நாயகத் தோழர்களே யாவர். புகழனைத்தும் அல்லாஹ்வுக்கும் அவன் தூதருக்கும் அவர்களின் தோழர்களுக்குமே உரியன. இந்நூலிடையே காணக்கிடைக்கும் குறைகளனைத்தும் என் குறை மதியினாலும் கவனத் தடுமாற்றத்தினாலும் விளைந்தவைகளேயன்றி வேறல்ல. கற்றவர்கள் கண்டு அவ்வப்போது எடுத்துரைக்கும் அறிவுரைகளின்படி அடுத்த பதிப்பில் அவற்றைக் களைந்திட முயல்வேன்—இன்ஷா அல்லாஹ்!

''ஸையிதுஷ்ஷுஹதா — தியாகிகளின் தலைவர்'' என்ற சிறப்பேற்ற நாயகத் தோழர், நபிமணி (ஸல்) அவர்களின் சிறிய தந்தையார் ஹலரத்,

**ஹம்ஸா இப்னு அப்துல் முத்தலிப் (ரலி)** அவர்களின் திருவாழ்வுடன் துவங்கவிருக்கும் அடுத்தத் தொடரில், ஹலரத் அப்பாஸ் இப்னு அப்துல் முத்தலிப்

பொருளடக்கம்

| | | | |
|---|---|---|---|
| ஹலரத் | ஜஃ்பர் | இப்னு | அபீதாலிப் |
| ,, | முஸ்அப் | ,, | உமைர் |
| ,, | உதுமான் | ,, | மள்வூன், |
| ,, | உத்பா | ,, | கஸ்வான், |
| ,, | ஆமிர் | ,, | ஃபுஹைரா, |
| ,, | முகைரா | ,, | ஷஅபா |
| ,, | நயீம் | ,, | மஸ்வூத், |
| ,, | உமைர் | ,, | வஹப் |

(ரலியல்லாஹு அன்ஹும்) போன்ற மேலான முஹாஜிர்களும்,

| | | | |
|---|---|---|---|
| ஹலரத் | அபூ | ஐயூப், | |
| ,, | அபூ | தல்ஹா | ஜைது, |
| ,, | அபூ | தர்தாஉ, | |
| ,, | அபூ | லுபாபா | |
| ,, | உபை | இப்னு | கஅபு, |
| ,, | பர்ரா | இப்னு | மாலிக், |
| ,, | ஸாபித் | ,, | கைஸ், |
| ,, | ஹஸ்ஸான் | ,, | ஸாபித், |
| ,, | ஜைது | ,, | ஸாபித், |
| ,, | கைஸ் | ,, | ஸஅது, |
| ,, | உபாதா | ,, | ஸாமித், |
| ,, | முஆது | ,, | ஜபல், |
| ,, | முஹம்மத் | ,, | மஸ்லமா, |
| ,, | நுஃமான் | ,, | பஷீர், |
| ,, | ஹுதைபத்துல் யமான் | | |

(ரலியல்லாஹு அன்ஹும்)

போன்ற அனேக அன்ஸார்களும், மக்கநகர வெற்றிக்குப் பின் இஸ்லாத்தை ஏற்ற

பொருளடக்கம்

ஹலரத் ஸஃப்வான் இப்னு உமையா,
,, ஹக்கீம் ,, ஹிஸாம்,

| | | | |
|---|---|---|---|
| ஹலரத் | இக்ரிமா | இப்னு | அபூஜஹல் |
| ,, | சுராக்கா | ,, | மாலிக் |
| ,, | அபூ ஸுஃப்யான் | ,, | ஹாரிஸ் |
| ,, | அபூ ஸுஃப்யான் | ,, | ஹர்ப் |
| ,, | உர்வா | ,, | மஸ்வூத் |
| ,, | ஜுபைர் | ,, | முத்இம் |

(ரலியல்லாஹு அன்ஹும்)

போன்ற எண்ணற்ற தோழர்கள் இடம் பெறவிருக்கிறார்கள். என் முயற்சி திருவினையாக அல்லாஹ்வின் நல்லருளையும் அவனின் அருள்பெற்ற நல்லோர்களின் ஆசியையும் யாசிக்கிறேன்.

ஆமீன்

எம். எஸ். முஹம்மது தம்பி



பொருளடக்கம்

# நபிகளின் நாயகத் தோழர்கள்

## (ஸஹாபாக்கள்)



எம்.எஸ். முஹம்மது தம்பி

அன்ஸார் பப்ளிஷர்ஸ்
125, இராமசாமித் தெரு
சென்னை 600 001
தொலைபேசி 514535.

பொருளடக்கம்

முதல் அச்சு : ஜூன் 1989

விற்பனை உரிமை :

**தம்பி புக் சென்டர்**

125 இராமசாமித் தெரு

சென்னை 600 001.

அச்சிட்டோர் :

**மில்லத் பிரிண்டர்ஸ்**

16. அப்புமேஸ்திரி தெரு.

சென்னை 600001,

பொருளடக்கம்

# நன்றியுரை

அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின்! திருப்பெயரால் துவக்குகிறேன்.

அண்ணல் எம்பெருமானார் அஹ்மது முஜ்தபா முஹம்மது முஸ்தஃபா ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மீதும், அவர்களின் தோழர்கள், துணைவர்கள், வழிவாறுகள் அனைவர் மீதும் ஸலவாத்தும் ஸலாமும் கூறுகிறேன்.

'என் தோழர்கள் விண்ணின் தாரகைகளாவர். அவர்களில் எவரைப் பின்பற்றிடினும் நேர்வழியை அடையப் பெறுவீர்கள்' என அண்ணலார (ஸல்) அவர்கள் அருளினார்கள்.

அண்ணலார் நாயகத்திருமேனி (ஸல்) அவர்களின் தோழமை கண்ட ஒரு நூறாயிரத்துக்கும் மேற்பட்ட அருட்செல்வர்களில்,

நேர்வழி காட்டப்பெற்று, மண்ணில் நேர்வழி நாட்டிப் பிரிந்த கலீஃபாக்கள் நால்வர் உட்பட சுவனப் பெருவாழ்வைப் பற்றிய அருள் வாக்கை அண்ணலரின் திருவாயால் பெற்ற பதின்மரின் வரலாறுகளுக்குப்பின்,

அண்ணலவர்களின் தோழமையிலமர்ந்து அருள் ஞானங்கற்று—காத்து—அள்ளி வழங்கிய அறுபெரும் ஞானக் கருவூலங்களின் வாழ்க்கைக் குறிப்புகளைத் தொடர்ந்து,

நாயகத் தோழர்களில் நாயகமான சிலரின் வரலாறுகளையும் தர முனைந்த என் முயற்சியின் முதல்படிக்கல் இது.

பொருளடக்கம்

எழுத்துலகின் நுழைவாயிலில் அடியெடுத்து வைத்த போதே நான் கண்ட கனவை இன்று நனவாக்கித் தரும் அல்லாஹ்வே புகழுக்குரியவன்.

அவனின் கருவிகளாக இயங்கி எனக்கு வழிகாட்டி, வாழ்த்தி, உறுதுணை கூட்டும் பெரியோர்கள், நண்பர்கள், அன்பர்கள் அனைவர்க்கும் என் நன்றி,

என் பணி தொடர 'துஆ' இறைஞ்சுமாறு அனைவரையும் வேண்டுகிறேன்.

வஸ்ஸலாம்

எம். எஸ். முஹம்மது தம்பி



பொருளடக்கம்

# முன்னுரை

அல்லாஹ் மனிதனை அழகிய உருவில் படைத்தான்; அறிவையும் ஞானத்தையும் அம்மனிதனுக்குக் கற்பித்தான்;

கலீஃபா என்னும் பரிவட்டத்தை அம்மனிதனுக்குச் சூட்டி, பூமியின் ஆட்சியையும் அதிகாரத்தையும் அம் மனிதனிடம் ஒப்படைத்தான்;

நிலத்திலும் நீரிலும் தன்னால் படைக்கப்பட்ட அனைத்துப் பொருள்களையும் மனிதனுக்குப் பணியச் செய்து, அவற்றை அடக்கியாளும் திறனையும் தகுதியை யும் அம்மனிதனுக்குத் தந்தான்.

அல்லாஹ் மனிதனின் பால் செலுத்திய ஒரு கருணைப் பார்வையின் பரிசுகள் அவை அனைத்தும்.

மனிதன் படைக்கப்படுவதற்கு முன்னரே இறைவ னால்படைக்கப்பட்டிருந்த எத்தனையோ படைப்புகளில்,

பாவமென்பதை அறியாத—பரமனைத் துதிப்பதும் புகழ்வதுமேயன்றி மற்றெந்த பணியும் அறியாத விண்ண வர்களுமிருந்தனர்;

கணப்பொழுதில் கடுகி அவனின் கட்டளைகளை முடிக்கும் ஆற்றல் பெற்ற ஜின்களுமிருந்தனர். அவர்க ளெல்லாம் இருந்தும், அல்லாஹ் பூமியில் தன் அதி காரத்தை ஒப்படைக்க மனிதனையே தேர்ந்தெடுத்தது அம்மனிதனின் பால் அவன் கொண்ட கருணையின் பரி சேயல்லவா!

அந்தக் கருணையில் காழ்ப்பு கொண்டான் ஷைத் தான்.

பொருளடக்கம்

أَنَا خَيْرٌ مِّنْهُ خَلَقْتَنِي مِن نَّارٍ وَخَلَقْتَهُ مِن طِينٍ ○

'நான் அவரைவிட மேலானவன். என்னை நீ நெருப்பினால் படைத்தாய். அவரையோ மண்ணினால் படைத்தாய்' என கர்வங்கொண்ட ஷைத்தான் இறைவனால் சபிக்கப்பட்டான். அந்த சாபத்தினால் சீற்றங்கொண்ட அவன் 'அவரின் சந்ததிகளை நான் மறுமை நாள் வரை வழி கெடுப்பேன்' என சூளுரைத்தான். அவனின் சீற்றத்தால் இறைவனின் கருணை மனிதன் பால் மேலும் மிகைத்தது.

பாவம்! மறதியோடு படைக்கப்பட்டவனல்லவா மனிதன்!

وَاسْتَفْزِزْ مَنِ اسْتَطَعْتَ مِنْهُم بِصَوْتِكَ وَأَجْلِبْ عَلَيْهِم
بِخَيْلِكَ وَرَجِلِكَ وَشَارِكْهُمْ فِي الْأَمْوَالِ وَالْأَوْلَادِ وَعِدْهُمْ

"நீ உனக்கு சாத்தியமான அளவு கூச்சலிட்டு அவர்களைத் தூண்டு. உன்னுடைய குதிரைப் படைகளையும் காலாட்படையையும் அவர்கள் மீது ஏவி விடு. அவர்களுடைய பொருள்களிலும், சந்ததிகளிலும் நீ கூட்டாக இருந்துக் கொண்டு அவர்களுக்கு (நயத்தையும் பயத்தையும் காட்டி)வாக்களி......

إِنَّ عِبَادِي لَيْسَ لَكَ عَلَيْهِمْ سُلْطَانٌ

"நிச்சயமாக என் நல்லடியார்கள் மீது (ஷைத்தானே!) உனக்கு எவ்வித அதிகாரமுமில்லை" என கருணைமிகு ரஹ்மான் ஷைத்தானின் சவாலை ஏற்றான்.

ஆண்டவனின் கலீஃபாவாக அவனிபோந்த ஆதம் (அலை) அவர்களின் சந்ததிகளை—அவர்களின் மறதியையே தனக்குப் பக்கபலமாக்கி அவ்வப்போது ஷைத்

தான் வழி கெடுத்தான். அச் சமயங்களிலெல்லாம் அவர்களுக்கு நினைவூட்டி, உணர்வூட்டி, வழி திருப்ப அல்லாஹ் அவ்வப்போது நபிமார்களையும் ரஸூல்மார்களையும் அனுப்பி வைத்து அருள் புரிந்தான்.

அந்த நபிமார்கள் அறிவையும் ஞானத்தையும் எடுத்தோதி, விவேகத்தால் வெளிச்சமிட்டு, வாழ்க்கைப் பயணத்தின் நேரிய வழியைக் காட்டி அதன் புறம் மக்களை அழைத்தார்கள். மனிதவர்க்கம் அவ்வப்போது விழிப்படைந்து அவர்களின் பின்னே தொடர்ந்தது. ஆயினும் அப்படித் தொடர்ந்தவர்களின் தொகை குறைவானதே. அதனால் நபிமார்கள் தங்களின் பணியில் தளரவில்லை. சிரமங்களைச் சுமந்து, சோதனைகளை எதிர்கொண்டு அவர்களில் ஒவ்வொருவரும் ஒவ்வொரு காலகட்டத்தில் உலகின் ஒவ்வொரு எல்லைவட்டத்தில் தங்கள் பணிகளை நிறைவு படுத்திப் பிரிந்தார்கள். அவர்களின் பிரிவுக்குப்பின் மீண்டும் மனித வர்க்கம், காலப்போக்கில் ஷைத்தானிய நயத்திலே மயங்கி, பயத்தினால் மருண்டு வழி கெட்டே போனது.

அவ்வாறாக அபுல்பஷர்—ஆதம் (அலை) முதல் அன்னை மர்யமின் மகனார்—ஈஸா (அலை)வரை உலகைத் திருத்த வந்த உத்தமர்களின் எண்ணிக்கை ஒரு நூறாயிரத்துக்கும் மேற்பட்டதாகும். அதன் பின்னரும் உலகம் இருண்டது. ஏறத்தாழ எழுநூறாண்டு காலம் வரை நல்லோர்களின் நடமாட்டம் அருகி, பொல்லாமை மிகுந்து, அந்தகாரக் கடல் கொண்ட கூடாக அவனி அல்லலுற்ற அவலத்தில் தான் அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்கள் அகிலங்களுக்கெல்லாம் ஓர் அருட்கொடையாகப் பிறந்தார்கள்.

'காத்தமுன் நபிய்யீன்—நபிமார்களில் இறுதியானவர்கள்' என அவர்கள் அறிவிக்கப்பட்டார்கள்.

# பொருளடக்கம்

'லாநபிய்ய பஅதீ - எனக்குப் பின் நபி(த்துவம்) இல்லை' என அவர்கள் அறிவித்தார்கள்.

மறுமை நாள் வரை மனிதவர்க்கத்தை வழி கெடுக்க ஷைத்தான் ஏற்ற சூளுரை அப்படியே இருந்தது - செயல் முறையில்.

எனவே, நபித்துவம் நாயகத்திருமேனி (ஸல்) அவர்களோடு முற்றுப் பெற்ற நிலையில், மனிதவர்க்கத்துக்கு நல்லதை ஏவி, அல்லதைத்தடுத்து, நேர்வழிகாட்டும் நல்லறப் பணியைத் தழைக்கச் செய்ய நபிகளல்லாத ஒரு மாற்றுத் தலைமுறை அவசியப்பட்டது.

அண்ணலார் முஹம்மது (ஸல்) அவர்கள் தங்களின் பிரிவின் பின்னே அதற்கென்றே ஒரு நூறாயிரத்துக்கு மேற்பட்ட தோழர்களை விட்டுச்சென்றார்கள். தம்முடைய அத்தோழர்களை அண்ணலார் (ஸல்) 'வழிகாட்டும் தாரகைகள்' என வர்ணித்தார்கள்.

'அவற்றில் சில வலியவை, எனினும் அவை அனைத்தும் ஒளியுடையவை' என இறைவன் தமக்கு அறிவித்த தகாவும் விளக்கினார்கள்.

كُنْتُمْ خَيْرَ أُمَّةٍ أُخْرِجَتْ لِلنَّاسِ

'மனிதர்களில் தோன்றிய சமுதாயத்தார்களிலெல்லாம் மிக்க மேலானவர்கள் நீங்களே' என வான் மறை (3: 110) அவர்களை வாழ்த்தியது.

'பனீ இஸ்ராயீல்களில் தோன்றிய நபிமார்களைப் போன்றவர்கள்' என அண்ணலார் (ஸல்) அவர்கள் அத்தோழர்களை ஒப்பிட்டுக் கூறினார்கள்.

பாடசாலைகளை அவர்கள் கண்டதில்லை. ஆனால், பல்கலைக் கழகங்களாகவே அவர்கள் உலவினார்கள்.

பொருளடக்கம்

பட்டங்களை அவர்கள் பெற்றிருக்கவில்லை. ஆனால், அவர்களின் நடமாட்டங்களே சட்டங்களாகி பட்டமளிக்கின்றன அவர்களின் பாரம்பரியத்தினருக்கு.

அண்ணலார் (ஸல்) அவர்கள் இருபத்து மூன்றாண்டு கால இடைவெளியில் தங்களின் தோழமையில் உருவாக்கிய அவ்வொரு நூறாயிரம் தோழர்களை முஹாஜிர்கள், அன்ஸார்கள், அவர்களைப் பின் தொடர்ந்தவர்கள் என மூன்று பிரிவினராகக் காட்டுகிறது திருக்குர்ஆன்.

وَالسّٰبِقُوْنَ الْاَوَّلُوْنَ مِنَ الْمُهٰجِرِيْنَ وَالْاَنْصَارِ وَالَّذِيْنَ اتَّبَعُوْهُمْ بِاِحْسَانٍ رَّضِيَ اللّٰهُ عَنْهُمْ وَرَضُوْا عَنْهُ وَاَعَدَّ لَهُمْ جَنّٰتٍ تَجْرِيْ تَحْتَهَا الْاَنْهٰرُ خٰلِدِيْنَ فِيْهَاۤ اَبَدًا ؕ ذٰلِكَ الْفَوْزُ الْعَظِيْمُ

“முஹாஜிர்களிலும், அன்ஸார்களிலும் எவர்கள் (இஸ்லாத்தில்) முதலாவதாக முந்திக் (கொண்டு விசுவாசம்) கொண்டார்களோ அவர்களையும், நற்கருமங்களில் (மெய்யாகவே) அவர்களைப் பின்பற்றியவர்களையும் பற்றி அல்லாஹ் திருப்தியடைகிறான். அவர்களும் அல்லாஹ்வைப்பற்றித் திருப்தியடைகின்றனர். அன்றி, சதா நீரருவிகள் ஓடிக்கொண்டிருக்கும் சுவனபதிகளை அல்லாஹ் அவர்களுக்கு சித்தப்படுத்தி வைத்திருக்கிறான். அவற்றில் அவர்கள் என்றென்றும் தங்கிவிடுவார்கள். அது மகத்தான பெரும் பாக்கியமாகும் (9:101).

‘ஸஹாபாக்கள்’ என சரித்திரம் புகழும் ஒரு நூறாயிரத்து மேற்பட்ட நபிமணித் தோழர்களில் முஹாஜிர்களே முதலிடம் பெற்றவர்கள். சமுதாய வரலாற்றில் தங்களின் தகுதியால் தலைமைத்தனம் பெற்றவர்கள் அவர்களே. சோதனை சூழ்ந்து தங்களை வருத்திய நிலையிலும் அண்ணலவர்களின் பால் கொண்ட அன்பினால் அவர்கள் செய்யத் துணிந்த அர்ப்பணத்துக்கு

பொருளடக்கம்

ஒப்புவமையை வரலாற்றில் காண முடியவே முடியாது. 'முஹாஜிர்' என்ற மணிமுடியை அவர்கள் தங்களின் அத் தகைய ஓர் அர்ப்பணத்தாலேயே அணிவிக்கப்பெற்றனர்.

ஒரு காலகட்டத்துக்கு சிரமத்தைச் சுமப்பது மனி தனுக்கு எளிதானதாக இருக்கலாம். பசியையும் தாகத் தையும் தற்காலிகமாக அவன் தாங்கிவிட முடியும். வறுமை யையும் துயரத்தையும் குறிப்பிட்ட காலத்துக்குச் சகிப் பதும் அவனுக்குச் சிரமமாக இருக்காது. அவ்வாறெல்லாம் உடலை வருத்தியவர்கள் அநேகர். உயிரை விடத்துணிந் தவர்களையும் வரலாறு கண்டுள்ளது. ஆனால், நின்றது நின்றபடியே தங்களின் உற்றார் உறவினர்களை, உடைமை களை, வளமிக்க செல்வங்களை, கண்டது கண்டபடியே பிரிந்து கண்கள் கண்டிராத இறைவனின் பொருட்டு, பிறந்த மண்ணையும் நிரந்தரமாகப் பிரியத் துணிந்தவர் கள் முஹாஜிர்களேயாவர்.

அவர்களில் ஹலரத் அபூபக்கர், உதுமான் (ரலி) போன்ற செல்வர்களுமிருந்தனர்; உமர், ஹம்ஸா (ரலி) போன்ற உடலுரம் பெற்ற மல்லர்களுமிருந்தனர்; பிலால், கப்பாப், மிக்தாத் (ரலி) போன்ற அடிமைகளும் ஏழை களுமிருந்தனர்.

அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்கள் அந்தகாரக் கிடங்கில் நின்று அறிவொலி எழுப்பிய ஆரம்பத்தில் அக் குரலை அரபுகள் மிகச் சாதாரணமாக நினைத்தார்கள். ஆனால், அவர்களின் கற்பனையில் கணித்தேயிராத முறை யில் தவ்ஹீதின் அழைப்பைச் செவியேற்கத் துணிந்தவர் களின் எண்ணிக்கை வளரக் கண்டு அவர்கள் விழிப்படைந் தனர். அண்ணலவர்களை பொன்னாசையால், பெண்ணா சையால், மண்ணாசையால் விலைபேச மேற்கொண்ட முயற்சியில் தோற்ற குரைஷிகள் இஸ்லாத்தை ஏற்ற செல்வர்களையும் செல்வாக்கு பெற்றவர்களையும் நிர்ப்

பொருளடக்கம்

பந்தங்கொண்டு அதனை விட்டும் நீக்க முயன்றனர்; அடிமைகளை ஏழைகளை பலவந்தத்தால் பிரிக்கவும் முனைந்தனர். அவர்களின் கொடுமைகளைத் தாங்க ஒண்ணாது முஸ்லிம்கள் அபிஸீனியாவிலும் சென்று ஓரிருமுறை அடைக்கலந்தேடினர். ஆயினும் பிறந்த மண்ணின் பாசம் அவர்களை மீண்டும் அப்புனித பூமியின் புறம் ஈர்த்து வந்தது. ஆனால் பந்தங்களையும் பாசங் களையும் சுட்டுப் பொசுக்கி, தனக்காகவே புடம் போட் டெடுக்கப்பட்ட பத்தரை மாற்றுப் பசும் பொன்னை யொத்ததாக அவர்களின் இதயங்களை ஒளிரச்செய்ய நாடி இறைவன், அவர்களைப் பெற்றெடுத்த மண்ணையும் நிரந் தரமாகவே துறந்து வெளியேற அவர்களைப் பணித்த போது மகிமைக்குரிய துணிவை வெளிப்படுத்தியவர்களே முஹாஜிர்கள்.

பிறந்த மண்ணைத் துறந்து பரதேசிகளாகிப் பாலை வனப்பாதையில் நடக்கத் துணிந்த அவர்கள் தங்களோடு பொன்னையும் பொருளையும் சுமந்து செல்ல வில்லை. நாயகப் பெருமான் (ஸல்) அவர்களின் நேசமொன்றையே தங்களின் நெஞ்சங்களில் நிரப்பிச் சென்ற ஈமானியச் சீமான்கள் உண்ண ஒரு தானிய மணியும் தங்களிடமற்ற வர்களாக, உடுத்தலை மாற்ற ஒரு கந்தலையும் பெற்றுக் கொள்ளாதவர்களாக, பராரிகளாகவே புதிய பூமியில் அடியெடுத்து வைத்தார்கள். அத்தகைய அவர்களை அல்லாஹ்வின் திருமறை.

الَّذِيْنَ صَبَرُوْا وَعَلٰى رَبِّهِمْ يَتَوَكَّلُوْنَ ۝

"கஷ்டங்களை (ப்பொறுமையுடன்) சகித்துக் கொண்டு தங்கள் இறைவனை முற்றிலும் நம்பி இருப்பவர் கள்' என பட்டயமளித்துப் பாராட்டியது. (16: 41)"

பொருளடக்கம்

وَالَّذِينَ هَاجَرُوا فِي اللَّهِ مِن بَعْدِ مَا ظُلِمُوا لَنُبَوِّئَنَّهُمْ فِي الدُّنْيَا حَسَنَةً ۖ وَلَأَجْرُ الْآخِرَةِ أَكْبَرُ ۚ لَوْ كَانُوا يَعْلَمُونَ

“அவர்களுக்கு நிச்சயமாக நாம் இவ்வுலகத்திலும் நல்ல இருப்பிடத்தைத் தருவோம். மறுமையின் கூலியோ இதைவிட மிகப் பெரிது என அல்லாஹ் அவர்களுக்கு வாக்களித்தான்” (16:41)

“மறுமை நாளன்று அவர்கள் விரிகதிரின் சுடரைப் போன்ற பேரொளியுடன் எழுப்பப்படுவார்கள்” என அண்ணலார் (ஸல்) அவர்கள் அறிவித்தார்கள்.

“சுவனத்தின் வாசலில் வந்து அவர்கள் கதவுகளைத் தட்டுவார்கள். ‘உங்களின் கணக்குகள் முடிந்தனவா?’ என அவர்களைக் காவலர்கள் வினவுவார்கள். ‘கணக்கை முடிக்க எங்களிடம் என்ன இருக்கிறது! வாளணிந்து அல்லாஹ்வின் பாதையில் புறப்பட்ட நாங்கள் அதே நிலையில் எங்களின் ஆன்மாக்களை அர்ப்பணித்து விட்டோமே” என அவர்கள் கூறுவார்கள். உடனே கதவுகள் திறக்கப்படும். மற்றவர்கள் சுவனம் புக நாற்பது ஆண்டுகளுக்கு முன்னரே ஏழை முஹாஜிர்கள் சுவனம் புகுந்திடுவர்’ என அண்ணலார் (ஸல்) அவர்கள் உரைத்தார்கள்.

புனிதமிக்க அம்முஹாஜிர்களில் பதினைந்து பேர்கள் இவ்வரலாற்று நூல் வழியே விழிகளைச் செலுத்துபவர்களின் பார்வையில் படுவார்கள். கல்லடியும் சொல்லடியும் தாங்கி மக்காவின் வீதிகளில் அலைந்து, கணைகளிடை தளைகளிடைப்பட்டுக் கோரங்களைச் சகித்து, குருதி வழிந்தோட, தசைகள் பொசுங்க அவர்கள் செய்த அர்ப்பணங்கள் அளவிடற்கரியவை. மதீனாவில் புகலிடம் தேடிய அவர்களை அணைத்து ஆதரித்த அன்ஸார்களில் ஒரேயொருவரே இந்நூலிடைத் தோன்றுகின்றார்.

பொருளடக்கம்

முஹாஜிர்களையடுத்து அல்லாஹ்வின் அருள் தாங்கிய அன்ஸார்களின் வரலாற்றை தனியொரு பாகமாக வெளியிட எண்ணியே அவர்களை அதிகமாக இந்நூலில் நான் சேர்க்கவில்லை.

அன்ஸார்களையல்லாத யூதர்களும் மதீனாவில் வாழ்ந்தனர். மதீனாவைச் சூழ்ந்த அரபு மண்ணில் பரவலாக கிருஸ்த்துவர்களும் வாழ்ந்தனர். குரோதமும் மனக்குமுறலுமே குடி கொண்டு வாழ்ந்த யூதர்களிடையே குணக்குன்றாய்ப் பிறந்து, வாழ்ந்து, இஸ்லாத்தின் பால் விரைந்த ஒரு நபிமணித் தோழரும் இந்நூலிடை தெரி கின்றனர். கிருஸ்த்துவ மார்க்கத்திலிருந்து வந்து இஸ் லாத்தின் அரவணைப்பை ஏற்ற ஒரு நபி மணித் தோழரும் காட்சி தருகின்றனர்.

இருபதாண்டு கால எதிர்ப்புக்குப் பின் மனந்திருந்தி மாநபி (ஸல்) அவர்களின் கரம்பற்றிய இரு பெருந்தோழர் களின் அறிமுகத்தோடு இந்நூலை நிறைவுபடுத்தியுள் ளேன். மக்கமா நகர வெற்றிக்குப் பின் வக்கற்று, திக்கற்று, வழியேற்றவர்களும் மாநபியின் தோழமையால் எத்தகைய மாசற்ற, மருவற்ற மனங்கொண்டு வாழ்ந்தார்களென் பதற்கான ஆதாரங்களாக அவ்விருபெருந் தோழர்களின் வரலாறுகளும் விளங்குகின்றன.

மக்காவாசிகளுக்கிருந்த ஒரு தனிச் சிறப்பு அவர்களில் எவரும் நயவஞ்சகர்களாயில்லாததாகும். முஹாஜிர்கள் மதீனாவில் புகலிடந்தேடி, அன்ஸார்களும் அவர்களை அரவணைத்து, இஸ்லாம் வளரவாரம்பித்த பின் மதீனா வில் வாழ்ந்த மற்றவர்களிடையிலேயே துளிர்த்தது நய வஞ்சகம்.

முஸ்லிம்கள் பெறத்துவங்கிய பலம் கண்டு அஞ்சி தங் கள் வெறுப்பை வெளிப்படுத்தாமல் தாங்களும் முஸ்லிம் களாகி, காலத்தை எதிர் நோக்கிக் காத்திருந்தனர் சிலர்.

பொருளடக்கம்

போர்க்களங்களை வென்று முஸ்லிம்கள் வளம் பெறத் துவங்கியபோது பொருளுக்காசைப்பட்டு முஸ்லிம்களாகி உண்மை முஸ்லிம்களின் பின்னே பதுங்கி வந்தவர்கள் பலர்.

பட்டும்படாமலே ஒதுங்கி நிற்பதாகப் பாவனை காட்டி எதிரிகளிடம் உறவு கொண்டிருந்தவர்கள் ஒரு சாரார் – ஆக மூவகைப்பட்ட நயவஞ்சகர்கள் மதீனாவி லேயே காணப்பட்டனர். அந்த நிலை மக்காவாசிகளுக்கு அவசியப்படவில்லை.

ஏனெனில், அண்ணலார் (ஸல்) அவர்கள் ஆரம்பத்தில் தன்னந்தனியராகவே தங்கள் அறபோதத்தைத் துவக் கினார்கள். அவர்களைக் கண்டு அஞ்சத்தக்கவாறு ஆட் பலம் அவர்களுக்கிருக்கவில்லை.

பொருளைக் காட்டி விலைபேசத் தேவையான பொருளாதாரச் செழிப்பிலும் அவர்கள் வாழவில்லை. அவர்களுக்குத் துணை நிற்கத் துணிந்த ஓரிரு சீமான் களும் நிர்ப்பந்தவயப்பட்டு நலிவடைந்து போயினர். பதி மூன்றாண்டு காலமும் பலதரப்பட்ட நெருக்கடிகளால் அலைக்கழிக்கப்பட்ட முஸ்லிம்களைக் கண்டு அஞ்ச வேண்டிய அளவுக்கு குரைஷிகள் கோழைகளாகவும் இருக்கவில்லை.

எனவே, மக்காவாசிகள் முஸ்லிம்களை எதிர்த்த போதும் மன உறுதியோடேயே எதிர்த்தார்கள். அவர் களின் இதயங்களில் உண்மை வெளிச்சமிட்ட போது மாநபியின் திருக்கரங்களை அவர்கள் மெய்யன்போடேயே ஏற்றார்கள். அதன் காரணமாகவே மக்காவில் இறங்கிய திருமறை அத்தியாயங்கள் எதிலும் நயவஞ்சகத்தைப்

பொருளடக்கம்

பற்றிய ஒரேயொரு வசனமும் காணப்படாது விளங்குகிறது.

நெஞ்சத் தூய்மை படைத்த அந் நல்லோர்களின் பொருட்டால் அல்லாஹ் நம்முடைய பிழைகளைப் பொறுத்தருள்வானாக ! நம் நம்பிக்கைகளை வலுப்படுத்தியருள்வானாக!! நன்மைகளை அங்கீகரித்தருள்வானாக!!!

வஸ்ஸலாம்

எம். எஸ். முஹம்மது தம்பி



பொருளடக்கம்

# பொருளடக்கம்



பொருளடக்கம்